# அகிலத்தில் அற்புதக் கோயில்

(சுசீந்திரம் திருக்கோயில் வரலாற்று நூல்)



சு.தா. தங்கம்

# அகிலத்தில் அற்புதக்கோயில்

## (சுசீந்திரம் திருக்கோயில் வரலாறு)




- சு.தா. தங்கம் -

நூல் வெளியீடு
சிவநேசர் நற்பணி இயக்கம்
சுசீந்திரம்.

நூலின் பெயர் : அகிலத்தில் அற்புதக் கோயில்

ஆசிரியர் : சு.தா. தங்கம், சுசீந்திரம்.

மொழி : தமிழ்

முதற்பதிப்பு : 1999 விற்பனை வெளியீடு ஆண்டு: 2001

நூல் அளவு : டெமி ஆக்டேவோ

காகிதம் : மேப்லித்தோ 18.6kg

மொத்த பக்கங்கள் : 374

அச்சமைப்பு : இமேஜ் ஆப்செட் பிரிண்ட்,
வேப்பமூடு ஜங்சன்,
நாகர்கோவில்-1.
✆ : 04652-28039

விற்பனை மற்றும்
அனைத்து தகவல்
தொடர்புகளுக்கும் : எஸ்.முத்துசுவாமி M.Sc., B.Ed., P.G.D.C.A.
(முதல்வர், விவேகானந்தா டியூசன் சென்டர்)
செயலர், சிவநேசர் நற்பணி இயக்கம்,
வட்டப்பள்ளி மடம் தெரு,
சுசீந்திரம் 629 704,
கன்னியாகுமரி மாவட்டம்.

ஆசிரியர் முகவரி : சு.தா.தங்கம்
பொதுசெயலர், சிவநேசர் நற்பணி இயக்கம்
(விவேகானந்தா டியூசன் சென்டர்)
வட்டப்பள்ளி மடம் தெரு,
சுசீந்திரம் 629 704,
கன்னியாகுமரி மாவட்டம்.

விலை ரூ.100/- (ரூபாய் நூறு மட்டும்)

31-2

## பொருளடக்கம்

# புகழஞ்சலி

## அமரர் ஸ்ரீ மூலம் திருநாள் மாமன்னர்



திருமால் திருவடி போய்ச் சேர்ந்து திருமூலப்
பெருமான் பெரும்பேறு பெற்றான்-உருமேங்கு
விண்மழை போல வியன்வஞ்சி மாதழுத
கண்மழை வெள்ளங் கடந்து.

நெஞ்சில் மிகுந்த கருணையெல்லாம்-இங்கு
நீராக மாறி நிறைந்திடவே
வஞ்சி மன் கட்டிய பேச்சிப்பாறை-ஏரி
வற்றாது பாயும் வளநாடு.

- அமரர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

# இத்தரைப் போற்றும் சித்திரை மன்னர்



**7.11.1912 - 20.7.91**

**அமரர் ஸ்ரீ சித்திரைத்திருநாள் பாலராமவர்மா**

ஈசன் அடியார் எவருக்கும் ஆலயத்தின்
வாசல் வழிதிறந்த மாமன்னர்-நேசமிகு
புத்தர் அசோகர் புகழையெலாம் தன்புகழா
நித்தமும் கொண்டான் நிலத்து.

- அமரர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## பல்கலை ஞானி



தோற்றம் : 1813 மறைவு : 1882

### அமரர் ஸ்ரீமான் பாச்சுமுத்தது என்ற பரமேஸ்வரர்

(சுசீந்திரம் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர்)

திருவைக்கம் திருத் தலத்தில்
திருமகனாய் பிறந்த நீவீர்
திருத்தொண்டு பல செய்து
திருச்சிவிந்தை வாழ்ந் திட்டாய்.
திருக்கோயில் எழுந்தருளும்
திருத்தாணு மால யர்க்கு
திரிகால பூசை செய்து
திருமூர்த்தி அருள் பெற்றாய்
அழகான ஓவியமும் காவியமும்
ஆயுர் வேதமோடு சோதிடமும்
அத்தனையும் படைத் திங்கே
ஆயகலை மன்ன ரானாய்.
கோபுரமும் கட்டி யிங்கு
கொடி மரங்கள் நட்டுவித்த
கோமகனின் புகழை நாளும்
கோடி மக்கள் கூறவைத்தாய்.

பாடல் புனைந்தவர் : சு.தா தங்கம்



சர்வ சமயப்பெரியார் சதாவதானி

## அமரர் செய்குத்தம்பி பாவலர்

இடலாக்குடி, குமரிமாவட்டம்

### மும்மூர்த்தி மகிமை

திங்களொடு கங்கைமுடி சேர்த்தசிவன் நீயே!
திரிபுரங்கள் நீறுபடச் சிரித்தசிவன் நீயே!
சங்கினொடு சக்கரம்கை தாங்கியமால் நீயே!
தசமுகனைப் போரினுயிர் தவிர்த்திடுமால் நீயே!
நங்கைகலை மங்கைதவழ்! நாவினயன் நீயே!
நாரணனார் உந்திதரு நளினத்தோன் நீயே!
எங்குமுள பரம்பொருளே என்றுமுள பொருளே!
யானைமுகப் பொருளேவந் தேழையெனக் கருளே.

### கலைமகள் துதி

'உருமகளை அயன்நாவில் உறைமகளை
பொறிமகளை உலகுக்கெல்லாம்
குருமகளை அன்பர்புகழ் குலமகளை
மலர்மகளை குறைதீர் செல்வத்
திருமகளின் மருமகளை நிலமகட்குங்
கலைமகளை செவ்விவாய்ந்த
ஒருமகளை எனக்கருள் வருமகளை
பெருமகளை உன்னல் செய்வோம்'

# வாடா மலர்



**அமரர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை**

தேவேந்திரன் பூஜித்து வழிபட்ட சுசீந்தைத்
தேவனாம் ஸ்தாணுமா லயனைப் போற்றி
தேன்தமிழ் நூலாம் மலரும் மாலையில்
தேசமக்கள் அறிந்திட பாடல் புனைந்தாய்.
தேரூர் திருத்தலத்தில் விளைந்த நெல்மணியே
தேசிக விநாயகம் பிள்ளையான பொன்மணியே!
தேவி அழகம்மை அருளால் கவிமணியாய்
தேசமே புகழ்ந்திட பேறு பெற்றாய்.

(பாடல் புனைந்தவர் : **சு.தா. தங்கம்**)

# அணிந்துரை

## இது ஒரு அற்புத நூல்

**வித்துவான் ஆ. அம்மமுத்துபிள்ளை,**
ஓய்வுபெற்ற தமிழாசிரியர்,
செயலர், அருள்மிகு தாணுமாலயன் பக்தர்கள் சங்கம்,
தெற்குமண், சுசீந்திரம் 629 704,
கன்னியாகுமரி மாவட்டம்.

"தாணுவாய் நின்று தரணியைக் காப்பவன்
வேணும் வரமெலாம் விருப்புடன் அளிப்பவன்
காணும் அடியார் நெஞ்சினில் உறைபவன்
தோணும் துன்பம் துரத்திட வருபவன்."

அன்பர் அடியார், சுசீந்தை சு.தா. தங்கம் அவர்களின் அரிய முயற்சியால் வெளிவரும் சுசீந்திரம் அருள்மிகு ஸ்தாணுமாலயன் திருக்கோயில் வரலாறு என்ற தலைப்புடன் அமைந்த நூல் அற்புதமான படைப்பு என்றே கூறலாம். நூலில் தாணுமாலயன் கோயில் ஆதியில் தோன்றிய வரலாறு சுசீந்திரம் என்ற பெயர் வந்த காரணம் இப்பதிக்கு அமைந்துள்ள வேறு பெயர்கள் மும்மூர்த்தியும் ஒரு மூர்த்தியாக வரக்காரணம், புராண வரலாறுகள் எல்லாம் நல்ல வண்ணம் ஆய்ந்து எழுதப்பட்டுள்ளது. இந்தியத் திருநாட்டின் தென் கோடியாம் இச்சுசீந்தை பதியில் இறைவன் ஏன் எழுந்தருளினான் என்பதற்கான விளக்கம் எல்லாம் சிறப்பாக அமைந்துள்ளது. தேவர்களுக்கெல்லாம் சக்தியாக விளங்கிய தேவேந்திரனே இப்பதியில் வந்து வழிபட்டு தனது சாப விமோச்சனம் பெற்றான் என்றால், மனிதர்களாகிய நமக்குப் புண்ணியஸ்தலம் இம்மண்ணில் வேறு எங்குதான் இருக்கமுடியும். ஆகவே தாணுமாலயனை வழிபட்டால் தீராத துன்பம் எல்லாம் தீரும் என்பது தான் இக்கோயிலின் தத்துவம் என்பதனைத் தெளிவாக ஆசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார். கொன்றையடி, மூலஸ்தானம், கைலாச நாதர் கோயில், நடராஜர் ஆலயம், திருமுருகன் கோயில், நீலகண்ட விநாயகர் கோயில், ஐயப்பன், இராமர் சீதாதேவி கோயில், ஆஞ்சநேயர் வழிபாடு இவைகள் எல்லாம் எப்பொழுது எழுந்தது என்பது, நல்ல வண்ணம் தொகுக்கப் பட்டுள்ளது. செண்பகராமன் மண்டபம், அலங்கார மண்டபம், ஊஞ்சல் மண்டபம், சுற்றுப் பிரகார மண்டபங்கள் யாரால் எப்பொழுது எழுப்பப்பட்டுள்ளது. அதன் கால

ஆராய்ச்சிகளைக் கல்வெட்டுச் சான்றுகளுடன் தொகுத்துள்ளார். சித்திரசபை என்று பெயர் வரக்காரணம், அதில் அமைந்துள்ள அற்புதச் சிலைகள், கலை நுட்பமான வேலைப்பாடுகள் எல்லாம் தெளிவாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அருள்தரும் திருமுருகன் கோயிலின் முன் மண்டபம், யாரால் அமைக்கப்பட்டுள்ளது. அதில் காணப்படும் இரு பெண்சிலைகள், அதன் அருகில் அமைந்துள்ள தண்டனை பெற்ற கணக்கர் சிலைகள் இவை எல்லாம் பற்றிய தெளிவான கருத்துக்களைத் தொகுத்துத் தந்துள்ளார்.

அறம் வளர்த்த அம்மன் ஆலயம், அதன் வரலாறு, அன்னை தாணுமாலயனுடன் இரண்டறக் கலந்த நிலை, அதற்கான கால வரலாறுகள் எல்லாவற்றையும் தொகுத்துள்ளார். சோழப் பேரரசர்கள் ஆலயத்தில் செய்த பணிகள் சேரமன்னர்கள், திருமலை நாயக்கர் போன்றவர்கள் செய்த பணிகள் அனைத்தையும் கால வரலாற்றுடனும் கல்வெட்டு ஆராய்ச்சியுடனும் தொகுத்துள்ளார். ஆஞ்சநேயர் சிலை மண்ணுக்குள் ஏன் புதைக்கப்பட்டிருந்தது. அதற்கான காரணம், பின்னர் ஆஞ்சநேயர் எழுப்பப்பட்ட காலம், அதன் உயரம், அற்புதமான சிலையமைப்பு இவைகளைப் பற்றி தெளிவாக ஆய்ந்து தொகுத்துள்ளார்.

தேவதாசிகள் மண்டபம், அதனை அமைத்தவர்கள் யார், தேவதாசிகளின் வரலாறுகள், அதன் அமைப்பு, அங்குள்ள சித்திர, சிற்ப வேலைப்பாடுகள் எல்லாவற்றையும் நல்ல வண்ணம் தொகுத்துத் தந்துள்ளார். கோபுர வாசலின் அமைப்பு, அதன் உயரம், கதவின் சிறப்பு கோபுரத்தின் உயரம், கோபுரத்தில் உள்ள சுவர்களில் அமைந்துள்ள சித்திரங்கள் பற்றிய சிறப்புகள் எல்லாம் நல்ல வண்ணம் தொகுத்துள்ளார். இந்திர விநாயகர், உதய மார்த்தாண்ட விநாயகர், இவர்கள் எல்லாம் எங்கெங்கு எழுந்தருளியுள்ளார்கள் என்பதனையும் தெளிவுபடக் கூறியுள்ளார்.

அவர்கள் தொகுத்த நூலை நாம் படிக்கின்ற பொழுது கோயில் பற்றிய முழு விளக்கமும் நமக்கு கிடைத்துவிடுகிறது. கோயிலின் பரப்பளவு, அதன் நீளம் அகலம், மற்றும் ஒவ்வொரு மண்டபம் பற்றிய அளவுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. தெப்பக்குளம் ஏற்பட்ட வரலாறு, அதன் மேல் கரையில் அமைத்துள்ள பாறையின் வரலாறு, அதன் அருகில் அமைந்துள்ள விநாயகர் ஆலயத்தின் வரலாறு, தெப்பக்குளத்தின் பரப்பளவு, அதன் புனிதத்தன்மை, அதில்

அமைந்துள்ள சுனைகள் பற்றிய வரலாறு இவைகள் எல்லாம் தெளிவுபட குறிப்பிடப்பட்டுள்ளது பாராட்டுக்குரியது. தெப்பக்குளத்தின் வடகரையில் அமைந்துள்ள முன்நூற்றிநங்கை, (முன்னோற்ற நங்கை) வரலாறும் இதில் இடம் பெற்றுள்ளது.

சிறப்பாக கோயிலில் நடைபெறும் திருவிழாக்கள் எவையெவை என்றும் அவை யாரால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது என்பதனையும் தொகுத்துள்ளார். இங்கு நடைபெறுகின்ற பிரதோஷ வழிபாடு, சிவராத்திரி வழிபாடு, களப பூஜை போன்ற வழிபாடுகள் எந்தெந்த நேரங்களில் நடை பெறுகின்றது என்பதனையும் விளக்கியுள்ளார். பூஜைமுறைகள், ஆசார அனுஷ்டானங்கள் பற்றியும் கூறியுள்ளார். தெற்குமண் மடம், வட்டப்பள்ளி மடம், இவற்றின் பொறுப்புகள் என்ன என்பதனையும் தெளிவாகவே கூறியுள்ளார்.

என்னிடம் பயின்ற மாணவர், வருவாய்த்துறையில் பணியாற்றி விருப்பார்ந்த் ஓய்வு பெற்றவர், தெய்வபக்தி கொண்டவர், உள்ளதை உள்ளபடியே சொல்லுகின்ற வெளிப்படையான மனம் படைத்தவர், தன் அரும்பெரும் முயற்சியால் அற்புதமான ஒரு வரலாற்று நூலை நமக்கு வழங்கியுள்ளார். இந்துகளாலும், ஏனைய மதத்தவராலும், உலகத்தாராலும் பாராட்டுக்குரியது. இந்நூலை படியுங்கள். வரலாற்றை தெரிந்து வைத்து கொள்ளுங்கள். நல்ல சிந்தனைத் தெளிவையும், தெய்வ பக்தியையும் அருள்மிகு தாணுமாலயன் படிப்பவர்களுக் கெல்லாம் தருவான் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. நம்பினோர் கெடுவதில்லை இது நான்கு மறைதீர்ப்பு.

**வாழ்த்து**

**தங்கம் தொகுத்த தாணுமா லயன்நூல்**
**மங்காப் புகழில் நிலைத்திட வேண்டும்**
**எங்கும் தாணுவின் ஒளியே வீசிட**
**பங்கமில் ஆதரவு பெருகிட வேண்டும்.**

*ஓம் நமச்சிவாயா*

அடியேன்
**வித்துவான்.ஆ. அம்மமுத்துபிள்ளை.**

# பாராட்டுரை

## இது ஒரு நூல் கோயில்

"சமய பிரசார மணி"
"சைவப்பெருந்திரு சொல்லரசு"
**சு. சுந்தசாமிபிள்ளை**
திருவாடுதுறை ஆதீனப் புலவர்,சுசீந்திரம்.

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்பது சான்றோர் வாக்கு. நம் தமிழகத்தில் நமக்கு நல்வாழ்வு தரும் இறைவனுக்குக் கோயில் இல்லாவிடில், அந்த ஊர் எவ்வாறு இருக்கும், என்பதை அப்பர்சுவாமிகள் 'திருக்கோயில் இல்லாத திருவில் ஊர்' என்பார். நமக்கு நன்மை தரும் இறைவன் குடிகொண்டு இருக்கும் ஆலயங்களைப் போற்றி பாதுகாப்பது நம்முடைய இன்றிமையாத கடமையாகும்! அவற்றைவிட முக்கியத்துவம் பெற்றது அந்தந்த கோயில்களின் 'ஸ்தல வரலாறுகள்' ஏன் என்றால் ஆலயங்கள் நாம் இறைவனை வழிபடுவதற்கு மட்டும் ஏற்படுத்திய இடமாக கருதவில்லை. மக்களின் நாகரீகம், பண்பாடு, சமூக வாழ்க்கை, சமய வாழ்வு முதலியவற்றிற்கும் கோயில்கள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. மேலும் சிற்பம், ஓவியம், இசை, நடனம், நாடகம் ஆகிய கலைகளுககு உறைவிடமாகவும் அமைந்திருக்கிறது. மேலும் கோயிலுள்ள கல்வெட்டுகள் ஒருநாட்டின் தொன்மையான வரலாற்றைப் படம் பிடித்து காட்டுகின்றன. கோயில்களின் சுவர், தூண்களில் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். மேற்படி கல்வெட்டுகள் அக்கால மக்களின் வாழ்வு, அவர்களின் கலாச்சாரம், செய்த தொண்டுகள், திருப்பணிகள் நடைமுறைகள் பற்றிய செய்திகளை தொகுத்துத் தருகின்றன.

திருமங்கையாழ்வார் தமது திருப்பதிகத்தில்

"எழில் மாடம் எழுபது செய்து உலகாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த
கோயில் திருநாறையூர் மணிமாடம் சேர்மின்களே"

என்று கூறுகிறார்.

கன்னியாகுமரி மாவடடத்திலுள்ள சுசீந்திரம் அருள்மிகு தாணுமாலயன் திருக்கோயில், தென் கோடியில் சிறந்து விளங்கும் திருக்கோயில், காசி முதல் கன்னியாகுமரி வரையுள்ள இறை பக்தர்கள் தரிசிக்க வரும்போது கோயில் பற்றி விவரம் கேட்கின்றனர், ஆனால் சிறிய சிறிய தொகுப்பான வெளியீடுகள் மட்டுமே வந்துள்ளன. அவைகள் பக்தர்களின் மனத்தை திருப்தி டுத்தவில்லை என்பது அவர்கள் தரும் கருத்துகளிலிருந்து அறிகிறோம்.

ஆகவே அருள்மிகு தாணுமாலயன் திருக்கோயில் பற்றிய அற்புதமான, அழகான, வரலாற்று வடிவில், ஆன்மீக சிறப்புடன் கூடிய மலர் விரியாதா என்ற ஏக்கம் பன்னெடுங்காலமாக பக்தர்கள் உள்ளத்தில் எழுந்ததுண்டு! அந்த எண்ணத்தை புரிந்துகொண்ட அருள்தரு தாணுமாலயன், எமது அருமை நண்பரும் அன்பரும், ஆன்மீக சிரோன்மணியும், இசை மாமணியுமாகிய 'சுசீந்திரம் சு.தா. தங்கம்' இந்நூல் வெளிவர அருள் பாலித்துள்ளார்.

எழுத்துலகில் ஓர் எழுச்சி! சுரங்கங்களில் தங்கத்தை தோண்டித் தோண்டி எடுப்பபார்களே அதுபோன்று அருள்மிகு தாணுமாலயன் கோயில் பற்றிய செய்திகளைத், துருவி, துருவி, ஆய்ந்து, ஆய்ந்து, தெளிந்து தெளிந்து, உண்மைக் கூறுகளை செய்தியாக வடித்து கொடுத்துள்ளார்கள்! வள்ளலார் கூறியதை போன்று நன்வாசகத்தை நான் கலந்துப் பாடுங்கால் நற்கருப் பஞ்சாற்றினிலே, தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித் தீஞ்சுவை கலந்து, ஊன் கலந்து, உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே என்ற முறையில் அறிந்த ஆலயத்தில் அறியாத பல உண்மைகளை அடுக்கடுக்காக அழகான முறையில் வரையாக தொகுத்து தந்துள்ளார்கள்.

அவற்றில் மனம் கவர்ந்த பகுதிகள் பல! சில சிந்தனைக்குரியன! ஆதி கோயில் வரலாறு, அதற்குரிய சான்றுகள், அதன் வளர்ச்சி அடியார்கள் முதல் அரசர்கள் வரை செய்த திருப் பணிகள், அதற்கு ஆதாரமாகிய கல்வெட்டுகள் மூலமாக காட்டிய அமைப்பு திறமை பாராட்டுதலுக்குரியது போற்றுதலுக்குரியது.

பூஜைகளைப் பற்றிய செய்திகளை மேலும் சாஸ்திரம், சரித்திரம் வாயிலாக எடுத்து காட்டும் அற்புதம். 'கை முக்கு', லாட்டரிசீட்டு போன்ற அதிசய செய்திகளை வழங்கி நம்மை மெய் மறக்கச் செய்துள்ளார்கள். திருவிழா பற்றிய செய்திகள் ஆரம்பம் முதல் முடிவு வரையாக தொகுத்து படம் பிடித்துக் காட்டிய நிலை, அரிய பெரிய தத்துவங் களையும் வெளிக்காட்டிய நிலை. அலைகடலை விட பெரிய நிலை! மூர்த்தி, தீர்த்தம், ஸ்தலம், என்ற முறையில் வரம்பாக தொகுத்த காவியம். எமது சிந்தனைக்கு விருந்தாக அமைந்த பகுதி யாது என்றால்? கோவிலின் முன்பு காட்சி தரும் விநாயகரை முதலி ல் காட்டி, கோவிலின் கோபுரம் முதல் தொடங்கி கோவில் முழுவதைக் சுட்டிக் காட்டி, கால பைரவர் வரை அழைத்துச் சென்று அருள்பெற வைத்த நிலை அற்புதம், 'உள்ளத்தில் உள்ளானடி கோயில் உள்ளேயும் உள்ளானடி' என்ற கவிமணியின் பாடலுக்கேற்றபடி திருக்கோயிலின் திருவுருவங்களின் வரலாற்று சிறப்பினைப் படம் பிடித்தாற்போன்று எடுத்துக்காட்டி, நெஞ்சில் பதிவு செய்துவிட்டார்கள் என்றால் மிக மிக அருமைப்பாடுடையதாகும், போற்றுவதற்குர்யது! சாதனையின் வெற்றியாகும்.

முயற்சி திருவினையாக்கும் என்பர். அருமை சு.தா. தங்கம் அவர்களின் அரிய பெரிய விடா முயற்சியே அற்புதமான சிந்தனைக்கு விருந்தாகிய, சீரிய கருத்து கொண்ட, சிவனருள் காப்பியமாக வெளிவந்துள்ளது! அப்பப்பா! எவ்வளவு மேற்கோள்கள்! கல்வெட்டு ஆய்வுகள்! நடைமுறை செய்திகள்! இவைகளைத் திரட்ட எவ்வளவு காலம், எவ்வளவு நேரம் செலவு செய்திருப்பார்கள் என்பது எங்களைப் போன்ற ஆன்மீகச் செல்வர்களுக்கு தான் தெரியும்! இந்த நூல். ஆன்மீக செல்வர்களுக்கு ஓர் அற்புத பொக்கிஷம், அருள்தரு கற்பக விருட்சம், பக்தர்களுக்கு ஓர் வரப்பிரசாதம், சிந்தனையாளர்கட்கு ஓர் தங்கச்சுரங்கம், பாண்டியன் தென்காசி கோயில் கட்டியது போல, ராஜராஜசோழன் தஞ்சை பெரிய கோயிலை கட்டியது போல, சிவத்திரு சு.தா. தங்கம் அவர்கள் சிவனுக்கோர் 'ஒரு நூல் கோயில்' கட்டியுள்ளார்.

அந்த நூலின் படிகளாக, அ/த. தாணுமாலயன் கோயில்களின் பூஜை முறைகள், பூஜை செய்யும் நம்பூதிரி, ஸ்தானிகர், நம்பியார்கள் ஆலய பணியாளர்கள், ஈடுபாடு கொண்ட பக்தர்களின் உண்மை செய்திகளைத் தொகுத்து தந்துள்ளமை அருமைபாடுடையது. அதிலும் சுசீந்திரம் வட்டபள்ளிமடம் செய்துவரும் அருள்பணியை, முன்னை பழம்பொருளுக்கு முன்னைப்பழம் பொருளாகவும், பின்னை புதுமைக்குப் புதுமையாகவும் காட்டிய செய்திகள் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றுள்ளன!

பூசலார் கோயில் கட்டிய செய்தியைச் சேக்கிழார் கூறுவார் நீண்ட நாள் நினைந்து செய்த திருக்கோயில் என்பார். அதுபோன்று நீண்ட நாட்களாக சுசீந்திரம் கோயில் வரலாறு குறித்து நல்லதோர் நூல் இல்லையே என்ற ஏக்கத்தை போக்கி, பொன்மலர் நாற்ற முடையது என்று குமரகுருபர் கூறியது போன்று அறிவான் சிவனே அறியாதார் இவரோ என திருமூலர் கூற்று போல, அருமை அன்பர், தமிழன்பர் திரு சு.தா. தங்கம் அவர்களின் திருக்கரத்தில் தொகுத்து கிடைத்தமைக்கு என்ன கைமாறு செய்ய முடியும். அவரின் திருத்தொண்டு, திருப்பணிதொண்டு மென்மேலும் சிறக்க! வளர்க! வாழ்க! என வாழ்த்தி தென்னகக்கடவுள் தாணுமாலயன் திருப்பாதம் வணங்குகிறேன். திருப்பணிக்காக, தெய்வீக நூலாக வெளிவந்த இந்நூல், ஒவ்வொருவருடைய இல்லங்கள் தோறும் இருந்திட வேண்டும் என்பது எமது அவா! இல்லங்களில் இந்த் மலர் விரிந்து மணம் வீச வாழ்த்துகிறேன். சிவப்பணி சிறக்க! திருவருள் பெறுகுக!.

அன்பன்
**புலவர் சு. கந்தசாமிபிள்ளை**
சுசீந்திரம்.

# புகழுரை

## இது ஒரு

## எளிய, இனிய நூல்

குமரிச்செல்வன் **ச. கிருஷ்ணன்** M.A., B.Sc., M.Ed., M.Phil.
*மாநில நல்லாசிரியர், முன்னாள் தலைமையாசிரியர்,*
31-வணிகர் அம்மன் கோயில் தெரு.
கோட்டாறு, நாகர்கோவில் 629 002.

அருள்மிகு தாணுமாலயன் திருக்கோயில் வரலாறு தமிழில் இல்லையே என்ற குறையைச் சு.தா. தங்கம் அவர்கள் நீக்கி இருப்பது மிகவும் பாராட்டுதற்குரியதாகும்.

"அகிலத்தில் அற்புதக் கோயில்' என்னும் தலைப்பில் சு.தா. தங்கம் அவர்கள் எழுதியுள்ள நூல் அனைவரும் புரிந்து கொள்ளும் நிலையில் எளிய இனிய தமிழ்நடையில் அமைந்திருப்பது நூலுக்கு மிகவும் சிறப்பினைத் தருகிறது. தேவைப்படும் இடங்களில் நூலில் நிழற்படங்களைக் காணமுடிகின்றன. இந்நிழற்படங்கள் திருக்கோயில் வரலாற்றை மேலும் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

இத்திருக்கோயில் வரலாற்று நூலை ஆசிரியர் அவர்கள் திருக்கோயில் வரலாறு விளக்குதல், திருக்கோயிலில் எழுந்தருளி யுள்ள அருள்மிகு தாணுமாலயன் அருளால் நடைபெற்ற அற்புதங் களில் ஒருசிலவற்றை எடுத்துத் தெரிவித்தல், திருக்கோயிலின் ஒருபகுதியில் கம்பீரமாகக் காட்சிதரும் அருள்மிகு ஆஞ்சநேயர் இக்கோயிலில் குடிகொண்ட வரலாறு கூறுதல் என்ற மூன்று பகுதிகளாக நூலைக் கொண்டு செல்லுதல் நூலை படிப்போருக்கு திருக்கோயில் பற்றிய முழு வரலாற்றையும் எளிதில் உணர்ந்து

கொள்ள உறுதுணையாகத் திகழும் ஊடகங்களாகும்.

திருக்கோயிலின் அமைப்பு, மண்டபங்கள், தெய்வச் சிலைகள் முதலியவைகளை வரலாற்று அடிப்படையிலும், புராண இதிகாசங்களின் நோக்கிலும் எடுத்து விளக்கியிருப்பது புராணம், இதிகாசம், வரலாறு ஆகிய முப்பெரும் நோக்கில் பாரதம் எத்துணையளவு திளைத்து நின்றது என்பதைத் தெளிவு படுத்துகின்றது.

இந்தியக் கலாச்சாரத்தை கோயில் கல்வெட்டுகளும், பேணிக்காக்கப்பட்டு வரும் ஓலைச் சுவடிகளும் உணர்த்தி தலை நிமிர்ந்து நிற்கின்றன. அவ்வாறு சிறப்புற்று விளங்கும் கல் வெட்டுகளும், ஓலைச்சுவடிகளும் அருள்மிகு தாணுமாலயன் திருக் கோயிலில் வரலாற்றிலும் சீரிய பங்கினை வகித்து வருகின்றன என்பதையும் திரு சு.தா. தங்கம் அவர்கள் எடுத்துக் காட்டியிருப்பது மிகவும் இன்புறத்தக்கதாகும்.

இன்னோரன்ன விதங்களில் 'அருள்தரும் ஸ்தாணுமாலயன் திருக்கோயில் வரலாறு' என்னும் சீரிய நூல் மூலம், அருள்மிகு தாணுமாலயன் அருள் நாடி வரும் அனைத்துப் பக்தர்களுக்கும் இத்திருக்கோயில் பற்றிய முழு வரலாற்றையும் எடுத்து விளக்கிய வண்ணம் சமயத்தொண்டினைச் சாலச்சிறந்த விதத்தில் திரு சு.தா. தங்கம் அவர்களது சமயப்பணியும் கலாச்சாரப் பணிகளும் நாளும் வளர்ந்தோங்கி வரலாறுகள் படைக்க இறைவனை வேண்டுகிறேன்.

*அன்புடன்*

**குமரிச்செல்வன் ச. கிருஷ்ணன்**

(வரலாற்றில் வட்டப்பள்ளி மடம்

ஆய்வு நூல் ஆசிரியர்)

# என்னுரை



சு.தா.தங்கம்
நூலாசிரியர்

## இது ஒரு தியாக நூல்

**அறிந்த கோயில் :-**

நான்கு மதில்கள் நடுவே நாதவிந்து கலாதரனாய் எழுந்தருளி நாடிவரும் அன்பருக்கு நலம் தரும் நாயகனாய் நஞ்சை வளம் பெருக்கி நாஞ்சில் நாட்டினைச் சிறக்க வைத்துப் பேரருள் புரிகின்றார் சுசீந்திரம் அருள் தரும் ஸ்தாணுமாலயப் பெருமானாகிய இறைவன். ஞானகானகம் என்று போற்றப்படும் இப்புண்ணிய பூமியில் தவநிலை மேற்கொண்டு வாழ்ந்த அனுசூயாவின் கற்பின் மகிமையை உலகமே போற்றும் வண்ணம் பேரருள் புரிந்து, மாற்றான் மனைவியை மனத்தாலும் எண்ணக்கூடாது என்ற தத்துவத்தை உலகோரும் உணர தேவர்களின் தலைவனான இந்திரனின் ‘சாப விமோசனம்’ போன்ற ஸ்தலபுராணக் கதைகள் நிகழ்ந்த இடமாக சுசீந்திரம் திருக்கோயில் பெருமை பெற்று விளங்குகிறது.

தவறு செய்பவர் தனக்கு பணிவிடை செய்யும் பூசாரியாக இருந்தாலும் தண்டிக்கும் தெய்வம் இத்திருக்கோயிலிலே நீதிபதியாய் விளங்குகிறார். சமாதானமும் சமத்துவமும், சமய ஒற்றுமையும் பேணிக்காக்கும் விதத்தில் பகைவர்களாய் இருந்த மன்னர்களை நண்பர்களாக்கி ‘போர் ஒப்பந்தம்’ ஏற்பட துணை நின்றார் இத்திருக்கோயில் இறைவன்.

இத்திருக் கோவிலினுள்ளே கண்கவரும் கலைச்சிற்பங்கள், அவை விளக்குகின்ற கதைகள், பேரழகு வாய்ந்த மண்டபங்கள், கல்வெட்டு குறிப்புகள் இவை தருகின்ற விரிவான வரலாறுகள்

மன்னர் முதல் மக்கள் வரை செய்வித்தத் தொண்டுகள், இறைவனுக்கு அன்றாடம் நடைபெறுகின்ற ஆகமத்துடன் கூடிய பூஜைகள், அதன் விதிமுறைகள், மகிமை பெற்ற மாத விழாக்கள், மகத்துவம் வாய்ந்த திருவிழாக்களின் சிறப்பு அம்சங்கள் மற்றும் இறைவனையே நம்பி வாழ்ந்து உண்மை பக்தியோடு திகழ்ந்தவர்களுக்கு இறைவன் அளித்த நற்கதிகள், அவர் நடத்திய அற்புதத் திருவிளையாடல்கள் போன்றவற்றை இந்நூலில் தொகுத்துள்ளேன். நாம் அறிந்த கோயிலில் அறியாத உண்மைகளை கல்வெட்டுக்குறிப்புகள், பழங்கால ஓலைச் சுவடிகள், நூற்றாண்டுக்கு முற்பட்ட நூல்கள் இவைகளிலிருந்து கற்றறிந்த சான்றோர்கள் உதவியுடன் தொகுத்துள்ளேன். தமிழ் புலவர்களும் , வித்துவான்களும், சரித்திரப் பேராசிரியர்கள் ஆகியோர் எழுதிய நூல்களில் உள்ள குறிப்புகளும் இந்நூலுக்கு பயன்பட்டன.

"கற்றது கைமண் அளவு, கல்லாதது உலகளவு" என்ற தமிழ்க்கவி ஔவை முதாட்டியின் முதுமொழிக் கேற்ப அருள் தரும் ஸ்தாணுமாலய மூர்த்தி எனக்களித்த சிறு கல்வியறிவின் பயனாக ஓரளவு மட்டுமே தொகுத்துள்ளேன். இத்திருக்கோயிலின் பெருமையை தமிழ்மொழி மக்கள் அனைவரும் படிக்க வேண்டும். அதுமட்டுமின்றி உலக மக்களும் அறிந்திடப் பல மொழிகளிலும் இந்நூல் வெளிவர வேண்டும் என்ற எனது இருபது ஆண்டு ஏக்கத்தை தணிக்கும் நோக்குடன் தொகுக்க முனைந்தேன்.

அதற்கு 20 மாதங்கள் பிடித்தன. இதற்கென நான் பட்ட கஷ்டங்கள், பணச்செலவினங்கள் லட்சத்தை தொட்ட போதும் எடுத்த லட்சியத்தை நான் விடவில்லை. தாயும் தந்தையுமாய் என்னைக் காத்துவரும் ஸ்தாணுமாலயரின் அருள் ஒன்றே எனக்குத் துணை புரிந்தது.

ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தேன். உயர் நிலைப் பள்ளிக் கல்வியைக் கூட நான் முழுமையாக கற்க முடியாமல் பதினைந்து வயதில் சுசீந்திரம் திருக்கோயிலில் கீழ்மட்ட பணியாளராகச் சேர்ந்தேன் இறைவனுக்குப் பணிசெய்யும் பாக்கியமும் பெற்றேன். 25-ஆம் வயதில் தமிழ்நாடு அரசின் மாவட்ட வருவாய்

ஆட்சித்துறையில் உள்ள வட்டாட்சியர் அலுவலகம், வட்ட விநியோக வழங்கல் அலுவலகம், கோட்டாட்சியர் அலுவலகம், ஆயம் (எக்ஸைஸ்) அலுவலகம், ஆதி திராவிடர், நல அலுவலகம், வருவாய் சோதனைச் சாவடிகள், மற்றும் மாவட்ட தேர்தல் பிரிவு அலுவலகம், மாவட்ட ஆட்சியர் அலுவலகம், முதல் ஆட்சியர் முகாம் அலுவலகம் வரையிலும் இவை தவிர மாவட்டக் கருவூலத்துறை, திருநெல்வேலி நிலச்சீர்திருத்தத்துறை, வேளாண்மைத்துறை, தோட்டக் கலைத்துறை போன்றவைகளில் அரசுப் பணியாளராக மாவட்ட உயர்நிலை அதிகாரி முதல் கீழ்நிலை அதிகாரிகள் வரை பாராட்டும் அளவில் சுமார் 25 ஆண்டுகள் பணி புரிந்துள்ளேன். எவ்வித குற்றச்சாட்டுகளுக்கும் ஆளாகாமல் மனநிறைவோடு 1999ல் விருப்பார்ந்த ஓய்வு பெற்றுள்ளேன்.

பணம் ஒன்றே குறிக்கோளாக நான் எண்ணி இருந்தால் இன்னும் எட்டாண்டு காலம் வரை அரசுப்பணியில் நீடித்திருக்கலாம். போதும் என்ற மனத்தோடும், "செய்யும் தொழிலே தெய்வம்" என்ற நிலையோடு வாழ்ந்து வருகிறேன். என்னைப் பொறுத்தவரை இது ஒரு தியாக நூல் அரசுப்பணி முடித்து அதன் வாயிலாக கிடைக்கப்பெற்ற உதவியே இந்நூலுக்கு கிடைத்த நிதியாகும். தமிழ் நாடு அரசின் குமரிமாவட்ட வருவாய் ஆட்சித்துறைக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

திருக்கோயில் பணிமுதல் அரசுப்பணிவரையிலும், சுமார் 35 ஆண்டுகள் பணிபுரிந்தும் எனது மாத வருவாயில் கல்விப்பணி மற்றும் இறைப்பணிக்காக செய்துள்ள செலவினங்கள் ஏராளம். ஆனால் எனக்கென்றோ, எனது குடும்பத்திற்காகவோ செய்துள்ள செலவினங்கள் மிகமிகக் குறைவு. இதன் பொருட்டு குடும்பத்தில் ஏற்பட்டப் பிரச்சனைகள், அதையும் சந்திக்க வேண்டிய சூழ்நிலை. அதே வேளையில் எனது குடும்பத்தை காக்கின்ற பொறுப்பையும் இறைவனிடமே விட்டுவிட்டேன். பொருளாதார ரீதியில் வாழ்வதற்கு வசதியான இடமும் பொருள்வளத்தையும் இறைவன் அவர்களுக்கு வழங்கத் தவறவில்லை.

"பிழைக்கத் தெரியாதவன், பைத்தியக்காரன்" இப்படிப்பட்ட ஊரார் மற்றும் உறவினரின் பேச்சுக்களை தினமும் காதாறக் கேட்டும் நான் கவலை கொள்ளவில்லை. ஏனென்றால், நற்கதி கொடுத்த சிவபெருமானையே பைத்தியக்காரன் என்றார் சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமிகள். இந்து சமய நெறிகாக்க பாடுபட்டு, திருக்கோயில் தோறும் சென்று உழவாரப் பணிகள் செய்த திருநாவுக்கரசு பெருமானுக்கு ஊர் மக்கள் கொடுத்த பட்டமும், கஷ்டமும் வரலாறு கூறுகின்றது. உலக மக்களை தட்டி எழுப்பி நல்லறிவு புகட்டிய முகம்மது நபி, ஏசுபிரான், தத்துவ ஞானி சாக்ரட்டீஸ், இவர்களுக்கு மனிதவர்க்கம் கொடுத்த தண்டனைகளை, உலகறியும். ஏன்? தேச சுதந்திரத்திற்காக பாடுபட்ட தேசபிதா காந்தியடிகளுக்கு மனிதவர்க்கம் கொடுத்த பரிசு . . . . இவர்களைப் போன்ற எத்தனையோ மகான்கள், முடிசார்ந்த மன்னர்கள், அறிஞர்கள், விஞ்ஞானிகள் நாட்டிற்காக செய்த தொண்டுகள் காலம் உள்ளளவும் அழியாமல் நிலைத்து நிற்பதைக் காண்கிறோம். எந்த ஒரு மனிதனும் பல்லாண்டு வாழப்போவதில்லை. ஆனால் அவன் செய்த நன்மைகள், தியாகங்கள் பல்லாண்டு போற்றப்படுகின்றன. இந்த கருத்தைத்தான் பல்லாண்டு வாழ்க! என்ற வாழ்த்தொலியை பெரியவர்கள் ஆசியாகக் கூறுகின்றனர்.

"போற்றுவோர் போற்றலும்
தூற்றுவோர் தூற்றலும்
போகட்டும் கண்ணனுக்கே"

என்ற கீதை மொழிக்கேற்ப தமிழ் மொழியில் ஒரு எளிய நூல் சுசீந்திரம் திருக்கோயில் பெருமையை பறை சாற்ற வேண்டும். பல்லோரும் அதைப்படித்து பயன்பெற வேண்டும். என்ற லட்சியத்தோடு வழங்கியுள்ளேன். "மூர்த்தி சிறிதானாலும் அதன் கீர்த்தி பெரியது" என சொல்வதைப் போன்று நூலின் பக்கங்கள் அதிகமாக இருந்தாலும் பக்குவமாய் மக்கள் மனதில் அது பதிய வேண்டும். நிதி நெருக்கடியால் காலம் கடந்து இந்த நூல் வந்தாலும் விளம்பர நூலாக இருக்கக் கூடாது. நூலுக்கான செலவினங்கள் கூடிய போதிலும் முன்பு அறிவித்த விலைக்கே ஆன்மீக மக்களுக்கு

வழங்க வேண்டும் நேர்த்தியான காகிதத்தில் அதை அச்சிட்டு, நூலும் நீடித்திருக்க வேண்டும் என்ற உணர்வோடு சமர்ப்பிக்கின்றேன்.

மேலும் மறைந்த மாமேதைகளான, பிரம்மஸ்ரீ வட்டப்பள்ளி பாச்சுமுத்தது பெரியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, டாக்டர் கே.கே. பிள்ளை என்ற கனக சபாபதி பிள்ளை, பிரம்மஸ்ரீ வட்டப்பள்ளி பரமேஸ்வர சர்மா ஆகியோர்களின் படைப்புகள் இந்நூலை உருவாக்க அஸ்திவாரமாக அமைந்தது. அவர்களின் புகழ் இன்னும் பல்லாண்டுகள் நிலைத்திருக்க இறைவனை வேண்டுகிறேன்.

குடத்தினுள் விளக்காய் இருந்த என் தமிழ் அறிவை குன்றின் மீது ஏற்றி வைத்து தூண்டுகோலாய் அதை சுடர்விட்டு ஒளிவீச கல்வி அறிவினைத் தந்த அமரர் பிரம்ம ஸ்ரீ டாக்டர் பி. நீலகண்ட சர்மா அவர்களுக்கும், இந்நூலுக்கு தேவையான ஆதார நூல்கள் கிடைப்பதற்கு ஆதரவு நல்கிய சுசீந்திரம் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகள் டாக்டர் என்.பி. சர்மா எம்.டி. அவர்களுக்கும் ஒய்வுபெற்ற ஆசிரியர்களான வித்துவான் ஆ.அம்மமுத்துபிள்ளை, குமரிச்செல்வன், ச.கிருஷ்ணன் எம்.ஏ. எம்.பில், புலவர் சு. கந்தசாமிபிள்ளை, முனைவர் சு. நடராசன், எம்.ஏ, பி.எச்.டி, டி.ஜி.டி. ஆகியோர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இதனை நூல்வடிவமாக உருவாக்கித் தந்த நாகர்கோவில் "இமேஜ் கம்யூட்டர் ஆப்செட் பிரிண்ட்" உரிமையாளர்களுக்கும், அவர்தம் உதவியாளர்களுக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்து உரையை நிறைவு செய்கிறேன்.

நன்றி! நன்றி!!

எளியேன்

**சு.தா.தங்கம்**

# சமர்ப்பணம்



தோற்றம் : 1902 மறைவு : 1970

## அமரர் பிரம்ம ஸ்ரீ ப. பரமேஸ்வர சர்மா அவர்கள்

(சுசீந்திரம் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர்)

அருள்மிகு ஸ்தாணுமாலயர் திருக்கோயில் சம்பந்தப்பட்ட கல்வெட்டுக் குறிப்புகள், பழங்கால ஓலைச்சுவடிகள், நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட சமஸ்கிருதம் மற்றும் மலையாள நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்புகள் போன்றவற்றை வெளிக் கொணர்ந்த பெருமை இவரையே சாரும்.

பள்ளிக்கூடம் சென்று பயிலாமல் வீடான வட்டப்பள்ளி (மடம்) கூடத்தில் கல்வி அறிவை வளர்த்து பதினான்கு மொழிகளைக் கற்று பேசவும் எழுதவும் வல்லமை பெற்று, கற்றறிந்த சான்றோர்களான தமிழ்க் கவிவாணர்களாய் விளங்கிய அமரர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, இடலாக்குடி அமரர் திரு. செய்குத் தம்பி பாவலர் அவர்கள், விடுதலை வீரர் மார்ஷல் திரு

நேசமணி, பயோனியர் திரு குமாரசாமி மற்றும் சர்.சி.பி. இராமசாமி அய்யர் போன்ற பெரியவர்களின் ஆருயிர்த் தோழனாய் திகழ்ந்து பல சமயத்தினரின் நல்மதிப்பையும் பெற்று இந்து சமய வளர்ச்சிக்கும் சுசீந்திரம் திருக் கோயில் பெருமையினை உலகோர் அறிந்திடவும் நூல்கள் பலவற்றை எழுதி சோதிடத்தில் வல்லமை பெற்று விளங்கினார் பிரம்ம ஸ்ரீ பரமேஸ்வர சர்மா அவர்கள்.

மேலும் 'சுசீந்திரம் கோயில்' என்ற ஆங்கில வரலாற்று ஆராய்ச்சி நூல் வெளிவர முக்கிய காரணமாய் இவர் விளங்கியதை நூலின் ஆசிரியரான அமரர் திரு கே.கே. பிள்ளை அவர்கள் பெருமையாக தெரிவித்துள்ளார். படித்துப் பட்டங்கள் பலபெற்று சென்னை பிரஸிடென்சி கல்லூரிப் பேராசிரியராகத் திகழ்ந்து ஏராளமான வரலாற்று நூல்களைத் தமிழ் மொழியில் எழுதி பெயர் பெற்ற திரு.கே.கே. பிள்ளை அவர்கள் திரு. பரமேஸ்வர சர்மா அவர்களின் உற்ற நண்பராவார்.

தனது சொந்த செலவில் சிரமப்பட்டு எடுத்த கல்வெட்டுக் குறிப்புகள் அனைத்தையும் அமரர் கவிமணி அவர்களின் மூலமாக தமிழாக்கம் செய்து அதை அனைத்து பத்திரிகைகளிலும் வெளிவரச் செய்து சுசீந்திரம் திருக்கோயில் பெருமையை உலகறியச் செய்தார். அனைத்து கல்வெட்டு எழுத்துக்களையும் கற்றுத் திகழ்ந்ததோடு திருக்கோயில் பற்றி 'சுசீந்திர சாசனம்', இராஜ ராஜ சோழ சாம்ராஜ்யம், சேரமான் பெருமாள், சேரமான் பெருமாள் கவிதைகள், திரு விசைப்பா எழுதின வேணாட்டு அடிகள், கேரளத்தில் பல்லவ சிற்பங்கள், பிராதானமிக்க கோயில் கலைகள், கேரளத்தில் குகைக் கோயில்கள், ஆகிய நூல்களை எழுதியுள்ளார். மேலும் பாலகங்காதரத் திலகர் எழுதிய ஆங்கில நூலான 'யங் இந்தியா' நூலை மொழி பெயர்த்து 'தருண பாரதம்' என மலையாளத்தில் மொழி பெயர்த்துள்ளார். இன்னும் ஏராளமான கவிதை, கட்டுரைகளையும், ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை எழுதியள்ளார்.

'சோதிட பிரதீபம்', என்ற மாத இதழையும், 'சுசீந்திரம் பஞ்சாங்கம்' என்ற நூலையும் இவர் எழுதி வெளியிட்டுள்ளார். சித்திரைத் திருநாள் மன்னரோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார் ஆலயப்பிரவேசனப் போராட்டத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆதரவாய் செயல்பட்டு போராட்டம்

வெற்றியடைய மன்னருக்கு பக்கபலமாய் ஆதரவு கொடுத்தவர்களில் இவரும் ஒருவர். திருக்கோயிலில் மண்ணில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஆஞ்ச நேயரை நிலைநிறுத்த மன்னரிடம் எடுத்துரைத்து உத்தரவும் பெற்று வெற்றி கண்டார்.

பெண்கள் கல்வித் திட்டத்தைக் குமரி மாவட்டத்தில் விளவங்கோடு வட்டம் ஐரேனிபுரத்தில் கொண்டு வந்து தனது வாசுதேவ விலாசம் கல்விக் கூடத்தில் பெண்களுக்காக உயர்நிலை பள்ளிக்கூடத்தை 1959-ல் அன்றைய கல்வி அமைச்சராக விளங்கிய அமரர் திரு பக்தவஸ்தலம் அவர்களைக் கொண்டு திறந்து வைத்தார்.

சாலை வசதி மேம்பாட்டு திட்டத்தின் கீழ் அரசுக்கு நிலமும் 1960-ல் சுசீந்திரம் வருகைபுரிந்த பூமிதான இயக்கத்தின் தலைவர் வினோபாஜி அவர்களிடம் ஒரு ஏக்கர் நிலமும், ஐரேனிபுரத்தில் மீனவ சமுதாய மக்களுக்கு 'மீன்சந்தை' அமைக்க இடமும் விவசாயத்திற்கு சானல் அமைக்க நிலமும், அரிசன மக்களுக்கு காலனி அமைக்க நிலமும் எந்தவித பிரதிபலனும் எதிர்பார்க்காமல் அரசுக்கு வழங்கினார்.

சுசீந்திரத்தில் எஸ்.எம்.எஸ்.எம். மேல்நிலை பள்ளிக் கூடத்திற்கும், அக்கரையில் காவல் நிலையம் அமைக்கவும், சுசீந்திரத்தில் அஞ்சல் நிலையம் (போஸ்ட் ஆபீஸ்) அமைக்கவும் இனாமாக நிலங்கள் வழங்கியுள்ளதற்கான ஆதார ஆவணங்கள் சர்வே எண்ணோடு வட்டப்பள்ளி மடத்தில் இருந்து வருவதையும் காணமுடிகிறது.

தமிழ்ஆண்டு 1101-(1925)ல் முதன்முதலில் சுசீந்திரத்தில் கூட்டுறவு சங்கத்தைத் (எண் 842) தோற்றுவித்து அதன் தலைவராகவும், சுசீந்திரம் பஞ்சாயத்தின் தலைவராக சிறிது காலமும் இவர் பதவி வகித்து வந்தார். சரி சமமாய் சர்வமத நண்பர்களை நேசித்து இறைப் பணியோடு இப்பூமியில் சமுதாய தொண்டாற்றி சமத்துவ நெறியோடு வாழ்ந்து திருக்கோயில் சரித்திரச் சான்றுகளை வருங்கால சந்ததியர் அறிந்திட வழிவகுத்து கொடுத்திட்ட பெருமகனார்க்குப் பெருமையோடு இந்நூலை சமர்ப்பிக்கிறோம்.

இவண்.

**சிவநேசர் நற்பணி இயக்கம்,**

**சுசீந்திரம்.**

# நன்றிக்கடன்

*சுசீந்திரம் திருக்கோயில் கல்வெட்டுக் குறிப்பினை வெளிக்கொணர்ந்த காரண கர்த்தாக்கள் :-*

1) அமரர் **பிரம்ம ஸ்ரீ பி. பரமேஸ்வர சர்மா** அவர்கள்
(சுசீந்திரம் திருக்கோயிலினுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர்)

2) அமரர் நாஞ்சில் **கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை** அவர்கள்

3) அமரர் **டாக்டர் கே.கே. பிள்ளை** என்ற கனகசபாபதி பிள்ளை அவர்கள்
M.A., D.Phil (Oxon) D.Litt.

*துணை நின்றவர்கள் :-*

அமரர் **திரு. S. இராமமூர்த்தி ஐயர்** அவர்கள்
புகைப்படக்கலைஞர், ஐயமடம், தெற்குதெரு, சுசீந்திரம்.

அமரர் **திரு. சுந்தரம் ஐயர்** அவர்கள்
(மிருதங்க வித்வான்) இரட்டைதெரு, சுசீந்திரம்.

உயர்திரு. **N. நீலகண்ட சர்மா** B.Com. (C.A) அவர்கள்
(சுசீந்திரம் திருக்கோயிலினுடைய தந்திரி, வட்டப்பள்ளிமடம், சுசீந்திரம்)

*வரலாற்று குறிப்புகளைத் தகுந்த சான்றுகளோடு தந்து உதவியவர் :-*

உயர்திரு **டாக்டர் N.P. சர்மா** B.Sc., B.A.M., C.P.H., M.D. அவர்கள்
(சுசீந்திரம் திருக்கோயிலினுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர்)

*ஊக்கமளித்த உறுதுணையாளர்கள்:*

பேராசிரியர் பெருமகனார் : திரு. **எம்.சங்கரலிங்கம்**
எம்.ஏ., எம்.பி அவர்கள்
(பாராளுமன்ற மேல்சபை உறுப்பினர்)

திரு. **அ. பாண்டியன்** M.A. அவர்கள்
(கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள்

நிர்வாக துணை ஆணையர், சுசீந்திரம்)

**திரு. கே.எஸ். மணி** அவர்கள் (அறங்காவலர் குழுதலைவர்)

**திரு. பி. இராமச்சந்திரன்** அவர்கள் உறுப்பினர்

**திரு. எஸ். வேலப்பன்** அவர்கள் உறுப்பினர்

**திரு. எஸ். மாடசாமி** அவர்கள் உறுப்பினர்

**திருமதி. டி. சுதா** அவர்கள் உறுப்பினர்

**முனைவர் சு. நடராஜன்** எம்.ஏ., பி.எச்டி, டி.ஜி.டி. அவர்கள்
(மாவட்ட தமிழ்வளர்ச்சி உதவி இயக்குனர், நாகர்கோவில்)

*நூலுக்கு ஒத்துழைப்பு நல்கியவர்கள்*

**வித்துவான் திரு.ஆ. அம்மமுத்துபிள்ளை**, சுசீந்திரம்
(செயலர் ஸ்தாணுமாலயர் பக்தசங்கம், சுசீந்திரம்).

புலவர் **திரு.சு. கந்தசாமிபிள்ளை**
(சமய பிரசார மணி, திருவாவடுதுறை ஆதீனம், சுசீந்திரம்)

புலவர் **திரு.C.** குமரேசபிள்ளை அவர்கள், சுசீந்திரம்.

குமரிச்செல்வன் **திரு.ச. கிருஷ்ணன்** எம்.ஏ., எம்.எட். எம்.ஃபில்
மாநில நல்லாசிரியர் அவர்கள், நாகர்கோவில்.

**திரு.T.N. நீலகண்டரு,** எம்.ஏ. அவர்கள்
(திருக்கோயில் நித்திய காரிய யோக ஸ்தானிகர், தெற்குமண்மடம், சுசீந்திரம்)

**திரு.A. வேலப்பபிள்ளை,** தெற்குமண், சுசீந்திரம்.

**திரு.P. ஆவுடையப்பபிள்ளை என்ற முருகன்**
(புகைப்பட கலைஞர், கங்கா ஸ்டுடியோ, சுசீந்திரம்)

**திரு.S. முத்துசாமி** M.Sc., B.Ed., P.G.D.C.A.
(அமைப்பு செயலர், சிவநேசர் நற்பணி இயக்கம், சுசீந்திரம்)

**இமேஜ் ஆப்செட் பிரிண்ட்,** நாகர்கோவில்.

நிர்வாகிகள் **ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் அறக்கட்டளை,** சுசீந்திரம்

**திரு.P. தாணுமாலயப்பெருமாள் பிள்ளை,** காக்கமூர்.
மேலாளர், திருக்கோயில் தலைமை அலுவலகம், சுசீந்திரம்.

வித்வான் **திரு.செ. சதாசிவன் பிள்ளை** அவர்கள் நாகர்கோவில்

**திரு.C.S. மணி,** தெற்குமண், சுசீந்திரம்.

திரு.**P.முருகேசன்** (ஓவியர்) காக்கமூர், சுசீந்திரம்.

# நூலுக்கு மெருகூட்ட உதவியவை

1) பழங்கால ஓலைச்சுவடிகள், நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட ஸ்காந்த புராணம், பிரம்மாண்ட புராணம், கேரள ஷேத்திர மகாத்மியம் மற்றும் அனைத்து கல்வெட்டு குறிப்புப் பதிவேடுகள், சுசீந்திரம் திருக்கோயில் ஆசாரக்கணக்குப் பதிவேடு, ஐம்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட புகைப்படங்கள் மற்றும் திருக்கோயில் சம்பந்தப்பட்ட மலையாளம் மற்றும் சமஸ்கிருதம், தமிழ் நூல்கள் போன்றவை வட்டப்பள்ளிமடம் தேசிய புஸ்தக சாலையிலிருந்து கிடைக்கப்பெற்றது.

2) திரு.கே.கே. பிள்ளை அவர்களின் 'சுசீந்திரம் டெம்பிள்' ஆங்கில ஆராய்ச்சி நூல்.

3) குமரி ஸ்தல புராணம் (திரு. சங்கர நாவலர்)

4) சேரநாடும் செந்தமிழும் (வித்துவான் செ. சதாசிவன்பிள்ளை)

5) சுசீந்திரம் ஸ்தலபுராணம் (பரமேஸ்வரர்)

6) சுசீந்தை பதிற்றுப் பத்தந்தாதி

7) மூவர் அருளிய தேவார நூல்

8) திருவிதாங்கூர் ராஜவம்சம் (டாக்டர் V.S. சர்மா M.A. Ph.D. திருவனந்தபுரம்)

9) பிரம்ம ஸ்ரீ பாச்சுமுத்தது அவர்களின் நூறாவது நினைவு ஆண்டுமலர்

10) தாழக்குடி சரித நூல் (திரு. பத்பநாபபிள்ளை)

11) சுசீந்திரம் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் (1984)

12) மலரும் மாலையும். மருமக்கள் மான்மியம் (அமரர் கவிமணி அவர்கள்)

13) குமரி மாவட்ட புலவர்கள் (வித்துவான் சி. குமரேசபிள்ளை)

14) இமாலயம் கொடு முடி முதல் குமரிவரை (திரு யான் பைப்பர், ஜெர்மன்)

15. அங்காளம்மன் ஓர் ஆய்வு (திருமதி. ஈவ்லின் மேயர், மேற்கு ஜெர்மனி)

16. பேரறிஞர் அமரர் திரு. எஸ். வையாபுரி பிள்ளை நூல்கள்.

17. வரலாற்றில் வட்டப்பள்ளி மடம் (குமரிச்செல்வன் ச.கிருஷ்ணன் அவர்களது எம்.பில். ஆய்வு ஏடு)

18. ஆலயம் தொழுவது சாலவும் நன்று (திரு. குருசுப்பிரமணியம்)

# அருள் தரும் ஸ்தாணுமாலயன்

## தேவாரத் திருப்பதிகம்

"சேணுலா மதில் வேணு மண்ணுள்ளோர்
காணமன் றலார் வேணு நற்புரத்
தாணுவின் கழல் பேணு கின்றவர்
ஆணி யொத் தவரே"

- திருஞான சம்பந்த சுவாமிகள்

## மவரும் மாலை

திங்களுங் கருணை காட்டும்
தீக்கணும் வெகுளி காட்டும்
கங்கையுன் பெருமை காட்டும்
கடுவுமுன் ஆண்மை காட்டும்
சிங்கநுண் இடையைக் காட்டும்
சிறையனம் நடையைக் காட்டும்
மங்கையோர் பாகா தாணு
மாலயா சுசீந்தை வாழ்வே

அமரர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## சுசீந்திரம் ஸ்தல புராண சிறுவிளக்கம்

இந்தப் புனித திருத்தலத்தைப் பற்றி முற்கால ஓலைச்சுவடிகளில் சமஸ்கிருத மொழிகளில் எழுதப்பட்ட ஸ்காந்த புராணம், பிரம்மாண்ட புராணம், கேரள ஷேத்திர மகாத்மியம், சுத்திஸ்தானம், சுசீந்திர பிரத்யயம் மற்றும் பெரியவர் திரு பாச்சு மூத்தது, நாஞ்சில் நாட்டு முத்தமிழ் கவிராயர், சங்கர நாவலர், அருணாச்சல கவிராயர் பிரம்ம ஸ்ரீ பரமேஸ்வர சர்மா, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, டாக்டர் P.N. சர்மா, போன்றவாகள் எழுதிய நூல்களிலிருந்தும் இப்புண்ணிய பூமியின் ஆதிகால வரலாறுகளும், அதன் மகிமைகளையும் அறிய முடிகிறது.

ஆங்கில வருடம்-1900 ஜுன் 30-ம் நாள் சென்னையில் ஆங்கில அதிகாரியாக விளங்கிய திரு "ஆல்பர்ட் சேர்ட்டட்டன்" என்பவரின் அணிந்துரையோடு "ஸ்காந்த புராணம்" சமஸ்கிருத மொழியிலிருந்து மொழிமாற்றம் செய்யப்பட்டு வெளிவந்துள்ளது. இதில் இருபத்திநான்கு அத்தியாயங்களிலும், அடுத்து பிரம்மாண்ட புராணத்தில் மூன்று அத்தியாயங்களில் ஐம்பத்தொன்று பாடல்களிலும் கேரள ஷேத்திர மகாத்மியத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் நாற்பத்தொன்று பாடல்களிலும் மற்றும் சுத்திஸ்தானத்தில் 1548 பாடல்களும், சுசீந்திர பிரத்யயம் நூலில் கைமுக்குத் தண்டனையைப் பற்றியும், திரு பாச்சு மூத்தது பெரியவர், திரு பரமேஸ்வர சர்மா ஆகியோர் இருபத்தினான்கு சருக்கங்களிலும், முத்தமிழ் கவிராயர் முப்பது சருக்கங்களிலும், சங்கர நாவலர், இயற்றி அருணாச்சல கவிராயர் பாடிய கன்னியாகுமரி ஸ்தல புராணத்திலும், அடுத்து தொண்ணூறு வயதுடைய சுசீந்திரம் வட்டப்பள்ளி டாக்டர்.பி. நீலகண்ட சர்மா அவர்கள் எழுதி தற்போது ஐயப்பன் என்ற மலையாள மாத இதழில் வெளிவந்து கொண்டிருக்கும் "சுந்தர புரேச மகாத்மியம்" 399 பாடல்களிலும், சுசீந்திரம் ஸ்தல புராணங்களுக்கு

சாட்சியங்களாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. 1912-ம் ஆண்டு கேரள மாநிலம் திருச்சூரில் மலையாளத்தில் பிரம்மாண்டபுராணம் அச்சாகி வெளியாகியுள்ளது.

மேலும் முற்காலத்தில் அஸ்தினாபுரத்து பஞ்ச பாண்டவர்கள் வனவாசத்தின் போது புண்ணிய பூமியாக போற்றப்படும் இந்த ஞான கானக வனத்திற்கு வருகை தந்த போது அத்திரி-அனுசூயா போன்ற தவமுனிவர்கள் பலர் ஆசிரமம் அமைத்து வாழ்ந்து வந்ததாகவும் அவர்களில் ஒருவரான "கர்கி" என்ற முனிவர் பாண்டவ மைந்தர்களில் மூத்தவரான தர்ம புத்திரரிடம் இப்புண்ணிய பூமியின் வரலாற்று மகிமையை எடுத்துக்கூறியதாகவும் மேற்கண்ட புராணங்கள் தெரிவிக்கின்றன. இத்திருத்தலத்தின் பெருமையை அறிந்த பஞ்ச பாண்டவர்கள் இங்குள்ள பிரக்ஞா தீர்த்தத்தில் நீராடி அவரவர் இஷ்ட தெய்வங்களைப் பூஜித்து வழிபட்டதாகவும் ஸ்தல புராணம் கூறுகின்றது. அடுத்து அருணாச்சல கவிராயர் தமது பாடலில்

*"நீரருளிச்செய்த சிவபுராணம்*
*பத்தினுள் ஒன்றாகிய காந்தமெனும்*
*புராணத்திலிருந்து சுசீந்திரம்*
*ஸ்தல புராண மான்மீயம் கூறினீர்."*

எனக்குறிப்பிட்டுள்ளார்.

நூறு ஆண்டு ஆன பின்பும், மேற்கண்ட நூல்கள் மற்றும் ஓலைச் சுவடிகள், கல்வெட்டு குறிப்புகள் அழியாமல் இருந்து வருவதை ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலான வட்டப்பள்ளி மடத்தில் பொக்கிஷம்போல் பாதுகாக்கப்பட்டு வரும் புத்தக நிலைய நூல்களிலிருந்து அறிய முடிகிறது.

# 'சுசீந்திரம்' திருப்பெயர் விளக்கமும், திருக்கோயில் இருப்பிடமும்.

சுசீந்திரம் திருக்கோயிலில் கைலாசநாதர் பாறையிலுள்ள கல்வெட்டுகளில் திருச்சிவிந்திரம், சுந்தரசதுர்வேதி மங்கலம் (சுந்தரச்சோழன் காலம்) என குறிப்பிடப்பட்டுள்ளது. புராண காலங்களில் இவ்விடமானது ஞானாரண்யம், (ஞானம் + ஆரண்யம்), பிரக்ஞாதீர்த்தபூமி, என வழங்கப்பட்டதாக 'ஸ்காந்த' புராணத்தின் வாயிலாக அறிய முடிகிறது. தேவேந்திரனுக்கு எற்பட்ட நிலையை திருஞானசம்பந்த சுவாமிகள் கீழ்வரும் தேவாரப்பாடலில்,

**முன்னொரு காலத்து**
**இந்திரன் உற்ற முனிசாபம்**
**பின்னொரு நாளவ்**
**விண்ணவர் ஏத்தப் பெயர்வெய்தி**
**தன்னருளார் கண்**
**ஆயிரம் ஈந்தோன் சார்பென்பர்**
**கன்னியர் நாளும்**
**துன்னமர் கண்ணார் கோயிலே**

இவ்வாறு விளக்குகிறார்.

## அடியார்க்கு அடியவர்

தன்னை அருள் வேண்டி இந்திரன் பூசித்ததால் இந்திரனுக்கு விமோசனம் அளித்து அவர்தம் பாபம் நீங்கச்செய்தார். சிவபெருமான் **'மாற்றான் மனைவியை மனத்தாலும் நினைக்ககூடாது.'** என்ற உயர்ந்த தத்துவத்தையும், அதை மீறிய முப்பத்து முக்கோடி தேவர்களுக்கெல்லாம் அரசனாக விளங்கிய தேவேந்திரனுக்குக் கிடைத்த தண்டனையையும் அறிந்தோம். **'நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே'** என இறைவனிடம் வாதிட்ட நக்கீரர் பெருமானின் பெருமையைத் திருவிளையாடற் புராணத்தில் படித்துள்ளோம். இதன் மூலம் 'யாவர்க்கும் ஒரே நீதி' என்ற உண்மையை உணர முடிகிறது.

'தில்லை வாழ் அந்தணர் தம்
அடியார்க்கும் அடியேன்'

அனுதினமும் இறைவனையே எண்ணி பூஜித்து வழிபட்ட பக்தர்களை அடியார்களாகவும் அவர்களுக்கு தொண்டு செய்த அடியவராக, இறைவன் புரிந்த அற்புத விளையாடல்களைப் பல புராணங்கள் வாயிலாகவும நாம் அறிய முடிகிறது.

பாரதத் திருநாட்டின் தமிழகத் தென் கோடியில் குமரிக்கடல் நோக்கி வற்றாத ஜீவ நதியாய் வழிந்தோடிக் கொண்டிருக்கும் கலிங்கம் பாடும்-பஃறுழியாற்றின் (பழையாறு) கரையோரம் **'ஞானாரண்யம்'** என்று பெயர் பெற்ற, சுந்தர சதுர்வேதி மங்கலம் என்ற பக்தி மணம் கமழும், முக்தி தந்திடும், மும்மூர்த்திகள் வீற்றிருக்கும் மிகப் பழமையான இத்திருக்கோயில், குமரி மாவட்டத்தின் மாபெரும் திருக்கோயிலாகும். இது நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் ஆறு கிலோ மீட்டர் தொலைவில் கன்னியாகுமரி செல்லும் வழியில் உள்ளது. ஆசார ஆகம விதிகளை நாள்தோறும் கடைப்பிடித்து காலம் தவறாது வழிபாடுகள் நடந்துவரும் புண்ணியத்தலம். தேசத்தை இணைக்கும் தேசிய நெடுஞ்சாலை வழி செல்வோரைக் காந்தமாய் கவர்ந்திழுக்கின்ற தெய்வீகத் திருநகர். ஆழ் கடலில் வழி தவறி செல்லாமலிருக்க கரையைக் காட்டும் கலங்கரை விளக்குப் போன்று, மனித வாழ்வில் தலை நிமிர்ந்து நிற்க வழிகாட்டும் வானுயர்ந்த இராஜ கோபுரத்தோடு அமைந்திருக்கும் அருள்மிகு ஸ்தாணுமாலயன் திருக்கோயில். சிவன், திருமால், பிரமன் என்ற மூவரும் ஒரே மூர்த்தியாய் வீற்றிருக்கும். ஒரு பிரசித்தி பெற்ற புண்ணியத்தலமாகும்.

இந்திரன் புனிதம் அடைய காரணமாய் இருந்த இடமானதால் சுசீந்திரம் எனவும், தீ போன்ற செந்நிறமேனியை உடையவர் சிவபெருமான் அதனால் சிவிந்திரம், சிவந்தரம் என

பெயர் ஏற்பட்டிருக்கலாம் என இருவித கருத்துக்கள் நிலவுகின்றது. இந்திான் வருவதற்கு முன்னரே இங்கே சிவலிங்கம் உள்ளது. சிவனை பூஜை செய்த இந்திரன் அடியாராகிறார். தினமும் இரவில் இந்திரனே வந்து அர்த்த சாம பூஜை நடத்துவதாக கூறப்படுகிறது. இப்புண்ணிய பூமியும் அந்த அடியாரின் பெயரில் விளங்கட்டும் என சிவன் பெருவுளம் கொண்டார் போலும். இன்றும் சுசீந்திரம் என்ற பெயரே நிலைத்து நிற்கின்றது. அடியார்க்கும் அடியவரான இறைவனை அடிபணிந்து தொழுதிடுவோம்.

## ஞான கானகப் பெருமை

### கானகத்தின் சிறப்பு

கோவில் நகரமாக போற்றப்படும் சுசீந்திரம் ஒருகாலத்தில் பெருங்காடாக இருந்தது. முனிவர்கள் பலர் இங்கே ஆசிரமம் அமைத்து தியானத்திற்கு உகந்த இடமாக இருந்ததால் இங்கே தவம் செய்து வாழ்ந்து வந்தனர். இப்பகுதியில் 'ஆசிராமம்' என்ற பெயரில் சிற்றூர் ஒன்று நாகர்கோவிலில் இருந்து சுசீந்திரம் வரும் வழியில் இருப்பதை காணலாம்.

### மன்னர்கள் ஆட்சி

செழிப்போடு திகழ்ந்திடும் இக்காடு கொடும் வறட்சியிலும் கூட சோலைவனமாகவே இருந்தது. நூற்றாண்டுகள் பல கடந்தன. பொதிகை மலையில் வாழ்ந்த ஆய்-வேள் மன்னர்களின் ஆட்சியின் கீழ் இந்த நாடு இருந்தது. ஆய்அண்டிரன், அந்துவன் போன்றவர்கள் இவ்வரிசையில் வந்தவர்கள். பிற்காலங்களில் பூதப்பாண்டியன், அழகிய பாண்டியன், நாஞ்சில்பொருநன், நாஞ்சில்வள்ளுவன் போன்றவர்களும் இப்பகுதியை ஆட்சி செய்து வந்தனர் என்பது வரலாறு.

இவர்களைத் தொடர்ந்து கோச்சடையன், செடில பராந்தகன், மாறன் சடையன், வீரநாராயணச் சடையன், ராஜசிம்மன் போன்ற பாண்டிய மன்னர்களும் ஆண்டுவந்ததை அகநானூறு, புறநானூற்று நூல்களும் சரித்திர நூல்களும் தெரிவிக்கின்றன.

இதனை நினைவு கூறும் விதத்தில் குமரிமாவட்டத்தில் மேற்கூறிய மன்னர்களின் பெயரால் விளங்கிடும். அழகிய பாண்டியபுரம், பூதப்பாண்டி, வீரநாராயணமங்கலம், சடையால் புதூர், வீராணி எனப்படும் வீர நாராயணச்சேரி, ஜெயந்தன் ராஜா பெயரைக் குறிக்கும் சேந்தன்புதூர் (மயிலாடி பக்கம்) போன்ற ஊர்கள் உதாரணமாக இருந்து வருவதைக் காணலாம். ஆய்குல மன்னர்கள் ஆட்சியின்போது ஆயர் குலங்கள் (கிராமங்கள்) தோன்றலாயிற்று. அடர்ந்த கானகமாக இருந்த இப்பகுதியில் மனிதர்கள் நடமாட்டமும் பெருகத் தொடங்கியது.

## ஆயர்குல பெண்களின் துயரம்

செழிப்போடு இருந்த அக்காலத்தில் மனிதனைப் போல் கால்நடைகளும் பெருகலாயிற்று. பசுக்களிலிருந்து கிடைக்கும் பால், தயிர், நெய், போன்றவற்றை மண்பானைகளில் எடுத்து பக்கத்து ஊர்களுக்குத் தலையில் சுமந்து சென்று கொடுத்து தொழில் நடத்தி வரும் பெண்களை இன்றும் நாம் காணமுடிகிறது. அதுபோல் சாலைவசதி, போக்குவரத்து வாகனங்கள் இல்லாத அக்காலத்தில், காட்டுவழிப்பாதை (ஆட்கள் நடந்து செல்லும் ஒற்றையடிப்பாதை) நடந்து சென்று மேற்படி தொழிலை நடத்தி வந்தனர். ஆய்குலப்பெண்கள்.

இவ்வாறு ஆய்குலப் பெண்கள் காட்டிலுள்ள ஒற்றையடிப் பாதை வழியாக சென்று வரும் போதெல்லாம் மரத்தின் கிளையொன்று தடையாக இருந்து வந்தது. பெண்கள் சுமந்து செல்லும் பானை மரக்கிளையில் மோதி பானை உடைந்து பால், தயிரெல்லாம் வீணாயின. அடிக்கடி இது நடந்து

வந்ததால், பெண்கள் துயரம் கொண்டனர். வீட்டிலுள்ள கணவரிடம் இதனைத் தெரிவித்தனர். கிளையை வெட்டினால் மீண்டும் தளிர்விட்டு வேறு கிளைகள் உருவாகும். எனவே வழியில் நிற்கும் மரத்தை வெட்டி அகற்றிட வேண்டும். என்ற எண்ணத்தோடு கையில் கோடாரிகளோடு மரம் இருக்கும் பகுதிக்கு வந்து சேர்ந்தனர், கணவன்மார்கள்.

## மரத்தில் வடிந்த இரத்தம்

வந்தவர்களில் ஒருவர் தனது கோடாரியால் மரத்தின் அடிப்பாக மூட்டில் வெட்டவே அதிலிருந்து (வெட்டுபட்ட இடத்தில்) இரத்தம் பீறிட்டு பாய்ந்து கீழே வடியத் தொடங்கியது. இதனைக் கண்ட அனைவரும் திகைத்தனர். மனித இரத்தம் போல் தென்பட்டதால், மரத்தின் பின்புறம் சென்று பார்த்த போது அதன் அடிப்பாகத்தில் லிங்க வடிவில் மூன்று சிறிய கற்கள் ஒன்றன் மீது ஒன்று மூன்று அடுக்குகளாய் இருப்பதைக் கண்டனர். தெய்வ நம்பிக்கை மிகுந்த அக்காலத்தில் உடனே அனைவரும் பயந்து ஐயோ! தெய்வங்கள் வசிக்கும் இடத்தில், தெய்வத்திற்கு நிழல் கொடுக்கும் தெய்வீக மரத்தை வெட்டத் துணிந்தோமே. இனி, என்ன நடக்கப்போகிறதோ, என அலறி அந்த இடத்தைப் பணிந்து வணங்கினார்கள்.

## சான்றாக விளங்கும் சிற்பக்காட்சி

மேலும் இக்காட்சியைச் சுமார் 520 - வருடங்களுக்கு முன்னால் கட்டுவிக்கப்பட்ட இத்திருக்கோவில் செண்பகராமன் மண்டபத்திலுள்ள சாட்சி வினாயகர் பக்கமுள்ள கல்தூண் ஒன்றில் புடைப்பு சிற்பத்தில் மரத்தை ஒருவர் கோடாரியால் வெட்ட முனைவதும் மரத்தில் சிவலிங்கம் தெரிவதும், பக்கத்தில் நிற்கும் பெண் தலையில் பானை சுமந்து இருப்பது போன்றும் சிற்பி வடித்துள்ளதைக் காணலாம்.

## சுயம்புலிங்கத் தோற்றம்

அடுத்து, மேடாக இருந்த இடத்தில் இந்த அதிசயம் நடந்ததால், மரத்திலிருந்து வடிந்து கொண்டிருந்த இரத்தம் மரத்தின் நேரே இருந்த தாழ்வான ஒரு பகுதியில் சென்று தேங்கி நின்றது. அனைவரும் சென்று அங்கு பார்க்கும் போது சுற்றிலும் முள் செடிகளையும் அதன் நடுவில் சுயம்புலிங்க கல் வடிவத்தையும் (சிலையை) கண்டு ஆச்சரியமடைந்தனர். இதுவே தற்போதைய ஸ்தாணுமாலயர் சன்னதியாகும்.

## கருவறைத் தோற்றம்

புராணக் காலத்தில் "ஞானாரண்யம்" என்று போற்றப்பட்ட இப்பகுதியில் தவநெறியில் சிறந்து விளங்கிய அத்திரி - அனுசூயா தம்பதிகளுக்கு, மும்மூர்த்திகளாய் காட்சி கொடுத்து, பிறகு மூன்று சுயம்புலிங்கங்களாக உருவம் பெற்ற இப்புனித இடமே **"கொன்றையடி நாதர்"** திருக் கோவிலாகும். அதாவது கோடாரியால் வெட்டுபட்ட இடம்.

கௌதம முனிவ்ரின் மனைவியான அகலிகையை அடைய விரும்பி முனிவரின் சாபத்திற்குள்ளான தேவேந்திரன் சாபவிமோசனம் பெற்றிட ஞானாரண்யம் (சுசீந்திரம்) வந்து சிவலிங்கத்தை உருவாக்கி, மும்மூர்த்திகளையும் ஒரே வடிவில் (லிங்கம்) பூஜித்து, புனிதம் பெற்று, நன்றிக் கடனாக தினமும் இரவு வந்து "அர்த்த சாம பூஜை" நடத்தி வருவதாக கூறப்படும் இத்தெய்வீக சன்னதியே ஸ்தாணுமாலையன் மூலஸ்தான மாகும். (இரத்தம் தேங்கி நின்ற தாழ்வான பகுதியில் அமைந்து இருந்த சுயம்புலிங்க சன்னதி)

தற்போது இக்கருவறையில் (மூலஸ்தானம்) வீற்றிருக்கும் சிவலிங்கம் தாழ்வான பகுதியிலும் இதற்கு நேரான எதிர்திசையில் அமைந்திருக்கும் கொன்றையடி மூலஸ் தானம் மேடான இடத்திலும் இருப்பதைக் காணலாம். ஆய்வேள் மன்னர்கள் காலத்தில் காணப்பட்ட இத்தெய்வங்களுக்கு சிறு கோவில்கள் கட்டி "பூர்ண ஜோதிசபை" ஆட்சி ஏற்படுத்தப்பட்டு

தெய்வங்களுக்கு பூஜை முதலான காரியங்கள் நடத்தப்பட்டு வந்தது. பிற்காலத்தில் அரசாண்ட - மன்னர்களால் ஒவ்வொரு பணிகள் செய்யப்பட்டு சுமார் 750 ஆண்டுகளுக்கு முன்னால் பாதுகாப்பு இல்லாமல் இருந்த முக்கிய மூலஸ்தானங்களின் கருவறைகள் பழுதுபட்டு போகவே புதிய மூலஸ்தான மண்டபங்கள் மன்னர்களின் முயற்சியால் ஒவ்வொரு கால கட்டத்திலும் கட்டப்பட்டு வளர்ச்சியடைந்தது.

## சுசீந்திரம் - ஸ்தலவரலாறு

முற்காலத்தில் "ஞானாரண்யம்" - (அறிவுக்கானகம்) என்று போற்றப்பட்ட இப்பகுதியில் (சுசீந்திரம்) இங்கு நாடி வந்து அனேக ரிஷிகள் (முனிவர்கள்) ஆசிரமங்கள் (குடில்கள்) அமைத்து இங்கு வாழ்ந்ததாக புராணங்கள் மூலம் அறிய முடிகிறது. அக்காலத்தில் புத்தி பேதமையால் கௌதம முனிவரின் மனைவி அகல்யாவை அடைய விரும்பிய தேவேந்திரன் முனிவரின் சாபத்திற்குள்ளானான். அகல்யா கல்லாக்கப்பட்டாள். பின்னாளில் ஸ்ரீஇராமன் வனவாசத்தின் போது அவர் பாதம் பட்டு மீண்டும் பெண்ணாகியதாக இராமாயணக் காவியம் தெரிவிக்கின்றது.

முனிவரின் சாபத்தினால் பாதிக்கப்பட்ட இந்திரன் உடல் முழுவதும் ஆயிரங்கண்ணுடையவனானான். தவறை உணர்ந்த இந்திரன் முனிவரைப் பணிந்து தவறை மன்னித்து சாப விமோசனம் வேண்ட, கௌதமமுனிவர் 'இந்த சாபத்திலிருந்து நீ-மீள வேண்டுமென்றால், ஞானாரண்யம் சென்று மும்மூர்த்திகளும் (தத்தாத்ரியேய) வடிவில் ஒன்றாக இருக்கும் இடம் சென்று வழிபட்டால் புனிதமடைவாய் என்று விமோசனத்திற்கான வழியைக் கூறினார்.

முனிவரின் அருள்வாக்கினால் தேவேந்திரன் தனது பரிவாரங்களுடன் ஞானாரண்யம் வந்து "உச்சை சிரவஸ்" என்ற தனது குதிரையைக் கிழக்குத் திசை மலைக்கு அனுப்புகிறான்.

அதுவே வாஜிபுரம் (வாஜி : குதிரை) என்றழைக்கப்பட்டது. அது சுசீந்திரத்திலிருந்து சுமார் 5 கிலோமீட்டர் தொலைவிலுள்ள தற்போதைய "மருங்கூர்" என்ற பகுதியாகும். இங்குக் குன்றின் மீது வீற்றிருக்கும் முருகப் பெருமான் வருடத்திற்கொருமுறை தன் தாய் தந்தையரைக்காண வாஜி எனப்படும் குதிரை மீது அமர்ந்து மார்கழி 3-ம் திருவிழா இரவு சுசீந்திரம் வந்து தாய் தந்தையரைச் சந்திக்கும் காட்சியை (மக்கமார் சுற்று) மார்கழி திருவிழாவின் போது மூன்றாம் நாள் இரவு காணலாம்.

அடுத்து, தேரில் வந்த இந்திரன் தனது தேரை நிறுத்திய இடம் "தேரூர்" என்ற பெயரில் (சுசீந்திரத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது) இன்றும் அழைக்கப்பட்டு வருகிறது. மேலும் மும்மூர்த்திகளை நீராடி பூஜிக்க வேண்டி இந்திரன் தனது ஐராவதம் என்றழைக்கப்படும் யானையைச் சுசீந்திரத்தின் வடக்கே அமைந்துள்ள இரண்டாவரி மலைக்கு அனுப்பி அது தனது கொம்பினால் கோடு கிழித்து நீர் கொண்டு வந்ததாக ஸ்தல புராண வாயிலாக அறிய முடிகிறது.

இந்திரனின் ஐராவதமான வெள்ளையானை பிரக்ஞா தீர்த்த குளக்கரையின் அருகில் நின்றிருந்த அரச மரத்தின் கிளைகளை ஒடித்து இலைகளைத் தின்று கொண்டிருக்கும் போது கிளையின் நுனிபாகம் அங்கு தவம் செய்து கொண்டிருந்த வேதவியாச முனிவரின் மீது படவே, சினங்கொண்ட அவர் என் தவத்திற்கு இடையூறு செய்த நீ . . கல்லாய் போ . . என யானையை சபிக்கவே அது கல்லாய் மாறியாதாகவும் ஸ்தல வரலாறு வாயிலாக தெரிய வருகிறது.

அன்று பிரக்ஞா தீர்த்தம் சிறிய குளமாக இருந்துள்ளது. பிற்காலத்தில் சுமார் 527 - வருடங்களுக்கு முன்னர் தான் தெப்பக்குளமாக மன்னராட்சியில் செய்து முடிக்கப்பட்டது. வேதவியாச முனிவர் தவம் செய்த இடத்தில் அவர் பெயராலே "வேதவியாச விநாயகர்" திருக்கோயில் தெப்பக் குளக்கரையில் (மேற்கு கரையோரம்) இன்றும் இருப்பதைக் காணலாம்

இதையெல்லாம் கதையாக எடுத்துக் கொண்டாலும், இதை நினைவுபடுத்தும் நினைவு சின்னங்கள் இன்றும் இருந்து வருவதை காணமுடிகிறது. தேவேந்திரனின் ஐராவதமாகிய யானை நின்றிருந்த இடத்தை நினைவுபடுத்தும் பொருட்டும், அது கல்லாக மாறியதை அறியும் பொருட்டு தெப்பக்குளத்தின் மேற்கு பாகத்தில் யானை வடிவில் பெரிய கற்பாறை இருந்து வருவதை இன்றும் காணலாம்.

யானை கோடு கிழித்து ஆற்றை உருவாக்கியதால் (கோடு + ஆறு) "கோட்டாறு" என்ற பகுதி சுசீந்திரத்திலிருந்து 3-கிலோமீட்டர் தொலைவில் இன்றும் அழைக்கப்பட்டு வருவதைக் காணலாம். யானை தன் தந்தங்களால் அமைத்த இந்நதியை "தந்த நதி" என்றும் மிகவும் பழமையான இதை "பழையாறு" என்றும் அழைக்கின்றனர். இந்த பழையாற்றிலிருந்து கால்வாய் அமைத்து அதன் வழியே ஆற்று நீர் தெப்பக்குளம் வந்து சேர்கிறது.

இந்திரன் நீராடி இறைவனைத் தரிசிக்க தனியாக குளத்தின் அருகே கிணறு அமைத்து அதில் நீராடியதை நினைவு படுத்தும் விதமாக திருக்கோவிலினுள் "இந்திரக் கிணறு" என்ற பெயரில் - கொடும் வறட்சியிலும், வற்றாத ஊற்றாய் தண்ணீர் எப்போதும் நிறைந்து ஊரில் "தண்ணீர் பஞ்சம்" இல்லாத அளவுக்கு இக்கிணறு பயன்பட்டு வருகிறது.

மும்மூர்த்திகளின் ஆணைக்கிணங்க முப்பத்து முக்கோடி தேவர்களையும் வரவழைத்து அவர்கள் முன் னிலையில், வெண்கலப் பாத்திரத்தினுள் நெய் ஊற்றி, தீயிட்டு கொதிக்க வைத்து அதனுள் சிறிய நந்தி விக்கிரகத்தைப் போட்டு அதில் இந்திரன் இறங்கி மூழ்கி நந்தியோடு வெளியே வந்ததும் முனிவரின் சாபம் நீங்கி புனிதம் (சுசி : சுத்தம்) பெறுகிறான் ஆம். புத்தி தெளியவைத்து புனிதனாக்கியது ஞானாரண்யம் என்றழைக்கப்பட்ட புண்ணிய பூமி இது. இக்காட்சியை கோபுரத்தினுள் ஓவியமாக இன்றும் காணலாம்.

# கற்பின் பெருமை

இந்த புண்ணிய பூமியில் கணவனைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றி வாழ்ந்த அனுசுயாவின் கற்பின் மகிமையை நாரதர் மூலம் அறிந்த தேவியர்கள் (பார்வதி, லெஷ்மி, சரஸ்வதி) மூவரும் அவளது கற்பினைச் சோதிக்க தத்தம் கணவர்களை (மும்மூர்த்திகளை) இப்பூமிக்கு அனுப்பி வைக்கின்றனர்.

நாரதரின் கூற்றினால் மும்மூர்த்திகளும் "நாரதரின்-கலகம் நன்மையில் முடியட்டும்" என்று நினைத்து அன்சுயாவின் பெருமையை இவர்களும் (தேவியர்களும்) உலகமும் போற்ற வேண்டும் என்ற எண்ணத்துடனும் அனுசுயாவின் ஆசிரமத்திற்கு வருகின்றனர். அவர்கள் மூவரும் வயோதிக கிழவர்களாய் உருமாறி அனுசுயாவிடம் மாங்கல்ய பிச்சை கேட்கின்றனர்.

வருகின்ற அடியவர்க்கெல்லாம் அமுது படைத்து ஆதரிக்கும் நற்குணவதியாய் திகழ்ந்த அனுசூயாவும், அவர்களை வரவேற்று ஆஸ்ரமத்தில் அமரவைத்து அமுது படைக்க முற்படுகின்ற தருணத்தில் அனுசுயாதேவி பிறந்த மேனியோடு (நிர்வாண கோலத்தில்) உணவு பரிமாறினால்தான் நாங்கள் உணவு உண்போம் என்று கூறவே, அதிர்ச்சிக்குள்ளானாள் அனுசுயா.. அவர்களிடம் எவ்வளவோ எடுத்துக் கூறியும் பலனில்லாமல் முடிவில் தன் தெய்வமான கணவனைக் கண்மூடித் தியானிக்கிறாள்.

தியானத்தில் வந்திருப்பவர்கள் மூவரும் கிழவர்கள் அல்ல மும்மூர்த்திகளே என்பதை அனுசுயா உணர்கிறாள். தன் கற்பின் நிலையை உணர்ந்திடும் பொருட்டு தன்கணவரின் பாதநீரை எடுத்து மூவரின் தலையில் தெளிக்கவே, மூவரும் பச்சிளம் குழந்தைகளாய் உருமாறினர். குழந்தைப் பருவம் அறியாப் பருவமல்லவா, மூன்று குழந்தைகளையும் வாரியெடுத்து மார்போடணைத்து பாலூட்டி பசியைப்

போக்கினாள். உருமாறி வந்திருந்த மூவரின் வேண்டுதலை மேற்கூறியபடி நிறைவேற்றினாள் அனுசுயா.

இமயமலை சென்று திரும்பிய தன் கணவர் அத்திரி முனிவரிடம் நடந்தவற்றை அனுசுயா விளக்கிக்கூறினாள். மும்மூர்த்திகளும் குழந்தைகள் வடிவத்தில் ஆஸ்ரமத்தில் மூன்று தொட்டில்களில் தவழ்வதைக் கண்டு பேரானந்தமடைந்தார் அத்திரி முனிவர். இறைவனின் அற்புத திருவிளையாடலைக் கண்டு அக மகிழ்ந்தார். மாணிக்கத் தொட்டிலில் மழலையரை தாலாட்டி மகிழ்வித்தாள் அனுசுயா தேவி.

நாட்கள் பல கழிந்தன. தேவியர்கள் தத்தம் கணவன்மார்கள் ஞானாரண்யம் சென்று திரும்பிவராத நிலை கண்டு கலங்கி நிற்கின்றனர் அவ்வேளையில் நாரத முனிவர் மூலம் நடந்தவற்றை அறிந்த தேவியர் அனுசூயாவின் ஆசிரமத்திற்கு வந்து மாங்கல்ய பிச்சை கேட்கவே அனுசுயா தேவியின் மழலையராய் இருக்கும் கணவர்களை எடுத்துச் செல்ல சம்மதிக்கின்றாள். மூன்று குழந்தைகளும் ஒரே வடிவில் இருந்ததால் தத்தம் கணவர்களை அறிய முடியாமல் தேவியர்கள் தவிர்க்கவே, அகிலத்திற்கும் அன்னையாய் விளங்கிடும் ஆதிபரா சக்தியை நோக்கி மூவரும் தவம் புரியுங்கள். அன்னை உங்கள் முன் தோன்றி அருள் புரிவாள் என்று மூவருக்கும் (தேவியர்கள்) எடுத்துரைத்தாள் அனுசுயா, அதன்படி தேவியர் மூவரும் மூன்று நீர்ச்சுனைகளை தோற்றுவித்து நீராடி தவம் செய்யவே, தவத்தின் பலனால் ஆதிபராசக்தி தேவியர் முன் தோன்றி அருளாசி வழங்கி, மூன்று குழந்தை களையும் மும்மூர்த்திகளாய் உருமாற்றினாள்.

ஆம்! தேவியர்கள் முன் தோன்றி அவர்கள் குறை தீர்த்த ஆதிபராசக்தியின் அற்புத வடிவத்தைத், தெப்பக்குளத்தின் வடபுறத்தில் "முன் உதித்த நங்கை" என்ற திருப்பெயரோடு விற்றிருக்கும் ஆதிபராசக்தியின் அற்புதக் கோயிலைக் காணலாம்.

### மும்மூர்த்திகள்

சுயரூபம் பெற்ற மும்மூர்த்திகள் "தத்தாத்திரியேய" வடிவில் அத்திரி-அனுசூயா தம்பதியர்க்கு காட்சி தருகின்றனர். குழந்தைகளாய் எங்கள் ஆஸ்ரமத்தில் தவழ்ந்து, பாலூட்டி பசி தீர்க்கும் பாக்கியம் கிடைத்த எங்களுக்குத் தங்களை எப்போதும் காணுகின்ற காட்சி கிடைத்திட வேண்டுமென இறைவனை (மூர்த்திகளை) வேண்டுகின்றனர் தம்பதியர்.

மும்மூர்த்திகளும் தம்பதியரின் வேண்டுதலை ஏற்று, கிருதயுகத்தில் அரசமரமாகவும், திரேதா யுகத்தில் துளசியாகவும், துவாபர யுகத்தில் வில்வ மரமாகவும், கலியுகத்தில் சரக்கொன்றை மரமாக மாறி அருள் பாலிப்போம் என்று கூறி மறைந்தனர். ஒன்றின் மேல் ஒன்றாக மும்மூர்த்திகள் சுயம்புலிங்க வடிவில் வீற்றிருப்பதைக் ஆதிமூலஸ்தானமாகிய கொன்றையடி சன்னதியில் காண முடிகிறது. ஆண்டுகள் ஈராயிரம் கடந்த பின்பும் சரக்கொன்றை மரமானது செதில் அரிக்காமல் கறுமை நிறத்தில் காட்சியளிப்பது எங்குமே காண முடியாத தெய்வீகக்காட்சியாகும்.

## திருக்கோயிலின் அமைப்பும் சில விளக்கங்களும்

பண்டைய மன்னர்கள் ஆட்சியில் பல மன்னர்களின் பக்தி உணர்வோடு எழுப்பப்பட்ட இப்பேராலயம். ஆண்டுகள் இரண்டாயிரத்தைத் தாண்டினாலும் இருபதாம் நூற்றாண்டின் புதுப்பொலிவோடு மிளிர்ந்திடும் புகழ்பெற்ற ஆலயமாக திகழ்கிறது. அரிந்த கோயிலில் அரியாத பல உண்மைகள் புதைந்துக் கிடப்பதைச் சுசீந்திரம் திருக்கோயில் கல்வெட்டுகள் மற்றும் ஆராய்ச்சி வல்லுனர்கள் வடித்தெடுத்த வரலாற்றுக் குறிப்புகளில் இருந்து சிலவற்றை அதன் முக்கிய அம்சங்களை அறிந்திட அழைத்து செல்கிறேன்

## உதய மார்த்தாண்ட வினாயகர்

திருக்கோவிலின் முகப்பு வாயிலின் வடக்குப் பாகத்தில் எழுந்தருளியுள்ளது விநாயகப் பெருமான் சன்னதி. இங்கு 4 - அடி உயரங்கொண்ட கருங்கற் சிலையை ஆங்கில ஆண்டு 1545 (கொல்லமாண்டு 720)-ல் பிரதிஷ்டை செய்து கோயிலையும் கட்டிக்கொடுத்து பூஜைகளுக்கு நிலங்களும் வழங்கியவர் சேர நாட்டு மன்னராகிய பூதல வீர உதய மார்த்தாண்டவர்மா ஆவார். சுமார் 433 வருடகாலமாக இருந்து வரும் இத்திருக்கோயில், இதை கட்டுவித்த மன்னரின் பெயராலே உதயமார்த்தாண்ட வினாயகர் என்ற திருப்பெயரிலேயே, போற்றப்படுகிறார். கொன்றையடி மூலஸ்தான தந்திரியாகிய பட்டர்கள் என்று அழைக்கப்படும் நம்பியார்கள் இங்கே பூஜை செய்து வருகிறார்கள்.

## திருக்கோயிலின் அமைப்பு

| | | |
|---|---|---|
| திருக்கோயிலின் மொத்தப் பரப்பளவு<br>வடக்கு, தெற்கு கல் மதில் சுவர் நீளம் | } | 93.900 ச.அடி |
| 402 அடி 10 இஞ்சு வீதம் இரண்டின் மொத்த அளவு | : | 804அடி 20 இஞ்சு |
| மேற்கு மதில் சுவர் அகல அளவு | : | 233 அடி 4 இஞ்சு |
| இராஜகோபுரம் உயரம் | : | 135 அடி |
| கோபுரத்தின் மொத்தப் பரப்பளவு | : | 5,400 ச.அடி |
| நீளம் (குறுக்களவு) | : | 90 அடி |
| அகலம் | : | 60 அடி |
| கோபுரத்தின் உச்சியிலுள்ள செம்பிலான<br>கலசங்கள் ஏழு, ஒவ்வொன்றும் உயரம் | } | 5 1/2 அடி |
| கோபுர வெளிப்பாகத்தின் இரண்டு<br>நிலைகளில் நான்கு பக்கமும் | } | இராமாயணம், சிவனின் திரு விளையாடல் புராண சிற்பங்கள் |
| ஐந்து நிலைகளில் வெளிப்பாகத்தின்<br>நான்கு பக்கமும் | } : | சுசீந்திரம் ஸ்தல வரலாறு சிற்பங்கள் |



இராஜ கோபுர முன்வாயில் தோற்றம்

யாளி மிருகம்



முன்முகப்பு தோற்றம்



கோபுரத்தின் இருபக்கங்களிலுள்ள நிலை வாயில்கள் மொத்தம் : 14+1 = 15

கோபுரப்பணி துவக்கப்பட்ட ஆ. ஆண்டு : 1875

துவக்கி வைத்தவர் : திருவிதாங்கூர் சமஸ்தான ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மன்னர்.

அரசு சார்பில் நிதி ஒதுக்கீடு : ரூ. 30,000 /-

பரிசுச் சீட்டு வெளியிடப்பட்ட நாள் : ஆ.1875(த.ஆ 1050) ஆவணி. 7ம் தியதி

பரிசுச்சீட்டு வாயிலாக வருவாய் : ரூ. 40,000 /-

மொத்தச் செலவு : ரூ. 70,000/-

பணிக்காலம் : 13 ஆண்டுகள்

13 ஆண்டுகளில் ஆட்சி புரிந்த மன்னர்கள் :

1) ஸ்ரீ ஆயில்யம் திருநாள் 2) ஸ்ரீ விசாகம் திருநாள்
3) ஸ்ரீ மூலம் திருநாள் இராமவர்மா.

கோபுரத்தின் ஏழுநிலை (மாடி)களிலும் உள்ளே, நான்குபுற சுவர்களிலும் ஓவியம் தீட்டியவர் :

சுசீந்திரம் வட்டப்பள்ளி, பிரம்மஸ்ரீ பாச்சுமூத்தது பெரியார்.

பணிமுடித்து முதல் கும்பாபிஷேகம் நடைபெற்ற நாள் :
(ஆங்.ஆ) 1888 ஆனி 21-ல் ஸ்ரீமூலம் திருநாள் இராமவர்மா மன்னர் தலைமையில்

தெப்பக்குளம் = 4 ஏக்கர் :- ஸ்தாணுமாலயன் திருக்கோயிலின் மொத்த பரப்பளவைக்கொண்டது.

### சுற்றுப்பிரகார மண்டபம்

தெற்கு சுற்றுப்பிரகாரம்

| | | |
|---|---|---|
| நீளம் | : | 303 அடி 6 இஞ்சு |
| அகலம் | : | 26 அடி 9 இஞ்சு |
| உயரம் | : | 21 அடி |
| தூண்கள் | : | 67 |

மேற்கு சுற்றுப்பிரகாரம்

| | | |
|---|---|---|
| நீளம் | : | 227 அடி |
| அகலம் | : | 26 அடி 9 இஞ்சு |
| தூண்கள் | : | 52 |

வடக்கு சுற்றுப்பிரகாரம்

| | | |
|---|---|---|
| நீளம் | : | 263 அடி 9 இஞ்சு |
| அகலம் | : | 26 அடி |
| தூண்கள் | : | 56 |

கிழக்கு சுற்றுப்பிரகாரம்

| | | |
|---|---|---|
| நீளம் | : | 220. அடி |
| அகலம் | : | 26 அடி |
| தூண்கள் | : | 88 |

## காவல் தெய்வங்கள்

கோயில் முகப்பில் இருபுறமும் அமைந்துள்ள முழுவதும் மரத்தால் பணி செய்யப்பட்ட தேர்கள் (ரதங்கள்) இதற்கு தேவையான மரங்களை காடுகளிலிருந்து கொண்டு வரும் பொழுது அதன் கூடவே வந்த தேவதைகளைத், தேரின் பக்கத்தில் நிலைநிறுத்தி வைத்துள்ளதாகவும், பூதத்தான், தவசுராஜன், மாடன், பேன்ற பெயர்களில் விளங்கி வரும் ஆலயத்தின் முன்பு அமைந்துள்ள சிறிய கோயில்கள் சிவபெருமான் கோயில் முன்பு பூத கணங்கள் காவல்காத்து வருவதாகவும் கூறப்படுகிறது. தினமும் இதற்கு (காவல் தெய்வங்கள்) பூஜைகளும், மார்கழித்திருவிழா தேரோட்டம் முடிந்து 8-ம் நாள் "கொடை" எனப்படும் சிறப்பு பூஜையும் நடைபெற்று வருகிறது.

## சுசீந்திரம்

# திருக்கோயில் முன்வாயில் தோற்றம்

*தோடுடைய செவியன் விடையேறியோர்*
*தூ வெண்மதி சூடிக்*
*காடுடைய சுடலைப் பொடி பூசி என்*
*உள்ளங்கவர் கள்வன்*
*ஏடுடைய மலரான் முனை நாட்பணிந்*
*தேத்த அருள் செய்த*
*பீடுடைய பிரமா புர மேவிய*
*பெம்மானிவ னன்றே.*

திருஞானசம்பந்த பெருமானுக்கு உமா-மகேஸ்வரர் காட்சி கொடுத்த விதத்தை மேற்கண்ட பாடல் மூலமாக விவரிக்கிறார். இத்திருக்காட்சியை வருகின்ற அடியார்களும் காணும் பொருட்டு, ரிஷப (காளை) வாகனத் தெரிசனத்தையும், இடதுபுறம் திருமாலைத் தாங்கியிருக்கும் கருடனும், வலதுபுறம் அம்பாளைச் சுமந்து நிற்கும் அன்னத்தையும் சிலைகள் வடிவில் தந்துள்ளனர் சிற்பிகள். கோயில் முன்வாயில் மண்டபத்தின் மேல் இக்காட்சியை முதலில் காணலாம்.

### *யாளிமிருகம்*

அடுத்து மண்டபத்தினைத் தாங்கி நிற்கும் இருபுறங்களில் உள்ள தூண்களில் யானையைத் தூக்கும் வலிமை படைத்த "யாளி" என்ற மிருகத்தின் சிலைகள் இருப்பதைக் காணலாம். யாளி என்ற இவ்வகை மிருகம் ஆப்பிரிக்கக் காடுகளில் முன்பு வாழ்ந்ததாகவும், தற்போது இந்த இனம் முற்றிலும் அழிந்து விட்டதாகவும் ஆராய்ச்சி வல்லுனர்கள் தெரிவிக்கினறனர். திருக்கோயிலில் அனேக தூண்களில் சிற்பிகள் இதை வடித்துள்ளனர். உதாரணத்திற்கு சுமார் 65 மில்லியன் (650 லட்சம்) ஆண்டுகளுக்கு முன்னால்

உலகிலேயே மிகப்பெரிய "டைனோசர்" என்ற மிருகத்தின் எலும்புக்கூட்டை அமெரிக்க நாட்டின் அறிவியலாளர்கள் சிகாகோ நகரில் உள்ள கண்காட்சி சாலையில் பொதுமக்கள் பார்வைக்கு வைத்துள்ளனர். (செய்திப்படம் : 18-5-2000 தினமலர் நாளோடு) இதுபோன்று யாளி என்ற மிருகமும் வாழ்ந்திருக்கலாம் என கருத இடமுள்ளது. சிங்கத்தின் முகத்தோடு யானையின் தும்பிக்கையும் அமைந்துள்ளதை சிலையில் காணமுடிகிறது. ஒரே கல்லில் வடிக்கப்பட்ட யாளியின் வாயினுள் பந்து போன்ற உருளைக்கல் உருண்டோடுவதை சிற்பி தன் திறமையில் காட்டியுள்ளான்.

## *மடாதிபதிகள், சிலைகள் விளக்கம்*

அடுத்து "யாளி" சிலைகளின் பக்கமுள்ள இரண்டு கல்தூண்களில் இரண்டு சிலைகளில் அமைந்துள்ள உருவங்கள் ஒருவரை ஒருவர் பார்த்து வணங்குவது போன்று தோற்றமளிக்கிறது. இடது தூணில் சுசீந்திரம் மடத்து சேந்தன் நீலகண்டன் என்பவரின் சிலையும், அதில் கல்வெட்டும் உள்ளது. இம்மடம் புத்தில்லத்து மடம் எனவும் பிற்காலத்தில் இது தெற்குமண் மடத்துடன் இணைந்தது என்றும் தெரியவருகின்றது. வலதுபுறமுள்ள தூணில் பிராமண மடாதிபதி ஒருவரின் சிலை இடம் பெற்றுள்ளது. இச்சிலையை ஆதினங்களின் மடாதிபதி எனச் சிலர் கூறிவருகின்றனர். பொதுவாக ஆதீன சன்னிதானங்கள் பூநூல் அணிவதில்லை. ஆனால் வலது புறமுள்ள சிலையில் பூநூல் அணிந்துள்ளதைக் காணமுடிகிறது.

சுசீந்திரத்தை அடுத்துள்ள தேரூரில் "வாணன்திட்டு" என்னுமிடத்தில் அமைந்திருக்கும் உமையொருபாகம் மடத்திலுள்ள பிராமண மடாதிபதியாகவே இதனைக் கருத இடமுள்ளது. இம் மடத்தைச் சார்ந்த கல்மண்டபம் மற்றும் இடங்கள் கோயிலின் முகப்பில் வலதுபுறம் இன்னும் அவர்கள் பொறுப்பில் இருந்து வருகிறது. மேலும் திருக்கோயில் முன்வாயிலில் அமைந்துள்ள நாடகசாலை மண்டபப் பணிகளுக்கு வேண்டிய உதவியும், இதற்காக நன்கொடைகள் மக்களிடம் வசூல் செய்து

கொடுத்துள்ள விவரங்கள் தெரியவருகிறது. அமரர் கவிமணி அவர்கள் "சிவதீட்சை" பெற்றதும் இம்மடமாகும். **இம்மடாதிபதியை உமையொருபாக தேசிகர்** எனவும் அழைப்பதுண்டு தூத்துக்குடி மாவட்டம் ஸ்ரீவைகுண்டத்திலும் மடம் அமைத்து தானதர்மங்கள் இன்றும் நடந்து வருகிறது. திருக்கோயிலினுள் சில மண்டபங்களில் உள்ள தூண்களில் அமைந்துள்ள சிலைகள், அவரவர் சொந்த செலவிலும் பணிக்கு செய்துள்ள உதவிகளுக்காகவும் சிலை வடிவம் பெற்றுள்ளதாக அறிய முடிகிறது.

### *நாடக சாலை மண்டபம்*

சுமார் 124 அடி நீளமும், 32 அடி அகலமும், 24 அடி உயரத்திலும் அமைந்த இதனை முகப்பு வாயில் மண்டபம் எனலாம். "தேவதாசிகள்" எனக் கூறப்படும் நாட்டியப் பெண்கள் எட்டுபேர்கள் சேர்ந்து தங்கள் செலவில் ஆங்:1800-ல் அமைத்துள்ளதாக கல்வெட்டு வாயிலாக அறியமுடிகிறது. சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னால் அமைக்கப்பட்ட இந்த மண்டபத்தை அமைத்தவர்கள் சுசீந்திரம் ஊரைச்சார்ந்த கீழத்தெரு, நடுத்தெரு ஆகிய இடங்களில் வாழ்ந்த நாட்டியப் பெண்களின் எட்டு பேர்களின் திருவுருவச்சிலைகளை, இம்மண்டபத்தை தாங்கி நிற்கும் தூண்களில் காணலாம்.

இவர்களது உறவினர்கள் (வாரிசுகள்) இன்னும் வசித்து வருவதை அறிய முடிகிறது. திருக்கோவில் மூலமாக பரத நாட்டியக்கலையும் வளர்க்கப்பட்டதை இதன் வாயிலாக அறியலாம். நாட்டியப் பெண்களுக்கு ஊதியமாக நிலங்களும், நித்தியச் சாப்பாட்டிற்கு சோற்றுக்கட்டிகளும் மன்னர் காலங்களிலிருந்தே வழங்கப்பட்டு வந்தது. பிற்காலத்தில் சோற்றுக்கட்டிகள் நிறுத்தப் பட்டு அதற்குப் பதிலாக பணம் வழங்கப்பட்டு அவர்கள் இருக்கும் வரையிலும் நிர்வாகம் கொடுத்து வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும்

இம்மண்டபத்திற்கு சுசீந்திரம் யோக ஸ்தானிகர்களில் ஒருவரான புத்தில்லம் மடத்தின் சாத வேதன் தேவகியம்மையும் உதவி புரிந்துள்ளார்.

### நாட்டியப்பெண்கள்

நாட்டியச் சேவையில் பதினெட்டு குடும்பங்கள் இவ்வூரில் வசித்து வந்ததால் அவர்களை ஒன்றாம் குடி, இரண்டாம் குடி, மூன்றாம் குடி, இப்படி பதினெட்டு குடி வரை அழைப்பதுண்டு. நாட்டியங்கள் அவர்களது குலத்தொழிலாக இருந்து திருக்கோயிலின் அனுபவத்தைப் (ஊதியம்) பெற்று வந்தாலும், இக்கோயிலின் திருப்பணிகளுக்கு அவர்கள் உதவி புரிந்துள்ளதையும் கல்வெட்டு குறிப்புகள் தெரிவிக்கின்றது. சுமார் 18 குடும்பங்கள் வாழ்ந்து வந்ததையும் அறியமுடிகிறது.

சுசீந்திரம் 6-ம் குடி தெய்வபுத்திரன் தாணுமாலயப் பெருமாள் சுவாமிக்கு சொத்துக்கள் விட்டுக் கொடுத்துள்ள தாகவும், அடுத்து 13-ம் குடி பொய் சொல்லா மெய்யன் மகன் மார்த்தாண்டக்குட்டி ஊஞ்சல் மண்டபத்தில் கர்ணன் சிலை செய்து கொடுத்துள்ளதாகவும் ஊஞ்சல் மண்டப கல்வெட்டில் இருந்து தெரியவருகிறது. நாட்டியப் பெண்களின் குடும்பத்தின் தெய்வத்தொண்டு நிலைத்து நிற்கக் கூடியது.

70- ஆண்டுகளுக்கு முன்னால் ஆட்சிபுரிந்த **ராணி சேது லெட்சுமிபாய்** அம்மையார் ஆங் : 1928-(கொ : 1104)-ல் திருக்கோயில் தேவதாசி முறையை நிறுத்த உத்தரவுப் பிறப்பித்தார். எனினும் சில குடும்பங்களுக்கு சோற்றுக் கட்டிகளுக்குப் பதிலாக பணம் ஆலய நிர்வாகத்தால் வழங்கப் பட்டு வந்ததும் தெரிய வருகிறது. கலையழகு நிரம்பப்பெற்ற இம்மண்டபத்தின் இடதுபுறத்தை தேவஸ்தான மேலாளர் அலுவலகமாகவும், கோயில் நித்திய பூஜைக்கு வேண்டிய பொருட்களை பாதுகாக்கும் அறையாக வலதுபுறத்தையும் பயன்படுத்தி வருகின்றனர். 30-ஆண்டுகளுக்கு முன்னால் இம்மண்டபத்தில் தேவாரப்பாட சாலை இம்மண்டபத்தில்

நடைபெற்று வந்தது குறிப்பிடத்தக்கது. முற்காலங்களில் இத்திருக்கோயிலில் நடைபெறும் மகா சிவராத்திரியன்று இசை, நாட்டியம், நாடகம் போன்றவைகள் இம்மண்டபத்தில் வைத்து நடைபெற்று வந்ததால் "நாடகசாலை" என பெயர் விளங்கிற்று.

## இராஜ கோபுர நுழைவாயில்

### *நிலையின் அமைப்பு*

ஆங் : 1545 (கொல்லமாண்டு 720)-ல் விஜய நகரப் பேரரசரான கிருஷ்ண தேவராயர் ஆட்சி காலத்தில் விட்டல தேவராயர் என்ற மன்னரால் சுமார் 453 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்ட இவ்வாயில் மிகவும் பிரசித்திப் பெற்றது. ஒரே கல்லில் செய்யப்பட்ட (சுமார் 22 அடி உயரங்கொண்ட ஒவ்வொரு தூணும்) இந்த நான்கு வித கல்தூண்கள் வாயில் நிலைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சுமார் 135 அடி உயரங்கொண்ட இராஜ கோபுரத்தைத் தாங்கி நிற்கும் முக்கியத் தூண்களாகும்.

### *கதவுகள் அமைப்பு*

நிலையின் உயரத்திற்கு முழுவதும் வேலைபாடுகள் அமைந்த பெரிய வாயில் கதவுகளின் அமைப்பு நம்மை வியக்கச் செய்கிறது. கதவுகளின் முக அமைப்பு தாமரைப்பூ வடிவின் நடுவே வாழைப்பூ கூம்பு போன்று கூர்மையான இரும்புக் குமிழ்கள் நிறைந்துக் காணப்படுகிறது. ஆலய பாதுகாப்புக் கருதி இவ்வாறு அமைக்கப்பட்டுள்ளன என்பதை உணரலாம். இது 24 -அடி உயரங் கொண்டதாகும். போர் காலங்களில் பயன்படுத்தப்படும் யானைகள், பூட்டிய கதவுகளை தலையாய் மோதியோ, காலால் மிதித்தோ திறக்க முடியாதபடி மன்னராட்சி காலத்தில் அமைத்திருக்கலாம் என கருத வேண்டியுள்ளது.

மிகவும் பலம் வாய்ந்த இக்கதவுகளைத் திறந்து. அடைக்க இருவரின் பலம் தேவை. முற்கால நாழிப்பூட்டு (இரும்பு) பயன்படுத்தி வருவதுடன் கதவு அடைத்த பிறகு அவசரத் தேவைகளுக்காக சிறிய கதவும் அமைந்துள்ளது. இக்கதவுகள் ஆண்டுகள் நானூறைக் கடந்தாலும் இன்றும் உறுதியோடு நிற்கின்றன.

## இராஜ கோபுரம்

### முதல் கோபுரம்

தற்போதைய கோபுரத்தின் பாதி அளவில் முதல் கோபுரம் அமைந்திருந்தது. ஆங் : 1545 (கொ : 720)-ல் விஜய நகரப் பேரரசின் மதுரை சக்கரவர்த்தியாக இருந்த **இராமராய விட்டல தேவராயரே** முதல் கோபுரப் பணியையும் செய்து முடித்திருந்தார் என்றும், ஆனால் தற்போதைய கோபுரத்தில் இருக்கும் சிற்ப வேலைப்பாடுகள் அதில் அதிகம் காணபடவில்லை என்பதும் கல்வெட்டில் இருந்து தெரிய வருகிறது.

சுமார் 500-ஆண்டுகள் பழமையுடையதான இக்கோபுரம் நாளடைவில் செடி, கொடிகள் முளைத்து ஆங்காங்கே விரிசல் கண்டது. மேலும் இடி, மின்னல், மழை போன்ற இயற்கையின் சீற்றத்தால் பாதிக்கப்பட்டதில் கோபுரத்தின் ஒரு பாகம் சேதமடைந்தது. ஆங்கில வருடம் : 1875-ல் திருவிதாங்கூர் மன்னராக இருந்த ஸ்ரீஆயில்யம் திருநாள் மகாராஜா இக்கோவிலுக்கு வந்த போது முதல் கோபுரத்தின் நிலைமையைக் கண்டு அதை அகற்றிவிட்டு புதிய கோபுரத்தை கட்டமுனைந்தார். சில மாதங்களில் பழைய கோபுரம் அகற்றப்பட்டு அதே ஆண்டில் புதிய கோபுரத்திற்கான பணியும் ஆரம்பமானது.

## இராஜகோபுரத்தின் அடிப்பாகத்தில் அமைந்துள்ள சிற்பங்கள்



ஸ்ரீ நடராஜ பெருமானின் திருத்தாண்டவம்

## சிவன் பார்வதி



சுசிந்திரம் திருக்கோயில் உற்சவமூர்த்தி
(உமா மகேஸ்வரர் தோற்றம்)



மகாவிஷ்ணு மண்ணையும்
விண்ணையும் அளக்கும் காட்சி



வினோத கற்சிலை
ஜுர தேவமூர்த்தி (சிவன்)

கோபுர நிலைகளின் உள்ளே
பச்சிலைச் சாறுகளால் வரைந்த ஓவியங்கள்



இராமாயணத்தில் ஸ்ரீஇராமர்
வில்லை வளைக்கும் காட்சி



மகாவிஷ்ணு அவதாரக்காட்சி



சாபம் பெற்ற இந்திரனை வழிமறிக்கும் நந்தி



கொதிக்கும் நெய்யில் மூழ்கி எழும் இந்திரன்



மும்மூர்த்திகளை குழந்தைகளாக்கி பாலூட்டி அனுசுயா குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு தாலாட்டும் காட்சி



குழந்தைகளான கணவர்களை மீண்டும் சுயவடிவில் மாற்றித்தர கோரி நிற்கும் தேவியர்கள்



வயோதிக வேடத்தில் அனுசுயாவிடம்
நிர்வாணப்பிச்சை கேட்கும் மும்மூர்த்திகள்



சரக்கொன்றை மரத்தில் மும்மூர்த்திகளை
வணங்கும் தேவேந்திரன்

### இரண்டாவது கோபுரப்பணி துவக்கம்

இராஜ கோபுரத்தின் இரண்டாவது கட்ட பணியாக கீழ்பாகத்தில் 10- அடி உயரத்தில் நான்கு புறமும் கோபுரத்தைச் சுற்றி முழுவதும் கற்களால் புடைப்பு சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளது இதில் புராணக் கதைகளில் வரும் அனைத்துத் தெய்வங்களின் அவதாரச் சிலை வடிவங்கள் மிக நேர்த்தியாக அமைக்கப் பட்டிருப்பது கண்கொள்ளாக் காட்சியாகும்.

இந்த சிற்பப்பணிக்கு பொறுப்பு வகித்தவர் புராணக்கதை நூல்களை கையில் வைத்துக்கொண்டு சிற்பிகளுக்கு அதை விளக்கி சிற்பங்களை விதவிதமாக நூற்றுக்கும் மேலாக வடித்துள்ளனர். இவைகளில் சிற்பிகளின் திறமைகளைக் காணமுடிகிறது. ஏழு நிலைகளைக் கொண்ட கோபுரத்தின் அடிப்பாகமே இப்படியென்றால் மேல் தளத்தின் நான்குபுறமும் அமைந்துள்ள சுதை (சுண்ணாம்பு) சிலைகளின் எண்ணிக்கையை அளவிடாத முறையில் நிறைந்து காணப்படுவது மிக அற்புத வேலைப்பாடாகும். சிற்பங்களைக் கண்டு அதன் கதைகளை அறிய ஒருநாள் போதாது. ஒவ்வொரு சிற்பிகளும் போட்டி போட்டு தங்கள் திறமைகளை காட்டியுள்ளனர்.

### *தலைவலி தீர்த்த ஜுர தேவமூர்த்தி (வினோதச் சிலை)*

புராணக் காலத்தில் ஒரு சமயம் சிவபெருமானுக்கும், விஷ்ணுவிற்கும் பகைமை ஏற்படவே, சிவனின் மீது விஷ்ணு ஜுரம் ஏற்படும் அம்பை எய்தினார் என்றும் இதிலிருந்து சிவன் தப்பிக்க மேற்கண்ட வினோதமான உருவம் எடுத்ததாகவும் புராணக் கதைகளில் இருந்து தெரிய வருகிறது

கோபுரத்தின் மேற்குப்புறம் ஊஞ்சல் மண்டபம் எதிரில் (தற்போதைய மயில் மண்டபம்) "மண்டையடிசாமி" யென உள்ளூர் மக்களால் அழைக்கப்படும் ஜுரதேவ மூர்த்தி சிற்பம் மிக அதிசயமானது. மூன்று தலைகள், ஒன்பது கண்கள், நான்கு கைகள், மூன்று கால்கள் போன்றவற்றை இச்சிலையில் காணலாம்.

தலையில் சுக்கும், நல்லமிளகும் அரைத்து பூசியிருப்பதையும் காணமுடிகிறது. தலைவலிக்கு நாட்டு வைத்திய முறையில் கைமருந்தாக இதைத் தலையில் தேய்த்து வருவதை வீடுகளில் இன்றும் பார்க்கிறோம்.

திருவிதாங்கூர் மன்னராய் இருந்த மார்த்தாண்ட வர்மா மகாராஜாவுக்கு கடுமையான தலைவலி ஏற்பட்டது. தெய்வ நம்பிக்கை மிகுந்த அக்காலக் கட்டத்தில் இத்தெய்வத்தின் (ஜுர மூர்த்தி) மகிமையை அறிந்த மன்னர் இதற்கு பூஜைகள் நடத்தி மேற்கண்ட கலவையை சுவாமி தலையில் தேய்த்து வழிபட்டதன் மூலம் அவருடைய தலைவலி தீர்ந்து குணம் கண்டார் எனவும் உடனே மன்னர் வழிபாட்டுச் செலவுக்காக 8 ஏக்கர் நிலம் விட்டுக் கொடுத்துள்ளார் என்றும் அறிய முடிகிறது. ஒரு சிலைக்குள் மறைந்துள்ள கதை இது தலைவலி ஏற்படுவது மனிதனுக்கு ஆனால் மருந்து தேய்ப்பது இறைவனுக்கு. விந்தையான சுவாமி, வினோதமான படைப்பு.

### அற்புத காட்சிகள்

கஜமுக அசுரனைச் சிவன் வதம் செய்யும் காட்சி, தட்சிணாமூர்த்தி, பிரம்மனுக்கும் திருமாலுக்கும் சிவபெருமான் லிங்க வடிவத்தில் காட்சி கொடுத்தது. கிருஷ்ணனின் விஸ்வரூப தெரிசனம், சூரியன், சந்திரன், சிலைகள் மற்றும் குழலூதும் கண்ணன், கங்காள நாதர், உமா -மகேஸ்வரர், ஸ்ரீதேவி, பூதேவியோடு மகாவிஷ்னு உற்சவ மூர்த்திகளின் காட்சி, அடுத்து மூவுலகையும் காலால் அளந்து மகாபலி சக்கரவர்த்திக்கு தெரிசனம் கொடுத்து, பக்கத்தில் சுக்கிராச்சாரியர் ஒரு கண்ணை மூடியபடி அமர்ந்திருக்கும் காட்சி ஆகிய சிற்பக்காட்சிகள் இறைவனின் அவதாரத்தை விளக்கும் அற்புதக்காட்சிகள். இத்தனை சிலைகளையும் சிற்பிகள் படைக்க எத்தனை காலங்கள் ஆகியிருக்கும் என்பதை நாம் நினைத்து பார்க்க வேண்டும். காணவேண்டிய சிலைகள் இன்னும் ஏராளம் உண்டு.

## பணிமுடிக்கப் பரிசுச்சீட்டு

### *நிதி நெருக்கடி*

சுமார் 10-அடி உயரங்கொண்ட இந்த முதல் கட்ட கருங்கல் பணிக்கு ஏராளமான பணச்செலவுகள் பிடித்தது. நான்குபுறமும் வடிவமைத்து எடுக்க ஒரு வருடத்திற்கும் மேல் ஆகியதாக தெரிய வருகிறது. மிகப்பெரிய கற்பாறைகளை பெயர்த்தெடுத்து வடிவமைக்கவும், அதில் சிலைகளை செதுக்கவும், நூற்றுக்கும் மேற்பட்ட வேலையாட்கள் பயன்படுத்தப்பட்டனர். மிகுந்த செலவு பிடித்த இம்முதல் கட்ட பணியை சுமார் 13-அடி -வரை தான் முடிக்க முடிந்தது. மேலும் தொடர முடியாத நிலை ஸ்ரீஆயில்யம் திருநாள் மன்னருக்கு ஏற்பட்டது. அப்போதுள்ள காலகட்டத்தில் நிதிநெருக்கடியால் பணியும் தாமதமாகியது.

திருவிதாங்கூர் சமஸ்தான (ராஜியம்) மக்கள் மத்தியில் எதிர்ப்பும் மன்னர் மீது பலருக்கு அனுதாபங்களும், ஒரு சிலரால் எதிர்ப்புகளும் ஆங்காங்கே ஏற்பட்டது. முன்புள்ள கோபுரத்தை புதுப்பித்திருக்கலாமே என்பன போன்ற கருத்துக்களும் மக்கள் மத்தியில் எழத்தொடங்கியது. இன்னும் மீதமுள்ள ஏழு நிலைகளைக் கொண்ட பணி முடிக்க வேண்டியிருந்தது. இதன் பொருட்டு நிதிக்காக மக்களையும் கஷ்டப்படுத்த விரும்பாத மன்னர் தனது ஆலோசகர்களையும், பிரதிநிதிகளையும் வரவழைத்து, கலந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தார்.அதன்படி இந்த கோபுரப் பணிக்காக 70,000 ரூபாய் மதிப்பீடு செய்யப்பட்டு அதில் 30,000 ரூபாய் அரசிடம் இருந்தும் மீதமுள்ள தொகையைப் பரிசுச்சீட்டு மூலமாகவும் பெறுவது என்று முடிவெடுக்கப்பட்டது. பவுனுக்கு 3 ரூபாய் மதிப்பு இருந்த அக்காலத்தில் சீட்டு ஒன்றுக்கு ஒரு ரூபாய் என நிர்ணயித்து அதன் மூலம் 40,000 ரூபாய் திரட்ட முடிவு செய்யப்பட்டது.

## மன்னர் முடிவும், மக்கள் உதவியும்

கோபுரப் பணிக்கு நிதி நெருக்கடி ஏற்பட்ட தருணத்திலும் மன்னர் மனம் தளரவில்லை. எடுத்த காரியத்தை முடித்தே தீருவேன். என உறுதிகொண்ட மனத்தோடு பணிகளைத் தொடர ஆயத்தமானார். ஆலயம் இருக்கும் வரை நாம் அமைக்கும் கோபுரமும் நிலைத்திருக்க வேண்டும். காலத்தால் அழியாத கலைச் சிற்பங்களை அதில் படைக்க வேண்டும். கோபுரத்தின் ஏழுநிலை மாடத்தினுள் இறைவனின் அற்புத லீலைகளையும், சுசீந்திரம் ஸ்தலத்தின் மகிமைகளையும் சுவரில் சித்திரங்களாக்கி இத்திருக்கோயிலின் பெருமையை உலகறிய செய்ய வேண்டும். என்று இறைவன் மீது அவர் கொண்ட தீராத பக்திக்குச் சாட்சியாய் நிற்பது தான் இன்றைய இந்த இராஜ கோபுரம்.

நாடு பொருளாதார வளர்ச்சியிலும்/போக்கு-வரத்துத் துறையிலும் மாபெரும் முன்னேற்றம் கண்டு பெரிய தொழிலதிபர்களையும் தனவந்தர்களையும் பெருமளவு கொண்ட இந்த இருபதாம் நூற்றாண்டின் முடிவிலேயே, திருவரங்கத்தில் எழுந்தருளி இருக்கும் அருள்மிகு ஸ்ரீரெங்கநாதர் ஆலய இராஜகோபுரத் திருப்பணிக்காக அத் திருக்கோயில் பரம்பரை தக்காராக விளங்கிய உயர்திரு ஜீயர் சுவாமிகள் தமது தள்ளாத வயதிலும் இந்த நற்காரியத்தை முடித்திட தளராத மனதுடன் நாடு முழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொண்டு நிதி திரட்ட ஏற்பட்ட கஷ்டமும் ஆனால் இறைவன் மீது அவர் கொண்ட தாளாத பக்தியின் மூலம் அவரது அந்த முயற்சி வெற்றி பெற்று இன்று பதினான்கு நிலை கொண்ட, இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் இராஜ கோபுரமாக ஸ்ரீரங்கம் ஆலயத்தின் கோபுரம் திகழ்வதைக் காணலாம். உலகத்திலேயே மிகப்பெரிய இராஜகோபுரம் ஸ்ரீரங்கம் கோயிலில் உள்ளது. 1979 ஆம் ஆண்டு பணி துவக்கப்பட்டு 1987-மார்ச் 25ம் தியதி பணிமுடிக்கப்பட்டு கும்பாபிஷேகம் முன்னாள் முதல்வர் திரு. எம்.ஜி. ராமசந்திரன் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. இந்த கோபுர பணிக்கு 12000- டன் சிமின்று, 130- டன் ஸ்டீல்

கம்பி, 1705 மில்லியன் செங்கல், 8000 லிட்டர் பெயின்று உபயோகப்படுத்தப்பட்டுள்ளது.

பரப்பளவில் மிகுந்த, பொருளாதார, போக்குவரத்து வளர்ச்சியில் முன்னேற்றம் கொண்ட இந்த காலகட்டத்திலேயே நிதி திரட்ட அவர் இவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறார் என்றால் இவை எல்லாம் இல்லாதிருந்த அந்நாட்களில் மன்னர் தளராத மனத்தோடு உண்மையான இறைபக்தியுடன் அவர் எடுத்த முயற்சியையும் அதன் விளைவாக அவர் கொண்ட வெற்றியையும் நம்மால் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

## பாரதத்தின் முதல் பரிசுச் (லாட்டரி) சீட்டு

### *பரிசுச்சீட்டின் பயன்கள்*

இந்து மத தெய்வங்களின் பெயர்களைப் புராண நூல்களிலிருந்து தான் அறிய வேண்டுமென்பதில்லை. இந்த இருபதாம் நூற்றாண்டில் ஒவ்வொரு மாநிலத்திலிருந்து வெளிவந்து கொண்டிருக்கும் பரிசுச்சீட்டுகளில் தெய்வங்களின் பெயர்களைக் காண்கிறோம். நதிகளின் பெயர்களும் உண்டு. நிதி நெருக்கடியைச் சமாளிக்க மாநில அரசுகள் பரிசுத் திட்டங்களை நடத்தி வருவதைக் காணலாம். இதன் மூலமாக வாழ்ந்தோர் பல்லாயிரமென்றால், வீழ்ந்து வருபவர்கள் பல லட்சம் பேர்கள். பரிசு விழுந்தால் பணம் நமக்கு, இல்லையேல் நாட்டிற்கு என்பது போல் பரிசுச்சீட்டு மூலமாக கிடைக்கப்பெறும் தொகைகளை மாநிலங்களின் நல்ல திட்டங்களுக்கும் அரசுகள் பயன்படுத்தி வருகின்றன. குறிப்பாக நமது தமிழக அரசும் ஆலயங்களின் பெருமையை எடுத்துக் காட்டும் விதத்தில் பரிசுச் சீட்டுகளில் கோபுர படத்தை அச்சிட்டும், தமிழக ஜீவநதிகளின் பெயரோடும் அவைகளை வெளியிட்டு வருவதைக் காண்கிறோம்

இந்தப் பல்வேறு அரசுகளின் பரிசுச் சீட்டு திட்டத்திற்கு வழிகாட்டியாக திகழ்ந்து முதன்முதலில் பரிசுச்சீட்டு

## இராஜ கோபுரத் திருப்பணிக்கு பரிசுச் சீட்டு அச்சடிக்க மன்னர் உத்தரவு

திருவிதாங்கூர் சமஸ்தான மன்னராக ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மகாராஜா கையொப்பத்தோடு அரசு முத்திரையும்.

ஸ்ரீபாச்சு மூத்தது பெரியாருக்கு மன்னர்
18-வது முறையாக கொடுத்த பரிசு



'கௌரி சங்கரம் அற்புத உத்ராட்ச மாலை மற்றும்
தங்கத்திலான கங்கணம், வீரச்சங்கிலிகள்.

ஆங் : 1049-ல் சுசிந்திரம் வட்டப்பள்ளி ஸ்தானிகராக
விளங்கிய பிரம்ம ஸ்ரீபாச்சுமூத்தது பெரியவருக்கு
அவரின் சேவைகளைப் பாராட்டி 18-வது முறையாக ஸ்ரீ
ஆயில்யம் திருநாள் மகாராஜா வழங்கியது.




சுசிந்திரம் இராஜகோபுர 'புகைப்படத்துடன்
மிஜோராம் அரசு வெளியிட்ட பரிசுச்சிட்டு



இரண்டு கொடிமரங்களின் நடுவில்
இராஜகோபுரம்

வெளியிட்டு அதன்மூலம் கிடைத்த வருவாயை ஒரு நல்ல புனித பணிக்குச் செலவிட்ட பெருமை ஆயில்யம் திருநாள் மன்னரையே சாரும். குறிப்பாக இதற்கு ஆலோசனை வழங்கிய முன்னாள் வட்டப்பள்ளி ஸ்தானிகருக்கும் இந்தப் பெருமைச் சேரும் என்பது மறுக்க முடியாத உண்மை. சமீபத்தில் இந்தியாவில் உள்ள மிஜோராம் மாநில அரசு சுசீந்திரம் திருக்கோயில் தெப்பகுள மண்டப கோபுரத்தையும், இராஜ கோபுரத்தையும், தனது சிறப்பு பரிசுச்சீட்டில் அச்சடித்து வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## *பரிசுச்சீட்டு வருவாயும், கோபுரவளர்ச்சியும்*

கோபுரப்பணியைத் தொடர்வதற்காக ஸ்ரீஆயில்யம் திருநாள் மன்னர் அவர்கள் ஆலோசகர்களின் கருத்துப்படி நிதி நெருக்கடியைத் தவிர்க்க பரிசுச்சீட்டு (லாட்டரி) அச்சடித்து அதை நாட்டில் விநியோகித்து அதன் மூலம் கிடைக்கின்ற வருவாய் அனைத்தையும் கோபுரப்பணிக்குச் செலவிட உத்தரவு பிறப்பித்து ஆங்கில : 1875 (த.ஆ. 1050)-ல் ஆவணி 7-ம் நாள் பரிசுச்சீட்டு வெளியிடப்பட்டது. பாரதத்தின் முதல் பரிசுச்சீட்டு (லாட்டரிச்சீட்டு) இதுவாகும். பரிசுச்சீட்டு முறை மக்கள் மத்தியில் பிரபல்ய மடைந்தது. நிதி குவியத் தொடங்கியது கோபுரப் பணிகளும் தொடர்ந்தன.

## *கோபுரப்பணிப் பொறுப்பு*

மன்னரின் ஆலோசனைக் கூட்டத்தில் இத்திட்டத் தினைக் கொண்டுவர அவருக்கு அறிவுரை வழங்கி முதலிடம் வகித்தவர் கேரள மாநிலம் வைக்கம் என்ற இடத்தில் பிறந்து சுசீந்திரத்தில் வாழ்ந்த, ஆங்கில வருடம் : 1875-ல் திருக் கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகராக விளங்கிய **பிரம்மஸ்ரீ பாச்சு மூத்தது.** என்ற பெரியாராகும்.

திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் மகாராஜாவின் முக்கிய ஆலோசகராகவும், ஜோதிடம், மருத்துவம், ஓவியம் மற்றும் மலையாளம், சமஸ்கிருதம் போன்றவற்றில் நூல்கள் இயற்றிய

நூலாசிரியராகவும் - விளங்கிய இவரிடம் மன்னர் இராஜகோபுர பணியின் முழுப் பொறுப்பையும் ஒப்படைத்தார். கோபுரப்பணி முழுமையும் பாச்சுமூத்தது அவர்களின் நேரடிக் கண்காணிப்பில் நடந்தது.

இராஜ கோபுரத்திற்கான முதற்கட்ட அஸ்திவாரப் பணி முடிவுற்று இரண்டாவது கட்டப்பணி 10-அடி உயரத்திலுள்ள புடைப்பு சிற்பப் பணிகள் (நான்குபுறம்) முடிவு பெற இரண்டாண்டு காலம் வரை நீடித்ததாக அறியமுடிகிறது. மூன்றாவது கட்ட பணியாக ஏழு அடுக்கு நிலை (மாடி) ஒவ்வொன்றாக உயர வேண்டும் மிகுந்த செலவு பிடித்த இப்பணி கால்பாகமே முடிந்தது. மன்னர் ஒதுக்கிய ரூ.(30,000) நிதியும் முக்கால் பங்கு தீர்ந்தது. இன்னும் முக்கால் பங்கு பணி மீதமுள்ளது.

ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மன்னர் மனத்திலே, கோபுரப்பணி முடிவுற்றால் எப்படி இருக்கும்? என்பதையும் வரைபடம் மூலமாக விளக்கிக் கூறியிருந்தார் பெரியார் பாச்சுமூத்தது. பின்னால் நடக்கவிருப்பதை முன்கூட்டியே ஜோதிடக்கலை மூலம் கணித்துக் கூறும் ஆற்றல் படைத்திருந்த பெரியவரின் மீது மிகுந்த நம்பிக்கையுடையவராக இருந்தார் ஆனால் அரைப்பாகம் கோபுரப்பணி முடிவதற்குள் ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மன்னர் மரணமடைந்துவிட்டார். மன்னரின் மறைவு பெரியவர் பாச்சுமூத்ததை மிகவும் பாதித்தது.

அடுத்த மன்னராக பதவியேற்றார் ஸ்ரீ விசாகம் திருநாள் மன்னர். ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மன்னரின் லட்சியத்தை நிறைவேற்ற அவரும் அரும்பாடுபட்டார். கோபுரப்பணி துரிதமாக நடந்து கொண்டிருந்தது. பணி நிறைவு பெறுவதற்குள் ஸ்ரீ விசாகம் திருநாள் மன்னரும் மறைந்தார். இது இரண்டாவது அதிர்ச்சியானது பெரியவர் பாச்சுமூத்ததுக்கு அடுத்தாற் போன்று ஸ்ரீ மூலம் திருநாள் இராமவர்மா மன்னராக பொறுப்பேற்றார். கோபுரத்தின் ஏழுநிலை கட்டுமானப்பணி முதலில் முடிந்தது நிலைகளின் வெளியே சுதை சிற்பங்கள்

அமைக்கும் பணிகள் நடந்து கொண்டிருந்தது. இதற்கிடையில் ஏழு அடுக்கு நிலைகளின் உட்பக்க அறைகளிலுள்ள நான்கு பக்க சுவர்களில் கம்பராமாயணம், திருவிளையாடல் புராணங்கள், மற்றும் சுசீந்திரம் திருக்கோயில் ஸ்தல புராணங்களை சித்திரங்களாக தீட்டி, தனது பணியை நிறைவு செய்தார் ஓவியர் பாச்சுமூத்தது பெரியார்.

### பல்கலை ஞானி வட்டப்பள்ளி பாச்சுமூத்தது பெரியாரின் மரணம்

இராஜகோபுரம் கும்பாபிஷேகம் காணாத நிலையில் மன்னர்கள் இருவரின் அடுத்தடுத்தான மரணங்கள், அதனால் ஏற்பட்ட மனத்தளர்ச்சி, ஒவ்வொரு நிலைகளிலும் சித்திரங்கள் வரைவதற்கு தினமும் நிலைப்படிகளில் ஏறி இறங்கியதால் உண்டான உடல்தளர்ச்சி, அவ்வப்போது உள்ள இராஜகோபுர பணி விவரங்களை மன்னரிடம் தெரிவிக்கும் பொருட்டும் தலைநகரில் நடக்கும் ஆலோசனை கூட்டங்களில் கலந்து கொள்வதற்காகவும் அடிக்கடி இங்கிருந்து (சுசீந்திரம்) தலைநகர் திருவனந்தபுரத்திற்கு போக்குவரத்து வாகன வசதி இல்லாத அந்த கால கட்டத்தில் குதிரைவண்டியில் சென்று வந்ததால் உடலுக்கு ஏற்பட்ட களைப்பு இவையெல்லாம் சேர்ந்து பெரியவரை மிகவும் பாதித்தது. கும்பாபிஷேகம் காணாமல் நான் இறந்து விடுவேன் என்ற ஏக்கம் பெருகத் தொடங்கியது. தான் இறக்கப்போகும் நாளையும், நட்சத்திரத்தையும், வேளையையும் மன்னருக்கு முன்கூட்டியே தெரிவித்தவர் ஜோதிட நிபுணர் திருபாச்சுமூத்தது பெரியார். இவர் ஆங்கில ஆண்டு 1883 (த.ஆ-1058) ஆவணிமாதம் இம்மண்ணுலகை விட்டு மறைந்தார்.

ஸ்ரீமான் பாச்சு மூத்ததின் மரணச் செய்திகேட்டு ஸ்ரீமூலம் திருநாள் மன்னர் அதிர்ச்சியுற்றார். திருவிதாங்கூர் சமஸ்தான அரண்மனைச் சபையின் முக்கிய ஆலோசகராகத்

திகழ்ந்தவரும், ஜோதிடக்கலை, ஆயுர்வேத மருத்துவக்கலை, ஓவியக்கலை போன்றவைகளில் சிறந்து விளங்கிய உத்தமரை திருவிதாங்கூர் சமஸ்தான நாடு இழந்தது. இவரின் மரணச் செய்தியை மன்னர் அறிந்தவுடன் இராஜ மரியாதையுடன் உடலைத் தகனம் செய்ய கட்டளையிட்டு உடனே தனது ராஜப் பிரதிநிதியை அனுப்பி ஈமச்சடங்கிற்கான பண உதவியும் கொடுத்து சடங்கில் கலந்து கொள்ளச் செய்தார்.

## 1984-ல் இராஜகோபுரத்தை புதுப்பித்த சிற்ப ஸ்தபதி பேச்சின் விவரம்

பாரதத் திருநாட்டில் எத்தனையோ கோபுரங்களை பார்த்திருக்கிறேன். நூற்றுக்கும் மேற்பட்ட புதிய கோபுரப்பணிகள் முடித்தும் வருகிறேன். ஆனால், இக்கோபுரத்தில் உள்ளது போன்று மிக நெருக்கமான சிலைகளை நான் இதுவரை பார்க்கவில்லை. அந்த அளவிற்கு சிலைகள் கோபுரத்தின் நான்கு பக்கங்களையும் ஆக்கிரமித்துள்ளன. ஒவ்வொரு சிலையிலும் வர்ணம் பூசப்பட்டிருந்தது. வெயிலிலும் மழையிலும் அவ்வர்ணங்கள் அழிந்தாலும் அதற்குரிய அடையாளத்தை சிலைகளின் இடைவெளிகளில் காணமுடிந்தது. அவை பச்சிலைக்கலவை வர்ணமாகும். ஆயில் பெயின்று அல்ல. இவைகளை புதுப்பிக்கும் போது நாங்கள் கண்டோம். மேலும் கோபுரத்தின் நிலைகளிலுள்ள அறைசுவர்களிலும் பச்சிலை வர்ணத்தால் சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன, மிக அற்புதமான வேலைப்பாடுகள் அமைந்த அற்புத கோபுரமாகும்.

இவ்வாறு 1984-ல் நடைபெற்ற சுசீந்திரம் திருக்கோயில் இரண்டாம் கும்பாபிஷேக விழாவில் சிற்ப ஸ்தபதி பொறுப்பு வகித்த திரு. எம்.எஸ் சிவப்பிரகாசம் தெரிவித்த கருத்து இங்கே நோக்குதற்குரியது.



**இராஜகோபுர கும்பாபிஷேகக் கல்வெட்டு**
*110-ஆண்டுகளுக்கு முன்பு உள்ளது*



கைமுக்கும் சோதனை நடைபெற்ற
திருக்கொடியேற்று மண்டபம்.





ஊஞ்சல் மண்டபத்தில் அமைந்துள்ள
கலைத்திறன் மிக்க மன்மதன்-ரதி பேரழகு சிற்பங்கள்.

## அஜந்தாவை மிஞ்சும் ஓவியங்கள்

கோபுரங்களில் காணப்படும் ஓவியங்கள் முழுவதும் பச்சிலை சாற்றினால் வரையப்பட்டுள்ளது. மஞ்சள், சுண்ணாம்பு, கடுக்காய் நீர், வேப்பமரப்பசை, முட்டை, செம்பருத்தி, மருதோணி, நீலி அவிரி போன்றவை இந்த சித்திரம் வரையப் பயன்படுத்தப்பட்டுள்ளது. வருடங்கள் நூறைத் தாண்டிய பின்பும் அழியாமல், அஜந்தா ஓவியங்களை மிஞ்சும் அளவில் அமைந்துள்ளது, இதற்கெல்லாம் மேலான சிறப்பு யாதெனின். இவற்றை வரைந்த திரு **பாச்சுமூத்தது** அவர்களின் திருவுருவ ஓவியம் இரண்டாவது நிலையிலும், ஏழாவது நிலைமாடியிலும் இருப்பதை இன்றும் காணலாம்.

கோபுரத்தின் நான்கு வெளிப்புறங்களிலும் புராண கால கதைகள் அனைத்தும் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. மிக அற்புதமான இச்சிலைகளை மிகவும் நுட்பத்துடன் சிற்பிகள் செய்துள்ளமை மிகவும் போற்றத்தக்கது. பல்லாயிரக்கணக்கான சிற்பங்கள் நிறைந்துள்ள கோபுரத்தில் ஒவ்வொரு சிற்பமும் பசை கொண்டு ஒட்டி வைத்தாற்போன்று தனித் தனியாக இருக்கின்ற அழகு நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது.

## கோபுரப் பாதுகாப்பு

35-அடி உயரங்கொண்ட கோபுரத்தை இடி, மின்னல் போன்ற இயற்கையின் சீற்றத்திலிருந்து காப்பாற்ற வடக்கு, தெற்கு புறங்களில் பூமியிலிருந்து கோபுரத்தின் ஊச்சிவரை "இடிதாங்கி" எனப்படும் காந்தக் கம்பிகள் அமைக்கப்பட்டுள்ளன. சுண்ணாம்புச் சாந்துடன் கடுக்காய் நீர், கருப்புக்கட்டி சேர்ந்த கலவையே சிலைகள் செய்ய பயன் படுத்தப்பட்டுள்ளது. தற்போதைய ராஜகோபுரம் பணிமுடிய 13-ஆண்டுகள் ஆகியுள்ளது.

## இராஜ கோபுர கும்பாபிஷேகம்

ஆங் : 1888 ஆனி-21ல் ஸ்ரீமூலம் திருநாள் மகாராஜா காலத்தில் முதல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அதன்பின் 1984-ல் இரண்டாவது கும்பாபிஷேகம் மறைந்த தமிழக முதல்வர் டாக்டர் திரு. எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்கள் ஆட்சி

காலத்தில் அறநிலையத்துறை அமைச்சராக விளங்கிய திரு இராம. வீரப்பன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

**மனத்தைக் கவரும் ஊஞ்சல் மண்டபம்**

கோயில் நுழைவாயிலைத் தாண்டி கோயிலின் உட்புறம் முதன் முதலாக நம் முன் தெரியும். சிற்பங்கள் நிறைந்து காணப்படும் இவ்வூஞ்சல் மண்டபத்தை சிற்பக் கலைக்கூடம் எனவும் கூறலாம். மண்டபத்தின் கிழக்குப் பாகத்தில் நம் கண்ணில் முதலில் படுவது இருபக்க தூண்களில் அமைந்துள்ள மன்மதன்-ரதி சிற்பங்களாகும்.

**மன்மதன் :-** இடதுபுற மன்மதன் சிலையில் ஒருகையில் அம்பும்,. மறுகையில் கரும்புமாகவும் அதன் சுவையை (இனிப்பு) ருசிக்க ஒரு பல்லியும் அதன் அருகே பறவையொன்னும் இருப்பதுபோல் சிற்பி மிக அற்புதமாக வடித்துள்ளான். மங்கையரையும் மயக்க வல்ல மன்மதனின் அழகைப் பெண்கள் நின்று ரசிப்பது போன்று அமைக்கப்பட்ட **பிரீதி, ரதி** என்ற இரு பெண்களின் சிலைகளையைம் இங்கு காணலாம்.

***ரதி* :-** வலது புறமுள்ள தூணில் பேரழகு படைத்த "ரதி" அன்னத்தின் மீது அமர்ந்திருக்கும் மிக அழகான இக்காட்சி அனைவரையும் மயக்குகின்றது. சிற்பிகளின் கைத்திறன் காண்போரை வியக்க வைக்கிறது. "அன்ன நடை நடந்து அழகு மகள் அருகில் வந்தாள்." எனப்புலவர்கள் வர்ணிக்கும் பெண்ணழகை, 'ரதி' சிலையில்மிக அற்புதமாகப் படைத் துள்ளான் சிற்பி. இம்மண்டபத்தின் மேற்குப் புறமாக இருபக்கமுள்ளக் கற்தூண்களில் வில்லில் வித்தகர்களாக விளங்கிய அர்ச்சுனன், கர்ணன் ஆகியோரின் சிலைகள் செதுக்கப்பட்டிருப்பது காண்பவரின் கண்ணைக்கவருவன. இப்பேரழகு படைத்த மண்டபத்தையும் அதன் மேல் விமானத்தையும் (கோபுரம்) அமைத்து கீழே மண்டபத்திற்கு பாதுகாப்பாக நான்குபுறமும் இரும்பு கம்பிகளால் அரன்போல் அமைக்கப்பட்டுள்ளது.

## கல்யாண மண்டபம்

ஆண்டுதோறும் அலங்கார மண்டபத்தில் மாசி மாதம் மகம் நட்சத்திரத்தில் நடைபெற்று வரும் "திருக்கல்யாண விழா" இம்மண்டபத்தில் (ஊஞ்சல்) நடந்து வந்தது. காலப்போக்கில் இடவசதியின்மை காரணமாக அலங்கார மண்டபத்தில் மாற்றப்பட்டு அங்கு நடந்துவருகிறது. திருமணம் முடிந்து தம்பதிகளை (சுவாமி-அம்பாள்) ஊஞ்சலில் வைத்து ஆட்டுகின்ற நிகழ்ச்சி இங்கு நடைபெற்றதால் **"ஊஞ்சல் மண்டபம்"** என்ற சிறப்பினைப் பெற்றது. என வரலாற்று சுவடி மூலம் அறிய முடிகிறது.

சுமார் பத்து வருடங்களுக்கு முன் இந்த மண்டபத்தில் வளர்க்கப்பட்ட இரு மயில்களின் தோகை விரித்தாடும் நடனம் நம்மை மெய்ம்மறக்க வைத்தது. சுமார் ஐந்து வருட காலமாக இருந்து வந்தன. பின்பு ஒன்றின் பின் ஒன்றாக இறந்து விடவே, அதன் பிறகு மயிலை வளர்க்க யாரும் முன்வரவில்லை. மயில் இருந்த காரணத்தால் இது "மயில் மண்டபம்" எனவும் அழைக்கப்படுகிறது.

## பணி முடித்த பெருமை

அறம் வளர்த்த நாச்சியாரின் திருமண கோலத்தை ஆண்டுதோறும் கண்டு களித்திட அறம் வளர்த்தாளின் குடும்பத்திலுள்ள **பண்டாரம்பிள்ளை மனைவி இரவி** என்பவர் ஆங். ஆண்டு - 1585 (கொ : 759) தை மாதம் 25-ம் நாள் பணி செய்வித்தார். என ஊஞ்சல் மண்டப கல்வெட்டு தெரிவிக்கின்றது. மேலும் சுசீந்திரம் 13-ம் குடி **பொய் சொல்லா மெய்யன் மகள் மார்த்தாண்ட குட்டி** "கர்ணன் சிலையை"ச் செய்து கொடுத்துள்ளதாக ஊஞ்சல் மண்டபத்திலுள்ள கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. 414-ஆண்டுகளுக்கு முன்பு திருவிதாங்கூர் **உமையம்மை ராணி** மண்டபம் கட்டுவிக்க அனுமதி வழங்கியதாகவும் அறிய முடிகிறது.

# தென்முகத்தெய்வம்
# தட்சிணாமூர்த்தி

'கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
யாறங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டி
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடரை வெல்லாம்:

## வழிபடும் முறை

திருக்கோவில் தரிசன முறைப்படி இறைவனை இடது, வலதாக சுற்றிவரவேண்டும். அதன்படி ஊஞ்சல் மண்டபத்திலிருந்து இடதுபுறமாகச் சென்று நாம் முதலில் தொழுவது தட்சிணாமூர்த்தி கோயிலாகும். அது மட்டுமின்றி இறைவனின் கோயில் முன்பு எந்தத் திசை நோக்கி தரையில் ஆண்கள் படுத்து **நமஸ்கரிக்க** வேண்டும். என்ற தத்துவத்தை எடுத்துக்காட்டியுள்ளனர்.

தட்சிணாமூர்த்தி கோயிலின் முன்பு கற்தரையில் செதுக்கப்பட்டுள்ள அடியவர் சிலையானது இரண்டு கைகளையும் தலைமேல் உயர்த்தி கரம் குவித்து வடதிசை நோக்கி குப்புறப் படுத்து வணங்கும் முறையை நமக்கு தெரிவிக்கின்றது. இறைவன் கிழக்கு நோக்கியும், மேற்கு நோக்கியும் இருந்தாலும் இம்முறையை பின்பற்ற வேண்டும் என்பதற்கு அடையாளமாக இங்குள்ள சன்னதிகளின் முன்பு இதுபோன்று தரையில் சிலைகளைச் செதுக்கி வைக்கப் பட்டுள்ளதைக் காணலாம். (வடக்கு நோக்கி இருக்கின்ற தெய்வங்களின் சன்னதி முன்பு மேற்கு நோக்கியும்) பெரும்பாலும் சக்தி கோவில்கள் வடக்கு நோக்கி அமைக்கப்படுவது வழக்கம். அப்படி இருந்தால் சிலையை (தெய்வத்தை) மேற்கு திசையை நோக்கி படுத்து நமஸ்கரிக்க

வேண்டும். மற்றவர்களுக்கு இடையூறின்றி வணங்குவது சாலச்சிறந்தது.

வீராசனத்தில் வீற்றிருந்து சீடர்களுக்குத் தியான முறை பயிற்றுவிக்கும் குருவாக விளங்கும் தட்சிணாமூர்த்தி தெற்கு திசை நோக்கி யோக நிலையில் காட்சி தருகிறார். கல்லில் செதுக்கப்பட்ட மிகவும் பழமையான விக்கிரகம் இது. இவ்விக்கிரகத்தின் பேரழகை, வடிவத்தை சிற்பி அற்புதமாக படைத்துள்ளான். குருவாகப் போற்றப்படும் இவருக்கு வியாழக்கிழமைகள் தோறும் வழிபாடுகள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இவர் **யோகதட்சிணா மூர்த்தி** என்று அழைக்கப்படுகிறார். இத்திருக்கோவில் கருடாழ்வார் மண்டபத்தின் பின்புறம் அமைந்துள்ளது.

மகேசுவர மூர்த்தங்கள் இருபத்தைந்து. மூத்தவர்களும் முதியோர்களும் வேத வேதாகம பண்டிதர்களுமான சனகாதி முனிவர்கள் நால்வரும் குருவை நோக்கி தவம் செய்தனர். சிவ பெருமான் கல்லாலின் நிழலில் பாலகுருவாய் வந்து உபதேசித்தார். இறைவனிடம் நால்வரும் பற்பல வினாக்களை வினவினர். இறைவர் ஒவ்வொன்றிற்கும் சரியான விடை கூறினார். ஆயிரக்கணக்கான வருடங்களானாலும் இந்தத் தர்க்கம் தீராதெனவறிந்து இறைவன் சின் முத்திரைக் காட்டி மௌன நிலையில் வீற்றிருந்தார்.

### *சின் முத்திரை*

வலக்கைப் பெருவிரலை சுட்டு விரலால் தொடுக. அப்போது ஏனைய விரல்கள் விரிந்து நிற்கும். பெருவிரலான பரமாத்மாவாகிய கடவுள் சுட்டுவிரலான ஜீவான்மாவை மற்றைய மூன்று விரல்களான ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலங்களின்றும் விடுவிக்கும். ஆணவாதி மலங்கள் பாசமும் ஜீவான்மா பசுவென்றும் அறிக. ஆகவே 'சின்முத்திரை' கடவுள், கட்டு உயிர்களின் இலக்கணத்தையும் உயிர் செய்ய வேண்டிய சாதனைகளையும் அதனால் எய்தும் பயனையும் விளக்கும் அடையாளமாம். உயிர் மாயையாகிய திரைச்சீலையை நீக்கினால் பரமான்மாவை எய்தும். இவ்வாறு இறைவன் நால்வருக்கும் முத்திரை காட்டியபோது நிஷ்டையில்

## திருமலை நாயக்க மன்னர்



தேரோடும் வீதிகள் அமைத்து தேரும் செய்வித்து திருப்பணிகள் பல செய்வித்த திருத்தொண்டர்.

[கருட மண்டபம்]

## தவறுக்குத் தண்டனை



நீதியை நிலைநாட்டும் தராசு, தவறு செய்த மூன்று சிற்பிகளின் தலைகளைப் பட்டத்து யானையின் காலால் இடறும் காட்சி (கருட மண்டபம்) புடைப்புச் சிற்பம்



மாக்காளை

அவர்கள் அமர்ந்தனர். அதனால் பேரானந்தம் அடைந்தனர். கையிலுள்ள சிறுவிரல் தூல உடம்பும், மோதிரவிரல் சூக்ஷ்ம உடம்பும், நடுவிரல் காரண சரீரமும், சுட்டுவிரல் உயிரும், பெருவிரல் பரமான்மாவும் ஆகும்.

கோயில்களில் தென்பக்கம் இந்த மூர்த்தியை பிரதிஷ்டை செய்திருப்பார்கள். இதன் பெருமை தெரியாமல் இவர் இருவிரலை மடக்கி மூக்குத்தூள் கேட்கிறார் என நகைச்சுவையோடு சிலர் கூறிச் செல்வதையும் கேட்கமுடிகிறது. இது எவ்வளவு அறியாமை? ஆனால் கடவுள் நமக்கு ஞானோபதேசம் செய்யக் குருவானார். இவர் வேறு சிவன் வேறு இல்லை. இரண்டும் ஒன்றே என்பதை கீழ்வரும் பாடல் தத்துவமாய் விளங்குகிறது :

குரு பிரம்மா, குரு விஷ்ணு
குரு தேவோ மகேஸ்வரா
குரு ஸாக்ஷாத் பரப் பிரம்மா
தஸ்மை ஸ்ரீ குருவே நம :

# கண்ணைக் கவரும் கருடாழ்வார் மண்டபம்

### *சிற்பிகளின் கைத்திறமை*

அற்புத வேலைப்பாடுகள் மிகுந்த இந்த மண்டபத்தை, 17-ம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த திருமலை நாயக்க மன்னர் 362 ஆண்டுகளுக்கு முன் (ஆங் : 1636 கொல்லமாண்டு 811) கட்டுவித்து கருடாழ்வாரை பிரதிஷ்டை செய்ததாகக் கல்வெட்டு வாயிலாக அறிய முடிகிறது. இம்மண்டபத்தின் இருபுற தூண்களில் உள்ள சிற்பங்களில், சிற்பிகள் தங்கள் கைத்திறமைகளை வெகு நேர்த்தியாக காட்டியுள்ளனர்.

வலப்பக்கமுள்ள தூணில் **திருமலை நாயக்க மன்னரும்**, அவர் மனைவியும், இடப்பக்கத் தூணில்

மன்னரின் மைத்துனர் **ஜெயந்தியப்ப நாயக்கரும்**, அவர் மனைவியும் ஆகியோரின் சிலைகள் உள்ளன. திருமலை நாயக்க மன்னரின் திருவுருவச் சிலையில் ஒரு காது வழியாக குச்சு ஒன்றை நுழைத்தால் மறு காது வழியாக வெளிவரும்;. அதுபோல் மூக்கின் வழியாக நுழைக்கும் குச்சு காது வழியாக வெளிவரும். மற்றும் மன்னர் சிலைகளில் காணப்படும் ஆபரணங்களில் சிற்பிகள் கடுகு போன்ற மிகவும் நுட்பமான துவாரங்களை அமைத்து தங்கள் கைத்திறனை காட்டியுள்ளனர்

### *கல்லுக்குப் பொன் கூலி*

வேலைக்கேற்ற கூலி என்பது போல் கல்லில் நுட்பமான வேலைப்பாடுள்ள உருவச் சிலைகளைச் சிற்பிகள் செதுக்கும்போது கல்லின் அடிப் பாகத்தில் துணி விரிக்கப்பட்டு அந்தத் துணியில் விழுகின்ற கற் துண்டுகளை அகற்றிவிட்டு, கற்தூளை(பொடி) மட்டும் துணியில் எடுத்து மேற்பார்வையாளரிடம் கொடுக்க வேண்டும். அதை அவர் பெற்று தராசுத் தட்டுகளில் ஒரு தட்டில் கற்தூளும், மறுதட்டில் பொன்னும் வைத்து சரியான அளவில் கூலி வழங்கும் வழக்கம் அப்போது இருந்தது.

### *தவறுக்குத் தண்டனை*

வேலைக்கேற்ற கூலியாக சிற்பிகள் பொன்னைப் பெற்று வந்தனர். இதில் மூன்று சிற்பிகள் மட்டும் தொடர்ச்சியாக மற்றவர்களை விடக் கூடுதலாகப் பொன்னைப் பெற்று செல்வது மேற்பார்வையாளருக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. ஒருநாள் அவர்களைக் கண் காணித்ததில் இந்த மூன்று சிற்பிகளும் மறைவான இடத்தில் சென்று கற்துண்டுகளைப் பொடித்துத் தூளாக்கி அதை மடியில் வைத்து கொண்டு வந்ததைப் பார்த்து அவர்களைக் கையும் களவுமாக பிடித்து விட்டார்.

மன்னரின் மைத்துனரான ஜெயந்தியப்ப நாயருக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டு மறுநாள் பூமியில் ஆள் அளவு உள்ள குழிகள் வெட்டி தவறு செய்த மூவர்களையும் அதில் நிறுத்தி

கழுத்து அளவிற்கு மண் கொண்டு நிரப்பி. பட்டத்து யானை யின் காலால் மூன்று பேர்களின் தலைகளை இடறச் செய்யுமாறு கடுமையான தண்டனை வழங்கப்பட்டது. இந்தக் காட்சியைக் கருட மண்டபத்தில் தட்சிணா மூர்த்தி கோயில் வாசலின் வலது புறம் சிலை வடிவில் மூன்று மனிதத் தலைகளையும் யானை அவற்றை இடறுவதையும். தராசு ஒன்றை சிற்பமாக செதுக்கி வைத்துள்ளதை இன்றும் காண முடிகிறது.

### மன்னனின் ஊர் நலப்பணி

திருமலை மன்னரின் காலத்தில் தான் சுசீந்திரம் திருநகரம் பெரும் வளர்ச்சி கண்டது. நான்கு ரத வீதிகளையும் சமதளமாக அமைத்து தெருவின் அளவுக்குத் தேர்களை அமைத்து நான்கு ரத வீதியிலும் நான்கு மணி நேரத்தில் ரதம் சுற்றிவர வழி வகுத்தவர் நமது திருமலை மன்னராகும். அத்தகைய மன்னரையும், அவர் செய்த திருத்தொண்டு களையும் மறவாமல் இருக்கும் பொருட்டு மன்னரைச் சிலை வடிவில் சிற்பிகள் படைத்துள்ளனர்.

## கொன்றையடி நாதர் ஆலயம்

### ஆதி மூலஸ்தானம்

திருக்கோயிலின் ஆதி மூலஸ்தானம் இதுவாகும். மூன்று கிளைகளுடன் கூடிய கருமை நிறம் கொண்ட கொன்றை மரத்தடியில் மும்மூர்த்திகள் லிங்க வடிவில் மூன்று சிலைகளாக இருப்பதை அபிஷேகத்தின் போது காணலாம். சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்பு மனிதர்கள் நடமாட்டம் தொடங்கிய இக்கானகத்தில் தென்பட்ட முதல் தெய்வங்கள் இந்தச் சிலைகள் ஆகும். இதனை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

### பணி செய்வித்தவர்கள்

சிறிய கோயிலாக அமைத்து வழிபட்டு வந்த இதனைத் திருக்கோயில் திருப்பணிகள் தொடரப்பட்ட போது, அதாவது சுமார்

823 - ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த **பண்டாரம்பிள்ளை காமன் விக்ரமன்** கணக்காக **களத்தி நல்லசிவன்** என்பவர் கொல்லம் ஆண்டு 350-ல் இத்திருப்பணி (தற்போதைய அமைப்பு) செய்வித்ததாக திருக்கோயில் உட்புறம் முதலாவது அறையில் உள்ள கல்வெட்டில் இருந்து அறிய முடிகிறது. அடுத்து சுசீந்திரத்தில் வாழ்ந்த **வாத்தியார் கேசவன் மகன் கேசவன்** இத்திருக்கோயில் முன் நிறுத்தப்பட்டுள்ள இரண்டு தூண்களைச் செய்வித்தாக தூணில் உள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இந்த மூலஸ்தானத்தில் உள்ள கொன்றை மரத்தின் துண்டினை (பாகம்) எடுத்து ஆராய்ச்சி செய்த கல்கத்தா நிபுணர்கள் இம்மரமானது 2000 ஆண்டுகளுக்கும் முற்பட்டது. எனக் கருத்து தெரிவித்துள்ளனர். பேரறிஞர் டி.ஏ.கோபிநாத ராவ், அறிஞர் சிதம்பர குற்றாலம் பிள்ளை, டாக்டர் கே.கே. பிள்ளை எடுத்துக் காட்டியுள்ளது குறிப்புகள் மூலமாக அறியமுடிகிறது. இத்தனை வருடங்கள் கடந்த பின்பும் மரம் செதில் (கறையான்) அரிக்காமல் இருந்து வருவது மிக முக்கிய அம்சமாகும். இக்கோயிலின் முன்பாகம் முழுவதும் மரங்கள் கொண்டு பணி செய்விக்கப்பட்டுள்ளது. இந்த சன்னதி மேற்கு நோக்கி அமைந்துள்ளது. தினமும் அதிகாலை 4.15 க்கு மூன்று லிங்கங் களுக்கும் நடக்கும் அபிஷேக ஆராதனைகளை தரிசிப்பவர்கள் புண்ணியம் பெறுவார்கள்.

மூலதோ பிரம்ம ரூபாயா
மத்தியதோ விஷ்ணு ரூபிணே
அக்ர தச் சிவரூபாயா
விருக்ஷ ராஜபதே நம:

மேற்காணும் பாடலில் மூன்று லிங்கங்களாக உள்ள மூர்த்திகளையும், சரக்கொன்றை மரத்தினையும் வழிபடுவர் களுக்கு நலம் கிடைக்கும் என்பது விளக்கப்படுகிறது.

### மிருதங்க சக்கரவர்த்தி

சுமார் 200-ஆண்டுகளுக்கு முன்பு சுசீந்திரத்தில் வாழ்ந்த **"வில்லிப்பிள்ளை"** என்பவர் இத்திருக்கோயில் இறைவன் மீது மிகுந்த பக்தி கொண்டு அந்த பக்தியின் மூலமாக தனது மிருதங்க இசையால் கதலி வாழைக் குலையின் கனிகளை கீழே விழச்செய்த அற்புத நிகழ்ச்சியும் இந்த சன்னதியில் நடந்துள்ளதைக் கீழ்கண்ட பாடல் மூலம் அறிய முடிகிறது.

"கட்டுங் கதலிக் குலை தாள வீற்றில்
கனியொன் றுதிர்ந்திடவே
வட்டப் பவுரித் திரைக்குள் நின்று
வகைசேர் தாளம் நூற்றெட்டும்
விட்டு விளங்க வஞ்சி நகர் வேந்தன் மகிழ்
வில்லிப்பிள்ளை தன்
கொட்டுக் கிசைந்த கூத்தனைக்
கொன்றை நிழற்கீழ் கண்டேனே."

என்பது அப்பாடல் அதனை சிறு விளக்கமாக கீழே தருகின்றோம். :

ஒரு காலத்தில் சுசீந்திரத்தில் வாழ்ந்த 'வில்லிப்பிள்ளை' என்பவர் சிறந்த முறையில் மிருதங்கம் இசைப்பதில் பெயர் பெற்று விளங்கினார். தினமும் சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் ஆலயம் சென்று அங்குள்ள கொன்றையடி நாதர் சன்னதியின் முன்பிருந்து மிருதங்கம் இசைத்து வழிபடுவதை வழக்கமாக கொண்டிருந்தார். அவர் அவ்வாறு இசைத்தது பலரும் நம் இசையைக் கேட்கவேண்டும். பாராட்ட வேண்டும் என்ற எண்ணத்தினாலல்ல. கொன்றையடி இறைவன் மீது கொண்ட அளவற்ற பக்தியினால் ஆகும். ஆண்டவன் தான் வாசிக்கின்ற மிருதங்கத்தின் இசையை கேட்க வேண்டும். இதுவே தான் ஆண்டவனுக்குச் செய்யும் வழிபாடு என எண்ணி இறைவன் சன்னதியின் முன்பு மட்டுமே இதனை நிகழ்த்தி வந்தார். இதனைத் தொழிலாகக் கொண்டு இசைவாணர்களின் கச்சேரிகளுக்கு பக்கவாத்தியமாகக் கூட அவர் செல்வதில்லை.

ஆம்! இறைத் தொண்டாகவே இதனைச் செய்து வந்தார். நாளுக்கு நாள் வில்லிப்பிள்ளையின் மிருதங்க இசையில் மனம் லயித்த மெய்யன்பர்கள் கூட்டமும் ஆலயத்தில் பெருகத் தொடங்கியது.

அக்காலகட்டத்தில் வஞ்சி நகர் வேந்தன் (திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர்) ஆட்சி நடைபெற்று வந்ததால் அவருக்கு வில்லிப்பிள்ளையின் மிருதங்க இசையின் பெருமை தெரிய வந்தது. இசையில் நாட்டங் கொண்ட மன்னரும் வில்லிப் பிள்ளையின் மிருதங்க இசையை கேட்க விரும்பி அவரை அரண்மனைக்கு அழைத்துவர உதவியாளருக்கு உத்தரவிட்டு அனுப்பி வைத்தார். மன்னரின் உதவியாளர் வில்லிப் பிள்ளையை அணுகி மன்னரின் விருப்பத்தைத் தெரிவித்து அழைக்கவே 'ஐயா! நாதவடிவான நிலையான இறைவனுக்கு என் இசையை அர்ப்பணித்து விட்டேன். அவன் சன்னிதியைத் தவிர வேறெங்கும் மிருதங்கம் வாசிப்பதில்லை என்ற நிலையில் வாழ்ந்து வருகிறேன் தயவுசெய்து என் விருப்பத்தை மன்னருக்கு தெரிவியுங்கள்' என வில்லிப்பிள்ளை மன்னரின் உதவியாளரிடம் தெரிவிக்கவே. வில்லிப்பிள்ளையின் பிடிவாத குணத்தால் மன்னரின் உதவியாளர் கோபமுற்றாலும் ஊரில் வில்லிப் பிள்ளைக்கு இருக்கும் நற்பெயரால் வந்தவர் திரும்பிச் சென்று விட்டார்.

உதவியாளர் அரண்மனை சென்று மன்னரிடம் விவரங்களைத் தெரிவித்தார். மன்னருக்கும் சற்று கோபம் உண்டாகியது. ஆனால் அதேவேளையில் வில்லிப்பிள்ளையின் மீது அனுதாபமும் உண்டாகியது. இறைவன் மீது கொண்ட உண்மையான பக்தியை அறிய விரும்பி வில்லிப் பிள்ளையின் மிருதங்க இசைகேட்க "வஞ்சிநகர் வேந்தன்" சுசீந்திரம் திருக்கோயிலுக்கு செல்வதற்கு ஏற்பாடு செய்திட உத்தரவிட்டு திவான் மூலமாக தான் வரும் நாளை தெரிவிக்கச் செய்தார்.

குறிப்பிட்ட நாளும் வந்தது மன்னரும் சுசீந்திரம் திருக் கோயிலுக்கு விஜயம் செய்தார். கொன்றையடி நாதர் சன்னிதி முன் மண்டபத்தில் வைத்து வில்லிப்பிள்ளையின் மிருதங்க இசைநிகழ்ச்சி நடைபெற்றது. மேலும் தம் இசை இயற்கையோடு

இசைந்தது என்பதனைக் காட்ட விரும்பி கதலிப் பழக்குலை ஒன்று கோயில் முன்னால் திரையினுள் கட்டப்பட்டது. வில்லிப் பிள்ளை 108 தாளவகைகளையும் மிருதங்கத்தில் கொட்ட லானார். ஒவ்வொரு தாளத்தின் முடிவிலும் கதலிப் பழக்குலையிலிருந்து ஒவ்வொரு கனியும் கீழே விழுந்தது. இப்படியாக குலையிலிருந்த பழங்கள் அனைத்தும் உதிர்ந்து விழுந்ததைக் கண்டு மன்னர் மன மகிழ்ந்தார். மண்டபத்தில் கூடிநின்ற பக்த பெருமக்கள் பெரு மகிழ்ச்சியுற்றனர். நாதவடிவான இறைவனின் அற்புதத்தை வில்லிப் பிள்ளையின் வாயிலாக உணர்ந்த மன்னரும் அவரைப் பாராட்டி 'மிருதங்க சக்கரவர்த்தி' என்ற பெயரோடு வில்லிப்பிள்ளை கௌரவிக்கப்பட்டார்.

இதனை "கொன்றைப்பத்து" திருப்பாடல் மூலம் நம்மால் அறிய முடிகிறது. மேலும் இத்திருத்தலத்தில் மிருதங்க வித்துவான்கள் பலர் தோன்றி மறைந்ததோடு, இப்போது வாழ்ந்து வருபவர்களையும் காணமுடிகிறது. சென்னை அகில இந்திய வானொலியில் நிலைய மிருதங்க வித்துவானாக சுசீந்திரம் கிருஷ்ணன் என்பவர் புகழ்பெற்று விளங்குவதையும், இங்குள்ள சங்கீதத் தூண்களின் இசையினை வானொலி நிலையத்தார் ஒலிபரப்பி வருவதையும் கேட்கலாம்.

மேலும் மேற்கண்ட நிகழ்ச்சியை மையமாக வைத்து ஒருசில மாற்றங்களோடு தமிழ்நாட்டின் புகழ்பெற்ற நடிகராக விளங்கும் உயர்திரு **டாக்டர் சிவாஜி கணேசன்** அவர்கள் நடித்துத் திரைப்படமாக தயாரிக்கப்பட்ட "மிருதங்க சக்கரவர்த்தி" என்ற கதையின் படப்பிடிப்பும் சுசீந்திரத்தில் 1984-ல் நடைபெற்று அந்த திரைப்படமும் எல்லோராலும் பாராட்டப் பெற்று மிகுந்த வெற்றிபெற்றது நினைவு கொள்ளத்தக்கது.

இத்திருக்கோயிலில் மிருதங்க இசையால் இறைவனை மகிழ்வித்த வரலாற்றினைக் கொன்றைப் பத்து பாடலின் மூலமாக அறிந்தோம். அடுத்து தமிழாண்டு 1014-ல் ஆண்ட முடிசார்ந்த மன்னராக விளங்கிய சுவாதித் திருநாள் மகாராஜா

சங்கீதக் கலையில் தேர்ச்சி பெற்றவர். இவருடைய ஆட்சி காலத்தில் சங்கீதக்கலை சிறப்புற்று விளங்கியது பாடல்களைத் தானே இயற்றிப் பாடுவதிலும் இவர் வல்லமை பெற்றிருந்தார். பலமுறை இத்திருக்கோயிலுக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்து சென்றுள்ளார். அவர் இங்குவரும் பொழுதெல்லாம் இறைவனின் சன்னதியில் நின்று "கலையே பார்வதி நாதம் கருணா வாசம்" அடுத்து "வந்தே மகேஸ்வரம்" போன்ற கீர்த்தனைகளை மனமுருகப்பாடி இறைவனை வழிபட்டுச் சென்றுள்ளார். இறையருள் பெற்ற ஆதிசங்கரரும் இத்திருக்கோயிலில் இறைவனை வழிபட்டு "நமோஸ்து வாகீச ஹரிஸ்வராய" என்ற பாடலில் சுசீந்திரம் மும்மூர்த்திகளின் மகிமையை மிக அற்புதமாக விளக்கிக் காட்டி பாடியுள்ளார். சுவாமி விவேகானந்தா உட்பட பல மகான்களும் இவ்விறைவனை வணங்கி சென்றுள்ளதை வரலாற்று வாயிலாக அறியமுடிகிறது.

தேவாரம் அருளிய அப்பர், சுந்தரர் ஞானசம்பந்தர் போன்ற சமயப் புலவர்களும் சுசீந்தை ஸ்தாணுமாலயனைப் போற்றிப் பாடிய பாடல்களும் இன்னும் சமஸ்கிருதம் மற்றும் மலையாள மொழிகளில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களைச் சான்றோர்கள் எழுதி வைத்துச் சென்றுள்ளதை ஓலைச் சுவடி களிலும், முற்கால நூல்களிலும் காண முடிகிறது.

## நந்தீஸ்வரர்

### *மகாக் காளை*

திருமலை நாயக்க மன்னர் காலத்தில் பதிமூன்றடி உயரமும், இருபத்தொன்றடி நீளமும், பத்தடி அகல மும் கொண்ட மிகப்பெரிய நந்தி (காளை) நான்கு கால்களையும் மடக்கி தலையை உயர்த்திப் பார்க்கும் வண்ணம் கம்பீரமாக காட்சியளிக்கிறது. செங்கல் சுண்ணாம்புச் சாந்து (கருப்புக்கட்டி, கடுக்காய் நீர் கலந்தது) கொண்டு இதைக் கருவாக்கி, கடல்ச் சங்கை பொடித்து மாவாக்கி அந்த மாச் சாந்தில் உருவாக்கிய இதனை **"மாக்காளை"** என்றும் கூறுகின்றனர். ரிஷப வாகனத்தின்மீது உமா-மகேசுவரன் அமர்ந்து காட்சிதரும்



பிரகார மண்டப அமைப்பு



திருக்கோயிலின் பின்புறத்தோற்றம்

திவ்விய தெரிசனத்தை இத்திருக்கோயிலின் முகப்பு மண்டபத்தின் மேல் காண்கிறோம். சுவாமி-அம்பாளையும் சுமந்து நிற்கும் ரிஷபமாகிய காளை எந்த வடிவில் உள்ளதோ, அதே போன்று இங்கு மண்ணில் உருவாக்கி, கடல் சங்கினால் மெருகூட்டியுள்ளான் சிற்பி. கல்லிலும், மண்ணிலும், மரத்திலும், பஞ்சலோகங்களிலும் சிலைகள் வடித்தெடுத்து சாதனை படைத்த சிற்பி இத்திருக்கோயிலுக்கும் பெருமை சேர்த்துள்ளார். இவை அனைத்தும் ஒரே இடத்தில் அமைந்து இருப்பது சிறப்பு. இந்த நந்தி தஞ்சை பிரகதீஸ்வரர் கல் நந்தியை விட பெரிது என்கிறது வரலாற்று ஆராய்ச்சி நூல். எனவே இதனை மாக்காளை என்பதை விட, **"மகாக்காளை"** என்பதே பொருத்தம். இதன் கீழே இருக்கும் சிறிய கல் நந்திக்கு தினமும் பூஜை நடந்து வருகிறது.

நந்தீஸ்வரர் சன்னதி கொன்றையடி திருக்கோயிலின் இடதுபுறம் தாணுமாலயன் சன்னதியின் நேர் எதிரில் கிழக்குப் பிரகார மண்டபத்தில் மேற்குத் திசை நோக்கி அமைந்துள்ளது. பால் வண்ணப் பளிங்கு சிலை போல் காட்சி தரும் நந்தியின் தோற்றம் உயிருள்ள காளையையும் மிஞ்சி விடுகிறது. இந்தியாவில் முதலாவது பெரிய நந்தி ஆந்திர மாநிலத்தில் அனந்தப்பூர் மாவட்டத்தில் ஹிந்துப்பூர் தாலூகாவில் உள்ள **லேபாக்ஷி** என்ற ஊரில் உள்ளது. இரண்டாவது பெரிய நந்தி இதுவாகும். சுசீந்திரத்தில் உள்ளது போன்ற கலையம்சம் பொருந்திய அழகான சிலை வேறு எங்கும் அமையவில்லை என்பது ஆராய்ச்சி நூல் வல்லுனர்களின் கருத்து. இந்த நந்திக்கு கீழ்சாந்தி போற்றியான அம்மன் கோயில் பூசாரி பூசை செய்து வருகிறார்.

### *மனம் திருந்த வைத்த 'மகாக்காளை'*

ஆங் : 1740-ல் ஆற்காட்டு நவாப்பான **சந்தா சாகிப்** பெரும் படையோடு வந்து சுசீந்திரம் பகுதியை முற்றுகையிட்டு பல சேதங்களை விளைவித்ததை வரலாறு தெரிவிக்கின்றது எண்ணி வந்த பொருள் கிடைக்காத காரணத்தின் விளைவாக

கலையம்சம் மிகுந்த கற்சிலைகள் படையினரால் உடைக்கப் பட்டு சிதைந்த நிலையில் இருக்கும் காட்சியும், திருக்கோயில் மூலஸ்தான கருவறையைச் சுற்றியுள்ள பிரகார திருச்சுற்றினில் உள்ள பாவை விளக்குகள் உடைந்த நிலையில் உள்ளதையும், கலையம்சம் நிறைந்த திருத்தேர் ஒன்று எரிந்து நிர்மூலமாக்கப்பட்டதும் ஒரு சில எடுத்துக்காட்டுகளாகும்.

முன் எச்சரிக்கையாக செயல்பட்டமையால் கருவறையும் ஆபரணங்களும் மற்றும் பணிமுடித்து வைத்திருந்த வீர ஆஞ்சநேயர் சிலையும் பாதுகாக்கப்பட்டன. அடுத்து சந்தா சாகிப்பின் படைவீரர்களின் பார்வை அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய நந்தீஸ்வரர் மீது படவே அதைத் தகர்த்து விட ஆயத்தமாயினர். ஏற்கனவே நவாப்பின் படைகள் வருவதை அறிந்து எதிர்த்து போராடிய ஊர் மக்கள் பலர் பலி யாகியதால் பீதியில் மக்கள் செய்வதறியாது திகைத்து நின்றுவிட்டனர். படையினரை எதிர்க்க துணிவில்லாத மக்களில் சிலபேர்கள் நவாப் மன்னரிடம் "**தெய்வாம்சம்** நிரம்பப் பெற்று மாக்காளை. தயவுசெய்து இதையும் சேதப்படுத்தாதீர்", என ஊர்மக்கள் சிலையைக் காப்பாற்ற வேண்டி எடுத்துரைத்தனர்.

மக்களின் கோரிக்கையை ஏற்ற நவாப் உங்கள் கூற்றுப் படி "தெய்வ அம்சம்" இதற்கு இருக்குமானால் நான் காளையின் முன்பு தீனியான வைக்கோலைப் போடுகின்றேன். அது தின்று சாணமும் போடட்டும் விட்டு விடுகிறேன். என மன்னன் கூறினான். அதன்படி நவாப் மன்னன் வைக்கோலைக் கொண்டுவந்து காளையின் முன்பு போட்டு காளையைச் சுற்றி படை வீரர்களை நிறுத்தினான்.

என்ன ஆச்சரியம்!! சிறிது நேரத்தில் காவலுக்கு நின்றிருந்தவர் மன்னன் முன்னால் வந்து காளையின் முன்னால் போடப்பட்ட வைக்கோலைக் காணவில்லை. மன்னா! காளை சாணகம் போட்டுள்ளது என கூறவே மன்னரும், மற்றவர்களும் திகைப்பினால் ஓடிச்சென்று காளையின் பின் புறத்தில் சென்று

பார்த்து உண்மையை உணர்ந்தனர். வியக்கத் தக்க இந்த நிகழ்ச்சியைக் கண்ட மன்னர் மனமாற்றமடைந்தார். கடுஞ்சினத்தில் போர்வெறிகொண்டு வந்த மன்னன் சாந்தமடைந்தான். உடனே "இனிமேல் இத்திருக்கோயிலினுள் நாம் எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்தக்கூடாது", என படைவீரர்களுக்கு உத்தரவிட்டான். தெய்வசக்தி நிறைந்த இந்த இடத்தின் மகிமையை உணர்ந்து நவாப் சந்தாசாகிபு திரும்பிச் சென்று விட்டதாக கர்ண பரம்பரை கதையால் அறியமுடிகிறது.

ஆங் : 1740-ல் இலங்கையிலிருந்து கப்பலில் வந்து குளச்சலில் இறங்கிய டச்சுப் படையினர் நாகர்கோவில் நோக்கி படையெடுத்து வந்தனர். அப்போது திருவிதாங்கூர் சமஸ்தான மன்னராக ஆட்சிபுரிந்த அனுஷம் திருநாள் மார்த்தாண்டவர்மா சந்தாசாகிபுவினோடு ஒப்பந்தம் நடத்தி இருவரும் சேர்ந்து இலங்கை டச்சுப் படையினரைத் தோற்கடித்து வெற்றிவாகை சூடி டச்சுப்படையின் தளபதி யாய் இருந்து துணிவுபெற்ற **"டிலனாய்"** என்பவரைத் தனது படையின் தளபதியாக நியமித்த விவரத்தை திருவனந்தபுரம் திருவிதாங்கூர் மன்னர் அரண்மனை குறிப் பேடுகளின் மூலம் அறியமுடிகிறது. சந்தாசாகிபு மன்னரின் படையெடுப்பினால் முதலில் துன்பத்தை மக்கள் அடைந்தாலும், ஆபத்து தருணத்தில் பல போர்களை ஒரே நேரத்தில் சந்தித்த மார்த்தாண்டவர்மா மகாராஜாவுக்கு துணையாக நின்று நாஞ்சில் நாட்டை காப்பாற்றிய பெருமை ஆற்காட்டு நவாப்பான சந்தாசாகிபு அவருடைய தம்பி படா சாகிபு மற்றும் அவருடைய தளபதி சப்தர் அலிகான் இவர்கள் செய்த உதவியை என்றும் மறக்காத வண்ணம் வரலாறுகள் அமைந்துள்ளதை அறிய முடிகிறது. ஆம்! காளை உருவில் தன் மகிமையைக் காட்டிய இத்திருக் கோயிலின் இறைவனைப் போற்றுவதோடு மகாக் காளையின் மகத்துவத்தையும் அறியமுடிகிறது.

## "நந்தீஸ்வரர் பெருமை"

நந்திஎம் பெருமான் தன்னை
நாடோறும் வணங்கு வோர்க்குப்
புந்தியில் ஞானம் சேரும்,
பொலிவுறு செல்வம் கூடும்
சிந்தையில் அமைதி தோன்றும்!
சிறப்புறு மக்கள் சேர்வர்!
இந்திர போகம் கிடடும்!
இணையிலா வாழ்வு தானே!

## சித்திரசபை நடராஜர்

### *மண்டப அமைப்பு*

இங்கே தில்லைக்கூத்தனாகிய நடராஜ பெருமான் சித்திர வடிவில் இருப்பதால் சித்திரசபை என்றழைக்கப்படுகிறது. இங்குள்ள மண்டபத்தில் உள்ள தூண்களில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள் கண்ணைக் கவர்ந்திழுக்கும் விதத்தில் கலையம்சம் நிறைந்து காணப்படுகிறது. சித்திரசபையின் வெளிப்புறம் வலப்பக்கம் கங்காள நாதர் கொட்டிசைத்து நிற்கும் திருக்கோலமும், இடப்பக்கம் குழலூதி நிற்கும் கோகுலகிருஷ்ணனின் திருவுருவமும், குழலோசை கானம் கேட்கும் கோபியர்கள் தன்னை மறந்த நிலையில் மேலாடை மற்றும் இடை ஆடை நழுவி விடுகின்ற நிலையைக்கூட மறந்து நிற்பதாகவும் சிலை வடித்துள்ள சிற்பியின் திறன் நம்மை வியக்க வைக்கிறது.

இந்திர சபையின் உள்ளே ருத்திர தாண்டவ கோலத்தில் சிவபெருமான் ஒருகாலைத் தரையிலும் மறுகாலைத் தலைக்கு மேல் உயர்த்தி நடனம் புரிவதையும் அவர் எதிரே இருக்கும் தூணில் பத்திரகாளியாக வீற்றிருக்கும் அன்னை பார்வதி தேவி பார்த்து நிற் கின்ற காட்சியும் அழகுடன் சித்தரிக்கப்பட்டுள்ளது.

## சித்திரசபை சிற்பங்கள்



சிவதாண்டவம்



பார்வதி தேவி சக்தி வடிவம்

## சித்திரசபை சிற்பங்கள்



வேணுகோபால கிருஷ்ணன்



கங்காள நாதர் (சிவன்)

ஆம்! கலையம்சம் பொருந்திய மற்றைய தூண்களின் சிற்பங்களும் நம்மை பரவசப்படுத்துகின்றது. மேற்கூறிய சிற்பங்களை உள் ளடக்கிய இத்திருக்கோயிலைச் "சிற்ப சபை" என்று கூட கூறலாம். இம்மண்டபம் 44 அடி நீளமும் 43 அடி அகலமும் கொண்டது.

இந்த சித்திர சபையைச் சுசீந்திரம் ஊரின் தெற்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பறக்கை என்ற ஊரில் வாழ்ந்த "மாத்துக்குட்டி மாலையம்மா" என்ற பெண்மணி 153 வருடங்க ளுக்கு முன்னால் 1845-கொல்லமாண்டு 1020-ஆனி 31-ல் கட்டி முடித்ததாகக் கல்வெட்டில் காணமுடிகிறது. மேலும் அன்னை பத்ரகாளியாக பார்வதி தேவியின் சிலையைச் **சுசீந்திரம் யோகீஸ்வரன் தொண்டைமான் பண்டாரம்** செய்து கொடுத்ததாகச் சித்திர சபை கல்வெட்டு தெரிவிக்கிறது.

## சித்திரசபையின் இறை வழிபாட்டுத் தத்துவம்

மனிதனுக்கு பயம் வரும்போது பக்தி உண்டாவது வழக்கம். இயற்கையின் சீற்றத்தைக் கண்டு மக்கள் (இடி, மின்ன புயல் காற்று, மழை, தீ) பயத்தால் இயற்கையை வணங்கலாயினர். பின்னர் மரங்களையும் மிருகங்களையும், பறவைகளையும் வணங்கி தனது பக்தியை வளர்த்துக் கொண்டதை கோயில்களில் சரக்கொன்றை மரம், வில்வமரம், அரசமரம், வன்னிமரம், துளசிச்செடி போன்றவைகள் இருப்பதையும், நந்தி (காளை) கருடன், மயில், அன்னம், யானை போன்றவை வாகனங்களாக அமைந்துள்ளது இதன் வாயிலாக அறியமுடிகிறது. மேலும் இத்திருக்கோயிலில் கொன்றையடி நாதரையும், நந்தீஸ்வரரையும் மார்கழி 5-ம் திருவிழாவின் போது கருட தரிசனத்தையும் இன்னும் பலவும் உதாரணமாக இருப்பதை காண்கிறோம்.

நாளாக நாளாக மனிதன் இறைவனுக்கு உருவம் அமைத்து வழிபடலா னான். அதன் முதல் தோற்றம் சிவலிங்கம் ஆகும். ஆதிபரம் பொருள் என லிங்கத்தை அழைக்கின்றோம்.

அடுத்து தன்னைப் போல் (மனிதன்) இறைவனுக்குப் பல உருவங்கள் அமைத்து பல திருநாமங்களுடன் அழைத்து வணங்கினான். இத்திருக்கோயிலில் இறைவனைத் தேவேந்திரன் பூஜித்து வழிபடும் மூலஸ்தானம் மற்றும் கொன்றையடி, கைலாசநாதர் போன்ற சன்னதிகளில் ஜோதிலிங்கமானது ரூபா ரூபத்திலும், சுற்றுக்கோயில் தெய்வங்களான தேவி, முருகன், இராமர், வினாயகர், சாஸ்தா, ஆஞ்சநேயர் போன்றவைகள் ரூபத்திலும், சித்ரசபையில் உள்ள நிலைக்கண்ணாடியை அரூபத்திலும் வழிபடுவது உருவமில்லாத நிலையில் நம்மை நாமே காணும் தன்மையில் இறைவன் நம் முள் நிறைந்திருக்கிறான் என்ற தத்துவத்தை உணர்த்துவதாகும். இதனைக் கீழ்வரும் பாடலில் திருமூலர்

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

என்ற அருமையான பாடல் வாயிலாக விளக்குகின்றார். அடுத்து இருபதாம் நூற்றாண்டின் கவிமணியாக வாழ்ந்த அமரர் தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் உள்ளத்தில் நிறைந்திருக்கும் இறைவனைக் கீழ்வரும் பாடலில் தெரிவிக்கின்றார்.

### உள்ளத்தில் நிறைந்திருக்கும் இறைவன்

1) சிற்ப சிலை கண்டேன் - நல்ல
சித்திர வேலை கண்டேன்,
அற்புத மூர்த்தியினைத் - தோழி!
அங்கெங்கும் கண்டிலனே.

2) தூப மிடுதல் கண்டேன் - தீபம்
சுற்றி எடுத்தல் கண்டேன்.
ஆபத்தில் காப்பவனைத் - தோழி!
அங்கேயான் கண்டிலனே.

3) தில்லைப் பதியுங் கண்டேன் - அங்குச்
சிற்றம் பலமுங்கண்டேன்.
கல்லைக் கனிசெய்வோனைத் - தோழி!
கண்களாற் கண்டிலனே.

4) உள்ளத்தில் உள்ளான், அடி! - அதுநீ
உணர வேண்டும், அடி!
உள்ளத்தில் காண்பாய் எனில் - கோயில்
உள்ளேயுங் காண்பாய், அடி.

(மலரும், மாலையும்)

தற்போது உள்ள சித்திரசபை சன்னதியில் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்புவரை நிலைக்கண்ணாடி வைக்கப்பட்டிருந்தது. அன்றைய நாளில் அறநிலைய ஆணையராகப் பணிபுரிந்த திரு உத்தண்டராமபிள்ளை அவர்கள் காலத்தில் கண்ணாடி மாற்றப்பட்டு சித்திரசபையின் நேர்எதிரே நிலைகண்ணாடி வைக்கப்பட்டுள்ளது.

### வசந்த மண்டபம்

இம்மண்டபம் நீலகண்ட வினாயகர் கோயிலின் முன்பு அமைந்துள்ளது. இதைத் திருப்பணி செய்தவர் பறக்கை என்ற ஊரில் உள்ள மாத்துக்குட்டி மாலையம்மா என்ற பெண்மணியாகும். இது 24-அடி நீளமும், 25-அடி அகலமும் கொண்ட இதை 20 தூண்கள் தாங்கி நிற்கின்றன.

இந்த மண்டபத்தின் மேல்பகுதியில் நவக்கிரகங்கள் மேலிருந்து கீழ்நோக்கி இருப்பதாகவும் சுற்றிலும் 12 ராசிகளோடும் ஒரே கல்லில் மிக அழகாக அமைக்கப்பட்டுள்ளது. நேர் கீழே உள்ள ஒற்றைக்கல் பீடத்தில் உமா-மகேஸ்வரர் பங்குனி/ சித்திரை மாதங்களில் (பங்குனி உத்திரத்தன்று எழுந்தருளி சித்திரைத் திருவிழா கொடியேற்றுவரை) பூஜைகள் நடைபெறுகிறது. இம்மண்டபத்தினுள் இறைவனை எழுந்தருளச் செய்து இக் கல்பீடத்தைச் சுற்றி ஒரு அடி வீதியிலும் மூன்று

அடி ஆழத்திலும் காணப்படும் அகழியில் தண்ணீர் நிறைத்து தாமரைப் போன்ற மலர்கள், அதில் மிதக்கவைத்து ராமச்ச வேர்கள் அதில் போடப்பட்டு இறைவனுக்கு குளிரூட்டப்படுகிறது. இறைவனுக்கு கிரகசாந்திக்காகவும், கோடைகால வெப்பத்திலிருந்து காக்கவும், இந்நிகழ்ச்சி இம்மண்டபத்தில் வருடா வருடம் நிகழ்ந்து வருகிறது. இதன் பொருட்டு இம்மண்டபத்தை **வசந்த மண்டபம்** என அழைக்கப்படுகிறது.

இக்காலத்தில் நவக்கிரகங்கள் வீற்றிருக்கும் திருக்கோயில்களைத் தேடி கிரக சாந்திக்காக பக்தர்கள் சென்று கொண்டிருப்பதையும், தாங்க முடியாத வெப்பத்திலிருந்து தங்களை காப்பாற்றிக் கொள்ள இருக்கும் அறையில் குளிர்சாதன வசதி எற்படுத்திக் கொள்வதையும் காணமுடிகிறது. இதை நினைவூட்டவே இறைவன் உமா-மகேஸ்வரராக இந்த வசந்த மண்டபத்தில் எழுந்தருளுகின்றார். இங்கு நடைபெறும் பூஜைகளை திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரே செய்து வருகிறார்.

"வேயுறு தோளி பங்கன் விட முண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரெண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே."

# நீலகண்ட வினாயகர்

## அமைப்பு

வசந்த மண்டபத்தின் பின்புறம் அமைந்துள்ள பெரிய விநாயகர் திருக்கோயிலாகும். சுமார் பத்தரை அடி நீளமும், ஆறு அடி அகலமும் கொண்ட மண்டபத்தினைக் கடந்து நாம் காண்பது இவ்வினாய கரையாகும். மேற்கண்ட பெயரோடு விளங்கிடும் இவர் முக்குருணி பிள்ளையார், மகாகணபதி என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறார். சுமார் ஆறு அடி உயரமுடைய இவ்வினாயகரின் சிலையமைப்பு நம்மைப் பிரமிக்க வைக்கின்றது. பத்து கைகளையுடைய கணபதி சிலையின் வலதுபுறக் கைகளில் சக்கரம், மற்றும் தாமரை, கெதை, ஒடிந்த கொம்பு, மற்றும் பழமொன்றும், இடதுப்புற கைகளில் பாசம், அங்குசம், கரும்பு, நெல்மணிக் கதிர்கள் போன்றவைகளும், இடதுபுறம் ஒருகையால் சக்தி தேவியை அரவணைத்துக் கொண்டும், காட்சி தருகிறார். தேவியின் வலது கையால் வினாயகரின் பின்புறக்கை அணைத்துக் கொண்டு இடதுகரத்தில் தாமரைப்பூவோடு காட்சி தருகிறாள். வயிற்றை சுற்றியுள்ள பாம்புடன் தும்பிக்கையில் அமிர்த கலசத்துடன் காட்சி தருகிறார் வினாயகர்.

தினமும் வழிபாட்டிற்கு மூன்று மரைக்கால் அரிசி நிவேத்தியம் இவ்வினாயகருக்குப் படைத்திட வேண்டி சுசீந்திரம் தெற்குமண்மடம் ஸ்தானிகராக விளங்கிய **ஸ்ரீபுருஷோத்தமர் நீலகண்டரு** என்பவர் நிலங்கள் விட்டுக்கொடுத்துள்ளார். ஆங் : 1587 (கொ:760) ஆவணி பதினான்காம் நாள் விநாயகரை பிரஷ்திடை செய்து மண்டபமும் கட்டிக்கொடுத்ததும் மேற்படி ஸ்தானிகரே என்ற விவரத்தை தெற்குமண்மடம் குறிப்பேடுகள் மூலமாக அறியமுடிகிறது.

முற்காலத்தில் இத்திருக்கோயிலை ஒன்பது யோக மடங்களின் தலைவர்கள் சேர்ந்து மூலபருசபை எனும் அமைப்பில் நிர்வாகம் நடத்திக் கோயிலின் நித்திய காரியங்களைக் கவனித்து வந்துள்ளனர் இதனால் இவர்களை நித்திய காரிய

யோக ஸ்தானிகர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். தற்போது இருந்துவருவது இந்த (தெற்குமண் மடம்) மட்டுமே. அவர்களைப் பற்றிய விவரங்களைப் பின்னால் காண்போம்.

## கங்காள நாதர் கோயில்

நீலகண்ட வினாயகர் கோயிலின் வலப்பக்கமுள்ள, முற்ற வெளியில் அமைந்திருக்கும் இத்திருக்கோயில் இறைவனைக் **கங்காள நாதர்** வடிவில் வழிபட்டு வருகின்றனர். முழுவதும் பஞ்சலோகத்தினால் அமைந்துள்ள இவ்விக்கிரகம் மார்கழித் தேர்த்திருவிழா நாளன்று அதிகாலை ஐந்து மணிக்கு **பிட்ஷாடன மூர்த்தி** யாக ரதவீதிகளில் வலம் வரும் இவ்வேளையில் சப்பர வாகனத்தில் உள்ள வெள்ளிப்பாத்திரத்தில் மக்கள் காணிக்கை போடுவார்கள். நிதி பிரித்து விழா நடத்துவது போன்று, இறைவனும் தேரோட்ட விழா நடத்த மக்களிடம் நிதி கேட்டு வருகிறார். என பெரியோர்கள் சொல்வதுண்டு. இந்தக் கங்காளநாதர் திருக்கோயிலைத் தோவாளை தாலுகாவைச் சார்ந்த பூதப்பாண்டி எனும் ஊரின் அருகிலுள்ள **சீதப்பால்** என்ற இடத்தைச் சார்ந்த சிவஞானம் என்பவர் ஆங்:1819 (கொல்லம்:994)-ல் கட்டிக்கொடுத்ததாகக் கல்வெட்டில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## வியக்க வைக்கும் சுற்றுப்பிரகார மண்டபம்

**மேற்பார்வையாளர்கள்:** திறந்த வெளி முற்றங்களாக இருந்த இத்திருக்கோயிலில் ஆங்கில வருடம் 1748 அதாவது சுமார் 250 வருடங்களுக்கு முன்னால் சேரமன்னன் **மார்த்தாண்ட வர்மா மகாராஜா** தனது ஆட்சிகாலத்தில் தெற்குச் சுற்றுப் பிரகாரத்தைச் சுசீந்திரம் "தெற்கு மண்மடம் ஸ்தானிகர்" நேரடி பொறுப்பிலும், மேற்கு, கிழக்கு திசைகளில் உள்ள சுற்றுப்பிரகாரங்களைத் திருக்கோயிலுடைய ஸ்தானிகர்களின் பொறுப்பிலும் வடக்குச் சுற்றுப் பிரகார மண்டபத்தை

பன்னிரண்டு பிடாகை மக்கள் பொறுப்பிலும் விட்டு பணிகளை முடித்ததாக கல்வெட்டுகள் தெரிவிக்கின்றது. நூற்றுக்கணக்கான தூண்களின் கலையம்ச வேலைப்பாடுகள் பார்க்கப் பார்க்க சலிப்பு ஊட்டாதவை.

***மண்டபத்தின் சிறப்பு :*** ஒரு வரிசை முதல் தூணிலிருந்து ஓரக்கண்ணால் மறு முனையை உற்று நோக்கினால் தூண்களின் வரிசை அடி பிசகாமல் இருக்கும் அற்புதத்தை இங்கே காணலாம். ஆம்! மன்னன் இட்ட ஆணையை மகேசனின் ஆணையாகக் கருதி பொறுப்போடு செயல்பட்ட ஸ்தானிகர்கள், படாகைத் தலைவர்கள் இவர்களின் கட்டளைக்கேற்ப செயல்பட்ட சிற்பக்கலைத் தொழிலாளிகளையும் நாம் மறக்க முடியாது. காலங்கள் உருண்டோடினாலும் என்றும் அழியா வண்ணம் ஸ்தானிகர்களின் மடங்களும் நிலைத்து நிற்கின்றன. மன்னவனின் திருத்தொண்டும் சரித்திரத்தில் மறையாமல் பல்லாண்டு நிலைத்து நிற்கும்.

**முக்கியத்துவம் பெற்றுவரும் கோயில்கள் :-** மேற்கு சுற்றுப் பிரகார மண்டபங்களில் அமைந்துள்ள ***சேரவாதல் சாஸ்தா, ஸ்ரீஇராமர்-சிதா கோயில்கள்*** மற்றும் வடக்குச் சுற்றுப் பிரகார மண்டபத்தில் இசைத்தூண்கள் பக்கமுள்ள ***ஸ்ரீகாலபைரவர்*** திருக்கோயில் போன்றவை ஒரே அமைப்பில் இருப்பதைக் காணலாம். இதை ஆங் : 1479 முதல் 1546-க்கும் உள்ள இடைப்பட்டக் காலங்களில் சேரமன்னன் ***இரண்டாம் உதய மார்த்தாண்ட வர்மா*** கட்டுவித்ததாகத் தெரிய வருகிறது.

***சேரவாதல் சாஸ்தா:-*** இவரை ஐயப்பனாகக் கருதி ஐயப்ப பக்தர்கள் சிறப்பு வழிபாடுகள் நடத்தி, இன்றும் வழிபட்டு வருகின்றனர். இத்திருக்கோயிலின் கன்னி மூலையில் அமர்ந்திருக்கும் சாஸ்தா கோயிலில் முற்காலத்தில் சிறிய வினாயகர் இருந்து வந்துள்ளது. பிற்காலத்தில் சேர உதய மார்த்தாண்ட வர்மா இச்சாஸ்தாவைப் பிரதிஷ்டை செய்தமையால் சேரவாதல் சாஸ்தா என அழைக்கப்படுகிறார் மிகவும் பழமையான வினாயகர் சிலை இங்குள்ளது.

ஆஞ்சநேயர் விக்கிரகம் நிலை நிறுத்திய பின்பு, ஸ்ரீஇராமர்-சீதா தேவி திருக்கோயில் முக்கியத்துவம் பெற்று, தினசரி சிறப்பு வழிபாடுகள் இங்கு நடந்து வருகிறது. ஸ்ரீ காலபைரவர் சன்னதியில் செவ்வாய்க்கிழமை தோறும் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று வருகிறது.

## கைலாச நாதர் ஆலயம்

**கோயிலின் சிறப்பு:** இத்திருக்கோயில் உயரமான பகுதியில் பாறைகள் நிறைந்த இடத்தில் அமைந்துள்ளது மிகவும் பழமை வாய்ந்ததும், சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தும் காணப்படுவதுமான இதை முதலாம் இராஜ ராஜ சோழன் கட்டுவித்ததாக இங்குள்ள கல்வெட்டில் காண முடிகிறது.

நாடு போற்றிடும், நஞ்சை செழித்திட்ட, தஞ்சை மண்ணில், தரணியெல்லாம் புகழ்ந்திடும் பிரகதீஸ்வரர் பேரால யத்தை கட்டுவித்து, பெருமகனாய் விளங்கிட்ட அத்திருமகன் தென்குமரிக்கு கைலாச நாதரையே தந்துள்ளான். என நாம் எண்ண வேண்டியுள்ளது.

7-ம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசு பெருமகனார் **"குமரிக் கயிலாச நாதரைக் காணலாமே"** என தனது திரு ஷேத்திரக் கோவை நூலில் தெரிவித்துள்ளார். கல்வெட்டுகளிலும் **தென் கைலாச நாதர்** எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. இராஜ ராஜ சோழனின் மூன்று பெரிய கல் வெட்டுகள் இங்கு இடம் பெற்றுள்ளன. திருக்கோயிலின் மிக அதிகமான கல்வெட்டுகளைக் கொண்ட இடம் இதுவாகும்.

### சுசீந்திரம் திருக்கோயிலின் கல்வெட்டு, மற்றும் ஓலைச்சுவடிகளின்,குறிப்புகளிலிருந்து சில விவரங்கள்

**கைலாச நாதர் பாறை கல்வெட்டு:** இத்திருக்கோயிலின் கல்வெட்டுகளில் மிகவும் பழமையானதாக கருதப்படும் கி.பி. 5,7-ம் நூற்றாண்டின் விவரங்களை அறிய இந்தக் கல்வெட்டு. உதவுகிறது. தெற்குப் பிரகாரத்தில் கைலாச நாதர் கோயில்

பக்கமுள்ள பாறையில் இது உள்ளது. சுமார் 1000 வருடத்திற்கு முற்பட்ட விவரங்களை இதன் மூலம் அறிய முடிகிறது. AD. 770 முதல் 1000 வரையிலுள்ள காலகட்டங்களில் ஆட்சி புரிந்த மன்னர்களான வரகுண பாண்டியன், வீர நாராயண சடையன், அபிமான் மேரு மாறவர்மன், வீரபாண்டியன் போன்றோர்கள் திருக்கோயில் பூஜைகளுக்கு ஏராளமான வஸ்துக்கள் (நிலங்கள்) வழங்கியுள்ள விவரங்களை இது தெரிவிக்கிறது.

உதாரணத்திற்கு ஆங்.வ. 900-ல் கோமார சடைய பாண்டிய மன்னன் தெக்கடம் பெருமாளுக்குத் (விஷ்ணு) தங்கக் கிரீடமும், திருவாபரணமும் செய்து நிலங்களையும் விட்டுக் கொடுத்துள்ளான். ஆ.வ. 960-ல் வீரபாண்டிய மன்னன் மாலைகட்ட பூக்கள் தேவைக்காக நந்தவனமும் வஸ்துக்களும் விட்டுக்கொடுத்துள்ளான். மற்றுமொரு கல்வெட்டு கைலாசநாதர் திருக்கோயிலை இராஜராஜ சோழன் கட்டு வித்ததாக தெரிவிக்கின்றது.

மேற்படி மன்னனின் காலத்தில் ஊர் நிர்வாகத்தைக் கவனிக்க "மகாசபையும்" ஆலய நிர்வாகத்தைக் கவனிக்க மூலபருடசபை என இரு சபைகளையும் மற்றும் பல சீர்திருத் தங்களையும் செய்ததை இங்குள்ள கல்வெட்டுகளின் மூலம் அறிய முடிகிறது.

இனி, இத்திருக்கோயில் முழுவதும் நிறைந்து காணப்படும் கல்வெட்டின் விவரங்களை முன்பு கூறியது போல் முழுமையாக தர பல நூறு பக்கங்கள் ஆகிவிடும். இருப்பினும் இத்திருக்கோயிலுக்கு மன்னர்கள் செய்த தொண்டுகள், இதில் பொதுமக்கள் பலர் புரிந்துள்ள திருத்தொண்டுகள் ஆகிய வற்றில் சிலவற்றை மட்டும் காண்போம். கல்வெட்டு குறிப்புகள் சிலவற்றில் மலையாள/தமிழ் வருடங்கள் சேர்ந்தும் சிலவற்றில் மன்னரின் ஆட்சி ஆண்டும் ஆங்கில ஆண்டுகள் இல்லாமலும் உள்ளது. ஒவ்வொரு காலகட்டத்திலும் பல திருப்பணிகள் இத் திருக்கோயிலில் நடந்துள்ளதாலும் பல கல்வெட்டு குறிப்பு களிலிருந்தும் விவரம் கிடைக்கப்பெற்றதாலும் அவற்றை முறைப்படி வரிசைப்படுத்த இயலவில்லை.

**கல்வெட்டு விவரங்கள் :-** ஆங் : 1130-ல் (கொ : 305) மாறவர்மன் ஸ்ரீ வல்லப பாண்டியன் **கூத்தாடும் தேவர்க்கும் (நடராஜர்)** நம்பிராட்டிக்கும் பூஜைக்குத் தேவையான நிலங்களை விட்டுகொடுத்துள்ளார். (கைலாசநாதர் கோயில் கல்வெட்டு) ஆங்:1029 (கொ:204)-ல் சுந்தரச்சோழ சதுர்வேதி மங்கலம் தென் திருவேங்கடத்து ஆழ்வார்க்கு (விஷ்ணு) நெய் விளக்கேற்ற 38 பசுக்களைத் தானமாக கொடுத்துள்ளார்.

(கைலாச பாறை கல்வெட்டு)

**திருக்கோயிலினுள் பலவித கல்வெட்டுகளின் விளக்கம்**

ஆங்:1050 (225)-ல் ஜடாவர்ம சோழ பாண்டிய மன்னர் சுசீந்திரமுடைய பரம சுவாமிக்கு (சிவன்) வாடா விளக்கேற்ற 50-ஆடுகள் விட்டுக் கொடுத்துள்ளார்.

ஆங்:1033-ல் (208-கொ) மன்னர் இராஜேந்திரச்சோழன் என்ற கங்கை கொண்ட சோழன் நெய்விளக்கு வழிபாட்டிற்கு நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளார்.

(மகாவிஷ்ணு மூலஸ்தான பின்புற கல்வெட்டு)

ஆங் : 1111 (கொ : 285)-ல் மன்னர் குலோத்துங்க சோழன் வாரியூர் உப்பளத்தை சுசீந்திரமுடைய மகாதேவருக்கு தானமாக கொடுத்துள்ளார்.

**ஆற்காடு நவாப் சந்தா சாகிபு படையெடுப்பும் சுற்றுப்பிரகார மண்டபங்களும் :** தஞ்சாவூர், திருவாரூர், திருவானைக்கா, திருவனந்தபுரம் கோயில்களைப் போன்று ஆலயத்தில் நடுவே திறந்த வெளிமுற்றமும் அதைச்சுற்றி மதில் சுவர்களும், உள்ளன. இவ்வமைப்பில் கேரள மாநிலத்தில் அனேக திருக்கோயில்கள் உள்ளதை இன்றும் காணலாம். 1740-ல் ஆற்காட்டு நவாப் சந்தாசாகிப் படையெடுப்பால் அனேக திருக்கோயில் உடமைகள் கொள்ளையடிக்கப்பட்டது. கொள்ளையைத் தடுத்து நிறுத்தியவர்கள், எதிர்த்து போரிட்டவர்கள் அவனது படை வலிமையால் கொடூரமான முறையில் கொல்லப்பட்டனர். அப்படி வீர மரணம்



கைலாச நாதர் ஆலயம் மண்டப முன்முகப்புத் தோற்றம்.



கைலாச நாதர் கோயில் கல்வெட்டு



பாறையின் மீது எழுப்பப்பட்டுள்ள
கைலாச நாதர் ஆலயத்தின் பின்புறத்
தோற்றம். (ஐந்தாம் நூற்றாண்டு).

அடைந்தவர்கள் ஏராளம் அதில் வட்டப்பள்ளி ஸ்தானிகரும் ஒருவர். தலைமை தாங்கிச் சென்ற அன்றைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் நாராயணன் பரமேஸ்வரர் வீரமரணமடைந்தார். அன்னாரது நினைவாகவும், அவரோடு மடிந்த நமது வீரர்களின் நினைவாகவும், கன்னியாகுமரிக்கு போகும் வழியில் பழைய "பொத்தயடி" என்ற இடத்தில் (தற்போது முன்னாள் இந்து முன்னணி தலைவர் தாணுலிங்க நாடார் சமாதி அருகில்) இரண்டு கல்தூண்கள் நாட்டப்பட்ட கோயில் ஒன்று இன்றும் இருப்பதைக் காணலாம். **"வட்டப்பள்ளி சாமி"** என தற்போதும் இது வழங்கப்படுகிறது.

மேற்கண்ட சந்தாசாகிபின் படை சுசீந்திரம் திருக் கோயிலுக்குள்ளும் நுழைந்தது. விலையுயர்ந்த நகைகள் கிடைக்காத காரணத்தால் கற்சிலைகளின் கைகால்களை அடித்து நொறுக்கி சேதப்படுத்தியதோடு மட்டுமின்றி, திருமலை நாயக்க மன்னரால் உருவாக்கப்பட்ட மிகப்பெரிய சுவாமி தேர் முழுவதும் தீயிட்டு கொழுத்தி சாம்பலாக்கப்பட்டது அதன் பிறகு 1776-ல் ஆலய பாதுகாப்பினைக் கருத்தில் கொண்டு சேர மன்னன் **"கார்த்திகை திருநாள் தர்மராஜா"** விடுபட்ட பிரகார மண்டபங்களைக் கட்டி முழுமையாக்கினார், எனக் கல்வெட்டுகள் மூலம் தெரியவருகிறது.

## பஞ்ச பாண்டவர்கள் வழிபட்ட தெய்வங்கள்

சுமார் 180 வருடங்களுக்கு முன்பு ஆங்கிலவருடம் 1819-ல் சுசீந்திரம் புத்தில்லத்து போற்றி மடத்தினரால் கருங்கற்கள் கொண்டு உருவாக்கப்பட்டது. பஞ்ச பாண்டவர்கள் கோயில் என்றழைக்கப்படுகிறது. இங்குள்ள கோயில்கள், மூன்றில் சிவலிங்கங்கள் பிரதிஷ்டையும், ஒன்றில் குழந்தை வடிவில் ஸ்ரீகிருஷ்ணனும், மற்றொன்றில் ஸ்ரீசக்கரமும் அடுத்து துர்க்கை அம்மனும் என ஆறு கோயில்களில் இச்சிலைகள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. பஞ்சபாண்டவர் கோயிலானது இத்திருக்கோயிலின் வடக்குப் பிரகார மண்டபத்தில் முருகன் கோயிலின் பின்னால் உள்ளது.

# நாஞ்சில் குறவர்கள்



நாஞ்சில் வள்ளுவன்



நாஞ்சில் பொருநன்

## தவறுக்குத் தண்டனை



தவறு செய்த கணக்கரின் கையில்
ஆணி அடித்து தண்டிப்பது



முன்பு கோயிலில் வளர்க்கப்பட்ட
இந்திரன் என்ற யானை

## கல்லும் கவி பாடும்

ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள
இசைத்தூண்கள்







அனுஷம் திருநாள்
மார்த்தாண்ட வர்மா மகாராஜா.



கொச்சி சமஸ்தானம்
ஸ்ரீஇராம வர்மா மகாராஜா

முற்காலத்தில் தர்மா, பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்ற பஞ்ச பாண்டவர்களும், பாஞ்சாலியும் வனவாசத்தின் போது இப்புண்ணிய பூமிக்கு விஜயம் செய்து சில நாட்கள் தங்கி அவரவர் இஷ்ட தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்து பூஜித்ததாக ஸ்தல புராண வரலாறுகள் மூலம் அறிய முடிகிறது. அக்காலத்தில் திறந்த வெளியாக இருந்ததினால் பிற்காலத்தில் முதலில் குறிப்பிட்டுள்ளது போல் மண்டபங்கள் அமைக்கப்பட்டது. ஆம்! பாரதத் திருநாட்டின் மகாபாரத புண்ணிய புருஷர்களாக விளங்கிய பாண்டவ மன்னர்களின் பாதம்பட்ட புண்ணியபூமி இது. இங்கு வாழ்பவர்களும், இறைவனைத் தேடி வருபவர்களும் மிகவும் புண்ணியம் செய்தவர்களாவர்.

## சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

திறந்தவெளியாக இருந்த இவ்விடத்தில் மண்டபம் அமைத்து முருகனுடன் வள்ளி, தெய்வானையையும் பிரதிஷ்டை செய்து. நித்திய பூஜைக்கு நிலமும் வழங்கினார் வேணாட்டு மன்னர் "வீர உதய மார்த்தாண்ட வர்மா" ஆங்கில வருடம் 1238 கொல்லமாண்டு: 413-சித்திரை 1-ம் தியதி பணி முடிக்கப்பட்டதாக கல்வெட்டு மூலமாக அறிய முடிகிறது. இது சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் என்றழைக்கப்படுகிறது.

அடுத்து இதிலுள்ள முன் மண்டபப் பணியை கேரள புரத்து மாலைக்குட்டி, மகள் சீதையம்மை கொல்லமாண்டு 759 கார்த்திகை 20-ம் தியதி (ஆங்கில ஆண்டு 1578) சுமார் 420 வருடங்களுக்கு முன்னால் கட்டிக் கொடுத்துள்ளார். இவர்களது திருவுருவச்சிலைகள் முருகன்கோயில் மண்டபத்தின் உள்ளே இருபுறமும் உள்ளது.

இத்திருமண்டபம் பணி நடக்கின்ற தருணத்தில் செலவினக் கணக்கில் கள்ளத்தனம் புரிந்த கணக்கர்கள் இருவருக்குத் தகுந்த தண்டனை வழங்கியதின் அடையாளமாக மண்டபத்தின் உள்ளே கால் மடக்கி உட்கார்ந்து இருக்கும் இரண்டு சிலைகளின் உள்ளங்கைகளில் தொடையுடன் சேர்த்து

ஆணி அடித்துள்ளதைக் காணலாம். ஆம்! வருங்கால சந்ததி யரும் அறியும் வண்ணம் இது அமைக்கப்பட்டுள்ளது போலும்.

இம்மண்டபத்தின் முன் பாகத்தில் இருபுறமும் நாஞ்சில் குறவர் சகோதரர்கள் சிலைகளைக் காணலாம். ஒரே தூணில் வடிவமைக்கப்பட்ட இச்சிலைகள் முற்காலத்தில் அழகிய பாண்டிபுரம் ஊரைத் தலைநகராகக் கொண்டு "குறத்தியறை" ஊரில் வசித்த **நாஞ்சில் வள்ளுவன், நாஞ்சில் பொருநன்** ஆகியோர் ஆங்கில வருடம் 1116-க்கு முன்பு ஆட்சி புரிந்ததாகவும், **வீர கேரள வர்ம மன்னன்** அவர்களை விரட்டிவிட்டதாகவும் தெரியவருகிறது. அதன் நினைவாக இச்சிலை கள் நிறுவப்பட்டுள்ளன. குமரி மாவட்டத்தில் அழகியபாண்டி புரம் பக்கம் குறத்தியறை, மருங்கூர் பக்கம் தேவகுளம், குமார கோயில் (தக்கலை சமீபம்) போன்ற இடங்களில் அவர்கள் வாழ்ந்ததை வரலாறு இன்னும் நினைவுபடுத்துகின்றது.

## அலங்கார மண்டபமும் இசைத்தூண்களும்.

ஆலயத்தின் அனைத்துத் திருவிழா காலங்களிலும் வெள்ளி வாகனங்களில் உற்சவ மூர்த்திகளை எழுந்தருளச் செய்து அலங்கரித்து பின்னர் வீதியுலா எடுத்து செல்வது வழக்கம். இது காலபைரவர் திருக்கோயில் முன்பு அமைந்துள்ள மண்டபம் ஆகும். இதனை அலங்கார மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. முழுவதும் கருங்கற்களினால் உருவாக்கப் பட்ட இந்த மண்டபத்தைச் சேரநாட்டு மன்னரான உதய மார்த்தாண்ட குலசேகரப்பெருமாள் ஆங்கில ஆண்டு 1410-ல் கொல்லமாண்டு 555-ல் கட்டுவித்ததாக கல்வெட்டில் இருந்து தெரியவருகிறது. இம்மண்டபத்தின் சிறந்த வேலைப்பாடுகள் நம்மை இனறும் சிந்திக்க வைக்கிறது.

மண்டபத்தின் நான்குபுறமும் நிலைநிறுத்தப்பட்டுள்ள கல்தூண்கள் இரண்டில் ஒரே கல்லில் 33 தூண்களும் மற்ற இரண்டு தூண்களில் 24 தூண்களும் செதுக்கப்பட்டு, அவை ஒவ்வொன்றையும் கை கொண்டு தட்டும் போது ஓங்காரநாத இசை ஒலிக்கின்றது. சப்தஸ்வர இசையைச் சரளமாக

தருகின்றது. கல்லில் கலைவண்ணத்தையும், காதுக்கு கான இசையையும் கலைஞன் படைத்துள்ளான். ஆம்! கல்லும் கவி பாடுகின்றது. கல்லும் கவி பாடுவதை நீங்கள் மட்டும் கேட்டால் போதாது என, அகில இந்திய வானொலியும் இவ்விசையை ஒலி நாடாவில் பதிவுசெய்து அகிலம் கேட்க ஒலிபரப்பி வருகிறது. இந்தத் தூண்களை மிகவும் பலமாக தட்டி உடைத்துவிடக்கூடாது என்ற காரணத்தினால் ஆலய நிருவாகத்தினர் இதைச்சுற்றி இரும்புவலை அமைத்து பாதுகாப்போடு பேணிக்காத்து வருகின்றனர்

**இசைத் தூண்கள்:** இந்த மண்டபத்தில் நான்குபுறமும் உள்ள கம்பீரமான இசைத்தூண்களில் ஒரு கற்தூணினை நிர்மாணிக்க ஆகும் முழுச்செலவினையும் சுசீந்திரம் தெற்குத் தெரு ஐயமடத்தைச் சார்ந்த "**சௌமிய நாராயண பையா**" என்பவர் ஆங்கில ஆண்டு 1799 கொல்லமாண்டு 974 மாசி 6-ம் நாள் 720 பணம் கொடுத்து செய்வித்ததாகவும், இவரது பொறுப்பில் இருந்த கோட்டாறு புகையிலை பண்டகசாலையின் ஒருவருட வருமானத்தை அன்றைய மன்னரான ஸ்ரீமான் மார்த் தாண்ட வர்மா வழங்க உத்தரவிட்டதின் பெயரில் மேற்படியார் இப்பணத்தைச் செலவு செய்துள்ள விவரங்கள் குறிப்பேடுகள் வாயிலாகத் தெரியவருகிறது. பிரசித்தி பெற்ற இந்த அலங்கார மண்டபத்தில் வருடம்தோறும் மாசிமாதம் நடைபெற்றுவரும் "திருக்கல்யாண வைபவம்" மிகவும் பெருமைப்படக்கூடிய ஒன்றாகும்.

இந்த மண்டபத்தை இத்திருக்கோயிலுக்கு அர்ப்பணித்த மன்னர் உதய மார்த்தாண்ட குலசேகரப் பெருமாள் இதன் அருகில் திருக்கோயில் கொண்டிருக்கும் அறம் வளர்த்த நங்கை அம்மனுக்கு பூஜை செலவிற்காகச் சொத்துக்கள் பல விட்டுக் கொடுத்துள்ளதை மற்றொரு கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது. பிரசித்தி பெற்ற இம்மண்டபத்தின் மறுபக்கம் ஒரே கல்லில் மூன்று உருவங்கள் செதுக்கப்பட்ட இரண்டு வகை தூண்களில் கிழக்கே பார்த்து நிற்பவர் **கொச்சி சமஸ்தான மன்னரான ஸ்ரீ இராமவர்மா, மற்றொரு தூணில்**

**திருவிதாங்கூர் மன்னரான ஸ்ரீ மார்த்தாண்ட வர்மா அவரவரின் இஷ்ட தெய்வங்களையும் சிலைகளின்** தலைகளுக்கு மேல் வடித்துள்ளதையும் காணலாம்.

இம்மன்னர்களின் திருவுருவச்சிலையில் சிற்பிகள் தங்கள் திறமையைக் காட்டியுள்ள விதங்கள் நம் மேனியை புல்லரிக்க வைக்கின்றது. பாதங்களில் கால் நரம்புகள், வணங்கி நிற்கும் கை விரல் நகங்களில் சூரிய ஒளிபட்டு நகங்களின் கூர்மை தெரிகின்ற விதம் இயற்கையையும் மிஞ்சிவிடுகிறது. மன்னர்கள் அணிந்துள்ள ஆபரணங்கள், இடையிலே வாள் உறை, கைகளிலே வீரவாள் போன்றவை நிஜமன்னர்களை நம் முன்னே கொண்டு நிறுத்துகிறது. இவை போன்று, அற்புத வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ள இம்மண்டபம் திருக்கோயிலுக்கு மேலும் பெருமை சேர்க்கிறது.

இம்மண்டபத்தின் கலைத்திறனை நாம் காணும் போது, அர்த்தமுள்ள இந்து மதத்தில் புதைந்துள்ள அற்புதங்களை நமக்களித்த தீர்க்கதரிசி, அமரகவி **கவியரசு கண்ணதாசன்** அவர்களின் பாடலொன்று நம் நினைவுக்கு வருகிறது.

"கல்லிலே கலை வண்ணம் கண்டான்-இரு,
கண்பார்வை மறைந்தாலும் காணும்வகை தந்தான்"

ஆம்! கண் பார்வையிழந்த குருடரும் சிலையைத் தடவிப் பார்த்து அதன் சிறப்பை உணர்ந்து விடுவது போலவும், "இசை கேட்டால் புவி அசைந்தாடும்.-அது இறைவன் அருளாலே." என்ற கவிஞரின் கூற்றுப்படி கல்லையும் கவி பாடவைத்து இத்திருக்கோயிலுக்குப் பெருமை சேர்த்துள்ளனர் அற்புத சிற்பிகள். இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனே சிற்ப கலைஞர்களாக வந்து இவற்றை யெல்லாம் செய்வித்தானோ! என்று அதிசயப்பட வைக்கின்றது கற்களில் அமைந்துள்ள வேலைப்பாடுகள்.

அது மட்டுமா! தீராத பகைவர்களாகித் தினமும் போரிட்டு பல உயிர்களைப் பலி கொடுத்து போருக்கு காரணமாய் இருந்தவர்களை **"போர் நிறுத்த ஒப்பந்தம்"**

செய்வித்து ஒற்றுமையை, நிலைநிறுத்தி நண்பர்களாக்கிய சம்பவம் நிகழ்ந்ததும், இத்திருக்கோயிலுள்ள முக்கிய அலங்கார மண்டபத்தில் வைத்துதான் என்பதை கீழ்காணும் செய்தி தெளிவாக்கும்.

## போர் ஒப்பந்தமும், சுசீந்திர மூலவரும்

இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் போர் நடந்த காலகட்டத்தில் பாரதப்பிரதமர் **"லால்பகதூர் சாஸ்திரி"** அவர்களும், பாகிஸ்தான் பிரதமர் **"அயூப்கான்"** அவர்களும், ஒன்று சேர்ந்து அன்றைய சோவியத் யூனியனான ரஷ்யாவின் தலைநகர் தாஷ்கண்டில் வைத்து "போர் நிறுத்த ஒப்பந்தம்" செய்து போரை நிறுத்தி, சமாதானமாகி இருநாடுகளும் நட்பு நாடுகளாக அமைதி பெற்றதும் நாம் அறிந்ததே.

மேற்கண்ட ஒப்பந்தம் போல் சுமார் 236 ஆண்டு களுக்கு முன்பு சேரநாட்டு அரசர்களாக விளங்கிய கொச்சி மன்னர் **இராமவர்மாவும்**, திருவிதாங்கூர் மன்னர் **மார்த் தாண்ட வர்மாவும்** பகைமைகொண்டு அடிக்கடி போரிட்டு வந்தனர். இதனால் பல அழிவுகளும், உயிர் பலிகளும் நிகழ்ந்தன. பிறகு இவர்கள் இருவரும் ஒரு முடிவுக்கு வந்து "போர் நிறுத்த ஒப்பந்தம்" செய்ய முனைந்தனர்.

ஆங்கில வருடம் 1762-ல் அதாவது கொல்லம் : 937-ல் சுசீந்திரம் திருக்கோயிலுக்கு இருவரும் விஜயம் செய்து ஆண்டவனை நடுவராக வைத்துதான் இந்த அலங்கார மண்டபத்தில் வைத்து போர் நிறுத்த ஒப்பந்தம் ஒன்றை நிறைவேற்றினார்கள். இந்த புனிதமான நிகழ்ச்சியை நாடே வியந்து பாராட்டியது. இருநாட்டு மக்களும் நிம்மதி அடைந்தனர். பகைமை கொண்ட மன்னர்களின் மனத்தை மாற்றி நண்பர்களாக்கிய பெருமை **சுசீந்திரம் அருள் தரும் ஸ்தாணுமாலயப் பெருமாள் மூர்த்தியைச் சாரும்**. மேற் கண்ட சம்பவத்தை நினைவுபடுத்தவே அலங்கார மண்டபத்தில் அற்புத வேலைப்பாடுகளுடன் கூடிய இருமன்னர்களின் திருவுருவ சிலைகள்

இருப்பதைக் காணலாம். இந்த போர் ஒப்பந்தக் காட்சியைப் பத்மநாபபுரம் கோட்டையிலுள்ள அரண்மனை சுவரில் புகைப்படம் போல் சித்திரகாட்சியாக அமைந்துள்ளதை இன்றும் காணலாம்.

## மண்ணில் கிடைத்த மாணிக்கம்
### (ஆஞ்சநேயர்)

முற்காலங்களில் கொள்ளையருக்குப் பயந்து பொன்னையும் பொருளையும் பாதுகாக்கும் பொருட்டு பூமிக்குள் புதைத்து மறைத்து வைக்கும் வழக்கம் இருந்தது. தேவைக்கு அதிகமாக பொன்னையும் பொருளையும் வைத்திருப்பவர்கள் வருங்கால சந்ததியருக்காக பூமியில் பாதுகாத்து வைப்பதும் உண்டு. இதில் மறைத்த பொருளை திரும்ப எடுக்க மறந்து விடுபவர்களையும். புதைத்து வைத்தவர் சில சமயங்களில் இறந்து விடுவதையும் காணலாம். பல காலங்கள் சென்றபிறகு சிலருக்குப் புதையலாக அவை கிடைப்பதுண்டு. இவற்றையெல்லாம் கேட்டும், படித்தும் இருக்கிறோம். மேற்காணும் நிகழ்ச்சிகள் நமது சுசீந்திரம் திருக்கோயிலிலும் நடந்துள்ளது.

***ஆஞ்சநேயர் வெளிவந்த வரலாறு***

சுமார் 258 ஆண்டு களுக்கு முன்பு படையெடுத்து வந்த சந்தா சாகிப் சுசீந்திரம் திருக்கோயிலினுள் நுழைந்த விவரங்களை ஏற்கனவே கூறியிருந்தோம். படைகள் வருவதை ஏற்கனவே அறிந்த ஊர்மக்கள் மற்றும் ஆலயத்தில் பொறுப்பு வகித்தவர்கள் முன்னேற்பாடாக முக்கிய மூலஸ்தானத்தைச் சுவர் கட்டி அடைத்தும் ஆபரணங்கள் மற்றும் உடமைகளை உடனே அப்புறப்படுத்தியும் பலவழிகளில் பாதுகாத்த காரணத்தால் அச்செல்வங்கள் கொள்ளையர்களின் கண்ணிலிருந்து தப்பியது.

அப்படி பாதுகாக்கப்பட்டதில் 22 அடி உயரங்கொண்ட பக்த ஆஞ்சனேயரும் ஒருவர் ஆவார். ஒரே கல்லில் செதுக்கப்

பட்ட திருவுருவச் சிலையை மேற்படி காலகட்டத்தில் சிற்பிகள் பண்ணி முடித்து வைத்திருந்தனர். படையினரால் சிலைக்குச் சேதம் வந்திடா வண்ணம் திருக்கோயிலின் திருக்கிணறு அருகே சுமார் 23 அடி நீளத்தில் பூமியைதோண்டிச் சிலையின் உருவம் மண்ணுக்குள் இருக்கும் விதத்தில் குப்புறப் படுக்கவைத்து நீளமான சாதாரண கற்தூணின் மேல்பாகம் தெரிகின்ற அளவில் சிலையைப் பாதுகாத்தனர்.

காலங்கள் பல உருண்டோடின. பின்னால் பல மன்னர் களின் ஆட்சிகள், பலவிதமான மாற்றங்கள், அதன் பிறகும் திருக்கோயிலில் பல திருப்பணிகளும் மன்னர்கள் செய்து வந்துள்ளனர். மண்ணில் புதையுண்டு கிடக்கும் ஆஞ்சநேயருக்கு விடிவுகாலம் பிறக்கவில்லை. இப்படி 190 ஆண்டுகள் வரை மண்ணுக்குள் இருந்திருக்கலாம் என்று தெரியவருகிறது. அதற்குப் பல காரணங்கள் இருந்ததாகவும் அறியமுடிகிறது.

இத்திருக்கோயில் சிவபெருமானுக்கு முக்கியத்துவம் கொடுத்து சிவாலயம் என்று போற்றப்படுகிறது. ஆஞ்ச நேயருக்கு கோவில் எதற்கு? என்று ஒரு பிரிவினரும், இவருக்குக் கோயில் கட்டி பிரதிஷ்டை செய்தால் சிவபெருமானின் முக்கியத்துவம் போய்விடும் என்று வேறொரு பிரிவினரும் மேலும் இந்த சிலையை எங்கு நிலை நிறுத்துவது போன்ற இடப்பிரச்சனையும் இருந்து வந்ததினால் யாரும் பொறுப்பேற்று இதனைப் பிரதிஷ்டை செய்ய முன்வரவில்லை போலும்.

நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு மேலாக பொறுமையோடு மண்ணிலே புதையுண்டு கிடந்த ஆஞ்சநேயர் தனது லீலா விநோதங்களைச் சிறிது சிறிதாகக் காட்டத்துவங் கினார். நெடுநீள கல்தூண் போல இருந்ததின் மீது சின்னஞ் சிறுவர்கள் ஏறி விளையாடுவதும் இதனால் பல பேருக்குக் கீழே விழுந்து இரத்தக்காயங்கள் அடிக்கடி ஏற்படுவதும், கோயிலுக்கு தரிசனத்திற்கு வருபவர்கள் இக்கல்லின் மீது உட்கார்ந்து இளைப்பாறும் போது எதனையோ கண்டு பயந்து ஓடுவது போன்ற நிகழ்ச்சிகள் பல நடந்து வந்துள்ளதாகவும் வயது முதிர்ந்த பெரியவர்கள் கூற்றால் அறியமுடிகிறது.



அனுமன் விஸ்வரூபத்தோற்றம் சுமார்
68-ஆண்டுகளுக்கு முன்னால் நிலை
நிறுத்தியவுடன் எடுக்கப்பட்ட புகைப்படம்



அலங்கார வடிவான ஆஞ்சநேயர்



பறக்கை வேட்கை குளத்திற்கு மணமகளான
தேவி நீராடச் செல்லுதல்



தேவி மணக்கோலத்துடன் பவனி வரும் காட்சி

வருடங்கள் நூற்றி ஐம்பதையும் கடந்து நின்றதால் இந்தக் கல்லில் என்ன இருக்கிறது என்பது கூட தெரியவில்லை. பிரச்சனை விஸ்வரூபம் எடுத்தது. திருவிதாங்கூர் மன்னராக இருந்த ஸ்ரீசித்திரைத்திருநாள் மகாராஜா காதுக்கும் இச்செய்தி எட்டியது. சுசீந்திரம் திருக்கோயிலும் அவரது கட்டுப்பாட்டில் இருந்ததால் புகழ்பெற்ற மலையாள ஜோதிடர்களை வைத்து **"தேவபிரஸ்னம்"** நடத்தி அவர்கள் அறிவுரைப்படி பொது மக்கள் ஒத்துழைப்புடன் புதையுண்டு கிடந்த 22அடி உயரம் கொண்ட நீளமான கல்தூணை அதாவது ஆஞ்சநேயர் சிலையைப் புரட்டி பார்க்கும்போது ஆஞ்சநேயர் சீதா தேவிக்கு அசோகவனத்தில் காண்பித்த விஸ்வரூப தரிசன கோலமே அச்சிலை எனபதனைக் காண முடிந்தது.

**தேவபிரஸ்னம்** நடத்திய ஜோதிடர் அறிவுரைப்படி சிலையை நிலை நிறுத்த இடமும் தேர்வு செய்யப்பட்டு சிலைக்கு எந்தவித சேதமும் ஏற்படாமல் அன்றைய தேவஸ்தான ஆணையராக இருந்த மங்கொம்பு நீலகண்ட ஐயர், திருக்கோயிலுடைய ஸ்தானிகராக விளங்கிய ஸ்ரீபரமேஸ்வர சர்மா ஆகியோரின் பெரும் முயற்சியாலும், ஊர் பொதுமக்களின் மிகுந்த ஒத்துழைப்பாலும் 1930-ம் ஆண்டு (கொல்லம்-1105) சித்திரை 19-ம் தியதி ஸ்ரீராமர்-சீதாதேவி கோயிலுக்கு நேர் எதிரே (தற்போதைய இடம்) **"ஆஞ்சநேயர் சிலை"** நிலை நிறுத்தப்பட்டது. சிலை நிறுவி 68ஆண்டுகள் ஆகிறது.

ஆகம விதிகளின்படி அஷ்ட பந்தனம் (உறைப்பித்தல்) செய்து பிரஷ்திடை செய்யாத காரணத்தால் யார் வேண்டுமானாலும் அவரைத் தொட்டு வணங்கிக் கொள்ளலாம். சிரஞ்சீவி வரம் பெற்றவர் ஸ்ரீ ஆஞ்சநேயர். பிரதிஷ்டை பூஜை நடந்திருந்தால் அதன் சக்தி மேலும் கூடிவிடும். மூலவிக்ரகங்களுக்கு (பிரதிஷ்டை சிலைகளுக்கு) சக்தி குறைந்துவிடும் என்று சாஸ்திர விதிமுறை கற்றவர்கள் கூறுகின்றனர்.

மேற்படி காரணங்களால் 190 ஆண்டுகள் மண்மூடி கிடந்த அனுமன் சிலையை நிலை நிறுத்த யாரும் முன் வராததின் உண்மை ஓரளவு நமக்கு தெரிய வருகிறது. தலையைச் சிறிது சரித்து, குவித்த கரத்தோடு பகவான் ஸ்ரீ இராமனையும் - சீதாதேவியையும் வணங்கி நிற்கும் இந்தப் பக்தி சொரூபமான காட்சியைக் காண தினமும் ஆயிரக்கணக்கில் மக்கள் வந்து செல்வதோடு விதவிதமான வழிபாடுகளையும் நடத்துகின்றனர்.

22 அடி உயரங்கொண்டதும் ஒரே கல்லில் செதுக்கப் பட்டதுமான ஸ்ரீ ஆஞ்சநேயர் சிலை பாதத்தின் கீழே உள்ள நான்குஅடி பூமிக்குள் பதித்து வைக்கப்பட்டுள்ளது. நாம் பார்ப் பது 18 அடி உயரங்கொண்ட ஸ்ரீ ஆஞ்சநேயரை மட்டும் தான். சிலை பாதத்திலிருந்து உச்சிவரை எந்தவித பிடிப்பும் இல்லாமல் நிற்கிறது.

சுசீந்திரம் திருக்கோயிலில் மண்ணிலிருந்து கிடைத்த மாணிக்கமாக திகழ்கிறார் மாருதி, சாஸ்திர முறைப்படி பிரதிஷ்டை செய்யாமலேயே நாளுக்கு நாள் பெருகி வரும் இவரது சக்தி, வல்லமை, பிரதிஷ்டை செய்து பூஜை செய்திருந் தால் எப்படி இருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கும்போது அச்சமாக உள்ளது. தின வழிபாடுகளிலும், காணிக்கை வசூலிலும் இத்திருக்கோயிலில் முதலிடம் வகிப்பவர் இவரே. இக்கோவிலில் மன்னர் ஆட்சி காலத்தின் கடைசித் திருப்பணியும் இதுவே. கீழ்சாந்தி போற்றிமார்கள் இங்கு பூசாரிகளாகப் பணி செய்து வருகின்றனர்.

### எங்கு நோக்கினும் அனுமனின் தோற்றம்

சுமார் எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னால் புதுப்பிக்கப்பட்டு செய்து முடிக்கப்பட்ட கருவறை மற்றும் அதைச் சுற்றியுள்ள உட்பிரகார (திருச்சுற்று) மண்டபத் தூண்களின் சஞ்சீவி மலையைச் சிரஞ்சீவி மரம்பெற்ற அனுமன் தாங்கி நிற்கின்ற புடைப்புச் சிற்பங்களும், செண்பகராமன் மண்டபம், சித்திரசபை, நாடகசாலை, பஞ்ச பாண்டவர்கள் வழிபட்ட ஜயந்தீஸ்வர மண்டபம், பெரிய சுற்றுப் பிரகார மண்டபத் தூண்களிலும் ஆக திருக்கோயிலின்

அனைத்து இடங்களிலும் நூற்றுக்கணக்கான அனுமனின் சிற்பங்களைக் காணமுடிகிறது.

மகாபாரதப்போரின்போது கண்ணன் சாரதியாய் அமர்ந்து அர்ச்சுனனைப் போருக்கு அழைத்து வரும் தேரின் உச்சியில் ஏற்றப் பட்டுள்ள கொடியில் பக்த அனுமன் பறந்து செல்வது போன்ற காட்சியைக் காண்கிறோம். பீமனுக்கும் அனுமன் அருளாசி வழங்குவதை மகாபாரதக் கதையின் மூலம் அறிகிறோம். அடுத்து இராமாயணக் காவியத்தில் ஸ்ரீஇராமனின் உண்மை பக்தனாக விளங்கி, தொண்டாற்றி இராமபக்த அனுமனாக விளங்குகிறார்.

இங்குப் புண்ணிய பூமியாகப் போற்றப்படும் சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயிலில் தனது விஸ்வரூபதரிசனத்தைக் காட்டி அற்புத ஆலயத்தின் மகிமையை உலகோரும் வந்து காண துணை நிற்கிறார் சிவபெருமானின் அம்சம் பொருந்திய பக்த ஆஞ்சனேயர். காலத்தின் சூழ்நிலையால் அவரது கற்சிலை பூமியில் மறைக்கப்பட்ட போதும், காணும் இடந்தோறும் அவரது திருக்காட்சி இத்திருக்கோயில் முழுமைக்கும் நிறைந்திருப்பதை மறைக்கவோ, மறுக்கவோ முடியாது.

## கம்பன் பாடிய அனுமன் அஞ்சலி

அஞ்சிலே ஒன்று பெற்றான்,
அஞ்சிலே ஒன்றைத்தாவி
அஞ்சிலே ஒன்று ஆறாக,
ஆரியர்க்காக ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக் கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்
அவன் நம்மை அளித்துக் காப்பான்

இதனை நாமும் பாடி அவன் அருள் பெறுவோம். அஞ்சனா தேவியின் மைந்தனான வீர அனுமனை வர்ணிக்கும் தனி அழகை, அற்புதப் பாடலை கம்பர் பெருமான் போற்றிப் பாடியதை பார்த்தோம். இனி விளக்கம் காண்போம்.

வாயு பகவானை தந்தையாய் பெற்ற மைந்தனே ஆகாய மார்க்கமாய் பறந்துசென்று, ஸ்ரீஇராமனுக்காக நீர் நிறைந்த கடலையும் கடந்து அயலூர் சென்று பூமி தேவிபெற்றெடுத்த சீதையைக் கண்டு கண்கலங்கி தீயிட்ட வாலைக் கொண்டு இலங்கையில் விளையாடி வெற்றி வீரனாய் திரும்பிவந்த அனுமன், நம்மையும் காத்தருள்வான், என்பதைப் பாடல் மூலமாக விவரிக்கின்றார். கவிச்சக்கரவர்த்திக் கம்பர்.

## பக்த அனுமனின் வீர சாதனை

இராமாயண காவியத்தில் ஸ்ரீஇராம பக்தனாக **"வீர ஆஞ்ச நேயர்"** இலங்கையில் சீதா பிராட்டியைக் கண்டுவர தூதனாக சுக்ரீவனால் அனுப்பி வைக்கப்படுகிறார். கடல்மீது பறந்து செல்லும் வாயு மைந்தனாகிய ஆஞ்சநேயரைச் "சுரசை" என்ற அரக்கி செல்லவிடாமல் வழி மறிக்கிறாள். ஆஞ்சநேயரை விட வலிமையும், உருவத்தில் பெரியவளான அரக்கி அவரை தின்பதற்காக தனது வாயை அகல திறக்கிறாள். "சிரஞ்சீவி" வரம் பெற்ற வீர ஆஞ்சநேயர் அரக்கியின் வாயினுள் புகுந்து அவள் காது வழியாக வெளி வந்ததை இராமாயணம் விளக்குகின்றது. இக்காட்சியைச் சிற்பி சுசீந்திரம் திருக்கோயில் அறம்வளர்த்தம்மன் கோயிலின் முன்பக்கத் தூணின் மேற்பாகத்தில் புடைச்சிற்பமாக செதுக்கியுள்ளதைக் காணமுடிகிறது. மேலும் இலங்கை சென்ற வீரஆஞ்சநேயர் தனது உருவத்தைச் சிறிதாக மாற்றி பல லீலைகளைப் புரிந்து, முடிவில் அசோகவனத்தில் சீதா தேவியைக் கண்டு கூனிக் குறுகி பயபக்தியோடு முன்னால் சென்று நிற்கும் காட்சியையும் புடைப்புச் சிற்பமாக சிற்பி வடித்துள்ளதை 22அடி உயரமான விஸ்வரூப வடிவில் அமைந்துள்ள ஆஞ்சநேயர் சிலையின் முன்பக்கமுள்ள வலது புறத்தூணில் காணமுடிகிறது.

இவை மட்டுமின்றி சிற்பங்கள் நிறைந்து காணப்படும் தாணுமாலயர் சன்னதி முன்புள்ள செண்பகராமன் மண்டபத் தூண்களில் ஆஞ்சநேயர் இலங்கையில் நடத்திய அற்புத லீலைகளை புடைச்சிற்ப வடிவில் காணலாம். அதில் ஒரு தூணில் இலங்கை அதிபதியான இராவணேஸ்வரன் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க,

அவர் எதிரே வீர ஆஞ்சநேயர் தனது வாலால் சிம்மாசனம் அமைத்து கம்பீரமாக அமர்ந்திருக்கும் காட்சி நம்மை மெய்ம் மறக்கச்செய்கிறது.

சிவன் கோயிலான, இங்கு சிவனுக்குத்தான் முக்கியத்துவம் என்ற அடிப்படையில் வாழ்ந்த முன்னோர்கள் சிலரின் சமய பிரிவினால் (சைவம்-வைணவம்) புகழ் வாய்ந்த திருவுருவம் ஆபத்திலிருந்து (சந்தா சாகிபு படையெடுப்பு) காக்க வேண்டியதாயிற்று. மண்ணில் மறைத்து வைக்கப்பட்ட மாணிக்கத்தை எடுக்க மனமின்றி பல நூற்றாண்டுகள் மண்மூடி கிடக்க வழிசெய்து விட்டனர் சாஸ்திரம் கற்ற சிலர். இந்த இருபதாம் நூற்றாண்டில் சுமார் 68 ஆண்டு காலமாக இத்திருக்கோயிலில் மண்ணிலிருந்து கிடைத்த மாணிக்கம் தனது அருள் ஒளியால் தினமும் ஆயிரக்கணக்கான மக்களைக் கவர்ந்திழுக்கும் காந்தமாக பக்தர்களை வரவழைத்திடும் காட்சியை இங்கே காண முடிகிறது.

அழியாக்காவியமான இராமயணத்தில் ஸ்ரீராமன் மகாவிஷ்ணுவின் அவதாரமாகவும், வீர ஆஞ்சநேயரை சிவபெருமானின் அவதாரமாகவும் புராணங்கள் தெரிவிக்கின்றது. இத்திருக்கோயிலுக்குத் தினமும் வருகை தருகின்ற பக்த பொது மக்களில் சிலர் சாஸ்திர, சம்பிரதாயங்களைக் கற்றுணர்ந்தும், சைவ - வைணவ ஒற்றுமையை பிரித்து கூறுவதைக் கேட்கமுடிகிறது. ஆகமத்தோடு பூஜைகள் நடைபெற்று வரும் இந்த அற்புத ஆலயத்தில், பிரதிஷ்டையில்லாத பக்த அனுமனின் வளர்ச்சியைக் கண்டு பெருமைப்படாத மனிதர்கள் 'அவரும் சிவனின் அவதாரமே', என எண்ணாமல் இருப்பதையும் காணமுடிகிறது.

## ஆண்டவனிடம் ஐக்கியமான, அறம் வளர்த்த நாயகி

### *நாட்டின் பெருமை*

ஆண்டவன் மீது அளவற்ற பக்தி கொண்டு அவன் அருள் பெற்று முக்தி பெற்ற அடியார்கள் ஆயிரமுண்டு. ஆணுக்குப் பெண் சளைத்தவர்களல்ல என்ற வாக்கிற்கேற்ப பெண் அடியார்களும் பெருமையோடு வாழ்ந்து பெரும் புகழை பாரதத் திருநாட்டிற்கு பெற்றுத் தந்துள்ளனர். தெய்வத்

தன்மையிலும், தெய்வீகத்தொண்டிலும், சிறந்து விளங்கும் தென்தமிழ் நாட்டில் பத்தினிப் பெண்டிர், பக்த சிரோன்மணிகள், பார் போற்றும் பாடல் தந்த பாவலர்கள், நாட்டை ஆள நல்ல மன்னர்கள் போன்றவர்களை வாழ வைத்து நிலையான புகழ் கண்ட நற்றமிழ் நாடு.

இத்தென்தமிழ் நாட்டில் காரைக்கால் அம்மையார், ஆண்டாள், ஔவை மூதாட்டி போன்ற பலர் ஆண்டவன் அருளை பெற்றவர்களில் மிகவும் குறிப்பிடத்தக்கவர்கள். இப்படிப்பட்ட புண்ணியவதிகள் பிறந்த இத்தமிழ் மண்ணில், சுமார் 555 ஆண்டுகளுக்கு முன்னால் தென் கோடி முனையான குமரி மாவட்டத்தில் சுசீந்திரம் புண்ணிய பூமிக்கருகே "தேரூர்" எனும் சிறப்பிடத்தில் வேளாண்மை தொழில் செய்யும் ஆலடி வீட்டில் மாராயக்குட்டி பிள்ளை குடும்பத்தில் வெள்ளாளர் மரபில், பள்ளியறை நாச்சியாரின் மகளாக அவதரித்தாள் "அறம் வளர்த்தாள்" என்ற பெண்மணி. அருகே இருக்கும் சுசீந்திரம் ஆலயத்திற்கு அடிக்கடிச் சென்று தொழுது வரும் பெற்றோர்களுடன் அறம் வளர்த்தாளும் சென்று வருவது வழக்கமாயிருந்தது.. ஆண்டவன் மீது சிறு வயது முதலே கொண்ட பக்தி அவள் மனத்தில் அரச மரம் போல் வேரூன்றியது.

### *பித்தாகிய பெண்*

மங்கை பருவத்திலும் மகள் செயலில் மாற்றங்கள் பல கண்டனர் பெற்றோர்கள். எந்த நேரமும் இறைவனைத் தியானித்த வண்ணமாக இருப்பதைக் கண்டது மட்டுமல்லாமல் கோயிலுக்கு அடிக்கடி செல்வதால் தான் இவளுக்கு இந்நிலை ஏற்பட்டுவிட்டது என்று எண்ணி இனி மகளை அழைத்துச் செல்லக்கூடாது என்று அவள் வருவதற்கு தடைவிதித்தனர்.

பெற்றவர்களுக்குக் கட்டுப்பட்ட பெண்ணாய் திகழ்ந்த அறம் வளர்த்தாள் பெருமையோடு அவர்கள் கட்டளையை ஏற்றுக்கொண்டு, அன்று முதல் ஆலயம் செல்வதை நிறுத்திக் கொண்டாள். பெற்றவர்கள் மட்டும் ஆலயம் சென்று மகளின் நிலையை மாற்றித்தர இறைவனை வேண்டினர். எங்கும்

நிறைந்திருக்கும் பரம்பொருளை வானளாவி உயர்ந்து நிற்கும் கோபுரத்தில் கண்டாள் அறம்வளர்த்தாள். சுற்றிலும் வயல் சூழ்ந்த பகுதியில் உயரமாய் தெரியும் சுசீந்திரம் கோபுரத்தைத் தேரூரில் தன் இல்லத்திலிருந்து தரிசித்து வந்தாள்.

### *பித்தனின் விளையாடல்*

நாட்கள் நகர்ந்தன, மாதங்கள் பல கடந்தன, மகளின் நிலையில் எந்தவித மாற்றமுமில்லை, ஆரம்பத்தில் இருந்தது போன்று எப்போதும் இறைவனைத் தியானித்த வண்ணமாக இருந்து வந்தாள். நாளடைவில் உணவை வெறுத்தாள், உறக்கத்திலும் பித்தனின் பெயரைப் பிதற்றலானாள், பெற்றவர்கள் மகளின் நிலை கண்டு பரிதவித்தனர். மகளுக்குப் பித்து (பைத்தியம்) பிடித்துவிட்டதா என எண்ணி வைத்தியங்கள் செய்ததிலும் பலன் ஏற்படவில்லை. இனியும் இந்நிலை நீடித்தால் மகளின் உயிருக்கு ஆபத்து மகளைக் காப்பாற்ற அந்த மகேசனால் மட்டுமே முடியும். என்ற நம்பிக்கையோடு மாராயக்குட்டிபிள்ளை மகளையும் மனைவியையும் அழைத்துக்கொண்டு சுசீந்திரம் ஆலயம் வந்து ஆண்டவனை வேண்டி, வலம் வந்தார்.

சுசீந்திரம் திருக்கோயில் தென்கைலாசம் என விளங்கும் கைலாசநாதர் திருக்கோயிலை மூன்றுமுறை வலம் வந்து இறைவனைத் தரிசிக்கும் வேளையில் அருகில் நின்ற மகளைக் காணவில்லை. பெற்றவர்கள் ஒரு நிமிடம் கண்மூடி இறைவனைத் தியானித்த வேளையில் இது நடந்ததால், திகைத்தனர். சுற்றுமுற்றும் பார்த்தனர். திருக்கோயில் முழுவதும் தேடினார்கள் மகள் கிடைக்கவில்லை. மகளே! அறம் வளர்த்தா!! எங்கு சென்றாய்? என மகளைக் காணாது ஓலமிட்டனர். சதா, உன்னையே நினைத்து பித்தம் கலங்கி பிதற்றியப் பேதைக்கு, பித்தம் தெளிய வைக்க உன்னிடம் வந்த எங்களுக்கு கிடைத்த பலன் இதுதானா? என்று இறைவனிடம் அழுது வேண்டினர் பெற்றோர்கள்.

## அசரீரி குரலும், ஆண்டவன் மகிமையும்

பெற்ற பிள்ளையை, ஒரே மகளை, பறிகொடுத்து பெற்றவர்கள் இறைவனை வேண்டி நிற்கும் வேளையில், திருக்கோயிலினுள் இருந்து அசரீரி ஒலித்தது.

**"அறம் வளர்த்தாளை யாம் ஆட்கொண்டோம்"**

ரத்தினச் சுருக்கமான மூன்று வார்த்தைகள் மட்டுமே ஒலித்தன. பிள்ளையைப் பிரிந்த பெற்றவர்கள் பரவசமடைந்தனர். குழந்தையில்லாக் குறையினைப் போக்கி உமாதேவியை குழந்தையாய் தந்து ஆட்கொண்ட ஆண்டவனின் அற்புத லீலையை எண்ணி மகிழ்ந்தனர். பித்தனாகிய "பிறைசூடியப் பெருமானைப் போற்றி வணங்கினர்."

இந்நிகழ்ச்சி ஆங்கிலவருடம் 1443 மார்ச் 1ஆம் நாள் (த.ஆ-619) மாசி 17-ம் நாள் இங்கு நடந்தது. ஆங்:1758 (த.ஆ:933) மாசி 5-ம் நாள் மாசி திருக்கல்யாண விழாவிற்கு அறம் வளர்த்தாளின் பெற்றோர்கள் பூஜைக்கு நிலங்கள் விட்டுக்கொடுத்துள்ளனர். சுமார் 240 வருடங்களாக "திருக் கல்யாண 10-நாள் விழா" சிறப்பாக இன்றும் நடந்து வருகிறது. இந்நாளில் அறம் வளர்த்தாளின் குடும்பத்திலுள்ள உறவினர்கள் தேரூரிலிருந்தும், இரவிபுதூரிலிருந்தும் சீர்வரிசை பொருட்கள் கொண்டு வந்து கொடுத்து விழாவில் பங்கேற்பதையும் காணமுடிகிறது. **பழங்கால ஓலைச்சுவடிகளிலும், செப்பு பட்டயத்திலும்** விவரத்தை அறிய முடிகிறது. ஏறத்தாழ 550 ஆண்டுகளுக்கு முன்னால் நடைபெற்ற உண்மை நிகழ்ச்சி. இதனை பேரறிஞர் அமரர் டாக்டர். கே.கே. பிள்ளை மற்றும் புலவர் சதாசிவம் பிள்ளை போன்றவர்கள் தாம் எழுதியுள்ள நூல்களில் தெளிவாக விளக்கியுள்ளனர்.

# அருள் தரும் ஸ்தாணுமாலய சுவாமி

தாணுநாதனைத் தென்சுசீந்தைப் பதிதனிற் போய்க்
காணுவார் எவர்களே யான்தொழக் கடவார்
பேணுநாயக மாகிய தாணுவின் பெயரில்
பூணும் அன்பிலார் எனிலவரே பொலப் புலைவர்

[சுசீந்தைப் பதிற்றுப் பத்து]

## பெயர் விளக்கம்

இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன் "ஸ்தாணுமாலயன்" என திருப்பெயர் கொண்டுள்ளார். "ஸ்தாணு" என்ற பெயரில் ஸ்திரத்தன்மை காணப்படுவதால் (ஸ்திரம் : நிலையான) மும்மூர்த்திகளையும் ஒரே லிங்கத்தில் நிலைநிறுத்தி, நிலையான தெய்வமாக (ஸ்தாணு : சிவன், மால் : விஷ்ணு, அயன் : பிரம்மா) ஸ்தாணு மாலயன் என்ற திருப் பெயரில் இங்கு அமைத்து தேவேந்திரன் பூஜை செய்தார் என்ற வரலாறை ஏற்கனவே கண்டோம்..

## சிவலிங்க வழிபாட்டில் தெய்வங்கள்

ஆதிபரம் பொருளாய் விளங்கிடும் சிவபெருமானை அடியார்கள் அன்றாடம் வணங்கி அருள் பெற்றதைப் படித்தும், ஆன்மீக மக்கள் அனுதினமும் வழிபட்டு வருவதையும் காண்கிறோம். இவற்றிற்கெல்லாம் மேலாக தெய்வங்களும் அவர் அருள் வேண்டி சிவபெருமானைப் பூஜித்து வழிபட்டதாக பல்வேறு புராணங்கள் மூலம் அறியலாம்.

## சிவபெருமானைப் பூஜித்து வழிபட்ட தெய்வங்களும் பூஜித்த புண்ணிய ஸ்தலங்களும் பின்வருமாறு

கயிலையில் பார்வதி, காஞ்சீபுரத்தில் அன்னைக் காமாட்சி, திருவண்ணாமலையில் அயனும், மாலும், திருச்செங்காட்டன் குடியில் கஜமுகாசுரனை வென்ற கணபதி, திருச்செந்தூரில் சூரபதுமனைக் கொன்ற முருகப்பெருமான், இராமேஸ்வரத்தில் ஸ்ரீஇராமன், அகஸ்தியர், இராவணன் போன்றோர்கள் வழிபட்டு வந்ததை ஒவ்வொரு புண்ணிய

ஸ்தலங்களிலும் உள்ள வரலாறு மூலம் அறிகிறோம். பேசமுடியாத ஜீவன் கூட செய்கையால் வழிபட்ட அற்புதங்களை அறிந்துள்ளோம். ஆதலால் "தெய்வத்தின் தெய்வமாக" விளங்குகிறார் சிவபெருமான்.

## சிவனைப் பூஜிக்கும் சுசிந்திரன்

இங்கே ஞானாரண்ய புண்ணிய பூமியில் முப்பத்து முக்கோடி தேவர்கெல்லாம் அதிபதியாய் விளங்கிய தேவேந்திரன், மும்மூர்த்திகளையும் ஒரே லிங்கத்தில் நிலை நிறுத்தி வழிபட்டு விமோசனம் பெற்றதால் நன்றிக்கடனாக நாள்தோறும் **"அர்த்த சாம பூஜை"** நடத்தி வழிபட்டு வரும் தெய்வீக சன்னதியாய் விளங்குகிறது. சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னால் மனித வர்க்கத்தின் கண்களுக்குத் தென்பட்ட தெய்வங்களைத் தினமும் பூஜிக்க, சிறு கோயில் கட்டி அதை மக்களால் அமைக்கப்பட்ட **பூர்ண ஜோதி சபை** நிருவகித்து வந்தது.

## மூலஸ்தான திருப்பணியும் கும்பாபிஷேகமும்

முற்காலத்தில் சுமார் 760ஆண்டுகளுக்கு முன்பு மண்ணாலும் மரத்தாலும் பணி செய்விக்கப்பட்டு மூலவரை (ஸ்தாணு மாலயப் பெருமான்) பல நூற்றாண்டுகள் பாதுகாத்த திருக்கூடாரமாகிய ஸ்ரீகோயில் நாளடைவில் மரப்பலகைகளில் செதிலரித்து சிதலமடைய தொடங்கியது. மூலஸ்தானத்தின் மேற்கூரையும் அடிக்கடி பழுதுபட்டு வந்தது.

## மூலஸ்தான திருப்பணி பற்றிய கல்வெட்டு முழுவிவரம்

### (தமிழ் கிரந்த எழுத்து வாசகம்)

சேரமன்னர் ஆட்சிகாலத்தில் (12-ம் நூற்றாண்டு) ஆங்கில ஆண்டு : 1237-ல் (கொல்லம் ஆண்டு 412)-ல் கொல்லத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த வேணாட்டு மன்னர் "வீர இராம உதய மார்த்தாண்ட வர்மா" அவர்களின் ஆணைப்படி சோமாசி மங்கலத்து. சங்கரன் ராமன் கண் காணிப்பில். நாஞ்சில் நாட்டு நாட்டுக்கணக்கு கோவிந்த

ராமன் கணக்கு எழுதி நெல்லும் பணமும் கொடுத்து சிவன் கோயில் கருவறை உள் சுற்றுப் பிரகார மண்டபத்தையும். கருவறையைச் சுற்றி தளக்கல் பதித்து நந்தி மண்டபம் மற்றும் அதிலும் தளக்கல் பதித்து ஸ்ரீகோயில் முழுவதும் கற்களால் திருப்பணி செய்து, ஒரு வருடம் பத்து மாதம் பதினெட்டு நாளும் கொண்டு பணி முடிந்தது.

கொல்லமாண்டு 413-ம் ஆண்டு சித்திரை மாதம் ஞாயிறு 5-ம் நாள் உத்திர நட்சத்திரத்தில் நாஞ்சில் நாட்டு சுசீந்திரமான சுந்தரச் சோழ சதுர்வேதி மங்கலத்து சுசீந்திர முடைய மகாதேவர் ஸ்ரீகோயிலுக்கு மன்னன் வந்து தரண நல்லூர் நம்பியைக் கொண்டு கலசமாடி, திருக்கோயிலுடை யாரைக் கொண்டு திருப்பணி முடித்து திரு அபிஷேகம் செய்வித்தார். இது கோவில் சிற்ப ஆசாரி பதினெட்டு நாட்டான் குல மாணிக்கமான பத்பனுபன் ஆசாரி எழுத்து.

இவ்வா்று தற்போதைய முக்கிய மூலஸ்தானம் ஆங்கில ஆண்டு 1238-ல் அதாவது 760 ஆண்டுகளுக்கு முன் புதுப்பிக்கப்பட்டு, கும்பாபிஷேகம் நடைபெற்ற விவரத்தை நாள், நட்சத்திரம், மாதம், போன்ற விவரங்களையும், பணி நடை பெற்ற மொத்த நாட்களையும் தமிழ் கிரந்த எழுத்துக்களில் கல் வெட்டில் அழகாக வடித்துள்ளார் கோவில் சிற்ப ஆசாரி.

### கல்வெட்டு அமைந்துள்ள இடம்

சுசீந்திரம் திருக்கோயில் தெற்கு சுற்றுப் பிரகார முடிவில் சேரவாதல் சாஸ்தா கோயிலின் இடப்பக்க எதிரில் அருகே மரவாகனங்கள் இருக்கின்ற அறையின் உட்பாகம் அதாவது கைலாச நாதர் கோயில் சுவரின் மேற்கு பாகத்தில் இக்கல்வெட்டு உள்ளது. இத்தெளிவான கல்வெட்டின் மூலமாக அன்றைய கால கட்டத்தில் தரண நல்லூர் நம்பிகள் எனப்படும் நம்பூதிரிகளும், திருக்கோயிலுடைய ஸ்தானிகர் குடும்பமும் கோயில் பூஜை நிர்வாகப் பொறுப்பு வகித்து வந்ததை அறிய முடிகிறது.

## மன்னர் பெருமை

ஆண்டுகள் எழுநூற்று அறுபதைக் கடந்தாலும் இன்னும் பல்லாயிரமாண்டு நிலைத்து நிற்கும் மிகப் பழமையான ஆலயத்தில், புதுமையான புது மண்டபம் போல் மூலஸ்தான திருக்கோயிலை இப்புண்ணிய பூமியில் படைத் திட்ட புவியாண்ட மன்னரின் திருப்பெயர் என்றும் நிலைத்து நிற்குமளவில் "**உதய மார்த்தாண்ட மண்டபம்**" விளங்கி வருவதை காண்கிறோம்.

## குமரியில் சங்கமிக்கும் ஸ்தாணு தீர்த்தம்

சுசீந்திரம் திருக்கோயிலின் முக்கிய கருவறையில் அன்றாடம் அபிஷேகம் செய்யப்படும் பால், தயிர், நெய் போன்ற பொருட்கள் தீர்த்தமாக வெளியே வருவதற்கு மற்ற கோயிலைப் போன்று திருமடை(கோமுகி) இங்கு கிடையாது. இதனை கீழ்வரும் பாடல் மூலம் அறியலாம்.

"பாநெய் முதலாம் அபிடேகம்,
பரிவா தாணு பரம் பொருட்கு,
சோனை மழைபோல் சொரிந்தாலும்,
துளி ஒன்றேனும் வெளிநில்லாது
ஊன மில்லா முடி கங்கையுடன்
கீழ் ஊற்று குமரி யினி-லான
தாணு தீர்த்தம் அருள் அழகார்
நகரும் உள நாடு!!"

என சங்கர நாவலர் இயற்றி மு.ச. அருணாச்சல கவிராயர் விளக்கிய கன்னியாகுமரி ஸ்தல புராணத்தில் 32-வது பாட்டில் சுசீந்திரம் ஸ்தாணுமாலயப் பெருமாளுக்கு அன்றாடம் செய்விக்கும் அபிஷேக நீர் பூமிக்குள் இறங்கி குமரிக்கடலில் சென்று சேர்வதாக தெரிவிக்கப்பட்டுள்ளது. இதனை நினைவுப் படுத்த கன்னியாகுமரி பகவதியம்மன் ஆலயத்தின் வலதுபுறம், கணபதிகோயிலின் பின்னால் கல்தூண் ஒன்று நிறுத்தப்பட்டுள் ளதையும், அதில் "**தாணு தீர்த்தம்**" எனத் தமிழில் பொறிக்கப்பட்டுள்ளதையும் இன்றும் காணலாம்.

## ஸ்தாணு மூர்த்தியின் கவசத்தோற்றம்

இக்கருவறையில் லிங்க வடிவமுள்ள பெருமானின் மீது சார்த்தப்படும் தங்கக் கவசத்தில் சுவாமியின் உருவமும் ஒன்றின்மேல் ஒன்றாக பதினான்கு சந்திரப் பிறைகளும் அதன்மீது ஆதி சேஷனாகிய பாம்பும் காட்சியளிக்கின்றது. பதினான்கு நாட்களில் வருகின்ற சந்திரனின் பிறைகள் உச்சியில் சிறியதிலிருந்து தொடங்கி கீழ்பாகம் பெரிதாகி முடிவில் பௌர்ணமி போன்று இறைவனின் முகம் தெரிவதாக சந்திரனின் வளர்ச்சியை நமக்கு காட்டுகின்றது. பதினான்கு நாட்கள் கழித்து அமாவாசையான இருளைக் காண்கிறோம்.

இறைவன் மீது கொண்ட பக்தியால் தினம்தோறும் அவரை வழிபட்டு வருவோமானால் முடிவில் மெய்ஞானமாகிய பூரண ஒளியில் இறைவனைக் காணமுடியும். அவரை விட்டு விலக, விலக பக்தியென்ற பேரன்பு குறையும் தருணத்தில் மாயை என்ற இருளில் மூழ்குகின்றோம் என்ற உயர்ந்த தத்துவத்தையும் நமக்கு உணர்த்து கின்றது பிறைகள் நிறைந்த கவசக்காட்சி. இங்கு எழுந்தருளி அருள் பாலிக்கும் இறைவனின் முகத்தோற்றம் சிவ சொரூபமாகவே உள்ளது அன்றி தாடியோடு கூடியதல்ல. மிகவும் பழமையான கவசத்தின் கீழ்பாகம் சிதைந்துள்ளதால் சிவன் தாடியுடன் இருப்பதாக படமும் வரைந்துள்ளனர். சிலர் கூறியும் வருகின்றனர்.

கருவறைத் திருநடையலிருந்து இறைவனை நேராக நாம் காணும்போது வலதுபுறம் சற்று தள்ளி இருப்பதைக் காணமுடிகிறது. ரூபா ரூபமாய் விளங்கும் சிவலிங்கத்தின் அருகே இடதுபுறம் சிறிது இடைவெளியிருக்குமிடத்தில் அரூபமான சக்திக்கு இடமளித்து. சக்தியில்லையேல் சிவமில்லை என்ற தத்துவப்படி லிங்கவடிவில் மும் மூர்த்திகளையும் செயல்படவைத்து பக்தர்களுக்கு அருளாசி வழங்கி வருகிறார். நாத விந்து கலாதரனான ஸ்தாணுமாலயப் பெருமான்.

இப்புண்ணிய பூமிக்கு விஜயம் செய்து சுசீந்திரப்பெருமானின் அற்புதக் காட்சியைக் கண்டு வழிபட்ட ஆதி சங்கரர் கீழ்வரும் பாடலில் மூர்த்திகளின் பெருமையை இவ்வாறு தெரிவிக்கின்றார்:

"நமோஸ்து வாகீச ஹரீஸ்வராய
நாகேந்திர சாபாய நதீதராய
நாம்னா சுசீந்திரேச இதிஸ்துதாய,
ஞானாட வீசாய நமசிவாய."

இன்னும் தாணு நாதரின் பெருமையைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தன் தேவார திருப்பாடல்களில் இவ்வாறு விளக்கியுள்ளார்.

மாணி பால் கறந்தாட்டி வழிபட
நீணுல கெல்லாம் ஆளக் கொடுத்தவன்
ஆணியைச் செம்பொன் அம்பலத்துள் நின்ற
தாணுவைத் தமியேன் மறந்துய்வனோ.

காண வுள்குவீர்
வேணு நற்புரத்
தாணு வின் கழல்
பேணி உய்மினே.

## திருவேங்கிட விண்ணவரம் பெருமாள்

### பெருமாளின் வடிவமைப்பு

இத்திருக்கோயில் ஸ்தாணு மாலய சுவாமி மூலஸ்தானத்தின் இடதுபுறம் அமைந்துள்ளது. இவர் தெக்கிடம் பெருமாள், தென் திருவேங்கிடத் தாழ்வார், திருவேங்கிட விண்ணவரம் பெருமாள் போன்ற திருப்பெயர்களோடு அழைக்கப்படுகிறார். ஆயிரக்கணக்கான சாளக் கிராமங்களை தேங்காய் நாரில் பொதிந்து அதன்மேல் கடு சர்க்கரை யோகத்தால் (கடுகு, சர்க்கரை அல்ல) ஏழரை அடி உயரத்தில் உருவமைக்கப்பட்டுள்ளது. கடுசர்க்கரை மருந்தினால் செய்யப்பட்ட திருவனந்தபுரம் அனந்தசயன மூர்த்தி, திருவட்டார் ஆதிகேசவ பெருமாள், சுசீந்திரம் முன்னூற்று நங்கை போன்ற தெய்வங்களும் இந்த மருந்தினால் உருவாக்கப்பட்டு பணி செய்விக்கப்பட்டுள்ளதைக் காணலாம். பெருமாளுக்கு அபிஷேகம் கிடையாது தினமும் அலங்காரப் பிரியராக காட்சி தருகிறார்.

## "கடு சர்க்கரை" சிறு விளக்கம்

பெருமாளின் சன்னதியாக விளங்கும் இத்திருக் கோவிலில் இறைவன் நிற்கின்ற கோலத்தில் காட்சி தருகிறார். பொதுவாக தெய்வத் திருச்சிலைகள் கல்லிலும், ஐம்பொன்னிலான பஞ்சலோக விக்ரகங்களிலும் வடிவமைப்பது அக்காலத்தில் வழக்கமாக இருந்து வந்தது. ஆனால் இங்குள்ள மேற்கூறிய திருநாமங்களில் அழைக்கபெறும் இறைவன் மகாவிஷ்ணுவின் திருஉருவத்தை "கடு சர்க்கரை" என்ற மருந்தினால் அமைக்கப்பட்டுள்ளது.

கடுகும் சர்க்கரையும் சேர்ந்த மருந்து என சிலர் தவறாக கூறி வருகின்றனர். கடு சர்க்கரை என்பது பசை, குந்திரிக்கம், குல்குலு சர்க்கரை, செஞ்சயம், காவிமண், நெய், எண்ணை ஆகிய எட்டுவகை பொருட்களால் செய்யப்பட்ட மருந்து கலவையாகும். இதனை கடு சர்க்கரை யோகம், எனவும் கூறுவதுண்டு, மிகவும் உறுதியான அதாவது வலுவான ஒரு மருந்தாக இருப்பதால் சிலைகள் வடிவமைக்க இது பயன்படுகிறது. தண்ணீர் படாமல் இதனை பாதுகாக்க வேண்டும். அதனால் தான் இவ்வகை மருந்தினால் செய்யப் பட்டுள்ள சிலைகளுக்கு அபிஷேகம் செய்யப்படுவதில்லை. தண்ணீரில் இருந்து சிலைகளைப் பாதுகாக்கும் பொருட்டு கவசங்கள் சார்த்தப்படுகிறது. இதனால் இங்குள்ள பெருமானை வெள்ளிக்கவசத்தினால் போர்த்தி இருக்கிறார்கள்.

## அஷ்ட பந்தனம்

கடல் சங்கு, செஞ்சயம், கடுக்காய், நூல் பஞ்சு, கோழிப்பரல், ஆற்றுமணல், கொம்பரக்கு, நெல்லிக்காய் போன்றவற்றைப் பொடி செய்து குறிப்பிட்ட நாட்கள் வரை இடித்துப் பக்குவப்படுத்தும்போது **அஷ்டபந்த மருந்து** என்ற கலவை கிடைக்கும். கும்பாபிஷேகங்கள் நடக்கும்போது கற்சிலைகள் ஆட்டம் காணாமல் இருக்கும் பொருட்டு இதை வைத்து பிரதிஷ்டை செய்வார்கள். சுமார் பன்னிரெண்டு ஆண்டுகள் வரை இதற்கு பலம் உண்டு என்று கூறுகின்றனர். அதனால் தான் பன்னிரெண்டு ஆண்டிற்கொரு முறை அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நடத்தி வருவது வழக்கமாக

இருந்து வந்தது. அந்நாட்களில் தினசரி அபிஷேகம் நடத்தும் பிரதிஷ்டை விக்ரகங்களுக்குப் பன்னிரெண்டு ஆண்டுக்கொரு முறை இம்மருந்து வைக்கவில்லையென்றால், சிலைகளின் இடைவெளிகளில் புழுபூச்சிகள் உண்டாகி துர்நாற்றம் வீசுவ தோடு அவை அசையத் தொடங்கி விடும் என்பர். சிலைகள் அசைவு (ஆட்டம்) கண்டால் ஊருக்கு நல்லதல்ல என்று பிரதிஷ்டை விதி நூல் கருத்து தெரிவிக்கின்றது. ஆதலால் பன்னிரண்டாண்டுகளுக்கு ஒருமுறை மற்ற எல்லா சிலைகளுக்கும் அதுவும் சிவலிங்கத்திற்கு அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்யவேண்டும் என்பது விதி.

### மன்னர்களின் காணிக்கை

திருமலை மன்னர் இச்சன்னதியில் நின்றருளும் பெருமாளின் முழு உருவச் சிலைக்குத் தங்கத்திலான கவசம் செய்து கொடுத்து மண்டப பணிகளுக்கும் பெருமளவில் உதவியுள்ளார். பிற்காலத்தில் தங்ககவசத்தை பாதுகாப்பைக் கருத்தில் கொண்டு மாற்றிவிட்டு வெள்ளிக்கவசம் சார்த்தப்பட்டு உபயோகப்படுத்தி வருகின்றனர். பராந்தகச்சோழன் இந்தப் பெருமாளுக்கு இரண்டு நந்தா விளக்கும், வஸ்துக்களும் விட்டுக்கொடுத்துள்ளான்.

ஆங்:947-ல் **பரகேசரிவர்மன்** நெய்வழிபாடு நடத்த 30 பலம் எடைகொண்ட விளக்கொன்றும், திருவிளக்கிற்கான நெய் எடுப்பதற்கு 75 பசுக்களும் வழங்கியுள்ளான். ஆங் : 1545-ல் விஜயநகர பேரரசு மதுரைப் பிரதிநிதி **ராமராயவிட்டல தேவ ராயர்** 56 அடி உயரமுள்ள கொடிமரம் பெருமாளின் சன்னதியில் அமைத்து கொடுத்துள்ளார். இந்த விவரங்கள் யாவும் கல்வெட்டுகள் வாயிலாக தெரியவருகிறது.

பத்தாம் நூற்றாண்டு காலத்திலுள்ள கல்வெட்டு குறிப்புகளிலிருந்து அக்கால கட்டத்தில் இக்கோவில் பணிமுடித்து இறைவனையும் நிலைநிறுத்தி இருக்கலாம் என நம்பப்படுகிறது. பெருமாள் கோயிலின் பக்கமுள்ள கல்வெட்டுகள் சிலவற்றின் மீது சுவர்கள் கட்டப் பட்டுள்ளதால் விவரங்கள் அறிய முடியவில்லை. இப்படி அனேக கல்வெட்டுகள் விவரம் கிடைக்கப்பெறாத நிலைகளில் உள்ளது.

இன்னும் பூஜை வழிபாடுகளுக்குப் பலர் சொத்துக்களை விட்டுக் கொடுத்துள்ளதையும் அறிய முடிகிறது. ஆனால் மேற்கூறியபடி பெருமானைச் சுற்றியுள்ள பல கல்வெட்டுகள் சுவர்கள் கட்டி மறைக்கப்பட்டுள்ளதாலும் சில மண்ணுக்குள் புதையுண்டு விட்டதாலும் சரியான விபரங்களை அறிய முடியவில்லை. தெக்கிடம் பெருமாள் என அழைக்கப்படும் மகாவிஷ்ணுவிற்கு பூஜைமுறைகளை நம்பூதிரிகள் செய்து வருகின்றனர்.

## திருக்கோயில் திருச்சுற்று தெய்வங்கள்

### *பள்ளிகொண்ட அமரபுஜங்க பெருமாள்*

இக்கோயில் ஐந்தாம் நூற்றாண்டு கல்வெட்டுக் குறிப்பின்படி மிகவும் பழமை வாய்ந்ததாக உள்ளது. மகாவிஷ்ணு பள்ளிகொண்ட நிலையில் இருப்பதால் இவரைப் பள்ளி கொண்ட பெருமாள் என்றும் அமரபுஜங்க பெருமாள் எனவும் அழைக்கப்படுகிறார். இக்கோயிலில் ஐந்தடி நீளத்தில் கல்லில் உருவமைக்கப்பட்டு, அருகே லெஷ்மி தேவியும், நாபியிலிருந்து உதித்த தாமரைப்பூவில் பிரம்மனும் அமர்ந்து இருக்கும் காட்சியோடு விளங்குகிறது. இதுவே இத்திருக்கோயிலின் முதல் விஷ்ணு சன்னதியாக இருந்ததாகவும், அதன்பிறகே நிற்கும் கோலத்திலுள்ள திருவேங்கிட விண்ணவரம் பெருமாள் கோயில் அமைக்கப்பட்டதாகவும் தெரியவருகிறது.

பள்ளிகொண்ட பெருமாளுக்கு முற்கால மன்னர்கள் பூஜை வழிபாடுகளுக்கு நிலங்களை விட்டுக் கொடுத்துள்ளனர். உதாரணத்திற்கு : ஆ.வ. 823-ல் முற்காலப் பாண்டியர் மாறன் சடையன் காலத்துக் கல்வெட்டு ஒன்றில் தென்னவன் துங்கப் பல்லவராயன் என்பவன் அமரபுஜங்க பெருமாளுக்குப் பொன் முடியும் திருவாபரணங்களும் பணிசெய்வதற்கு வேண்டிய தங்கத்தை நன்கொடையாக வழங்கிய விவரம் கைலாசநாதர் கோயில் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. கீழ்சாந்தி போற்றி பூஜைகளைச் செய்து வருகிறார்.

## *அனந்த சயனக் காட்சி*

ஐந்து தலையுள்ள ஓர் பாம்பு படம்விரித்து சுருண்டு இருக்கிறது. அதில் பத்மநாபன் துயில் கொள்ளுகின்றான், இலட்சுமி தேவியும், பூமி தேவியும் அருகில் இருக்கின்றனர். அவரது ஒரு கரத்தில் சங்கும், ஓர்கையில் சக்கரமும், ஓர் கரத்தில் கெதையும், ஒருகை அபயமளிப்பதுமாக காணப்படுகிறது. மார்பில் கௌஸ்துப மணியும், ஸ்ரீ வத்ஸம் என்னும் மறுவும் உண்டு. நாபிக் கமலத்தில் பிரம்மன் அமர்ந்துள்ளார்.

ஓங்காரப் பிரணவமான சங்கொலி படைத்தலையும், சக்கரம் உலக இறுதியின் சம்காரத்தையும், துன்பம் நிறைந்த உலக வாழ்வில் நமக்கு வரும் சுக துக்கங்களை கையிலுள்ள கெதை தடுப்பதையும், துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனத்தை அபயக் கையும் குறிக்கின்றது. சில பிம்பங்களில் ஓர் கரத்தில் தாமரை உள்ளது. முடிவற்றவன், தேவன், மரணமில்லாதவன், ஆதிகேசவன், எல்லாமழிந்தாலும் எஞ்சி யிருப்பவன். எல்லாம் தன்னுள் அடக்கி அவைகளைச் சரிவர நடத்தி தனக்கு யாதொரு தொடர்புமில்லாமல் பாற்கடலில் பாம்பணை மேல் இன்பமாய் தூங்குகிறான். நம் உறக்கம் போலில்லாமல் அது அறிதுயிலாகும்.

சர்ப்பம் (பாம்பு) தமோ குணமும் கோபம் நிறைந்ததுமாகும். திருமாலின் சீடனும் பக்தனுமான ஆதிசேடன் (பாம்பு) தன் குருவான கடவுளைச் சுமந்தும் படம்விரித்தும் நிற்பதைக் காண்கிறோம். உலகில் பாம்பும், கருடனான பறவையும் பகைவர்கள் பகவான் முன்னிலையில் இருவரும் நண்பர்கள். மகாவிஷ்ணு சில கோயில்களில் நின்று அருள்புரிதலும் அனந்தசயன மூர்த்தியாய் திருவனந்தபுரம், திருவட்டாறு, திருவரங்கம் போன்ற இடங்களிலும் சிலஇடங்களில் நிற்கும் கோலத்திலும், இத்திருக்கோயிலில் பள்ளிகொண்ட நிலையில் அமர புஜங்க பெருமாளாகவும் காட்சியளிக்கிறார்.

*'சாந்தா காரம் புஜக சயனம்*
*பத்ம நாபம் ஸ்திரேசம்*
*விஸ்வா காரம் ககன ஸதிர்சம்*
*மேக வர்ணம் சுபாங்கம்*
*லக்ஷ்மீ காந்தம் கமல நயனம்*
*யோகி ஹிர்த்தியான கம்மியம்*
*வந்தே விஷ்ணும் பவபய ஹரம்*
*ஸர்வ லோகைக நாதம்'.*

[விஷ்ணு ஸஹஸ்ரநாமம்]

### *சுசிந்திரப் பெருமாள்*

இது பள்ளிகொண்ட பெருமாள் சன்னதியில் அடுத்ததாக அமைந்துள்ள கோயில். இங்கே உமா-மகேஸ்வரர் விக்ரகம் பஞ்சலோகத்தில் அமையப்பெற்று சுசீந்திரம் பெருமாள், சோமாஸ்கந்தமூர்த்தி என்ற திருப்பெயர்களோடு அழைக்கப்படுகிறார். சுமார் 800 வருடங்களுக்கு முற்பட்டதாகவும் இவ்விக்கிரகங்களின் மீது வெள்ளிக்கவசம் சார்த்தப்பட்ட நிலையில் இத்திருக்கோயிலின் முக்கிய உற்சவமூர்த்தியாகவும் விளங்குகிறார். இவருக்குப் பூஜை வழிபாடு வகைக்கு நிலங்களும் பதினெட்டு யோகக்கார மடங்களில் ஒருவரான ஸ்ரீவல்லமங்கலம் **அரங்கன் திருவிக்கரமன்** என்பவர் 872 வருடங்களுக்கு முன்னால் ஆங்:1126-ல் இவ் உற்சவமூர்த்தியை செய்து கொடுத்துள்ளதாகவும் கல்வெட்டு வாயிலாக விவரம் அறிய முடிகிறது. அடுத்து உற்சவமூர்த்தி அருகில் நிற்கும் கோலத்திலுள்ள பார்வதி தேவி பஞ்சலோக விக்கிரகத்தை அபய குலோத்துங்க சோழனின் ஆட்சி காலத்தில் பூவாணன் காரி என்பவர் ஆங் 1102-ல் செய்து கொடுத்துள்ளதாகவும் கல்வெட்டு குறிப்பிடுகிறது. மிகவும் அற்புதப் படைப்பாக வீற்றிருக்கும் உமா-மகேஸ்வரர் பார்வதி தேவி தெய்வங்களுக்குக் காலையும், மாலையும் ஆராதனைகள் மற்றும் பூஜைகள் இன்றுவரை காலம் தவறாமல் நடைபெற்று வருகிறது. இதற்கான பூஜை மற்றும் வழிபாடுகளை திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரின் ஆட்களே செய்து வருகின்றனர்.

## கோமாதாவால் பெரும் பதவிபெற்ற சண்டேசுவரர்

சோணாட்டில் சேய்நல்லூர் எனும் கிராமத்தில் யஜ்ஞதத்தன் என்பவரின் ஒரே மகனான - 'விசாரசர்மன்' சிவபெருமானிடம் மிகுந்த பற்றுதல் கொண்டவனாக திகழ்ந்தான். அந்தண வகுப்பினைச் சார்ந்த இவன் வறுமையின் கொடுமையினால் பசுக்களை மேய்க்கும் தொழிலைச் செய்துவந்தான். அவைகள் மேய்ந்து கொண்டிருக்கும் வேளையில் விசாரசர்மன் மண்ணினால் சிவலிங்கம் செய்து கறவை மாடுகளிலிருந்து பசும்பாலைக் கறந்து சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்து தினமும் அதன் முன்பு அமர்ந்து வணங்கிடும் நிலையை மேற்கொண்டு வந்தான்.



பூரண நிலவொளி முகத்தின் மேலே பதினான்கு சந்திரப் பிறைகள் சூடி, அதன்மீது படமெடுத்தாடும் பாம்பும் வீற்றிருக்க, இருபத்தேழு நட்சத்திரச் சுடரொளியும் விளக்குகளின் தீபவொளியும் சேர்ந்து, பொன்னார் மேனியை மின்னிடச் செய்யும் மூலவர் ஸ்ரீ ஸ்தாணுமாலய மூர்த்தியின் புன்னகைக் காட்சி.

## செண்பகராம மண்டப சிற்பங்கள்



பத்துதலை இராவணன்
வீணை மீட்டும் காட்சி



சிவபெருமானுக்கு தனது கண்களை
அர்ப்பணித்த ஸ்ரீகண்ணப்ப நாயனார்.

இராவணன் பக்தியால் கயிலை
மாமலையை தூக்குகின்ற காட்சி



சிவபெருமான் தனது கால் பெருவிரலால்
இராவணனின் தலையை மிதித்திடும் காட்சி



வாலி சுக்ரீவ யுத்தம்



மகாவிஷ்ணுவின்
நரசிம்ம அவதாரம்



கோபியர்களோடு விளையாடும்
கண்ணன்



வீர ஆஞ்சநேயர் சுரசை என்ற அரக்கியின்
வாய்வழிச்சென்று காதுவழி வருகிறார்



கலையம்சமிக்க
கற்தூண் ஒன்றில் வினாயகர் பெண்உருவில்
விக்னேசுவரியாக இருக்கும் காட்சி

ஒருநாள் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் விசாரசர்மனின் இச்செயலைக் கண்டு அவனது தந்தையான யஜ்ஞுதத்தனிடம் சென்று எங்களுடைய கறவை மாடுகளிலிருந்து பாலைக்கறந்து மணலில் ஊற்றி விளையாடிக் கொண்டிருக்கிறான் தங்கள் மகன் இதனால் வீட்டிற்கு திரும்பிவரும் பசுக்களில் தினமும் பால் குறைவாகவே கிடைக்கிறது என எடுத்துரைத்தனர். ஊர்மக்களின் பேச்சைக்கேட்டுக் கோபமடைந்த விசாரசர்மனின் தந்தை "நீங்கள் சொல்வதை ஏற்றுக் கொள்கிறேன். நானே நேரில் சென்று பார்த்து இனியொரு முறை அவ்விதம் நேராத வண்ணம் பார்த்துக் கொள்கிறேன்" என ஊர் மக்களை அனுப்பி வைத்துவிட்டு மகன் இருக்கும் இடத்திற்குச் சென்றார். எப்போதும் போல் பாலைக்கறந்து மணலிலான சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்வதற்காக ஒரு குடத்தில் பால் இருப்பதையும் தியான நிலையில் மகன் இருப்பதையும் கண்டார்.

தந்தையாரும் மிகுந்த கோபத்துடன் மகனின் இச்செயலைக் கண்டு பலவாறு பேசிய வார்த்தைகள் தியானத்திலிருந்த மகனின் காதுகளில் விழவில்லை. தந்தையின் கோபம் அதிகமாகவே, காலால் பால்குடத்தை இடறித் தள்ளி கையில் வைத்திருந்த கோலினால் மகனை அடித்தார் தந்தையின் அடியைத் தாங்க முடியாத விசாரசர்மன் கண் திறந்து பார்த்தபோது எதிரே சிவலிங்க அபிஷேகத்திற்கு வைத்திருந்த பால்குடத்திலுள்ள பால் அனைத்தும் நிலத்தில் வீணாகி போனதைக்கண்டு கோபமுற்று தந்தையின் கையிலிருந்த கோலைப் பறித்து பால்குடங்களை உதைத்த காலை தண்டிப்பதற்காக கோலை ஓங்கவும் அது வாளாக மாறியது. அதனால் தந்தையென்றும் பாராமல் அவர் காலில் வெட்டவும் தரையில் சாய்ந்தார் தந்தையான யஜ்ஞுதத்தன்..

என்ன காரியம் செய்தாய் மகனே. . . எனத் தரையில் வீழ்ந்து துடித்துக் கொண்டிருந்த தந்தை கேட்கவே, சிவபெருமானையே நினைத்துக் கொண்டிருந்த விசாரசர்மன் தந்தையின் திருமுகத்தைக் கண்டான் நிலைதடுமாறினான். "ஐயோ! பெற்றெடுத்த தந்தையை கொல்லத் துணிந்தேனே! இறைவா, மாபெரும் தவறைச் செய்து விட்டேன். உன்மீது கொண்ட அன்பினால் தினமும் அபிஷேகம்

செய்து பூஜித்து வழிபட்ட எனக்கு நீங்கள். தரும் தண்டனை இதுதானா?" என சிவபெருமானைத் துதித்து கண்ணீர் மல்க விசாரசர்மன் வேண்டவே, சிவபெருமான் முன்தோன்றி "இன்று முதல் யானே உனது தந்தை"யென்று சிறுவனான விசாரசர்மனை ஆலிங்கனம் செய்தார். இன்றுமுதல் நீ எமது தொண்டருக்கெல்லாம் தலைவன்; நாம் உண்பனவும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்களித்ததோம். எம்மை தரிசித்தவர்களுக்குத் "தரிசனபலன்" அளிப்பாயாக என அருள் புரிந்து சண்டேசர் பதமும் அளித்தார் சிவபெருமான்.

சண்டேசுவரர் பதவி மிகவும் விசேடம். அவர் ஒருமனதோடு சிவபூஜை செய்ததால் இப்பதவி பெற்றார். வேதகாலம் முதல் பசுவைக் காக்கும் வழக்கமுள்ளது. "கோமாதா" எனப் போற்றப்படும் பசுக்களைப் பேணி வளர்த்து பசும்பாலை இறைவனின் அபிஷேகத்திற்கு கொடுப்பது மிகவும் புண்ணியம். இந்நாயனார் பசுவை மேய்த்து காப்பதை மேன்மையாக கருதினார். ஆனால் இக்கால கட்டத்தில் அவைகளைக் கொன்று சமைத்து தின்கின்ற நிலையை காண்கிறோம். ஒருநெறியை மனம் வைத்து பூஜித்தால் உடன் பலன் பெறலாம் என்ற உயர்ந்த தத்துவத்தைச் சண்டேசுவாரின் சரிதம் நமக்கு உணர்த்துகின்றது.

சிவாலயங்களில் இறுதியில் வணங்கும் மூர்த்தி கருவறையின் திருமடையான (கோமுகி) தீர்த்தம் பாயுமிடத்தில் தெற்குநோக்கி சண்டேசுவரரை பிரதிஷ்டை செய்து வழிபட்டு வருவதை காணலாம். சிலபேர்கள் இவரை காதுகேட்காத "செவிட்டுச்சாமி"யென கைதட்டி கூறி வழிபடுவதையும் காண்கிறோம். ஆனால் உண்மை அதுவல்ல இடைவிடாது எந்நேரமும் இறைவனின் நினைவாக தியான நிலையில் இருப்பதால் ஐயா, தியான மூர்த்தியே எங்களையும் சிறிது கண்திறந்து பார்த்து அருள்புரியுங்கள் என வேண்டவே அவர் சன்னதில் கைதட்டி வழிபடும் முறை இருந்து வருகிறது. சிவாலய பிரசாதமான விபூதி சந்தனங்களைக் கூட நான் எடுத்து செல்லவில்லை இதோ பாருங்கள்! என்று சண்டேசுவரர் சன்னதியில் பக்தர்கள் தமது இருகைகளைத் தட்டிக் காண்பித்து செல்வதாகவும் கூறப்படுவதுண்டு. இவரது பெருமையை கீழ்வரும் பாடலில் காண்போம்:

தாதையைத் தாளற வீசிய சண்டிக்கு
மண்டத்தோத்தோடு முடனே
பூதலத்தோர்கள் வணங்கப்
பொற்கோயிலும் போனகமு மருளி
சோதி மணிமுடித் தாமமு
நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

[சேந்தனார்]

புகழ்பெற்ற எல்லா சிவன்கோயில்களிலும் ஆகம விதிப்படி கருவறை தீர்த்த மடையாகிய கோமுகியை வலம் வரும்போது தாண்டிச் செல்லக் கூடாது என்ற பழக்கம் இருந்து வருகிறது. உதாரணத்திற்கு கேரள மாநிலத்தில் சிவபெருமான் மூலவராய் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களில் இதைக் காணமுடிகிறது. ஆனால் சுசீந்திரம் ஸ்தாணுமால மூர்த்தி கோயிலில் அபிஷேக நீர் வெளிவர திருமடை இல்லாத காரணத்தால் கருவறை சுற்று பிரகாரத்தை வலம் வரத் தடையில்லை என்பதைக் காணமுடிகிறது.

## *சுசிந்திரம் திருக்கோயிலில் சண்டேசுவரர் பிரதிஷ்டை*

சுசீந்திரம் திருக்கோயிலில் சண்டேசுவரருக்குத் தனி ஆலயம் இல்லாமல் இருந்து வந்தது. ஏனென்றால் மூலஸ்தான கருவறையில் கோமுகியாகிய தீர்த்த மடை இல்லாதிருப்பதையும் சுவாமிக்குச் செய்விக்கப்படும் அபிஷேக நீர் கருவறை பூமிக்குள் சென்று குமரிக்கடலில் சங்கமிப்பதையும் ஏற்கனவே தெரிவித்துள்ளோம். அதனால் இங்கே மூலஸ்தானத்தின் வலது புறம் சண்டேசுவரரைப் பிரதிஷ்டை செய்யவில்லை எனக் காரணம் தெரியவருகிறது. பின்னால் சண்டேசுவரர் பிரதிஷ்டை செய்வதற்கு முன்பு சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்து வைத்துள்ளனர். ஈஸ்வரர் பட்டம் பெற்ற சண்டேசுவரரை சிவலிங்க வடிவில் வைத்திருக்கலாம் என அறிய முடிகிறது.

பின்னாளில் திருவிதாங்கூர் சமஸ்தானத்திலிருந்து குமரிமாவட்டம் தனியாக பிரிக்கப்பட்டு தமிழகத்துடன் 1956-நவம்பர் 1-ல் இணைந்த பிறகு ஆலயங்கள் அனைத்தும்

அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் வந்தது. ஆணையாளராக முதல் முதலில் பொறுப்பேற்ற உயர்திரு உத்தண்ட இராமபிள்ளை அவர்களின் காலத்தில் இத்திருக்கோயிலில் சண்டேசுவரர் ஆலயம் திருப்பணி செய்யப்பட்டு விக்ரகமும் பிரதிஷ்டை செய்யப்பட்டு நித்திய பூசைகளும் தவறாது நடந்து வருகிறது. மேலும் கலையழகு சிற்பங்கள் பாதுகாப்பாய் இருக்கும் பொருட்டு பாதுகாப்பு வேலிகள் அமைக்கப்பட்டன. அவற்றில் அலங்கார மண்டபத்திலுள்ள இசைத்தூண்கள், இராமவர்மா, மார்த்தாண்ட வர்மா சிலைகள் மற்றும் சித்ரசபை, வசந்த மண்டபத்தைச் சுற்றி உள்ளே இரும்பு வலைகள் போன்றவைகளும் அடங்கும்.

## திரு நடனம் புரியும் நடராஜர்

ஸ்தாணுமாலயப் பெருமாள் சன்னதியில் சிறிய நந்தீஸ்வரர் வீற்றிருக்கும் மண்டபத்தின் வடக்குப் பாகத்தில் தில்லை நடராஜ பெருமான் கோயில் உள்ளது. இங்குள்ள நடராஜ பெருமான் சிலை சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இராஜராஜ சோழ மன்னரால் வழங்கப்பட்டது மூன்றடி உயரகொண்டது. நடராஜப் பெருமானும் அருகே சிவகாமி அம்பாளும், முன்னால் சிறிய காரைக்கால் நாச்சியார் விக்கிரகமும் உள்ளது. உற்சவ மூர்த்திகளும் இங்கே இடம் பெற்றுள்ளனர்.

மார்கழித்திருவிழா 8,10 ஆகிய நாட்களிலும் சித்திரை 8-ம் திருவிழாவின் போதும் எழுந்தருளும் உற்சவ மூர்த்தியாக நடராஜபெருமான் விளங்குகிறார். அன்று முதல் இன்று வரை பூஜைகளை நடத்தி வரும் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் இக்கோயிலின் தலைமை தந்திரியாகவும், திருக் கோயிலுடைய ஸ்தானிகராகவும் வரும் இவரது குடும்ப வம்சா வழியினர் மற்ற பொறுப்புகள் வகிப்பது போல் நடராஜர் கோயிலும் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக அவர்களின் பொறுப்பிலே இன்றும் இருந்து வருகிறது. சுசீந்திரம் பெருமாள் (உற்சவ மூர்த்தி) கங்காளநாதர், இந்திர வினாயகர், சேரவாதல் சாஸ்தா, ஸ்ரீசக்கரம், சாட்சிவினாயகர் ஆகிய கோயில்களோடு நடராஜர் கோயிலிலும் பூசைகளை வட்டப்பள்ளி ஸ்தானிகர் குடும்பத்தினர் செய்து வருகின்றனர்.

# செண்பகராம சிற்ப மண்டபம்

## கதை விளக்கும் சிற்பங்கள்

கொன்றையடித் திருக்கோயிலின் எதிர்புறம் சிவன், விஷ்ணு சன்னதிகளின் முன்பாக அமைந்துள்ள மிகப்பெரிய மண்டபம் இது. இந்த மண்டபத்தைத் தாங்கியுள்ள முப்பத்தி இரண்டு தூண்களின் இருபுறமும், மற்றும் நான்கு புறங்களிலும், மண்டபத்தின் மேல்பாகம், மண்டபத்தின் வெளிப்பாக இடதுபுறமும் வலது புறமும் ஆயிரக்கணக்கான புடைப்பு சிற்பங்களை காணலாம். 520வருடங்களுக்கு முன்பு கட்டி முடிக்கப்பட்டது இம்மண்டபம்.

சிவபெருமானின் அறுபத்தி நான்கு திருவிளையாடல்கள், இராமயண கதைகளை விளக்கும் சிற்பங்கள், இசை எழுப்பும் சங்கீதத் தூண்கள், சுசீந்திரம் ஸ்தல மகிமையை விளக்கும் சிற்பங்கள் இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம் ஒவ்வொரு சிலையிலும் கதையும், தத்துவமும் மறைந்துள்ளது. உதாரணத்திற்கு **"வியக்க வைக்கும் விக்கினேசுவரி"** வினாயகர் பெருமானைப் பெண்ணுருவில் படைத்துள்ளான் சிற்பி. மிக அற்புதமான இந்த சிலையைப் பற்றி **கல்கி** வார இதழில் **பாஸ்கரத் தொண்டைமான்** அவர்கள் மிக அருமையாக 20ஆண்டுகளுக்கு முன்பு எழுதியிருந்தார். அடுத்து திருக்கோயில் பூஜைக்கு சாட்சியாக இருந்த இசைத்தூண்களின் இடப்பக்கம் அமைந்துள்ள சன்னதியில் வீற்றிருக்கும் (புடைப்பு சிற்பமாக விளங்கும்) "சாட்சி வினாயகர்" சிலை மற்றும் வீரஅனுமனின் வரலாற்றைச் சித்தரிக்கும் புடைப்பு சிற்பங்களும் வாலி-சுக்ரீவன் போர்க் காட்சிகளும் இருபுறமும், ஸ்ரீஇராமர் மறைந்து இருந்து அம்பு எய்தும் காட்சிகளும் நம்மை வியப்பூட்ட வைக்கின்றன. மன்னராட்சி காலத்தில் மிகுந்த செலவில் அமைக்கப்பட்ட மண்டபங்களில் இதுவும் ஒன்று. ஆயிரக்கணக்கில் புடைப்புச் சிற்பங்கள் அடங்கிய இம் மண்டபத்தைக் காணக் கண்கோடி வேண்டும்.

# 'கை முக்கும் தண்டனை'

### சிறு விளக்கம்

முற்கால மன்னர்கள் ஆட்சி காலத்தில் கொலை, திருட்டு, விபச்சாரம் போன்ற பெரிய குற்றங்கள் புரிந்ததாக கருதப்படும் கேரள நம்பூதிரிமார்களை மன்னர்களே நேரில் தண்டிக்காமல் முதல் விசாரணைக்குப்பின் சுசீந்திரம் கோயிலுக்கு அனுப்பி அந்த குற்றங்களை நிரூபிக்க கைமுக்கும் தண்டனை என்னும் முறையை பின்பற்றி வந்தனர்.

இந்த தண்டனை முறை இவர்களுக்கு மட்டும் இருந்தது ஏன் எனறால், சத்திரியரான மன்னர்களுக்கு அவர்களைவிட தாழ்ந்த இனத்தவரான வைசியர், சூத்திரர்களையும், தன் இனத்த வரையும் மட்டும் தான் தண்டிக்க வேதசாஸ்திரம் வழி வகுக் கிறது என்றும், தன்னை விட இனத்தில் உயர்ந்தவரும், தனக்கே குருவாகவும், எல்லாம் வல்ல இறைவனையே தொட்டு பூசை செய்பவர்களுமாக உள்ள பிராமணர்களை இறைவனே தண்டிக்கட்டும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு இந்த விதி முறையை மன்னர்கள் பின்பற்றி வந்ததாக அறிய முடிகிறது.

### சுசிந்திரத்தில் தண்டிப்பதற்கான காரணம்

தவறு செய்ததாக கருதப்படும் நம்பூதிரிகளை இங்கு அனுப்பி சோதிப்பதற்கும் ஒரு காரணம் நிலவிவந்தது. மும்மூர்த்திகளும் ஒன்றாக இருக்கும் இத்திருத்தலத்தில் தவறு செய்த தேவேந்திரன் கொதிக்கும் நெய்யில் மூழ்கி வெளியே வந்து புனிதம் அடைந்த தலம் இதுவெனக் கருதப்படுவதாலும், அப்படி தேவேந்திரனுக்கே நீதிவழங்கிய இறைவன் சன்னதியில் குற்றம் புரிந்தவர்கள் தண்டிக்கப்படட்டுமே என்று முற்கால மன்னர்கள் எண்ணியிருக்கலாம் என்றும் கூறப்படுகிறது.

### தண்டனை செயல் முறைகள்

தவறு செய்ததாக கருதப்படும் நம்பூதிரிகள் கோயிலுக்கு வரவழைக்கப்பட்டு, மூல பருடசபை, யோகக்காரர்கள், ஊர் (பிடாகை) தலைவர்கள், கோயில்

ஸ்தானிகர் போன்றவர்களின் முன்னிலையில் மன்னரின் ஆணை படித்து காண்பிக்கப்படும். மறுநாள் மீண்டும் இதுபோன்று சபை கூடும். சபையினர் முன்னிலையில் கொடி மரத்திற்கும் பலிக்கல்லிற்கும் முன்னால் ஒரு வெண்கலப் பாத்திரத்தில் பதினாறு ஆழாக்கு பசுவின் நெய்யும் மூன்று ஆழாக்கு நல்லெண்ணையும் விடப்பட்டு இந்த கலவை நிரம்பிய பாத்திரத்தைத் தீயிட்டுக் கொதிக்க வைப்பார்கள். பின்பு ஒரு தர்ப்ப புல்லை அதிலிட்டு கொதித்துவிட்டதா என சோதனை செய்த பின் சிறிய நந்தி விக்ரகம் ஒன்றை அதிலிடுவார்கள்.

பின்னர் சூரியன், சந்திரன், வாயு, அக்கினி, பூமி, வானம், சொர்க்கம், நீர், இதயம், காலை, மாலை, இரவு, தர்மம் போன்றவைகளை சாட்சிகளாகவும், கொடிமரத்தின் அருகில் எழுந்தருளியிருக்கும் வினாயகரின் பக்கம் இது நடைபெறுவதால் கடைசி சாட்சியாக அவரையும் வணங்கி "நான் இந்த விதி முறைகளுக்கு முற்படுகிறேன்" என்ற சமஸ்கிருத ஸ்லோகத்தை திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் குற்றம் செய்ததாகக் கருதப்படும் நம்பூதிரியிடம் சொல்லிக் கொடுக்க அதை அவர் ஏற்று சொன்ன பிறகு மண்டபத்தின் மேலிருக்கும் கொடிமரத்தின் அருகிலுள்ள மண்டப துவாரம் வழியாக சூரிய ஒளி கீழே தெரியும் வேளையில் அந்த நம்பூதிரியின் கையை முக்கி நந்தி விக்ரகத்தை எடுக்கச் சொல்வார்கள். நெய்யில் முக்கி வெளியே எடுத்த கையை உடனே வெற்றிலைகளால் பொதிந்து கட்டி வைப்பார்கள். மூன்றாவது நாள் மீண்டும் சபையினர்கள் கூடி அவர்கள் முன்னிலையில் வெற்றிலை கொண்டு கட்டிய கையை அவிழ்த்து பார்ப்பார்கள். கைவெந்திருந்தால் குற்றம் செய்தவரென்றும், இல்லையென்றால் குற்றமற்றவர் என்றும் சபையில் அறிவிக்கப்படுவர். பெருமை வாய்ந்த இந்த சத்திய சோதனைக்கு நீதிபதியாக திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் இருந்து வந்ததற்கு நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட நூல்கள் ஆதாரமாக உள்ளன.

## மன்னர் முடிவு

மேற்கண்ட முறையில் குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டால் அவருக்கு மொட்டையடித்து, கரும்புள்ளி, செம்புள்ளி குத்தி கழுதை மேல் ஏற்றி ஊரைச்சுற்றி ஊர்வலமாக கொண்டுவந்து, நாட்டின் எல்லைக் கோட்டைக்கு வெளியே அனுப்பி விடுவார்கள். நிரபராதி என்று நிரூபிக்கப்பட்டால் அவரை குதிரை மேல் அமர்த்தி ராஜ உபசாரமாக அரண்மனைக்கு அழைத்து கௌரவித்து சன்மானங்கள் வழங்கி அனுப்புவார் மன்னர்.

## சோதனை முறையை கேலி செய்தவரின் முடிவு

ஒரு சமயம் குற்றம் செய்த ஒரு நம்பூதிரி இங்கு வந்து, சபையில் ஒரு பிரச்சனையை கிளப்பியதாகவும் "கொதிக்கும் நெய்யில் மட்டும் தான் கையை முக்கி சோதனை நடத்த வேண்டுமா?" கொதிக்க வைக்காத நெய்யில் முக்கிப் பார்த்தால் என்ன? என்று அவர் கூறவே, இது ஒரு சத்திய சோதனையாகவே அக்காலத்தில் கருதப்பட்டு வந்ததால் சபையில் உள்ள அனைவரும் இதற்கு ஆதரவு தெரிவித்தனர். சபையின் முடிவை ஏற்றுக்கொண்ட ராஜ பிரதிநிதியும் இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதம் தெரிவித்தார். வந்தவர் கொதிக்க வைக்கப்படாத நெய்யில் கையை முக்கி நந்தி விக்ரகத்தை எடுக்க முற்பட்ட போது கை வெந்து விடவே, அதிர்ச்சியுடன் ஆ! வெனக் கதறிக்கொண்டு வெந்த கையோடு அவர் ஓடினார். சபையினர் பின்தொடர, இக் கோயிலின் வடக்குப்புற வாசல் வழியாக அவர் வெளியேறி அருகில் உள்ள தெப்பக்குளத்தில் குதித்துத் தற்கொலை செய்து கொண்டாதாகக் கூறப்படுகிறது.

இச்சம்பவத்தை ராஜபிரதிநிதி வாயிலாக அறிந்த மன்னன் சுவாதித் திருநாள் மகாராஜா நடந்து விட்ட இந்நிகழ்ச்சிக்கு வருத்தமடைந்து இதை அபசகுனமாகக் கருதி வடக்குப்புற வாசலை கட்டியடைத்து வேறொரு புதிய வாசலை ஏற்படுத்த உத்தரவு பிறப்பித்தார். அதன்படி சில நாட்களில் புதிய வாசல் அமைக்கப்பட்டது. தற்போதைய வடக்குப்பிரகார வாசலே அது. இவ்வாசலுக்கு சுமார் பதினைந்து அடி தூரத்திற்கு முன்னால்

## "முக்கிய சாட்சிகள்"



கைமுக்கும் சோதனைக்கு
பயன்படுத்திய சிறிய நந்தி



நெய்யும், நல்லெண்ணையும் விட்டு கொதிக்க
பயன்படுத்திய பாத்திரம்

கட்டியடைக்கப்பட்ட பழைய வாசலை இன்றும் கூட நாம் காணலாம். இச்சம்பவம் நடைபெற்றது. ஆங்:1832 (கொல்லம்: 1007)-ல் ஆகும். இந்நிகழ்ச்சிக்குப் பிறகு மக்களின் கோரிக்கையை ஏற்று வேத விற்பன்னர்களின் கருத்துக்கேற்ப இக்கொடிய தண்டனை முறையை சுவாதித் திருநாள் மகாராஜா ஆங்:1834 (கொல்லம்:1009)-ல் நிறுத்தினார்.

மேற்கண்ட நிகழ்ச்சிகளிலிருந்து நாம் அறிவது ஆண்டவனைப் பூஜை செய்யும் பூசாரிகள் நேர்மையோடு வாழ வேண்டும். இறைப்பணியை அருள்பணியாக நினைத்து தொண்டாற்ற வேண்டும் என்ற உண்மையை உணர முடிகிறது. மேலும் இத்திருக்கோயிலில் சிற்பப்பணிகளில் குற்றம் செய்தோருக்கு கிடைத்த தண்டனையைக் கருடாழ்வார் மண்டபத்திலும். (புடைப்பு சிற்பமாக), தவறு செய்த கணக்கர்களுக்கு மன்னர்கள் கொடுத்த தண்டனையைச் சுப்பிரமணிய சுவாமி மண்டபத்திலும் சிலைவடிவில் காணலாம்.

## தண்டனைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் விவரம்

சுசீந்திரம் திருக்கோயிலில் நடந்த கைமுக்கு தண்டனை சத்திய சோதனையாகவே நடைபெற்றதற்கு சாட்சியாக சில கல்வெட்டு குறிப்புகள் பதிவேடுகள் மூலமாக கிடைக்கப் பெற்றது. அவை பற்றிய விபரம் பின்வருமாறு :

ஆங் : 1816 (கொல்லம் 991 வைகாசி 3-ம்நாள்)-லும்.

ஆங் : 1824 (கொல்லம் 979 பங்குனி 23-ம் நாள்)- லும்

சோதனைகளில் கைவெந்து புண்ணானதும்.

ஆங் : 1756 (கொல்லம் : 931 புரட்டாசி 3-ம் நாள்)-லும்.

ஆங் : 1816 (கொல்லம் : 991 ஐப்பசி 7-ம் நாள்)-லும்

ஆங் : 1823 (கொல்லம் 998. பங்குனி 25-ம் நாள்)-லும் நடந்த சோதனைகளில் கை வேகாததும் இது ஒரு சத்திய சோதனை யாகவே நிகழ்ந்ததற்கு சான்றுகளாகும்.

வேண்டுபவர்களுக்கு இல்லையெனாது வேண்டும் வரங்களை வாரி வழங்கும் சுசீந்தை எம்பெருமான் இம்மண்ணில் நிகழ்த்திவுள்ள அற்புதங்கள் ஏராளம். தன்னை ஏமாற்ற நினைப்பவர்களையும் தண்டிக்காமல் அவர்களுக்குச் செய்த தவற்றை உணர்த்தி அவர்களைத் திருத்திய சம்பவங்களையும், வேண்டு தலை நிறைவேற்றாமல் மறந்தவர்கக்கு நினைவுபடுத்தி ஆட்கொண்டருளிய சம்பவங்களும் இம்மண்ணில் ஏராளம் நிகழ்ந்துள்ளன. எல்லாவற்றையும் இந்த நூலில் விளக்கமுடியா விட்டாலும் கூட, இரண்டு சம்பவங்களை மட்டும் உதாரணத்திற்காக கூறப்பட்டுள்ளன.

## திருக்கொடியேற்று ஆதித்ய மண்டபம்

### *கொடிமரங்கள்*

இத்திருக்கோயிலில் மார்கழி, சித்திரை, ஆவணி மாதங்களில் நடைபெற்றுவரும் திருவிழாவிற்கான திருக்கொடியேற்று நடைபெறும் மண்டபமாக அமைந்துள்ள இவ்விடத்தில் திருவேங்கிட விணணவரம் பெருமாளாகிய மகா விஷ்ணுவுக்கும், ஸ்தாணுமாலயருக்குமாக இரண்டு கொடி மரங்கள் நிலை நிறுத்தப்பட்டுள்ளன. சுமார் 527ஆண்டுகளுக்கு முன்னால் வரை உயரமான கமுகு மரத்தடியை கொடிமரமாக திருக்கொடியேற்றிற்குப் பயன்படுத்தி வந்ததாக தெரிய வருகிறது. ஆங்:1471 (த.ஆ:646)-ல் ஆட்சி புரிந்த சேரநாட்டு மன்னர் ஸ்ரீ இராமவர்மா மகாராஜா அவர்களால் ஸ்தாணுமாலயர்க்கு 64 அடி 3 இஞ்சு உயரத்தில் மரத்தடியில் செம்புத்தகடு பொதியப்பட்டு கொடிமரம் நிலைநிறுத்தப்பட்டது.

பிற்காலத்தில் 74 ஆண்டுகளுக்குப் பிறகு ஆட்சிபுரிந்த விஜய நகரப் பேரரசின் மதுரை ரீஜன்று ஸ்ரீ விட்டல தேவராயர் ஆங் : 1545 (கொல்லம் : 720)-ல் திருவேங்கிட விண்ணவரம் பெருமாளாகிய மகாவிஷ்ணுவிற்கு 56 அடி உயரத்திலான கொடிமரத்தை நிலைநிறுத்தினார். முன்பே குறிப்பிட்டபடி சுமார் 400 ஆண்டுகளாக உபயோகத்தில் இருந்துவந்த கொடிமரங்கள் பின்னாளில் அடிப்பாகத்தில் மழை மற்றும் அபிஷேக தண்ணீர் இறங்கி பழுதடைந்து சரிவு கண்டன.

அன்றைய காலகட்டத்தில் (ஆங்:1870-ல்) சுசீந்திரம் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகராகவும் சுசீந்திரம் திருக்கோயிலின் பூஜைகள் மற்றும் பொறுப்புகளை வகித்து வருபவரும், கொடிமர பூஜைகளைச் செய்து வருபவரும், திருவிதாங்கூர் ராஜ குடும்பத்தில் பலபொறுப்புக்களை வகித்து மன்னரோடு மிகநெருங்கிய தொடர்புடையவராகவும் ஆலோச கராகவும் பொறுப்பு வகித்த பிரம்மஸ்ரீ பாச்சுமூத்தது என்ற பெரியார் அப்போது திருவிதாங்கூர் மன்னராக இருந்த ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மகாராஜாவை சந்தித்து நிலைமையை எடுத்துரைத்தார். உடனே ஸ்ரீபாச்சுமூத்தது பெரியாரின் வேண்டு கோளை ஏற்று பழுதடைந்த கொடிமரங்களை உடனே அகற்ற உத்தரவு பிறப்பித்தார்.

மன்னரின் உத்தரவுபடி ஆங்:1872-ஜுன் (கொல்லம்: 1047 வைகாசி 29-ம் நாள்)-ல் கொடி மரங்கள் அகற்றப்பட்டு அதே ஆண்டு இறுதிக்குள் (ஆங் : 1872) புதிய கொடி மரங்கள் நிலை நிறுத்தப்பட்டன. மக்களின் நியாயமான கோரிக்கைகளை உடன் தானே செய்து முடிக்கும் மன்னராக விளங்கிய ஸ்ரீஆயில்யம் திருநாள் மகாராஜா ஒரே ஆண்டில் 1872-ல் பழைய கொடிமரங்களை அகற்றி புதிய கொடிமரங்களும், 1875-ல் பழைய இராஜகோபுரத்தை அகற்றி புதிய ராஜ கோபுரத்திற்கு அடிக்கல் நாட்டி அஸ்திவாரமும் அமைத்து பணிகள் தொய்வின்றி நடைபெற வருவாய்க்கு வழிவகுத்து கொடுத்து விட்டு பெருமையோடு மறைந்தார். அவர் மறைந்தாலும் அவர் எழுப்பிய நினைவுச் சின்னங்கள் இன்றும் வானளாவி உயர்ந்து நிற்பதைக் காணமுடிகிறது.

## பெருமை வாய்ந்த ஆதித்ய மண்டபம்

இன்று கொடியேற்று மண்டபமாக விளங்கும் இம்மண்டபத்தில் சத்திய சோதனையான "கைமுக்கும்" நிகழ்ச்சியும் நடைபெற்றது. ஆதித்தியனான சூரியனையும் ஒரு சாட்சியாக வைத்து பரிசோதனை நிகழ்ந்ததால் இதற்கு ஆதித்திய மண்டபம் என்ற பெயரும் விளங்கலாயிற்று. ஆட்கொண்டார், உய்ய கொண்டார் என்ற இரு துவாரபாலகர்களைத்



முதல் நாள் திருவிழாவின் போது கொடிமரத்தில் திருக்கொடியேற்று மற்றும் பூஜைகள் முடித்துத், தீப ஆராதனை நடைபெறும் தெய்வீகக் காட்சி.

தாணுமாலயர் கொடிமரத்தின் முன்பு இருபுறங்களிலும் காணமுடிகிறது. இதற்கும் தவறாது பூஜைகள் நடந்து வருகின்றது. இவர்கள் கொடிமரக் காவல் தெய்வங்களாக இருந்து வருவதாகவும் கருதப்படுகிறது

இத்தகைய பெருமை பெற்ற இம்மண்டபத்தினைச் **சுசீந்திரவாதி நங்கையா அம்மாள்** என்ற பெண்மணி ஆங்:1647 (த.ஆ:822)-ல் தனது செலவில் கட்டிக்கொடுத்ததாக செண்பகராம மண்டப கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. சுசீந்திரத்தில் வாழ்ந்த சுசீந்திரவாதி சேந்தன் - நங்கையா அம்மாள் தம்பதியர்க்கு ஆண் வாரிசு இல்லாத வேளையில் அது கிடைக்க வேண்டி இம்மண்டபத்தை கட்டுவித்ததாகவும் அறியமுடிகிறது. ஸ்தாணுமாலயர் கொடி மரத்தின் முன்னால் கிழக்கு இருபக்க கல்தூண்களில் இத்தம்பதியர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து வணங்கி நிற்பதுபோல் சிலைகள் அமைந் திருப்பதைக் காணலாம். இம்மண்டபப்பணி ஸ்ரீஇராம வர்மா மகாராஜா காலத்தில் தொடங்கி ஸ்ரீஆதித்திய வர்மா மகாராஜா காலத்தில் முடிவு பெற்றதாகக் கல்வெட்டுக் குறிப்புகள் மேலும் தெரிவிக்கின்றன.

### *ஸ்ரீவல்லப விநாயகர்*

சித்திரசபை திருக்கோயிலின் வலது புறம் ஸ்ரீவல்லபையுடன் வீற்றிருக்கும் விநாயகரின் திருவுருவச்சிலை 11/2 அடி உயரத்தில் சிறிய கோயிலாக அமைந்துள்ளது. இடதுபுறம் மயில்மீது வீற்றிருக்கும் பாலசுப்பிரமணியரின் சிறிய கோயிலும் உள்ளது. இவ்விரு கோயில்களிலும் பூஜைகளை அன்றாடம் செய்வதோடு சித்திரசபை நடராஜ பெருமானுக்கும் பூஜை ஆராதனைகளை செய்து வருபவர்கள் கொன்றையடி நாதர் திருக்கோயில் நம்பியார்கள் எனப்படும் பூசாரிகளாகும்.

### *இந்திர விநாயகர்*

சுசீந்திரம் ஸ்தல வரலாற்றுப்படி முனிவரின் சாபத்திற்குள்ளாகிய இந்திரனை அசுத்தமடைந்த உடலோடு நேரடியாகச் சென்று இறைவனை வழிபட நந்தீஸ்வரர் அனுமதி

மறுக்கவே, இந்திரன் இங்குத் தனியாக கிணறு அமைத்து நீராடி முதலில் நந்தீஸ்வரரையும், பின்னர் வினாயகரையும் வழிபட்டு அதன் பின்னரே மும்மூர்த்திகளை ஒரே லிங்கத்தில் பூஜித்து இறையருள் பெற்று சாப விமோசனம் அடைந்தார். இங்கு முதல் காரணமாக அமைந்த வினாயக ரையும், நந்தி திருவுருவச் சிலைகளையும் காணலாம். இக்கோயிலில் வீற்றிருக்கும் வினாயகர் இந்திர வினாயகராக போற்றப்படுகிறார். எதிரில் காணப்படும் கிணறு இந்திரக் கிணறு என்றும், திருக்கிணறு என்றும் அழைக்கப்படுகிறது.

## திருக்கோயில் சிறப்பு அம்சங்கள்

### சுசிந்திரம் திருக்கோயிலின் தனித்தன்மை

பலவிதங்களில் சிறப்புடைய இத்திருக்கோயிலின் பூஜை முறைகளில் தனித்தன்மை காணமுடிகிறது. பல மன்னர்களால், பல காலகட்டங்களில் திருப்பணிகள் செய்யப்பட்டு முழுமையான திருக்கோயிலாக திகழ்கின்றது. இந்து மதத்தின் அனைத்துத் தெய்வங்களையும் இங்கு காணலாம். சைவத்திற்கும், வைணவத்திற்கும் ஒரேபோல் முக்கியத்துவம் கொடுத்து சிவன், விஷ்ணுவிற்கு பூஜைகளும், திருவிழாக்களும் இங்கு நடைபெற்றுவருவது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

தமிழகத்துச் சிவாச்சரியர்களும், (பட்டர்கள்) கர்நாடகத்தைச் சார்ந்த துளு போற்றிமார்களும் கேரளத்து மலையாள நம்பூதிரிமார்களும் இத்திருக்கோயிலில் பூசாரிகளாக உள்ளனர். கொன்றயடி திருக்கோயிலின் தந்திரியாக பட்டர் எனப்படும் நம்பியார்களும். தாணுமாலயன், விஷ்ணு (பெருமாள்) சன்னதிகளில் நம்பூதிரிகளும், உற்சவ மூர்த்திகளுக்குப் பூஜைகள் செய்ய திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரின் ஆட்களும் இருந்து வருகின்றனர்.

தெக்கிடம் பெருமாள் என அழைக்கப்படும் விஷ்ணுவின் திருவுருவமானது கடுசக்கரை யோகத்தால் (மருந்து) உருவாக்கப்பட்டு அவர் எப்போதும் அலங்காரப் பிரியாரகவும், சிவன்-அபிஷேகப்

பிரியராகவும் இங்கு காட்சி தருகின்றனர். விஷ்ணுவாகிய பெருமாளுக்கு அபிஷேகம் கிடையாது. இங்குள்ள உற்சவ மூர்த்திகளுக்கு விசேட நாட்களில் மட்டுமே அபிஷேகங்கள் நடைபெற்று வருகின்றன, இந்திரன் வந்து அர்த்தசாம பூஜை (இந்திரன் பூஜை) செய்வதாக ஐதீகம் உள்ள இத்திருக்கோயிலில் இரு பூசாரிகள் (மேல்சாந்தி) மாறி, மாறி இரண்டு சன்னதிகளிலுமாக பூஜை செய்து வருகின்றனர். இரண்டு சன்னதிகளில் (பெருமாள், தாணுமாலயன்) புதிதாக பூஜைக்கு வருபவர்கள் மூலஸ்தானத்தின் முன் நின்று **"அகம் கண்டதை புறம் கூறமாட்டேன்."** என்ற சத்தியபிரமாணமும், ரகசிய காப்பு பிரமாணமும் செய்த பின்புதான் கருவறைகளில் (மூலஸ்தானம்) பூஜை செய்ய அனுமதிக்கப்படுகிறார்கள்.

இந்நிகழ்ச்சியை நடத்தி மந்திர உபதேசம் செய்து கொடுக்கும் அதிகாரம் மற்றும் அனுமதி திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகருக்கே இன்றும் இருந்து வருகிறது. இது காலாகாலமாய் நடைபெற்று வருகிறது. விழாக்காலங்களில் இரவு இறைவன் வீதியுலா முடித்து திருக்கோயிலினுள் வந்த பிறகே தீபஆராதனை, பூஜைகள், ஶ்ரீபலி போன்றவை நடைபெறுகிறது. வேறு எந்த கோயிலிலும் நடைபெறாத ஆகமவிதி பல காலமாக இங்குக் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. மேலும் ஸ்தாணுமாலயர் சன்னதியில் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும் வைபவம் மிகவும் முக்கியத்துவம் பெற்றதாகும். கேரளாவில் முதன் மந்திரியாக இருந்த பட்டம் தாணுபிள்ளை, ஆங்கிலேயர் ஆட்சிகாலத்தில் ஐ.சி.எஸ். பதவி வகித்த தாணு ஐயர் போன்றவர்களுக்கு கூட இங்கு பெயர் சூட்டுதல் வைபவம் நடத்தாக அறிய முடிகிறது. இது தற்போதும் நடந்து வருகிறது. இதனை திருக்கோயிலுடைய ஸ்தானிகரே செய்து வருகிறார்.

## பூஜை விதிமுறைகள்

தந்திர ஸமுச்சயம் என்ற நூலில் உள்ள ஆசாரவிதிப் படி இங்குள்ள பூஜை முறைகள் நடந்து வருகிறது, என்றாலும், திருவிழாக்களில் தமிழ் பண்பாட்டின் கலாச்சாரமும் தொன்று

தொட்டே காணப்பட்டு வருகிறது. சுமார் மூன்று மைல் தொலைதூரமுள்ள மக்களைக் கூட துயில் எழுப்பும் இத்திருக் கோயில் ஆலயமணி நிசப்த வேளையில் அதிகாலை மூன்று மணிக்கு ஒலிக்கிறது. ஆம்! திருக்கோயில் அதிகாலை அபிஷேக ஆராதனையைக்காண ஒருமணி நேரத்திற்கு முன்னதாகவே மக்களைத் தட்டி எழுப்பி தரிசனத்திற்குத் தயாராகிட கட்டளையிடுவதுபோல் முதல் மணியோசையும், அபிஷேகம் மற்றும் ஆராதனைக்குப் பூசாரிகள் வந்து விட்டதை தெரிவிக்கும் வண்ணம் அதிகாலை 4மணிக்கு இரண்டாவது மணி யோசையும் ஒலிக்கிறது. இது ஊர் மக்களுக்கு மட்டுமல்ல, ஆலயப் பணியாளர்கள் தத்தம் கடமைகளைச் (பூஜைகளுக் குரிய நிவேத்தியங்களை தயாராக்கிடவும், பள்ளி எழுச்சி நாதஸ்வர இசை ஒலித்திடவும்' துப்புரவு பணிகளைத் தொடங் கிடவும்.) செய்திட இறைவன் அழைப்பது போன்று மணி ஒலிக் கின்றது. முதலில் கேட்கும் மணியோசை ஆரம்பத்தில் ஒவ்வொன்றாகவும் பிறகு சேர்ந்து ஒலிக்கும் மணியின் நாதம் பள்ளி எழுச்சி பாடி நம்மைத் துயில் எழுப்புவது போன்ற உணர்வினைத் தூண்டுகிறது.

முதன் முதலாக ஆதி மூலஸ்தானமாகிய கொன்றை மரத்தடியில் தனித்தனியே அமைந்திருக்கும் மூன்று லிங்கங்களுக்கு அதிகாலை 4.15க்கு அபிஷேகமும் ஆராதனையும் நடந்து முடிந்து, 4.45. மணிக்கு ஸ்தாணுமாலயர் சன்னதியில் அபிஷேகம் நடைபெறுகிறது. அடுத்து 5.30க்கு உஷை பூஜையும், 6.30க்கு தாரை அபிஷேகம் மற்றும் மிஷ்டான பூஜை முடிந்து 7 மணிக்கு ஸ்ரீபலியும், பகல் 11.00 மணிக்கு உச்சக்கால பூஜை, தீபாராதனை மற்றும் ஸ்ரீபலியோடு நண்பகல் 12.00 மணிக்கு கருவறை திருநடையும் ஒரு மணிக்கு திருக்கோயிலில் பெரிய வாசலும் சாத்தப்படுகிறது.

மாலை 4.00 மணிக்கு மீண்டும் திருக்கோயில் பெரிய வாசல் திறக்கப்பட்டு, 5.00 மணிக்கு மூலஸ்தான திருநடை திறக்கப்பட்டு மாலை 6.30க்கு தீபாராதனையும் அத்தாழ (இரவு) -பூஜை ஸ்ரீபலியும் முடிந்து இரவு 8.30க்கு திருநடைகள் அனைத்தும் சாத்தப்படுகிறது. அன்றாடம் இரவு இந்திரன் பூஜை நடப்பதால் இங்கு அர்த்த சாம பூஜை கிடையாது. மேற்கண்ட

பூஜைகள் அனைத்தும் கோயில் தோன்றிய நாளிலிருந்து இன்றுவரை காலம் தவறாமல் நடந்து வருகிறது.

நாள்தோறும் தாணுநாத சுவாமி மூலஸ்தானத்தில் இரவு அத்தாள ஸ்ரீபலி சுற்று முடிந்து திருநடைகாப்பு இடும் முன்னர் திருக்கோயில் இசை வாணர்களால் பல நூற்றாண்டு காலமாக நீலாம்புரி பண்ணில் இப்பாடல் பாடப்பட்டு அதன் பின்னரே சித்திர மணிவாசல் திருக்காப்பு இடப்பட்டு (நடை சாத்தப்பட்டு) வந்தது. 1974-ம் ஆண்டு வரை (நடைசாத்துப் பாடல்) பழக்கத்தில் இருந்து வந்தது.

## *மார்கழி மகத்துவம்*

மாதங்களில் சிறப்புடையது மார்கழி மாதமாகும். இம்மாதத்தைப் பற்றி பாடாத கவிஞர்கள் இல்லை. மாலைசூடிக் கொடுத்த நாச்சியார் பரந்தாமனைப் போற்றிப் பாடிய பாமாலையாகிய திருப்பாவையில் பாவையரை (பெண்களை) நீராட அழைத்து ஸ்ரீமன் நாராயண மூர்த்தியை வணங்கிப் போற்றிட அவரை வர்ணிக்கும் பாசுரங்களில், மார்கழியின் மகத்துவத்தை அறியமுடிகிறது ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை பாடல்கள். தேன்சுவை போல் இனிக்கின்ற திருவாசகத்தைத் தந்த மாணிக்கவாசகப் பெருமான் பாடியருளிய திருவெம்பாவைப் பாராயணத்திலும் சிவபெருமான் பள்ளி எழுந்தருள பாடிய பாடல்களிலும் மார்கழி மாதத்தின் பெருமையை பற்றி நாம் அறிய முடிகிறது. கண்ணன் தன்னைப்பற்றிக் கூறும்போது "மாதங்களில் நான் மார்கழியாக இருக்கின்றேன்" என பகவத் கீதையில் அறியமுடிகிறது.

அடுத்து இத்தமிழ் மண்ணில் நாஸ்திகனாக இருந்து ஆஸ்திகனாக மாறிய, அமரர் கவியரசு கண்ணதாசன் அவர்கள் கண்ண பெருமானின் தாசனாக வாழ்ந்து, காவியங்கள் பல படைத்து இந்து மதத் தத்துவத்தை நூலாகவும், ஒலி நாடாவாகவும் அமைத்து இல்லங்கள் தோறும் ஒலிக்கச் செய்தார். அவர் தம் பாடலில் "மாதங்களில் அவள் மார்கழி"-யென பெண்ணின் பேரழகையும், பெருமையையும் மார்கழிக்கு ஒப்பிடுகிறார். என்கிறார்.

## இராஜ ராஜ சோழனின் பெருமை

இத்தகைய பல சிறப்பினைக் கொண்ட மார்கழி மாதத்தில் இத்திருக்கோயிலுக்குத் திருப்பணிகள் பல செய்து, விழாக்களுக்கும், பூஜைக்கும் ஏராளமான நிலங்களையும் கோயிலுக்கு அளித்த மன்னன் ராஜ ராஜனின் பிறந்த தினமான சதய நட்சத்திரத்தில், இத்திருக்கோயிலின் திருவிழாக்களில் பெருவிழாவாக கொண்டாடும் மார்கழி திருவிழாவின் தொடக்கவிழா திருக்கொடியேற்றத்துடன் தொடங்குகிறது. அதாவது மார்கழி திருவிழாவைத் திருக்கோயிலில் முதலில் தோற்றுவித்த பெருமை மன்னன் ராஜராஜனுக்கே உரியது. அம்மன்னனைப் பற்றிய சிலக் குறிப்புகளைக் காண்போம்:-

நஞ்சை நெல் விளையும் தஞ்சையை தலைநகராகக் கொண்டு சோழ மண்டலத்தை ஆண்ட மன்னனும் நாயன்மார்கள் மூவர் அருளிய தேவாரத்தை நாட்டிற்கு தந்து நம சிவாயப் பெருமையை நாமும் பாடிப்பயன்பெற வகை செய்தவனும் சைவ சமயம் தழைத்தோங்க தன்னையும் அர்ப்பணித்த ராஜராஜன் இத்திருக்கோயிலுக்கும் பல திருப்பணிகள் செய்துள்ளதை ஏற்கனவே அறிந்தோம்.

## நிலையான பரம்பெருளும், நிலையில்லா மனிதனும்

நாடு சிறக்க மன்னன் இராஜராஜசோழன் புரிந்த தொண்டுகளும் மக்கள் நலமோடு வாழ மகேசுவரர்க்கு (சிவபெருமான்) அவர் செய்த திருப்பணிகளும் ஏராளம். தாராள மனத்தோடு, இத்தரணி நிலங்களையும், சுசீந்திரன் பூஜித்த, தாணுமாலயனுக்கும் தந்து, மாமலைகளைப் பேர்த்தெடுத்து மகாதேவரெல்லாம் வீற்றிருக்க மாபெரும் கோயில்களும் தந்தார். ஓலைச் சுவடிகளிலும், கல்வெட்டுகளிலும், சரித்திர நூல்களிலும் இடம் பிடித்த இப்பெருமகன், திருத்தொண்டுகள் பல புரிந்து சிறப்புற்று விளங்கும் திருக்கோயில்களில் கூட, தன் திருவுருவச் சிலையை நிலை நிறுத்தவில்லை. நிலைத்து நிற்கும் தெய்வ சன்னதியில், நிலையில்லா மனிதன் சிலை வைக்க மன்னன் விரும்பவில்லை போலும்.

### *மாமன்னன் பிறந்தநாள் விழா*

ஆயிரம் ஆண்டு காலமாக மன்னன் இராஜராஜ சோழரின் பிறந்தநாள் விழா குமரி மாவட்டத்தின் மிகப்பெரிய விழாவாக நடைபெற்று வருகிறது. இதில் முக்கிய அம்சமாக மன்னர் வழங்கியது தில்லை நடராஜரின் பஞ்சலோக விக்கிரகம் இவ்விக்கிரகம் ஆயிரம் ஆண்டு காலமாக பாதுகாக்கப்பட்டுக் காலம் தவறாமல் பூஜைகள் இன்றும் நடைபெற்று வருகிறது.

சுமார் 3.1/2 அடி உயரங்கொண்ட இவ்விக்கிரகம் இங்குள்ள உற்சவ மூர்த்திகளில் மிகப்பெரியதாகும். கலையம்சம் நிறைந்த இவ்விக்ரகத்திற்கு ஆபரணங்கள் அணிவித்து மார்கழி, சித்திரை திருவிழாக்களின் போது வீதியுலா வருகின்ற காட்சி அற்புதமானது.மன்னன் பிறந்த .நாளாகிய சதயம் நட்சத்திரத்தில் தொடங்கி, மலையாள மக்கள் மிகச் சிறப்பாகக் கொண்டாடும் திருவாதிரையன்று விழா முடிகிறது. தேவாரத் திருப்பதிகப் பாசுரங்களை வெளிக்கொணர்ந்தவர் பெருவுடைச் சோழரான இராஜராஜ மன்னரல்லவா. தேவார, திருவாசகத்தை அருளிய அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகியோரின் பஞ்சலோக விக்கிரகங்களும் மார்கழித் திருவிழாவில் இறைவனோடு வலம் வருவது முக்கிய அம்சங்களிலொன்று.

## மார்கழித் திருவிழா பத்துநாள் விளக்கங்கள்

**தத்துவம் :-** மார்கழியின் மகத்துவத்தை அறிந்தோம். இந்த மாதத்தில் சுசீந்திரம் அருள் தரும் தாணுமாலய சுவாமி திருக் கோயிலில் நடைபெற்றுவரும் இவ்விழா மாவட்டத் திருக் கோயில்களில் முதன்மையான மிகப்பெரிய விழாவாகும். பல நூற்றாண்டு காலங்களாக நடைபெற்று வரும் பத்துநாள் விழாக்களிலும் மாவட்டத்தின் பெருவாரியான மக்கள் பங்கேற்கும் காட்சியைக் காணமுடிகிறது. மகத்துவம் பெற்றத் திருவிழாவில் சிறப்பு வாய்ந்த தத்துவங்கள் பல அடங்கியுள்ளதையும் காணலாம்.

## விழாவின் முக்கிய அம்சங்கள்

திருக்கொடியேற்றத்திற்கு முந்திய நாளில் காலை சுபமுகூர்த்த வேளையில் கொடிக்கயிற்றிற்கு மஞ்சள் பூச "மஞ்சள் வழங்கும் விழா" நடைபெறுகிறது. நாஞ்சில் நாட்டு பன்னிரெண்டு பிடாகைத் தலைவர் (கிராம சமுதாயம்) களுக்கு அழைப்பு விடுத்து அவர்களும், பதினெட்டு யோகத்து மடங்களின் தலைவர்களும் மற்றும் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர். ஊர்ப் பிரதிநிதிகள், திருக்கோயில் நிர்வாக அதிகாரிகள் ஆகியோர் கலந்து சிறப்பிக்கும் விழாவாக இன்றுவரை நடைந்துவருகிறது. காலப்போக்கில் மேற்கண்டவர்கள் எண்ணிக்கை குறைந்தாலும்,. விதிமுறைப்படி ஆலய நிர்வாகம் தங்குதடையின்றி நடத்தி வருவது முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

அதன் பின்னர் கோட்டாறு இடலாக்குடி பட்டாரியர் சமுதாய மக்களால் கொடிப்பட்டத்திற்கான துணியானது மேள தாளத்துடன் வெகுவிமரிசையாக ஊர்வலமாக எடுத்துவரப்பட்டு திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரிடம் ஒப்படைக்கும் நிகழ்ச்சியும் நடந்து வருகிறது. இந்தச் சமுதாய மக்களுக்கும் இவ்வாலயத்தில் இருந்து வரும் தொடர்பினை மேற்காணும் நிகழ்ச்சியிலும் மார்கழித் திருவிழா 10-ம் நாள் மாலை நடைபெறும் ஆருத்ரா தரிசன வைபவத்தில் கலந்து சிறப்பிக்கும் நிகழ்ச்சியிலும் காணலாம்.

திருவிழாவின் முந்தியநாள் இரவு கோயிலின் வடக்கு பாகத்தில் எழுந்தருளியிருக்கும் முன்னூற்று நங்கை திருக் கோயிலில் "ஓங்காரபலி" பூஜை மற்றும் ரதவீதிகளில் பலிபூஜை ஊர்க்காவல் தெங்வங்களுக்கு நடத்திய பிறகே மறுநாள் கொடி யேற்ற பூஜை ஆரம்பமாகிறது. திருவிழா பத்து நாட்களிலும் காலை இரவு ஆகிய இரு நேரங்களிலும் இந்த ஸ்ரீபூதபலி பூஜை இன்றுவரை தவறாது நடைபெற்று வருகிறது. மேற்கண்ட பூஜைகளைத் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரும் அவரது குடும்பத்தினரும் செய்து வருகின்றனர். இந்த சிறப்பு பூஜை மூலமாக திருவிழா காணவரும் வெளியூர் ம்க்களுக்கு எந்த துன்பங்களையும் காவல் தெய்வங்கள் செய்திடா

வண்ணம் காக்க வேண்டும் என்ற உயர்வான தத்துவத்தைக் கொண்டுள்ளது. மற்றைய கோயில்களில் நடைபெறாத இவ்வழக்கம் இங்கு இன்றுவரை நடந்துவருவது மிகவும் பெருமை வாய்ந்த அம்சமாகும். விழா முடிவு நாளான பத்தாம்நாள் மேற்படி முன்னூற்று நங்கை தெய்வத்திற்குப் பூஜை நடத்திய பிறகே கொடியும் இறக்கப்பட்டு 11-ம் நாள் அதிகாலை ஐந்து மணிக்குப் பூஜை முடிவு பெறுகிறது. ஆகமவிதி எடுத்துக்காட்டிற்கு இதுவும் ஒன்று.

## முதல்நாள் விழா

திருக்கொடியேற்று ஆரம்பமாவதற்கு முன்பாக அதிகாலை மூலவர் சன்னதியில் உள்ள உதயமார்த்தாண்ட மண்டபத்தில் திருவாசகம் தந்திட்ட மாணிக்கவாசகர் பெருமானின் திருவுருவ விக்கிரகத்தை கிழக்கு நோக்கிவைத்து அவருக்குப் பூஜையும், கொடிப்பட்டத்திற்குப் பூஜையும் முதலில் முடித்து நந்தி தேவருக்குக் கலச அபிஷேகமும் நடத்திக் கொடிப்பட்டத்தை ரத வீதிகளில் வீதியுலா முடித்து. கொடிமர மண்டபத்தில் கொண்டு வைத்து பூஜைகள் அனைத்தையும் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் செய்து முடிக்கின்றார்.

நாதஸ்வர மேளத்தோடு, பஞ்ச வாத்தியங்கள் முழங்க மங்கள நேரத்தில் சதய நட்சத்திரத்தில் கொடிப்பட்டத்தை யோகத்து போற்றிமார்கள் சார்பில் தெற்குமண்மடம் ஸ்தானிகர் கொடிக்கயிற்றைப் பெற்று ஏற்றிவைக்கிறார். பிறகு கொடி மரத்திற்கு அலங்காரம் செய்வித்து, ஆகமவிதிமுறைப்படி கொடிமரத்திற்குப் பூஜைகள், ஆராதனைகள் நடத்தி முடித்து தேர்களுக்குக் கால்நாட்டு வைபவமும் நடைபெறுகிறது. கொடி ஏற்றத்தின்போது கொடிமர மண்டபத்தின் நான்குபுறமும் ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்து பெண்களின் குரவை ஒலியோடு நமசிவாய நாமங்களும் இம்மண்டபத்தில் எதிரொலிப் பதை கேட்க முடிகிறது. காலங்கள் பல நூற்றினைக் கடந்தாலும் ஆகம விதிகளை பேணிக்காத்து வருவதை இன்றும் காண முடிகிறது. மன்னர் ஆதித்தியவர்மா பணிமுடித்து கொடுத்ததினால்

அவர் பெயராலே "ஆதித்திய மண்டபம்" என அழைக்கப்படுகிறது.

### பேரிதாடன பூஜை

திருக்கொடியேற்று நடந்து அன்று இரவு உதயமார்த்தாண்ட மண்டபத்திலுள்ள நந்தி மண்டபத்திற்கு முன்பு அனைத்து உற்சவமூர்த்திகளையும் கொண்டு வைத்துப் பூஜை முடித்து பாரிசைவன் (சங்கு ஊதுபவர், பாணி என்ற மத்தளம் கொட்டுபவர்) கொண்டு வரும் மரத்தினால் செய்யப்பட்ட பாணியை வைத்து பேரிதாடன பூஜை நடைபெறுகிறது. கோயிலைச் சுற்றியும் ரதவீதிகளிலுமாக அமைந்துள்ள காவல் தெய்வங்களுக்கு அறிவிப்பு கொடுப்பது போன்று பாணி இசைக்கப்படுகின்றது. அதன்பின்பு நடராஜர் கோயிலில் வைத்து "அங்கூரார்ப்பணபூஜை" துவக்கப்படுகிறது. அதற்காக ஆற்றிலிருந்து மணல் எடுத்து வரப்படுகிறது. இது ''மிருத்துசங்கரணம்'' என்று கூறப்படுகிறது. 36செம்பு பாத்திரங்களில் மணலும் நவ தானியங்களும் போட்டு முளைபூஜை நடைபெறும்., தொடர்ந்து பத்து நாட்களில் காலையும் இரவும் இதற்குப் பூஜை செய்து 10ம் நாள் இரவு சூரிய ஒளிபடாமல் செடியாக வளர்ந்த நவ தானிய முளையானது மூலஸ்தானத்திலும் உற்சவ மூர்த்திகளுக்கும் சாத்தப்பட்டு ஆறாட்டு நடைபெறுகிறது.

### இரண்டாம் நாள்

அதிகாலை 4.00 மணிக்கு மூஷிக வாகனத்தில் கணபதி வீதியுலா வருவதும் காலை 8.00 மணிக்கு பூங்கோயில் வாகனத்திலும் அன்று இரவு 9.00 மணிக்கு புஷ்பக வாகனத்திலும் வீதியுலா நடைபெறுகிறது. அதற்கு முன்பு தெற்கு ரத வீதியிலுள்ள தாழங்குண்டு மண்டபத்தில் வைத்து மண்டகப்படி பூஜை நடத்தி திருக்கோவிலுக்கு வாகனம் எடுத்துவரப்படுகிறது.





மார்கழித் திருவிழாவில் கலந்து கொள்ளும்
மருங்கூர் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி, குமாரகோவில் முருகன்
குதிரைகள் மீது பவனிவரும் காட்சிகள்.

## மூன்றாம் நாள் மக்கமார் சுற்று

காலை 8.00 மணிக்கு புஷ்பக விமானத்தில் வீதியுலா காட்சியும். இரவு 10.00மணிக்கு சுவாமி கற்பக விருக்ஷ வாகனத்தில் வீதியுலா புறப்பட்டு வடக்குத்தெரு கொட்டாரம் வாசலில் வைத்து கோட்டாறு வலம்புரி வினாயகர், மருங்கூர் சுப்பிரமணிய சுவாமி, குமார கோயில் சுப்பிரமணிய சுவாமி ஆகிய மூவரும் தாய், தந்தையர் வீட்டில் நடக்கும் விழாவினைக் காணவந்து, அவர்களைச் சந்தித்து, உமா-மகேஸ்வரர், மகாவிஷ்ணு, அம்பாள் ஆகியோர் அமர்ந்திருக்கும் வாகனங்களை விநாயகரும், சுப்பிரமணியரும் மூன்றுமுறை சுற்றி வலம் வந்து ஆசிபெறுகின்றனர். பின்பு இருபுறமாக கிழக்கே பார்த்து அனைவரும் சேர்ந்து நின்று பக்த பெருமக்களுக்கு காட்சி தந்து, ஒரே நேரத்தில் ஒன்றுபோல தீப ஆராதனைகளும் நடைபெறுகிறது. இக்காட்சி வருடத்தில் ஒருமுறை மட்டுமே இங்கு நிகழ்கிறது. திவ்வியமான இத்தரிசனத்தை மக்கள்மார் சந்திப்பு என்றும் மக்கள்மார் சுற்று என கூறப்படுகிறது. ஏழு நாட்கள் விநாயகரும் சுப்பிரமணியரும் தாய் தந்தையரின் திருத்தலத்தில் தங்கி அவர்களோடு விதவிதமான வாகனங்களில் வீதியுலா வருகின்ற அற்புதக்காட்சி எங்குமே காணக்கிடைக்காததாகும். இக்காட்சியை ஆயிரக்கணக்கான மக்கள் கூடி நின்று தரிசிப்பதையும் காணமுடிகிறது. ஆசிராமம் காசிவாசி திருப்பனந்தாள் ஆதின மடத்தின் சார்பாக தெற்கு ரதவீதி பிள்ளைமடத்தில் வைத்து சிறப்பு பூஜைகளும், ஆராதனைகளும் நடத்தப்பட்டு வாகனத்தை திருக்கோவிலினுள் எடுத்துவரப்படுகிறது. அதன்பிறகே, இரவு நேர வீதியுலாவிற்கு புறப்படுகிறது.

## நான்காம் நாள்

காலை 8.00 மணிக்கு ஸ்ரீபூதவாகனத்தில் சுவாமி வீதியுலா எழுந்தருளலும், மாலை 5.00 மணிக்கு சுசீந்திரம் திருவாடுதுறை ஆதீன மடம் சார்பில் நாயக்கமடம் கோயிலில் வைத்து சுவாமிக்கு அஷ்டாபிஷேகம் நடைபெற்று அலங்காரம் செய்வித்து, ஆராதனை முடித்து முழுவதும் பூக்களால் அலங்காரம் செய்விக்கப்பட்ட பறங்கி நாற்காலி வாகனத்தில் எழுந்தருளச்செய்து

ஆதீன இசை வாணர்களின் தேனமுத தேவாரப் பாடலோடு நாதஸ்வரக் கலைஞர்களின் மேளதாளம் காதினில் ஒலிக்க ஆதீன மடத்திலிருந்து ஊர்வலமாக எடுத்து திருக் கோயிலுக்குள் சுவாமி வாகனத்தைக் கொண்டுவைத்து. ஆராதனை நடத்தி பின்னர் இரவு 10.00 மணிக்கு வீதியுலா காட்சி நடைபெறுகின்றது.

## ஐந்தாம் நாள் பஞ்சமூர்த்தி தரிசனம்

அதிகாலை நான்கு மணிக்கு ரிஷப வாகனத்தில் உமா-மகேஸ்வரரும், கருட வாகனத்தில் மகாவிஷ்ணுவும், அன்ன வாகனத்தில் அம்பாளும். ஸ்ரீபூத வாகனத்தில் சந்திரசேகரரும் மற்றும் உற்சவ விக்ரகங்களுடன் வீதியுலாவிற்காக எடுத்துச் சொல்லப்படுகிறது. கோயில் முகப்பில் வைத்து குதிரை வாகனங்களில் இரு முருகன்களும் மூஷிக வாகனத்தில் விநாயகரும் வீதியுலாவில் இணைந்து கொள்கிறார்கள். திருக்கோயிலை வலம் வந்தபின் நடுத்தெருவில் அதிகாலை 6.00மணியளவில் வீரமார்த்தாண்ட விநாயகரைப் பார்த்து மேற்குநோக்கி வாகனங்கள் நிற்கும். அவ் வேளையில் வானத்தில் இரண்டு கருடன்கள் வட்டமிட்டு செல்வதைக்காணலாம். பஞ்சத்தைப் போக்கும் பஞ்சமூர்த்தி தரிசனக்காட்சி, வருடத்திற்கொருமுறை மும்மூர்த்திகளைக் காண அத்திரி அனுசுயா தம்பதியினர் கருட வடிவில் வருவதாக நம்பப்படுகிறது. கலை நுட்பம் பொருந்திய இந்த வெள்ளி வாகனங்களை திருவிதாங்கூர் மன்னராக விளங்கிய ஸ்ரீமூலம் திருநாள் மகாராஜா ஆ.ஆ1909 (த.ஆ.1885) மார்கழி 13ம் தேதி செய்வித்ததாகும்.

இந்தத் தெய்வீகக் காட்சியைக் காண அதிகாலை வேளையில் ஆயிரக்கணக்கான மக்கள் இத்தெருவில் நிரம்பி நிற்பது கண் கொள்ளா காட்சியாகும். பஞ்சமூர்த்தி தரிசன காட்சியை நூறு ஆண்டுகளுக்கு முன்பாகவே இராஜ கோபுரத்தில் ஒவியமாக வரைந்துள்ளார் பிரம்ம ஸ்ரீ பாச்சுமுத்தது பெரியார். அன்று மாலை 5.00 மணிக்கு ஊஞ்சல் மண்டபத்தில் வைத்து சுவாமிக்கு நாகர்கோவில் பயோனியர் குடும்ப வழிபாடாக,

## 4-ம் திருவிழா



திருவாடுதுறை ஆதீன
மண்டகப்படி வாகனம்



விழா காலங்களில் வீதிகளில்
வலம் வருகின்ற வாகனங்கள்



5-ம் திருவிழா அதிகாலை பஞ்சவாத்தியங்கள்
இசைமுழங்க பஞ்சமூர்த்திகள் புறப்பட்டு வரும் காட்சி



நஞ்சை வளம் கொளிக்கும் நாஞ்சில் மண்ணில் பஞ்சத்தைப் போக்கவல்ல பஞ்சமூர்த்திகள் பவனிவந்து, மார்கழித் திருவிழா 5-ஆம் நாள் காலை பக்த பெருமக்களுக்கு காட்சிதரும் அற்புத நிகழ்ச்சி.



வீதியுலா வருவதற்கு விடையேறி வீற்றிருக்கும்
உமா-மகேஸ்வரர்க்கு விருப்பார்ந்த சிவந்திப்பூ மாலையும்,
பிறை சூடிய அவருக்கு சந்திரப்பிறை ஆபரணங்களும் சார்த்தி
அழகுடன் அலங்காரம் செய்வித்திருக்கும்
ஐந்தாம் திருவிழா இரவுக்காட்சி

## 5-ம் திருவிழா காட்சிகள்



கருட வாகனத்தில்
மகாவிஷ்னு



5-ம் திருவிழா அதிகாலை
சுவாமி வீதியுலாக் காட்சி



அன்ன வாகனத்தில்
அம்பாள்



## 5-ம் திருவிழா இரவு
## வாகன அலங்காரக் காட்சிகள்





அஷ்டாபிஷேகம் நடைபெற்று இரவு 9.30க்கு சுவாமி வீதியுலா நடைபெறுகிறது. இத்திருக்கோயில் இறைவனுக்கு மன்னர்கள் வழங்கிய ஆபரணங்களுடன், செவ்வந்தி பூமாலையும், எலுமிச்சை பழ மாலையோடு மஞ்சள் நிறமாக காலையில் காட்சிதந்த இறைவன், இரவில் ஆபரணங்கள் அழகூட்ட பிச்சி, முல்லை, ரோஜா, வெள்ளெருக்கம் பூமாலைகள் சார்த்தி அபிஷேகப் பிரியருடன் அலங்காரப்பிரியரும், அம்பாளும் வீதியுலாவிற்கு திருக்கோயிலுள்ளிருந்து வெளிவரும் பேரழகைக்காண பேரானந்தமுடன் பக்தபெருமக்கள் வாயில் முன் காத்து நிற்கும் கண்கொள்ளக்காட்சி காணக்கிடைக்காத அற்புதக்காட்சியாகும். 5ஆம் திருவிழா அதிகாலை வீதியுலாவிற்கு வரும் ரிஷபவாகனத்தில் சிவந்திமாலை சார்த்திய பின்பு தான் இத்திருக்கோயில் மூலஸ்தானத்தில் சிவந்திப்பூக்கள் உபயோகத்திற்கு எடுக்கப்படுகிறது. காலங்காலமாய் இருந்துவரும் நடைமுறைப் பழக்கம். இந்த நாளில் வாகனத்திலுள்ள உற்சவமூர்த்திக்குச் சார்த்தப்படும் முதல் சிவந்திமாலையை திருவிதாங்கூர் சமஸ்தான மன்னருக்கு பிரசாதமாக கொடுத்து அனுப்பவது வழக்கமாக இருந்தது.

### ஆறாம் திருவிழா, திருஞானசம்பந்தருக்கு திரு முலைப்பால் வழங்கும் காட்சி

காலை 9.00 மணிக்கு பூங்கோயில் வாகனத்தில் சுவாமி வீதியுலா வருவதற்கு முன்பு முகப்பு மண்டபத்தில் வைத்து திருஞான சம்பந்த பெருமானுக்கு திருமுலைப்பால் வழங்கிடும் காட்சியை நினைவூட்டிட சுவாமி முன் பால் நிவேத்திய நிகழ்ச்சி நடைபெறுகிறது. வீதியுலாவின் போது ஞானசம்பந்தரும், திருநாவுக்கரசு நாயனாரும் இறைவனோடு வலம் வருகின்றனர். திருவிழா ஆரம்பத்திலிருந்து முடியும்வரை மாணிக்கவாசகர் வீதியுலா வருவது மார்கழியில் மட்டுமே. இத்திருக்கோயிலில் மலையாள ஆசாரப்படி பூஜைகள் நடந்தாலும், திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர்கள் ஆட்சியின் கீழ் இருந்தபோதிலும் தமிழ்நாட்டின் பண்பாட்டினை இத்திருவிழா எடுத்துக்காட்டுகின்றது. அன்று மாலை 6.00 மணிக்கு உமா-மகேஸ்வரர்க்கு சுசீந்திரம் தெற்கு ரதவீதி ஐயன் மடத்தில் வைத்து மண்டபப்படி எனும்

சிறப்பு பூஜை நடை பெறுகிறது. கல் மண்டபத்தோடு வீடும் சேர்ந்திருப்பதால் இந்த ஒரு இடத்திற்கு மட்டும் ஆண்டிற்கு இருமுறை (மார்கழி, சித்திரை) திருவிழாக்களின் 6-ம் நாள் சுசீந்திரப் பெருமாள் வந்து வீற்றிருந்து பூஜைகளை ஏற்றுக்கொள்வதற்கு ஐதீகமான கீழ்காணும் சம்பவமும் இத்திருத்தலத்தில் நடந்துள்ளது.

## இந்திர பூஜையை நேரில் பார்த்தவர்க்கு நேர்ந்த கதி

பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் சுசீந்திரம் திருத்தலத்தில் வாழ்ந்த வயது முதிர்ந்த பெரியவர் ஒருவர் ஸ்தாணுமாலயப் பெருமாளிடம் அளவுகடந்த பக்திகொண்டு அன்றாடம் ஆலயம் சென்று இருவேளை இடைவிடாது வழிபட்டு வந்தார். ஒருநாள் இரவு தன் இல்லத்தில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த பெரியவர் ஆலய மணியின் ஓசை கேட்டு எழுந்து நீராடி அவசரமாகப் புறப்பட்டு ஆலயம் சென்றார். அக்கால கட்டத்தில் சுற்றுப்பிரகார மண்டபங்கள், வாயில் கதவுகள் இல்லாதிருந்த வேளையில் நேராக மூலஸ்தானம் முன் சென்று அங்கு நடைபெற்ற பூஜைகளைக் கண்டு தரிசனம் முடித்து திரும்பி வரும் வேளையில் எதிரே பூசாரி மற்றும் கோவில் பணியாளர்கள் வருவதைக்கண்டார்.

சுவாமி! இந்த வேளையில் எங்கு வந்தீர்கள்? இன்னும் நடை திறக்கவில்லையே. என வந்தவர் கூற, என்னய்யா, நடைதிறந்திருந்தது. தரிசனம் முடிந்து தானே வந்து கொண்டிருக்கிறேன். என பெரியவர் ஆச்சரியமாக பதில் கூற. சுவாமி! இதோ பாருங்கள். திருநடைத் திறக்க திறவுகோல் நிவேத்தியம் போட பணியாட்கள் என்று கையில் வைத்திருந்த திறவுகோலையும் ஆட்களையும் அடையாளம் காட்டினார் பூசாரி. பெரியவர் அதிர்ச்சியுற்றார். உண்மை உணர்ந்தார். ஆமாம். இப்பொழுது தான் நேரம் விடிந்துள்ளது. இனிமேல்தான் கோயில் திருநடை திறக்கப்போகிறார்கள். நான் கண்டது கனவா நனவா, நடுநிசியில் எழுந்து வந்துவிட்டோமே என மனதுக்குள் எண்ணி குழம்பிய நிலையில் மேலால் அவர்களிடம் ஒன்றும் பதில் கூற முடியாமல் கண்ணில் நீர் ததும்ப பரிதவித்து நின்றார் பெரியவர். சரிதான், சுவாமி அர்த்த ராத்திரியில் வந்து "தேவேந்திரன் பூஜை"

பார்த்திருப்பார் இனிமேல் நாம் செய்யும் பூஜையைச் சுவாமி பார்க்கட்டும் என்று பூசாரியோடு வந்தவர் விளையாட்டாக கூறவே, இதை கேட்ட பூசாரியும் ஆமாம். அப்படித்தான் இருக்கும் என சிரித்துக்கொண்டு பதில்கூற, இவர்கள் இருவரின் பேச்சைக்கேட்டு ஏற்கனவே, குழப்பமடைந்திருந்த பெரியவர் மேலும் அதிர்ச்சியுற்று ஆம்! இவர்களின் விளையாட்டு பேச்சிலும் உண்மை உள்ளது. நாம் கண்டது இந்திரனின் பூஜையைத் தான். சந்தேகமில்லை. யாருக்குமே கிடைக்காத தரிசனம் எனக்கு கிடைத்தது. இத்தனை நாள் இறைவனை வழிபட்டதற்கு கிடைத்த பலன். என மனத்திற்குள் எண்ணி மகிழ்ந்தார். வந்தவர்களிடம் மேற்கொண்டு எதுவும் பேசாமல் பார்த்த காட்சிகளை, அற்புத தரிசனத்தை மீண்டும் நினைத்துக் கொண்டே வந்தவர்களோடு அதிகாலை பூஜைகளைக் காண மீண்டும் திருக்கோயில் சன்னதிக்கு முன்சென்று அமர்ந்தார்.

### *நடைதிறந்தது பார்வை மறைந்தது*

அதிகாலை அபிஷேக நேரம் நெருங்கவே பூசாரி திருநடைத்திறந்து உள்ளே சென்று நடையை அடைத்துவிட்டு உட்புற பணிகளைக் கவனிக்கலானார். பூசாரியோடு வந்தவர்கள் ஆலயத்திலுள்ள அன்றாட பணிகளைக் கவனிக்கலானார்கள். சிறிது நேரத்தில் திருக்கோயில் கருவறைக் கதவுகள் திறக்கப்பட்டது வெளியே சன்னதியில் நின்றிருந்த பெரியவர் அதிகாலை அபிஷேகம் காண எழுந்து கரமகுவித்து கருவறை நோக்கி இறைவனைப் பார்க்கும் வேளையில் இருள்மயமான காட்சி அவர் முன் தெரிந்தது. ஆம்! கருவறையில் ஏற்றிய தீபத்தின் ஒளி தெரியவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தார் எங்கு நோக்கினும் இருள்மயமாகவே இருந்தது. ஆம்! பெரியவரின் பார்வையை பறித்துவிட்டான் இறைவன்.

இக்காலகட்டத்தில் இத்திருக்கோயிலில் தேவேந்திரன் வந்து அர்த்தசாமபூஜை நடத்திவருகிறார் என்று கூறினாலும் நூற்றுக்கு தொண்ணூறு சதவீத மக்கள் மறுத்து பேசுவதை நாம் கேட்க முடிகிறது. ஆதாரம் உண்டா, கல்வெட்டு இருக்கிறதா? என்று கேள்வி கேட்பவருக்கும் ஆதாரமாக விளங்குகிறார் எல்லாம் வல்ல இறைவன் ஸ்தாணுமாலயன்.

பக்தனின் கண்களை பறித்துக்கொண்டார் என்பதைவிட எடுத்துக்கொண்டார் என்றே கூறவேண்டியுள்ளது. தேவர்களுக் கெல்லாம் அரசனாக விளங்கிய "இந்திரனின் பூஜையை" கண்டுகளித்த உமக்கு இதைவிட வேறு எந்த பூஜையைக்காண வேண்டும். தினமும் தவறாது என்னைத் தேடிவந்து வழிபட்ட உன்னை வருடத்திற்கு இருமுறை உனது இல்லம் வந்து நான் காண்கிறேன் என இறைவன் எண்ணியே அந்த பார்வையற்ற பெரியரைக்காண மார்கழி, சித்திரை திருவிழா 6-ம் நாள் இந்த இல்லம் நோக்கி மட்டும் இன்றுவரை வந்துகொண்டிருப்பதாக ஐதீகம். இதுவே சுசீந்திரம் தெற்குதெருவில் உள்ள "ஐய மடம்" என்ற இடமாக விளங்குகிறது. முற்காலததில் இம்மடத்து முன்னோர்கள் விஜயநகர மன்னர்களோடு இங்கு வந்தவர்கள் என தெரியவருகிறது. இத்திருக்கோயிலில் உள்ள அலங்கார மண்டபத்தில் இசை எழுப்பும் சங்கீதத்தூண் ஒன்றை நிறுவிய பொறுப்பும் இவர்களுக்கு உண்டு. இன்றும் இக்கோயிலின் நற்காரியங்களில் இம்மடத்தைச் சார்ந்தவர்கள் மிகுந்த ஈடுபாடுகளுடன் பங்கேற்பதை விசேட நாட்களில் காணமுடிகிறது. பெருமை பெற்ற இம் மடம் சுசீந்திரம் தெற்குரத வீதியில் அமைந்துள்ளது.

## ஏழாம் திருவிழா 'ஆணவத்தை அழித்த நாள்'

அதிகாலை ஐந்து மணிக்கு தந்தப் பல்லக்கில் சுவாமி வீதியுலா எழுந்தருகிறார். ரதவீதிகளில் பதினான்கு பல்லக்குகளில் (வாகனங்கள்) தெய்வங்கள் பவனிவரும் காட்சி மிகவும் சிறப்பு வாய்ந்த அம்சமாகும். மாலை 5.00 மணிக்கு நடராஜ மூர்த்திக்கும், சிவகாமி அம்மனுக்கும் செண்பகராமன் மண்டபத்தில் வைத்து அஷ்டாபிஷேகமும் திருச்சாந்து சார்த்துதலும் நடைபெறுகிறது.

புராண காலத்தில் திரிபுர அரக்கனின் கொடுமை தாங்காமல் தேவர்கள் சிவபெருமானிடம் சென்று முறையிடுகின்றனர். தேவர்களின் குறையைத் தீர்த்து வைக்க திரிபுர அரக்கனோடு போர்புரிந்து அவனை வதம் செய்கிறார் சிவபெருமான். வெற்றியோடு திரும்பிவரும் சிவபெருமானைத். தேவர்கள்

அனைவரும் ஒன்று திரண்டு ஆனந்த களிப்போடு அழைத்து வந்து வெற்றித்திலகமிட்டு அவர் பாத கமலங்களில் வீழ்ந்து வணங்கி நன்றியைத் தெரிவிக்கின்றனர். இந்நிகழ்ச்சியை நினைவுபடுத்தும் விதமாக நடராஜப்பெருமானுக்கு **"திருச்சாந்து சார்த்துதல்"** வைபவம் இங்கு நடைபெறுகிறது.

இரவு 9.30க்கு கைலாச பர்வத வாகனத்தில் சுவாமி வீதியுலா எழுந்தருளுகிறார். வீணைக் கொடியுடைய வேந்தன் இராவணன் காம்போதி பண்ணாலே சாமகானம் பாடி சிவபெருமானைத் தன் வயப்படுத்த முயலுகிறான். சாமகானத்தில் லயித்திருந்த கைலாசநாதன் மெய்மறந்த நிலையில் கண்மூடி வீற்றிருக்க என்னுடைய சாமகான இசைகேட்டும் ஈசன் வரவில்லையே என ஆணவம் கொண்ட இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க முனைகிறான். மலை அசைவினைக் கண்டு அச்சத்தால் உமாதேவியான பார்வதி சிவனைக் கட்டி யணைத்திட ஈசனும் கண்திறந்து தனது கால்பெருவிரலால் மலையினை அழுத்துகிறார். அசைவின்றி நிற்கிறது கயிலை மலை. இராவணன் தன்பலம் முழுவதும் பிரயோகித்து எவ்வளவோ முயன்றும் மலை அசையாமல் நிற்பதைக்கண்டு நாணத்தால் தலைகுனிகிறான். ஈசன்மீது அளவற்ற பக்தி கொண்ட சிறந்த சிவபக்தன், அர்க்கபிரகாசம் எனும் மருத்துவ சாஸ்திர நூலை உலகிற்குத் தந்தவன். நற்குணம் வாய்ந்த சங்கீத மேதை. தவ வலிமையால் ஈசன் திருக்கரத்தால் சந்திரஹாசம் எனும் வீர வாளைப் பெற்ற மாவீரன். இத்தனையும் இராவணனிடமிருந்தும், நான் என்ற ஆணவம் மட்டும் மறையவில்லை. அந்த ஆணவமே அவன் அழிவுக்கும் முதல் காரணமாயிருந்தது.

இந்த நிகழ்ச்சியை எடுத்துக்காட்டும் 7ம் நாள் இரவு கைலாச பர்வத வாகன காட்சி அமைந்துள்ளதைக் காண முடிகிறது. வீணையைக் கையிலேந்தி சாமகானம் மீட்டுவதைப் போன்றும், மற்ற கைகள் கயிலை மலையைப் பற்றி நிற்பதும், கயிலை மலைமேல் உமா மகேஸ்வரர் அமர்ந்திருப்பது போன்றும் வாகனக்காட்சி அமைந்துள்ளது. இது மனத்தை வியக்க வைக்கும் அற்புதக் காட்சியாகும். இராவணனையும், கயிலை மலையையும் சேர்த்து மனிதர்கள் தூக்கி வருவது

## 7-ம் திருவிழா
## அதிகாலை அலங்காரப் பல்லக்குகளில் சுவாமிகள் வீதியுலா வரும்காட்சி





## 7-ம் திருவிழா



திருச்சாந்து வைபவ
நடராஜர் அபிஷேகம்

## நடராஜர் விக்ரகம்



1000 ஆண்டுகளுக்கு முன்னால்
ராஜ ராஜ சோழன் வழங்கிய
பஞ்சலோக விக்ரகம்.

போன்று, வாகனத்தைத் தாங்கிவரும் தெய்வீக நிகழ்ச்சி நம் மேனியை புல்லரிக்கச் செய்கிறது.

கயிலையில் இராவணனின் சாமகான இசைகேட்ட இறைவன், கோபுர முகப்பில் வீற்றிருந்து புகழ்பெற்ற நாதஸ்வர கலைஞர்களின் மல்லாரி கானத்தைக் கேட்கிறான். திருவிளக்கு சுடரொளிகள் மற்றும் தீப்பந்தங்களின் ஒளிபட்டு கயிலை மலை ஜொலிப்பது போல், கைலாச பர்வத வாகனமும், சுவாமிக்கு சார்த்தப்பட்டுள்ள ஆபரணங்களும் தங்கநிற ஒளிபோன்ற மின்னுகின்றது. கைலாச நாதரை எதிர்கொண்டு வரவேற்பது போல் ஆன்மீக மக்களின் கூட்டம் ஆயிரக்கணக்கில் முன் வாயில் முகப்பில் திரளாக வந்து நிற்பதை ஆண்டாண்டுதோறும் காணமுடிகிறது. திரிபுர அரக்கனைக் கொன்று இராவணனின் ஆணவத்தை அழித்து வெற்றிகண்ட இறைவனைத் தேவர்கள் ஒன்று கூடி விழாவெடுத்து சிறப்பித்து அழைத்து வருவது போல் அமைந்துள்ளது. 7ம் நாள் விழா, இவ்விழாவிலே, இந்த இருபதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த ஒரு அதிசயத்தையும் இங்கே குறிப்பிட வேண்டியுள்ளது.

### *அதிசய நிகழ்ச்சி*

சுமார் 60ஆண்டுகளுக்கு முன்னால் திருக்கோயில் ஸ்தாணுமாலய மூர்த்திக்கு விசேஷ நாட்களில் சார்த்துவதற்காக தங்கக்கவசம் (தற்போது சோமவாரம், பிரதோஷம், சித்திரை விசு, திருவிழா காலங்களில் சுவாமிக்குச் சார்த்தப்படுவது). புதியதாக செய்து அதை 7-ம் திருவிழா இரவு வாகனத்தில் எழுந்தருளும் போது அணிவித்து வீதியுலா முடித்து அதன்பின்பு கருவறையில் வைக்கலாம் எனக்கோயில் நிர்வாகமும் ஸ்தானிகரும் முடிவெடுத்து முதன்முதலாக வாகனத்தில் வைத்து அலங்காரம் செய்து வீதியுலாவிற்காக வாகனத்தில் எடுத்து வந்தனர். சுவாமி வாகனம், கோயில் முகப்பு வாயிலில் வந்து சேர்ந்து முன்பு கூறியதுபோல் நாத்ஸ்வர மேளதாளத்துடன் ஆராதனை நடந்து கொண்டிருக்கும் வேளையில், வானில் இடிமுழக்கம் அதிர்ந்திட பெருமழை பெய்தது.

## இயற்கையின் வரவேற்பும், கோபமும்

பொதுவாக மார்கழி மாதம் கொடும்பனிக் காலமாகும். பகலில் கடும் வெயிலும், இரவில் உடலை நடுங்க வைக்கும் குளிர்காற்றும் வீசுவதும் வழக்கம். ஆனால் இங்கே திடீரென்று பெய்த மழையானது அனைவருக்கும் வியப்பை தந்தது. தென்றல் குளிர்க்காற்று சூறைக்காற்றாக மாறி, மழைத்துளியைச் சுழற்றியடித்து மக்களை விரட்டுவதுபோல் அங்குமிங்கும் மழைக்குப் பயந்து மக்கள் கூட்டம் ஓட்டம் பிடித்தது. ஓங்கி யடிக்கும் பெருமழை ஒருமணி நேரமாகியும் ஓயவில்லை. இந்நிலையில் தீப்பந்தங்களையும், மிகவும் அதிகமான எடை மிகுந்த வாகனத்தையும் தோள்களில் சுமந்து செல்வது மிகவும் கடினம், கோயில் பொறுப்பாளர்களுக்கு வாகனத்தை வீதியுலா கொண்டு செல்வதா, அல்லது கோயிலுக்குள் திரும்பக் கொண்டு போவதா போன்ற பிரச்சனை எழுந்தது. இடி மின்னலோடு பெய்கின்ற மழை இறைவனை வரவேற்கவா, அல்லது மூல விக்கரகத்தை வெளியே கொண்டு வரக்கூடாது என இயற்கை கொண்ட கோபமா? என அறியாமல் அனைவரும் தவித்து இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தனர்.

வீதிதோறும் திருவிழாவின்போது வீடுகளின் முன்பு நடத்தப்படும் திருக்கண் சார்த்து வழிபாடுகளைக் கோயில் முகப்பில் கொண்டு வைத்து நடத்தி முடித்து வீதிகளில் மட்டும் சுற்றி வந்து வாகனத்தைக் கோயிலுக்குள் கொண்டு செல்ல அன்றைய திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரான பிரம்மஸ்ரீ பரமேஸ்வரசர்மா அவர்கள் கூறவே அவர் விருப்பத்திற்கிணங்க கொட்டும் மழையில் வீதிகளில் ஒரே சுற்றில் கொண்டு வந்து ஆலயத்தில் சேர்த்தனர். மழையும் உடனே நின்றது. வெள்ளி வாகனமும் வாகனத்தில் உற்சவ மூர்த்திக்குச் சார்த்தபட்டிருந்த தங்ககவசம் மற்றும் ஆபரணங் களின் பொறுப்பு ஸ்தானிகரிடம் இருந்து வருவதால் அதற்குச் சேதம் ஏற்படாத வகையில் ஆலய நிர்வாகமும், ஊர்மக்களும் அவர் விருப்பத்தை அறிய வேண்டியதாயிற்று.

சிறப்பு மிக்க இந்தக் கைலாச வாகனத்தை ஆங் : 1802 (த.ஆ : 977) மார்கழி 20-ம் நாளில்) திருவிதாங்கூர் சமஸ்தான மன்னராக இருந்த ஸ்ரீ அவிட்டம் திருநாள் மகாராஜா செய்து

கொடுத்ததாக 196 வருடங்களுக்கு முன் உள்ள திருவிதாங்கூர் சமஸ்தான முக்கியப் பதிவேடுகள் வாயிலாக அறிய முடிகிறது.

## ஆண்டவனின் அற்புத விளையாடல்

1) முற்காலத்தில் விஜயநகரப் பேரரசு மன்னராட்சியின் போது நம்பிக்கைக்குரிய ஒருவரிடம் மன்னர் திருவிழா நாளில் சுவாமிக்கு அணிவிக்க விலையுயர்ந்த கல்பதித்த பதக்கம் ஒன்றைக் கொடுத்து அனுப்பினார், ஆனால் பதக்கத்தை பெற்றுவந்தவர் சுவாமிக்கு நல்லநாளில் அணிவித்துக் கொள்ளலாம் என்று நினைத்து மன்னர் கொடுத்த பொருளை பாதுகாப்பாக பெட்டியில் வைத்து காத்துவந்தார். ஏழாம் நாள் திருவிழாவின் போது இரவு கைலாச பர்வத வாகனம் வீதியுலா புறப்பட்டு ரதவீதியில் வந்து கொண்டிருந்தபோது ஒரு குறிப்பிட்ட வீட்டின் முன்பு வந்து சுவாமி வாகனம் நின்று விட்டது.

வாகனத்தைச் சுமந்து வந்தவர்களுடைய கால்கள் அடுத்த அடி எடுத்து வைக்க முடியாத நிலையில் அசைவற்று நின்றது. ஏதோ ஒரு சக்தி பிடித்து நிறுத்தியது போன்ற உணர்வைச் சுமந்து வந்தவர்கள் அடைந்தனர். வாகனத்தைச் சுற்றி நின்றவர்கள் பிரமித்து நின்று விட்டனர். இதுவரை வந்த வாகனம் ஏன் நகரவில்லை. என்று கூற ஆரம்பித்தனர். சிறிது நேரம் கழித்து வாகனம் நின்று கொண்டிருந்த வீட்டின் உள்ளிருந்து ஒரு பெரியவர் ஓடிவந்து ஐயா! இந்த பதக்கத்தைச் சுவாமிக்கு அணியுங்கள் வாகனம் உடனே புறப்படும் என்றார். பெரியவர் கூற்றுப்படி பதக்கம் சுவாமி வாகனத்தில் அணிவிக்கப்பட்டது. உடன் தானே சுவாமி வாகனம் அவ்விடத்தை விட்டு நகர்ந்து முன்னோக்கிச் சென்றது. இதனைக் கண்ட அனைவரும் ஆச்சரியமடைந்தனர். விந்தைக் குரியக் காட்சிகண்டு அனைவரும் வியந்தனர், சிலபேர்கள் ஏதோ, நடந்துள்ளது அதனால் தான் வாகனம் கிளம்பவில்லை என்று பேச ஆரம்பித்தனர். அனைவரும் காரணத்தை பெரியவரிடம் கேட்கவே, இந்நாள் (மார்கழி 7ஆம் நாள்) நல்ல நாளாக இறைவன் கருதியிருக்கக் கூடும். இது இறைவனின் பொருள் (பதக்கம்) அவரே என் வீடு வந்து நின்று வாங்கிச்

## 7-ம் திருவிழா இரவுக்காட்சி



இராவணனின் ஆணவம் அழித்து
இறைவன் கைலாச பர்வத
வாகனத்தில் வீதியுலா

7-ம் திருவிழா
வெள்ளி கைலாச பர்வத வாகன காட்சி



செல்கிறார். எனப் பெரியவர் கூறவே அதன்பிறகு அனைவருக்கும் உண்மை புரிந்தது. மேற்கண்ட சம்பவத்தின் சாட்சியாக விஜயப்பேரரசு மன்னர் கொடுத்து அனுப்பிய "பதக்கம்" இன்றும் பாதுகாப்பாக இருந்து வருகிறது. பழுதுபட்ட நிலையில் அது உள்ளதால் சுவாமிக்கு அணிவிக்கப்படுவதில்லை.

இத்திருத்தலத்தில் (சுசீந்திரம்) புராணகால வரலாறுகளி லிருந்து மன்னர்கள் ஆட்சி காலம் வரையிலும் நடந்த பரிசோதனைகளையும், தண்டனை முறைகளையும் அறிந்தோம். பக்தி உணர்வு நிறைந்த அக்கால கட்டத்தில் இத்திருகோயிலில் வீற்றிருக்கும் இறைவனை நீதிபதியாக வைத்து மன்னர்கள் செயல்பட்ட விதம் நம்மை நெகிழ வைக்கிறது. ஆம் எங்கோ நடைபெற்ற தவறுகளுக்குத் தண்டனை வழங்கும் தலைமை நீதிமன்றமாக இத்திருக்கோயிலைத் தேர்ந்தெடுத்துள்ளனர் திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர்கள்.

கல்மனம் கொண்டோர்க்கு இறைவன் கல்லாகத் தென் படுகிறான். பக்தி என்ற உணர்வோடு காண்பவர் கண்ணுக்குத் தெய்வமாக காட்சி தருகிறான். "கண்ணிலே அன்பிருந்தால், கல்லிலே தெய்வம் வரும்." என்ற கவிஞரின் கூற்று உண்மை யன்றோ. கொடிய தண்டனைகள் நின்றது. மன்னர்கள் ஆட்சிமுறை முடிந்தது. மக்கள் ஆட்சியும் தொடங்கியது. இந்நிலையிலும் மன்னர்கள் வகுத்த நெறிமுறைகள் பூஜை, ஆகம விதிகள் ஆயிரமாண்டு காலத்திற்கும் மேலாக முழுமையாக கடைபிடிக்கப்பட்டு வருவது மக்களாட்சியில் முழுமையாக இல்லாவிட்டாலும், தினமும் மூன்று முறை அபிஷேகம், நான்கு நேர பூஜைகள், ஆராதனைகள் மற்றும் விசேட பூஜைகள், இன்றும் நடந்து வருவது மனத்திற்கு நிறைவைத் தருகிறது.

சத்தியம் வாய்ந்த இத்திருக்கோயிலில் பூஜைக்கு வரும் புதிய நம்பூதிரிகளுக்கு விதிமுறையை எடுத்துக்கூறி ஆயிரமாண்டு காலமாக பாதுகாத்துவரும் சக்திவாய்ந்த சிறிய நந்தியை அவர்கள் கையில் கொடுத்து சத்திய பிராமாணம் சடங்கு திருக்கோயிலுடைய ஸ்தானிகரால் நடத்தப்பட்டு அதன்

பின்னரே பூஜை செய்ய அனுமதிக்கப்படுகின்றனர். காலா காலங்களாக நடைபெற்றுவரும் ஆகமவிதி. அறிந்த கோவிலில் அறியாத உண்மை.

## எட்டாம் திருவிழா

எண்ணிக்கையில் இத்திருவிழாவை எட்டாகக் கணக்கிட்டாலும் கோயில் ஆகம விதிகளின்படி அதிகாலை 5.00 மணிக்கு நடராஜ மூர்த்தி திருநடனம் புரிவதற்காக எழுந்தருளும் இக்காலை நிகழ்ச்சி 7-ம் திருவிழாவின் தொடர்பாகும். இம்மூர்த்தி வீதியுலா முடித்து திருக்கோயிலினுள் காலை 6.00 மணிக்கு வந்த பிறகே மூலவர் நடை திறக்கப்பட்டு மறுநாள் பூஜைகள் நடைபெறுகிறது.

நாம் முன்பு அரக்கனை வதம் செய்து இராவணின் ஆணவத்தை அழித்த இறைவனை, வெற்றி ஊர்வலமாக 7-ம் திருவிழா இரவு அழைத்து வரும் நிகழ்ச்சியைக் குறிப்பிட்டிருந்தோம். இங்கு 8-ம் திருவிழா வீதியுலா காலையும், மாலையும் மற்றும் அன்று நடைபெறும் ஆன்மீக பெருமக்கள் நடத்துகின்ற அபிஷேக வழிபாடுகளையும் சுவாமி அலங்கார மண்டபத்தில் அன்று முழுவதும் வீற்றிருந்து ஏற்றுக்கொள்கிறார். வெற்றிக் களிப்பில் இருக்கும் இறைவன் ஆனந்தத் திருநடனத்தைக் கயிலையில் தேவர்களுக்காக நடத்திக் காட்டியதை பேரம்பலத்தின் முன்பு இம்மண்ணுலகில் மக்களும் கண்டிடும் பொருட்டு நடனம் புரிகின்றார்.

## ஆர்ப்பரிக்கும் ஆனந்தத் திருநடனம்

பக்திப் பரவசத்தில் பக்தர்கள் பாடினர். ஆனந்தக் களிப்பிலே, ஐயன் ஆடினார், ஆனந்தக் கூத்தாடினார். எட்டாம் திருவிழாவன்று அதிகாலை நடராஜமூர்த்தி வீதியுலா வரும்போது காலைத்தூக்கி ஆடும் சுவாமியின் முன்பு சிவநேசத் தொண்டர்கள் "தில்லையம்பலம்! திருச்சிற்றம்பலம்!! ஆடினார், ஆனந்தக் கூத்தாடினார்." என ஆனந்தக்களிப்போடு அவரைப்போலவே ஆடிக் கொண்டு, பாடிக் கொண்டு வரும் காட்சி நம்மை பரவசப்படுத்துகின்றது.

மார்கழிப் பனிக்காலத்தல் கடுங்குளிரையும் பொருட் படுத்தாது அதிகாலையில் நீராடி நெற்றியில் திருநீறு தரித்து ஆன்மீக அன்பர்கள் நடராஜபெருமான் முன்னால் பாடி ஆடும் காட்சி காண்பவரையும் ஆடிட வைக்கிறது. சுமார் 5.30 மணியளவில் தெற்கு ரதவீதியிலுள்ள பேரம்பலத் திருக்கோயில் அருகே ஆயிரக்கணக்கான ஆன்மீக மக்கள் சூழ்ந்து நிற்க இறைவனின் நடனத்தை நமக்குக் காட்டிட பன்னிரண்டு பிடாகை (ஊர்)யைச் சேர்ந்த ஆடவர்கள் அனைவரும் சுவாமியின் வாகனத்தை வலிமை மிக்கத் தோள்களிலும், கைகளிலும் மாறி மாறித் தாங்கி முடிவில் பம்பரம்போல் சுழன்று ஆடுகின்றனர். திரு நடனத்தை தூரத்திலிருந்து பார்ப்பவர்க்கு வாகனத்தைச் சுமப்பவர்களை காண முடியாது நடராஜர் மட்டும் நடனம் ஆடுவது போன்ற தோற்றத்தை மட்டுமே காணமுடியும். இன்றல்ல, நேற்றல்ல, ஆயிரமாண்டு காலமாக நடைபெற்றுவரும் இந்நிகழ்ச்சி எங்குமே இதுபோன்று நடப்பதில்லை என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. இறைவனின் திருநடனத்தைக் கண்டு விண்ணுலக தேவர்கள் பூ மழை பொழிவது போன்று மண்ணுலக மக்கள் இருகைகளிலும் பூக்களை எடுத்து இறைவன் மீது புஷ்பாபிஷேகம் செய்விக்கின்ற தகுதி இங்கு அனைவர்க்கும் இந்நாளில் இவ்வேளையில் மட்டுமே கிடைக்கின்றது. "எல்லோரும் ஓர் குலம்" என்ற உயர்ந்த தத்துவத்தை இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகின்றது. நாளுக்கு நாள் ஆண்டுக்காண்டு பெருகிவரும் மக்கள் கூட்டம் இந்நிகழ்ச்சிக்கு மேலும் பெருமை சேர்க்கிறது.

வீதியுலா முடிந்து நடராஜப் பெருமான் திருக்கோயிலினுள் வந்த பின்பு தான் நித்திய பூஜைகள் ஆரம்பமாவதைத் தெரிவித்திருந்தோம். காலை 10.00 மணிக்கு அலங்கார மண்டபத்தில் வைத்து நடராஜ மூர்த்திக்கும் சிவகாமி அம்மனுக்கும் அஷ்டாபிஷேகம் நடைபெறுகிறது. பலவருட காலமாக நடைபெற்றுவரும் இந்த அபிஷேகத்தை முன்னாள் குமரி மாவட்ட தேவஸ்தான வாரியத்தின் தலைவராக பொறுப்பிலிருந்த பயோனியர் டாக்டர் திரு.கே. பத்மனாபன் அவர்கள் குடும்ப வழிபாடாக தொடர்ந்து நடத்தி வருகிறார்.

மாலை 4.00 மணிக்கு கோட்டாறு மகமை ஸ்ரீ வெள்ளித் தாம்பாளக் கட்டளை வழிபாடாகிய அஷ்டாபிஷேகமும், இரவு 7.00-க்கு சிதம்பரேஸ் வரர் ஆனந்த வீதியுலா காட்சியும் நடைபெறுகிறது. காலையைப் போல் இரவிலும் ஆன்மீக பக்தர்கள் பாடி ஆடிக் கொண்டு வாகனத்தின் முன்பு வருவதைக் காணலாம். இரவு 10மணிக்கு பள்ளி வேட்டைக்குக் குதிரை வாகனத்தில் சுவாமி எழுந்தருளுதலோடு அன்று இரவு அனைத்துப் பூஜைகளும் முடிந்து பள்ளியறையில் சுவாமியும் அம்பாளும் துயில் கொள்ள செல்கின்றனர். இதனை "சயனோல்சவம்" (பள்ளியறை திருவிழா) என்றும் கூறுகின்றனர்.

## ஒன்பதாம் நாள் தேரோட்ட விழா

அதிகாலை 3.00 மணிக்கு ஆலய மணியை ஒலிக்கச் செய்து அதன்பின் இறைவனைப் பள்ளியுணர்த்தி சுங்காள நாதர் பிக்ஷாடன மூர்த்தியாக வீதியுலா வருகிறார். ரத உல்சவம் (தேர்த்திருவிழா) நடத்த மக்களிடம் நிதியுதவி பெறுவது போல் வாகனத்தில் வைக்கப்பட்டிருக்கும் வெள்ளிப் பாத்திரத்தில் மக்கள் காணிக்கையளித்து தேரோட்ட விழாவுக்கு தங்கள் பங்கினையும் செலுத்தும் காட்சி மிகவும் முக்கியத்துவம் பெற்றவையாகும். தொடர்ந்து நண்பகல் 12.00 மணிவரை நடைபெறும் அன்றாட பூஜைகள் அனைத்தும் காலை 7.00 மணிக்குள் நடத்தி முடித்து உமா-மகேஸ்வரர், அம்பாள், கணபதி ஆகிய உற்சவ மூர்த்திகள் அலங்காரத் தேர்களில் எழுந்தருளுகின்றனர். தேரில் அமர்ந்திருக்கும் இறைவனுக்கு அபிஷேகமும் ஆராதனையும் செய்விக்கப்பட்டு மங்கள வேளையில் கன்னி மூலை தேர்ச் சக்கரத்திற்குப் பூஜைகள் செய்து ஆராதனையும் நடத்தி திருக்கோயில் தேர் பணியாட் களுக்கு தேங்காய், பழம், பரிவட்டம் கொடுத்து கௌரவப் படுத்துகின்றனர். பிறகு திருக்கோயில் பொறுப்பாளர்களும், நிருவாக அதிகாரிகளும் மற்றும் வருகை தந்துள்ள ஆட்சியாளரும் முக்கியப் பிரமுகர்களும் மாவட்ட அதிகாரிகளும் தேர்சக்கரத்தில் தேங்காய்கள் உடைத்து இறைவனை வேண்டிக்கொண்டு சுபமுகூர்த்தத்தில் திருத்தேர் வடம் தொட்டிழுக்கப்படுகிறது. தேர்நிலைக்கு நின்ற பின்பு, ஆலய நிர்வாகத்தின் சார்பில், திருக்கோயிலுடைய வட்டப்

பள்ளி ஸ்தானிகர் பன்னிரண்டு படாகைத் தலைவர்களுக்கும், தேங்காய் பழம் பரிவட்டம் கொடுத்து கௌரவிக்கின்றார்கள். படாகை மக்களுக்கும் இவ்வாலயத்தில் உரிமை உள்ளதை இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகின்றது. மன்னர்கள் ஆட்சி காலத்தில் தொடங்கப்பட்டு இன்றுவரை (இடைவிடாது) தொய்வின்றி நடந்து வரும் இச்சடங்கு அன்று ஆலயத்தின் வளர்ச்சிக்கு உதவிய, பாடுபட்ட மக்களுக்கு மன்னர் தெரிவித்த நன்றிக் கடனை இன்றும் சுசீந்திரம் திருக்கோயில் நிர்வாகம் தறவாமல் செய்து வருவது பாராட்டுதலுக்குரியதாகும்.

இவ்வூரில் நூறு ஆண்டுகளுக்கு முன்பு அந்தணர் குலத்தில் திருமணமான பெண்ணொருத்தி பல ,ஆண்டுகளாகியும் குழந்தை பாக்கியம் இல்லாத நிலையில் தினந்தோறும் இவ்வாலயத்திற்கு வந்து தனது குறையினைப் போக்கிட ஸ்தாணுமாலயனை வேண்டி வந்தாள். வருடங்களும் கடந்தன. வழி பிறக்கவில்லை. முடிவில் ஒருநாள் ஆண்டவன் சன்னதியில் நின்று இறைவா! மலடி என்று மற்றவர்கள் கூறும் நிலைக்கு ஆளாகியுள்ளேன். இனியும் என்னைச் சோதிக்காதே. கொஞ்சி மகிழ எனக்கு ஒரு மழலைச் செல்வத்தை தந்திடு. உனது கருணையால் கிடைக்கும் அந்த மழலை ஒருநாள் வாழ்ந்தாலும் போதும். மலடி என்ற குறை நீங்கி மகிழ்வோடு வாழ்வேன். அந்த மழலையை உனக்கு அர்ப்பணிக்க தயங்கமாட்டேன். அப்படியொரு நிலைவரும் வரை இங்கு (ஆலயத்திற்கு) வரப்போவதில்லையென வேண்டிச் சென்றுவிட்டாள்.

வருடங்கள் இரண்டு கடந்தன. பிரசித்திப் பெற்ற மார்கழித்திருவிழா தேரோட்ட நாளும் வந்தது. தெருவெங்கும் ஜனத்திரள் கூட்டம். ரதவீதியில் தேர் நகர்ந்து வந்து கொண்டிருந்தது. ஒரு குறிப்பிட்ட இடத்தில் தேர் நின்றது ஒருமணி நேரமாகியும் தேர் நின்ற இடத்தை விட்டு ஒரு அடி கூட முன்னோக்கி நகரவில்லை. தேர்ச்சக்கரங்களும் பழுதடையவில்லை. இவ்வளவு மக்கள்கூட்டமும், தேரை வடம்பிடித்து செல்வதற்கான ஆன்மீக அன்பர்கள் நிறைந்திருந்தும் தேர் நகராத நிலை கண்டு அனைவரும் வருத்தமடைந்தனர். சூரியன் உச்சிவேளையை நோக்கி வந்து

கொண்டிருந்தான். களைப்புற்று மக்கள் நின்றிருந்து வேளையில் வியக்கவைக்கும் நிகழ்ச்சியொன்று நடந்தது.

ஒரு பெண் தன் கைகளில் மூன்று மாத குழந்தையோடு விரைந்து வந்து தேர்ச்சக்கரத்தின் முன்னால் குழந்தையை படுக்க வைத்து, ஐயா! இதற்காக நீ நிற்க வேண்டாம், உனது குழந்தையை உனக்கே தந்துவிட்டேன். பிள்ளை பாசத்தால் உன்னை மறந்துவிட்டேன் என்னை மன்னித்துவிடு. எனக் கதறி அழுது இருகரம் கூப்பி தேரை நோக்கி தொழுதுவிட்டு வீட்டினுள் விருட்டென சென்றுவிட்டாள் அப்பெண்மணி.

கணநேரத்தில் இக்காட்சியைக்கண்ட அனைவரும் கதிகலங்கிவிட்டனர். "பெற்ற பிள்ளையைத் தேர்ச்சக்கரத்தில் கொண்டு போட்டு கொல்ல நினைத்த இவள் பெண்ணா, இல்லை பித்துப் பிடித்தவளா, என்று ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் கூற ஆரம்பித்து விட்டனர். உடன்தானே குழந்தையை அப்புறப்படுத்தி பெற்றவளிடம் ஒப்படைத்து, பலவாறு பலபேர்களின் கோபப் பேச்சுக்கும் ஆளாகினாள் அப்பெண்மணி. சிறிது நேரத்தில் தேரும் அவ்விடத்தைவிட்டு நகர்ந்து சென்றது. கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற இறைவன் நடத்திய சோதனை. உண்மையான பக்திக்கு ஓர் எடுத்துக்காட்டு.

மேற்கண்ட இரு சம்பவங்களுக்கு ஆதாரம் உண்டா? எனச் சிலபேர் வினவக்கூடும், உண்டு. அக்கால சம்பவங்களை நேரில் கண்ட பெரியோர்களின் குடும்பங்கள் வாழையடி வாழையாக கூறிவரும் வாய்மொழிக் கதைகள் இது. முற்காலங்களில் இறைவனுக்கு பயந்து பக்தி உணர்வோடு தொண்டாற்றிய தொண்டர்களின் குடும்பங்கள் அவருக்குப் பின்னால் நல்ல நிலையோடு வாழ்வதையும், குற்றம் புரிந்தவர்களுக்குத் தற்காலம் நல்லதாகவும், பிற்காலம் தெய்வ சாபத்திற்கு ஆளாகி அவர்களது குடும்பங்கள் சீரழிந்து போன கதைகள் கடந்த நூற்றாண்டில் ஏராளம் நடந்துள்ளது. மிகப் பெரியத் தவறுகளுக்கு உடனடி தண்டனையை வழங்க இத்திருக்கோயில் ஆண்டவன் தவறியதுமில்லை.

## தேரோட்டமும், மக்கள் பங்கும்

இராஜ கோபுரத்தின் அரைப்பங்கு உயரங்கொண்ட 60அடி உயரத்திலானதும், ஆயிரக்கணக்கான டன் எடை கொண்டதுமான சுவாமிதேர் மிகவும் பெரிய வடிவுடையதாகும். இதனை இளைஞர்கள் முதல் வயோதிகர்களும், 40அடி உயரங்கொண்ட அம்மன் தேரை சிறுமிகள் முதல் மகளிர் மன்ற பெண்களும் 28அடி உயரமுடைய பிள்ளையார் தேரை பன்னிரெண்டு வயது வரையுள்ள மாணவச் செல்வங்களும் கலந்து, ஆக பல்லாயிரக் கணக்கான மக்கள் தேர்வடம் பிடித்து அனைத்துத் தேர்களையும் இழுத்துவர ரதம் தொய்வின்றி செல்வதற்குப் பின்னால் உள்ள சக்கரங்களின் இருபுறமும் அஞ்சா நெஞ்சத்தோடு வாலிபத் தோழர்கள் உந்துகோலால் தேர்சக்கரங்களை உந்தித் தள்ளுகின்ற தடியிடும் வீரமிக்க காட்சி பார்ப்போரை வியக்க வைக்கிறது. சுமார் 20அடி வரையிலும் உயரமுடைய கனமான மரத்தடியை வானில் பந்தை எறிந்து பிடிப்பது போன்று உந்துகோலை தாவிப்பிடித்து கீழே தள்ளி தேர்ச் சக்கரங்கள் உருண்டோடிட உதவுகின்றனர். வலிமை படைத்த தேரைத் தள்ளி விட "சக்திதேவி" துணை நிற்பதுபோல் ஓம்சக்தி, ஓம்காளி, ஜெய்காளி, என சக்தியின் நாமங்கள் இங்கு ஒலிக்கப்படுகின்றது. இவர்களுக்கு உதவிட விநாயகப்பெருமான் யானை உருவில் வந்து உந்துகோலான மரத்தடியைத் தனது கொம்புகளில் ஏந்தி துதிக்கையால் இழுத்துவந்து ஆன்மீக வாலிபர்களுக்கு அவ்வப் போது உதவி புரிந்திடும் காட்சி தாய் தந்தையர் வீற்றிருக்கும் திருத்தேர் ஓட்டத்திற்கு வினாயகரும் உதவி புரிவது காண்போரை வியக்கவைக்கும் காட்சியாகும்.

### ஒற்றுமையே பலம்

இத்திருக்கோயில் திருவிழா நாட்களில் காலையும், மாலையும் வீதியுலா வருகின்ற பலமிக்க பெரிய சுவாமி வாகனங்களைத் தோள்களில் தாங்கி சுமந்து செல்லும் ஊர்வகையைச் சார்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட வலிமைபெற்ற ஆடவர்களும், ஒரே நேரத்தில் நிலையிலிருந்து புறப்பட்டு

வீதியில் வலம் வரும் ரதங்களைப் பல்லாயிரக்கணக்கான மக்கள் ஒன்றுகூடி இழுத்து வருவதும்" ஒற்றுமையே பலம்." என்ற தத்துவத்தின் உண்மையை அறியச்செய்கிறது. "ஒற்றுமையாய் வாழ்வதாலே உண்டு நன்மையே" என்ற உண்மையை உணர்ந்திட, அதன்படி நடந்திட இப்படிப்பட்ட தேரோட்ட திருவிழாக்களை முற்கால மன்னர்கள் நடத்தி, இன்றும் அவை தொடர வழிவகை செய்துள்ளனர். வருடத்திற்கு நான்குமுறை ரத உற்சவங்கள் (தேர்திருவிழாக்கள்) நடந்திட ஏராளமான சொத்துக்களை தன்னலம் கருதாத மன்னர்கள் ஆலயத்திற்கு விட்டுக்கொடுத்து சென்றுள்ளார்கள்.

## *தேரோட்டத்திற்கு அரசின் பங்கு*

சேரநாட்டு மன்னர் களாட்சியில் இத்திருக்கோயில் மிக வளர்ச்சி பெற்றதை வரலாற்றுக் கல்வெட்டுகள் மூலமாகவும் சரித்திர நூல்கள் வாயிலாகவும் அறியமுடிகிறது. சேரநாட்டு "திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர்கள் கோயில் திருப்பணிகளான மண்டபங்களும், திருக்குளங்களும், தினபூஜைகளுக்கு நிலங்களும் அதோடு மாத பூஜை மற்றும் விழா வழிபாடுகளுக்கும் வழிவகை செய்துவிட்டுச் சென்றுள்ளனர். மன்னர் ஆட்சி நடைபெற்ற காலம் வரை கோயிலுக்கும் மன்னருக்கும் இருந்து வந்த தொடர்பினை ஒவ்வொரு விழாக்களிலும் காணமுடிகிறது. உதாரணத்திற்குக் குமரிமாவட்டம் கேரள நாட்டோடு இருந்த காலத்தில் மன்னர்கள் இங்குள்ள திருக்கோயில்கள் அனைத்திற்கும் பல தொண்டுகள் புரிந்துள்ளார்கள். திருவிதாங்கூர் சமஸ்தான ஆட்சியில் குமரி மாவட்டம் "கோயில் மாவட்டமாக" சிறந்து விளங்கியதை இன்றும் காணமுடிகிறது.

வானளாவிய மலைகளும், மரங்கள், கேரள நாட்டில் இருந்தும் மரத்தினால் செய்யப்பட்ட திருக்கோயில்கள் இருந்தும், திருவிழாக்களின் போது தேரோட்டங்கள் இல்லை, கம்பீரமான இராஜ கோபுரங்கள் கூட இல்லை. (திருவனந்த புரத்தைத் தவிர) தமிழகத்திலிருந்து பிரிந்த "பாலக்காடு" தற்போது (கோவை மாவட்டத்தின் அருகில்) இது கேரள மாநிலத்தில் உள்ளதால் அங்கு மட்டும் தமிழ்நாட்டு முறைப்படி தேரோட்டம் நடைபெற்று வருகிறது. கோயில் அமைக்க

## தேரோட்ட காட்சிகள்



தற்போதைய மாவட்டத்தின்
மிகப்பெரிய சுவாமித்தேர்



முற்றிலும் பெண்கள்
இழுத்துவரும் அம்மன்தேர்.
தேரூர் மக்களால் வழங்கப்பட்டது.

## பெரியசுவாமி தேரின்
## மர சிற்பக் காட்சிகள்



போதுமான, தரமான, கற்பாறைகளும், கல்லையும் கடைந்தெடுத்து சிற்பங்கள் வடிக்கும் கலைத்திறன் மிக்க சிற்பிகளும், மரவேலைகளில் மலைக்க வைக்கும் சிற்பங்களைப் படைத்திடும் தச்சுப் பணியாளர்களும், சுண்ணாம்புச் சாந்துக் கலவை, மற்றும் சுடுகல்லுக்குத் தேவையான களிமண்ணும் மண்பாண்டங்கள் செய்திடும் கலைஞர் கோபுரம் மற்றும் பொம்மைகள் வடிக்கும் கலைஞர்களும் கொண்ட குமரி மாவட்டத்தில் கோயில்கள் பல உருவாக இவை காரணமாய் அமைந்தன. தற்போதும் சுசீந்திரம் பகுதியைச் சுற்றி கற்பாறைகளும், களிமண்களும் கிடைத்து வருவதையும், சிலைகளைக் கல்லில் வடிக்கும் சிற்பிகளை, "மயிலாடி" என்ற பகுதியிலும், மரசிற்பக் கலைஞர்களைச் சுசீந்திரம் "கற்காடு" ஊரிலும், கோபுர கட்டிட கலைஞர்களையும், சிற்பிகளையும், சுசீந்திரம் "காக்கமூர்" ஊரிலும் மண்பாண்டங்கள் திறம்பட வடிக்கும் கலைஞர்கள் சுசீந்திரம் "அக்கரை" பகுதியிலும் உள்ளமையைக் காணலாம்.

மன்னர்களின் பெரும் முயற்சியாலும் மக்களின் உண்மையான உழைப்பினாலும் இத்திருக்கோயில் உயர்ந்தோங்கி நிற்கிறது. சுசீந்திரம் அருள்மிகு ஸ்தாணுமாலயன் திருக்கோயில் ஆலயத்தின் பெருமையை, வரலாற்று உண்மைகளை, ஆயிரம் ஆண்டுகள் கழிந்தாலும் மறையாமல் நம் உள்ளத்தில் பதியும்படி திருத்தேர்கள் நிலைத்து நிற்கச் செய்கின்றன. ஆக, ஆலயத்தோடு இம்மன்னர்களையும், மக்களையும், பெருமைவாய்ந்த பெரியவர்களையும் மீண்டும் நினைவுகொள்ள வேண்டியுள்ளது.

சுசீந்திரம் திருவிழா மார்கழித் தேரோட்டத்தை நாட்டு மக்கள் அனைவரும் காண சமஸ்தானம் (நாடு) முழுதிற்கும் அரசு விடுமுறை அளித்து வந்தது. குமரி மாவட்டம் தமிழகத்துடன் இணைந்த பிறகு தமிழ்நாடு அரசின் மாவட்ட நிருவாகம் உள்ளூர் விடுமுறை வழங்கி வருவது மட்டுமின்றி சுசீந்திரம் மார்கழித் திருவிழாவிற்காக கோயில் நிருவாக பொறுப்பாளர்கள், வருவாய்த்துறை, மாவட்டக் காவல்துறை, மின் துறை, சுகாதாரத் துறை, போக்குவரத்துதுறை,

உள்ளாட்சித்துறை போன்ற அதிகாரிகளைக் கூட்டி அவர்களிடம் பொறுப்புகளை ஒப்படைத்து விழாவினை சிறப்பிக்க மாவட்ட ஆட்சித்தலைவர் துணை நிற்பது காலாகாலமாய் நடந்துவரும் முக்கியத்துவம் ஆகும் மன்னராட்சி இல்லாத இத்தருணத்திலும், குமரி மாவட்டத்தை விட்டு சேர நாடாகிய கேரளா பிரிந்த பின்பும் திருவிதாங்கூர் மன்னரும் அவர் குடும்பமும் அருள்மிகு தாணுமாலய பெருமானை விட்டு இன்றும் பிரியவில்லை.

கன்னியாகுமரி மாவட்டம் முன்பு திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர்களின் கட்டுப்பாட்டில் இருந்த காலத்தில் மாவட்டத்தின் திருக்கோயில்கள் பெரும் வளர்சிகள் கண்டன. கேரள மாநிலத்தில் உள்ள திருவனந்தபுரம் அனந்த பத்மநாப சுவாமி திருக்கோயில் திருவிதாங்கூர் மன்னர் பரம்பரையின் முழுப் பொறுப்பில் இன்றும் இருந்துவருவதைக் காணமுடிகிறது. சுவாமியின் மீது அளவுகடந்த பக்தி கொண்டுள்ளதின் காரணத்தால் அம்மன்னர்கள் "பத்மநாபதாஸன்" என்ற பெயரோடு விளங்கி வருகின்றனர். அதே போன்று சுசீந்திரம் ஸ்தாணுமாலய சுவாமி மீதும் பக்தி கொண்டுள்ள இராஜ குடும்பத்தினர் இரு திருக்கோயில்களையும் இரண்டு கண்களாக பாவித்து அரசாண்ட விவரங்களை அறியமுடிகிறது. புகழ்வாய்ந்த பணிகளைச் செய்வித்து திருக்கோயில் முழுமையடைந்ததையும் ஏற்கனவே விவரித்திருந்தோம். அதுமட்டுமின்றி ஆங்:1743 (த.ஆ : 919)-ல் திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி திருக்கோயில் பணிகள் செய்வதற்கு போக்குவரத்துச் செலவோடு, ஆட்களையும் சுசீந்திரத்திலிருந்து கோயில் நித்திய காரிய யோக ஸ்தானிகர்கள் அனுப்பி மண்டபங்கள் பணிசெய்ய உதவியதற்க்கான விவரம் சுசீந்திரம் தெற்கு மண்மடம் நித்திய காரிய யோக ஸ்தானிகர் மூலமாக குறிப்பேடுகளில் இருந்து காணமுடிகிறது. சுசீந்திரம் திருக்கோயில் அமைப்பைப் போலவே உள்ள கோபுரம் மற்றும் பிரகார மண்டப அழகினைத் திருவனந்தபுரம் பத்பநாப சுவாமி ஆலயத்திலும் காணமுடிகிறது.

சுமார் 300-ஆண்டுகளுக்குள் ஆட்சிசெய்த மன்னர்களான மார்த்தாண்ட வர்மா, அவிட்டம் திருநாள், சுவாதித்திருநாள், விசாகம் திருநாள் ஆயில்யம் திருநாள், மூலத்திருநாள்,

சேதுலெட்சுமிபாய் மகாராணி, ஸ்ரீ சித்திரை திருநாள் பாலராம வர்மா போன்ற முக்கியத்துவம் பெற்ற மன்னர்கள் விலை யுயர்ந்த பொருட்களை அவ்வப்போது காணிக்கையாக சுசீந்திரம் திருக்கோயில் இறைவனுக்கு வழங்கி வந்த விவரங் கள் வட்டப்பள்ளிமடம் புத்தகசாலை இருப்பு பதிவேடுகள் மூலமாக அறியமுடிகிறது. மேலும் அப்பொருட்கள் இன்றும் உபயோகப்படுத்தப்பட்டு வருவதையும் காணமுடிகிறது.

**உதாரணத்திற்கு :** சுசீந்திரம் மார்கழி ஒன்பதாம் நாள் தேரோட்ட விழாவிற்கு மன்னர்கள் சுவாமிக்கு அணிவிக்க ஒரு தங்கச் சந்திரக்கலை, சரப்பள்ளி (அவல்) மாலை மற்றும் பட்டாடை போன்றவற்றை வருடம் தோறும் காணிக்கையாக வழங்கி வந்துள்ளனர். சுவாமிக்கு அவைகளை அணிவித்து தேரோட்டம் நடைபெற்று வந்தது. திருவிதாங்கூர் சமஸ்தான கடைசி மன்னராக விளங்கிய ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா காலம் வரை இவ்வழக்கம் நீடித்து வந்தது. பிறகு சுதந்திர இந்தியாவில் பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் ஆட்சியில் நிதி மந்திரியாக பொறுப்பில் இருந்த திரு மொரார்ஜிதேசாய் அவர்களின் தங்கக் கட்டுப்பாடு சட்டத்தின்படி அவைகளை நிறுத்த வேண்டியதாயிற்று. இன்றும் மன்னர்கள் வழங்கிய ஆபரணங்களை சுவாமிக்கு அணிவித்து வீதியுலா நடைபெற்றுவருவதைக் விழாக் காலங்களில் காணமுடிகிறது. எங்குமே காணமுடியாத இத்திருவாபரணக் காட்சியைச் சுசீந்திரம் திருக்கோயிலில் திருவிழாக்களில் காணலாம்.

***காவல்துறை பங்கு:*** சுசீந்திரம் திருக்கோயில் திருவிழாவின் போது ஆபரணங்கள் பாதுகாப்பிற்காக மன்னராட்சி காலம் தொட்டு மக்களாட்சி காலத்திலும்கூட பத்து நாட்கள் திருவிழாவான மார்கழி, சித்திரையில் நடைபெறும் பொழுது வாகனப் பாதுகாப்பிற்கு ஆயுதம் தாங்கிய காவல்துறைக் காவலர்கள் பங்கு கொள்வதைக் காணலாம். வீதியுலாவிற்கு இறைவன் கோயிலை விட்டு வெளியே வரும்போதும் வீதியுலா முடித்து உள்ளே செல்லும் போதும், மாவட்டத்திற்கு வருகை தரும் நாட்டில் ஆளுகின்ற முக்கிய பிரமுகர்களுக்குக் கொடுக்கின்ற காவல்துறை சிறப்பு மரியாதையைப் போன்று

உலகை ஆளும் ஆண்டவனுக்கும் சிறப்பு மரியாதையளித்து வரவேற்று, சுவாமி வாகனத்தின் இருபுறமும் ஆயுதம் ஏந்தி பாதுகாப்பாய் அணிவகுத்து வருகின்ற காட்சியை காணலாம். நூற்றாண்டு காலங்களாக நடைபெற்று வந்துகொண்டிருக்கும் இம்மரியாதையைத் தமிழ்நாடு காவல்துறை சிறப்பு படையினர் இன்றும் பெருமையோடு இங்கு செய்துவருவது வரலாற்றில் இடம்பெறக் கூடிய சிறப்பு அம்சமாகும். திருக்கோயில் நிர்வாகமும் சிறப்புக்காவலர்கள் பத்து நாட்கள் தங்கிப் பணியாற்ற வேண்டிய உதவிகளையும் செய்து வருகிறது. சுவாமியின் வாகனத்தின் உடமைகளுக்கு இதுவரை எந்த விதமான பாதிப்புகளுக்கும் ஏற்படட்டதில்லை. 9-ம் நாள் தேரோட்ட நாளின் போது காவல்துறையினரின் பாதுகாப்புப் பணி பாராட்ட வேண்டிய அம்சமாகும்.

இவை தவிர திருவிழாக் காலங்களில் திருக்கோயில் உட்புறமும் வெளிப்புறமும், லட்சக்கணக்கான மக்கள் திரண்டு வரும் தேரோட்டம் மற்றும் அன்று இரவு நடைபெறும் சப்தாவர்ணம் நிகழ்ச்சியின் போதும் ஏராளமான காவலர்களை மாவட்டம் முழுவதிலிருந்தும் வரவழைத்து மக்களுக்குப் பாதுகாப்புக் கொடுத்து திருவிழா சிறப்படைய துணை நிற்கின்றனர். மாவட்டக் காவல்துறை தலைமை நிர்வாகம் இங்கு முகாமிட்டு உயர் அதிகாரிகள் பணிபுரிவதோடு, வருவாய்த் துறை மாவட்ட நிர்வாகம் மற்றும் வட்ட நிர்வாகம் வரை விழாவில் பங்கெடுத்து சட்டம் ஒழுங்கு நிலைநாட்ட காவல் துறைக்குத் துணை நின்று செயலாற்றி வருவதைக் காணமுடிகிறது.

### *மாவட்ட வருவாய்த்துறை பங்கு*

திருவிழா காலங்களில் சுவாமிக்கு அணிவிக்கப்படும் ஆபரணங்களை ஒவ்வொரு திருவிழாவின் போதும் எடுப்பதற்கும், விழா முடிந்து பாதுகாப்பு அறையில் வைப்பதற்கும் திருக்கோயில்களின் மாவட்ட நிருவாகத்தின் வேண்டுகோளை ஏற்று மாவட்ட ஆட்சியர் நிருவாகம் வட்டாட்சியர் அவர்களுக்கு உத்தரவு வழங்கி அவர் முன்னிலையில் பாதுகாப்பு அறைகளிலிருந்து நகைகளை

எடுத்து திருக்கோயில் ஸ்தானிகர் அவைகளைப் பெறுவது வட்டாட்சியர் மேற்பார்வையில் நடைபெறுகின்றது. சுமார் ஏழாண்டு காலங்களாக இது வழக்கத்தில் உள்ளது. திருவிழா ஆரம்பிப்பதற்குப் பத்து நாட்களுக்கு முன்பாகவே மாவட்ட ஆட்சியர் தலைமையில் அனைத்துத் துறையினரும் பங்கு கொள்ளும் கூட்டத்தினைக் கூட்டி விழாச் சிறப்பாக அமைய தகுந்த ஏற்பாடுகளைச் செய்வதற்கு அறிவுரைகள் வழங்கப் படுகிறது. மன்னராட்சி காலத்தில் 1946-ல் சுசீந்திரத்தில் நடந்த எதிர்பாராத நிகழ்ச்சி மீண்டும் ஏற்படாத வண்ணம் 52 வருட காலமாக மாவட்ட ஆட்சி நிர்வாகமும், காவல்துறை நிர்வாகமும் முனைப்போடு செயல்பட்டு வருவதோடு மற்று முள்ள மின்துறை, மருத்துவத்துறை, போக்குவரத்துத்துறை, சுகாதாரத்துறையோடு சுசீந்திரம் உள்ளாட்சித் துறையினரும் விழாவுக்குத் துணையாய் இருந்து சிறப்பிக்கின்றனர். மன்னராட்சி தற்போது இல்லாவிட்டாலும் மக்களாட்சியில் மாவட்ட ஆட்சியர் நிருவாகம் சுசீந்திரம் மார்கழி தேரோட்டத் திருவிழா மாபெரும் சிறப்போடு அமைய திருக்கோயில் நிருவாகத்திற்கு உதவி வருகிறது.

### புண்ணிய பூமியில் புதுமணத் தம்பதிகள்

நாஞ்சில் நாட்டு மக்கள் வம்சம் நஞ்சைப்பயிர் போன்று செழித்தோங்கி வளர்ந்திட புதியவாழ்வைத் தொடரும் புதுமணத் தம்பதிகள், புகழ்மிக்க புண்ணிய பூமியாய் விளங்கும் சுசீந்திரம் திருக்கோயில் சென்று இறைவனைத் தரிசனம் செய்யவேண்டும். ஆம்! பெண்ணாசையால் சாபம் அடைந்து விமோசனம் பெற்ற இந்திரனும், கணவன்மார்கள் சுயவடிவம் பெற்றிடும் பொருட்டு மூன்று தேவியர்களும் தவமிருந்து குழந்தைகளான கணவர்கள் ஆதிபராசக்தி அருளால் மீண்டும் மும்மூர்த்திகளாக்கியதும், கணவனைக் கண்கண்ட தெய்வமாக போற்றி வாழ்ந்த கற்பரசி அனுசூயாவும், பித்தனை நினைந்து மனம் பித்தாகி முடிவில் பிறைசூடிய பெருமானோடு சேர்ந்த அறம்வளர்த்த நாயகி போன்ற பெண்மணிகளின் தெய்வீகத் திருப்பாதங்கள் பட்ட இத்திருத்தலத்தில், பெண்ணின் பெருமை நிலைத்து நிற்பது

போன்று பெண்கள் விளங்கவேண்டும் என்பதின் அடையாளமாக மார்கழித்திருவிழா தேரோட்டம் மறவாமல் புதுமணத் தம்பதியினர் காணவேண்டும் என்பது இம்மாவட்டத்து உறுதிப்பாடாக அமைந்துள்ளது. அதிலும் பன்னிரன்டு படாகையின் வேளாண் சமுதாய புதுமணத் தம்பதிகள் கண்டிப்பாக காணவேண்டும் என்ற கொள்கையினை இன்றும் அவர்கள் கடைபிடித்து வருவதைக் காணமுடிகிறது. சுசீந்திரம் தேர்த்திருவிழாவின் போது புத்தாடைகள் உடுத்தி புதுமணத் தம்பதிகள் வருகை தரும் காட்சி மனத்தைவிட்டு அகலா மங்களக் காட்சியாகும்.

## தேர்களின் அமைப்பு மற்றும் வரலாறு

ஆங் : 1740-ல் சந்தா சாகிபு மற்றும் அவரது தம்பி போடா சாகிபு, படைத்தலைவர் சப்தர் அலிகான் போன்றவர்கள் பெரும்படையுடன் வந்து சுசீந்திரத்தை முற்றுகையிட்டு தாக்குதல் நடத்தியதின் விளைவாக மிகப்பெரியத் தேர் ஒன்றும் தீக்கிரையாகி எரிந்து சாம்பலாகியது. தற்போது உள்ள தேர்களுக்கான பாதுகாப்பு அன்றைய காலகட்டத்தில் இல்லாமல் ஓலைகளால் வேயப்பட்ட கூடாரம் அமைத்து தேர்களைப் பாதுகாத்து வந்துள்ளனர். எண்ணி வந்த பொருட்கள் கிடைக்காத கோபத்தால் கோயிலினுள் கற்சிலைகள் பலவற்றை உடைத்து சேதப்படுத்திய படையினர் கலையம்சம் பொருந்திய இத்தேரையும் விட்டுவைக்கவில்லை.

அன்று அம்மன் தேராக இருந்து வந்த இன்றைய பெரிய தேரான சுவாமிதேர் மட்டும் தெய்வாதீனமாக தப்பித்தது. இரண்டாவது இடத்தில் இருந்த அம்மன் தேர்பதவி உயர்வுபெற்று சுவாமி தேராக 258 ஆண்டுகளாக மொத்தத்தில் 362 ஆண்டுகளாக தொடர்ந்து இன்றுவரை ஓடிகொண்டிருக்கிறது. இது செய்து முடிக்கப்பட்ட ஆண்டு விவரங்கள் இதுவரை கிடைக்கப்பெறவில்லை. நாயக்கர் மன்னர் காலத்தில் செய்து முடிக்கப்பட்டிருக்கலாமென கருத இடமுள்ளது. ஆங்:1478-ல் நாயக்க மன்னர் ஆட்சியில் நான்கு ரத வீதிகளை

அமைத்து தேரோடுவதற்கு வசதியாக தெருக்களைச் சமதளப்படுத்தி பணி செய்வித்ததாக குறிப்புகளின் மூலம் தெரியவருகிறது. தெற்கு ரதவீதி முடிவில் பேரம்பலம் நடராஜர் கோயிலின் எதிர்புறத்தில் முற்றிலும் மரம் மற்றும் ஓடுகளால் பணி செய்யப்பட்டுள்ளதும் தற்போது செச்சே கொட்டாரம் என அழைக்கப்படும் உயர்ந்த மாடிக் கட்டிடம் நாயக்க ராஜ வம்சத்தினர் தேரோட்டம் காண்பதற்காக வேண்டி அமைக்கப்பட்டுள்ள விவரமும் அறியமுடிகிறது. இன்றும் தேரோட்ட நாளின்போது நூற்றுக்கணக்கான மக்கள் இம்மாடிக்கட்டிட முன்வராந்தாவில் நின்று தேரோட்டம் பார்ப்பதைக் காணமுடிகிறது. இந்த கட்டிடத்தையும் திருமலை நாயக்க மன்னர் கட்டுவித்ததாக சான்றுகள் உள்ளன. மேலும் தெற்குரத வீதியில் நடுவில் அமைநதுள்ள ஆரம்ப பாடசாலைக் கட்டிடம் இம்மன்னரின் ஆட்சி காலத்தில் மன்னர் குலப் பெண்கள் தங்கும் அந்தப்புர கொட்டாரமாக பயன்படுத்தி வந்ததற்குச் சான்றுகள் உள்ளன.

### பெருமை பெற்ற கால்வாய்

அந்தப்புர பெண்கள் குளிப்பதற்காகக் கால்வாய் ஒன்று கட்டிடத்தின் அடிப்பாகம் வழியாக இன்றும் நீர் ஓடிகொண்டிருக்கும் நிலையிலும், குளிப்பதற்கு வசதியாக படித்துறைகள் இருப்பதை இக்கட்டிடத்தின் கிழக்குப்புறம் காணலாம். முற்காலத்தில் அகலமாக தண்ணீர் நிறைந்து வந்துகொண்டிருந்த கால்வாய் பின்னாளில் வாழ்ந்தோரால் ஆக்கிரமிக்கப்பட்டு அகலம் குறைந்து கழிவுநீர் செல்லும் சாக்கடையாக மாறி வருகிறது. நஞ்சைப் பயிர்களின் விவசாயத்திற்காக சுசீந்திரம் ஆஸ்ராமம் பழையாற்று அணைக் கட்டிலிருந்து சுமார் 12கிலோமீட்டர் தூரம் வரையிலான மணக்குடி ஊர்வரை சென்று விளைநிலத்திற்கு தண்ணீர் வசதிக்காக மன்னர் காலத்தில் அமைக்கப்பட்ட கால்வாய் மக்களாட்சி காலத்தில் மணமூடி போய்விடுகின்ற நிலைக்குதள்ளப்பட்டுள்ளது. கால்வாயில் கரைபுரண்டு ஓடிய தண்ணீர் தற்போது வழியின்றி இன்று சாக்கடையாக வடிந்தோடிக் கொண்டிருக்கிறது. முற்காலங்களில் திருக்கோயில்



மார்கழித் திருவிழா 9-ஆம் நாள் மக்கள் வெள்ளத்தில் மிதந்து
-வரும் பெரியத் தேராகிய சுவாமித்தேர்

நிவேத்திய தேவைக்காக பொருட்களைக் கோட்டாறு அங்காடிகளிலிருந்து தோணிகளில் ஏற்றி சுசீந்திரம் கொண்டு வந்து சேர்ப்பதற்கு இக்கால்வாய் பயன்பட்டு வந்ததாக வரலாற்று வாயிலாக அறியமுடிகிறது.

தேர்களின் வரலாற்றைக் கூறவேண்டிய இடத்தில் கால்வாயின் வரலாற்றை கூறுவானேன் என எண்ணிவிடலா காது. தெய்வபக்தியில் சிறந்து விளங்கிய திருமலை மன்னர் இத் திருக்கோயில் வளர்ச்சிக்கும் ஊருக்கும் பல நற்காரியங்கள் செய்துள்ளதை ஏற்கனவே அறிந்தோம். இருப்பினும் தேரோட் டம் என்று நாம் குறிப்பிடும்போது அந்த மன்னரையும் மறக்க முடியாது.

சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னால் ஆய்வேள் மன்னர்கள் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டு சிறிய கருவறையோடு பூஜிக்கப்பட்டு வந்த இறைவனின் கோயிலைப் பின்னால் ஆட்சி புரிந்த மன்னர்கள் ஒவ்வொரு காலகட்டத்திலும் மண்டபப் பணிகள் செய்விக்கப்பட்டு நாளடைவில் முழுமையான மாபெரும் கோயிலாக விளங்க வைத்துள்ளதையும் பல விவரங்கள் வாயிலாக தெரிவித்துள்ளோம்.

இத்திருக்கோயிலில் ஆதிமூலஸ்தானமாக விளங்கி வருகின்ற கொன்றையடி நாதர் சன்னதி 823 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகவும், அடுத்து ஸ்தாணுமாலயன் சன்னதி 760 ஆண்டுகளுக்கு முன்னால் புதுப்பிக்கப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்றதாகவும் உள்ள விவரங்களை ஆதாரத்தோடு தெரிவிக்கின்ற கல்வெட்டு குறிப்புகளை முன்னால் தெரிவித்துள் ளோம். அதன்பின்னால் மண்டபங்களை ஒவ்வொரு மன்னர்களும் பணிசெய்வித்த விவரங்களை தெரிவித்து வரும் வேளையில் திருமலை நாயக்க மன்னரும் பணிசெய்து முடித்துள்ளதைப் பற்றிய குறிப்பு மற்றும் ஆண்டு விவரங்களும் நீங்கள் முன்னமே அறிந்ததே.

362ஆண்டுகளுக்கும் முன்னாலேயே சுவாமித்தேரும், அம்மன்தேரும் செய்யப்பட்டு அன்று முதல் இன்றுவரை தேரோட்டம் நடைபெற்று வருகின்றது. தேர் ஓடுவதற்காக

வீதிகளை அமைத்த மன்னனே தேர்களையும் செய்வித் திருக்கக்கூடும். என்று நம்ப இடமிருக்கிறது. தற்போது போன்ற ஜனப்பெருக்கமும், வீடுகளும் அக்காலகட்டத்தில் வீதிகளில் இல்லாதிருந்த காரணத்தால் வீதிகளை அமைக்க மன்னன் சிரமப்பட்டிருக்க முடியாது. அகலம் கூடிய ரதவீதிகள் இருந்த நிலையில் தற்போது இருந்துவரும் சுவாமித்தேரைவிட மிகப்பெரிய தேரும் இங்கு ஓடியுள்ளதை இதன் வாயிலாக அறியமுடிகிறது.

தீயிட்டு கொளுத்தப்பட்டத் தேரை நாம் இங்கே குறிப் பிடும்போது தற்போதைய வீதிகளின் அமைப்பை பார்க்கும் தருணத்தில் அதுபற்றிய உண்மையை நம்பாதவர்களும் இருக்கக்கூடும். ஏனென்றால் தற்போது மார்கழி திருவிழாவில் மட்டும் ஓடிகொண்டிருக்கும் சுவாமித்தேரானது வீதியில் செல்லும் போது இருபக்கங்களிலும் உள்ள வீடுகளைத் தொட்டால் போன்று செல்வதையும் சிலசமயம் மாடிவீடுகளின் கூரைகள் தேரில்பட்டு சேதமடைந்து அவ்வப்போது விழுவதையும் நேரில் பார்க்க முடிகிறது. சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னால் சுவாமி வாகனங்கள் சென்று வரும் தெருக்கள் தற்போது எந்த நிலையில் உள்ளன? ஊர்திகள் சென்றுவரும் குறுகிய தெருக்கள் போன்றவற்றின் தற்போதைய நிலைகளைப் பார்க்கும் தருணத்தில் மனிதனின் மண்ணாசையும், சுயநலமும் அகலம் கூடிய ஆறுகளிலும், விவசாயத்திற்கு பயன்படும் குளங்களிலும், கால்வாய்களிலும் ஏன், மக்கள் நடந்துசெல்லும் பொதுப்பாதை போன்றவைகளில் ஆக்கிரமிப்புகளை இன்றும் காணமுடிகிறது. பொதுவாக தேருக்குத்தக்கவாறு அமைக்கப்பட்ட வீதிகளில் உள்ள வீடுகளும் நாளுக்குநாள் முன்னே வந்து கொண்டிருப் பதைக் காணலாம். மன்னர் ஆட்சியின்போது அமைத்த ரத வீதிகள் மக்களாட்சியில் அடைந்துவரும் சீர்கேட்டை வீடுகளின் முன்பு அதன் பணிமுடித்து மீதமுள்ள மண்ணை ரத வீதிகளின் போட்டு நிரப்பி, மேடு பள்ளங்களை உருவாக்கவும் தேரோட்டங்களின் போது தேர்ச்சக்கரங்கள் புதையுண்டு

தாமதமாவதும், மிகுந்த சிரமப்பட்டு அதனை அகற்றி தேர் ஓட வைக்கும் நிலைமையை ஒவ்வொரு ஆண்டிலும் கண்டு வருகிறோம். இதற்காக உள்ளாட்சி நிருவாகம் வருடம் தோறும் மண்ணை அகற்றி பள்ளங்களை நிரப்புவதற்காக பல ஆயிரக்கணக்கில் செலவு செய்வதையும் பார்க்கமுடிகிறது. இந்நிலையில் எரிக்கப்பட்ட தேர் எப்படி இருந்திருக்கக்கூடும் என்பதை நினைவுகொள்ள வேண்டும். கடந்த 1999ஆம் ஆண்டில் தேரோடும் வீதிகள் அனைத்தும் பாராளுமன்ற மாநிலங்களவை உறுப்பினர் வழக்கறிஞர் திரு. தளவாய் சுந்தரம் எம்.பி அவர்களின் முயற்சியுடன் மத்திய அரசு வழங்கிய நிதியில் தார்ச்சாலை அமைக்கப்பட்டுள்ளது.

## அவசரமாக நிலைக்கு வரும் தேர்கள்

"சுசீந்திரம் தேரோட்டம் சீக்கிரம் முடிந்து விடும்" என்ற பெருமையும் பொதுவாக காலை 8 மணிக்கு நிலையிலிருந்து புறப்படும் தேர் சுமார் மூன்று மணி நேரத்திற்குள் நான்கு ரத வீதிகளையும் சுற்றிவந்து நிலைகொள்வது நூற்றுக்கு எழுபத்தைந்து சதவீதம் உண்மையாகவே இருந்து வருகிறது. சக்கரங்கள் பழுதுபட்டாலோ அல்லது மண்ணில் புதையுண்டால் மட்டுமே தாமதம் ஏற்பட காரணமாகிறது. சீக்கிரமாக நிலை வந்து சேர்வதற்கு முதல் காரணமாக விளங்குவது மாவட்டத்திலுள்ள பொதுமக்களின் ஒற்றுமையே!

ஆம்! ஆயிரமாண்டு பாரம்பரியமிக்க கோயிலாகவும், காலம் தவறாத விழாக்கள், ஆகம விதிப்படி பூஜைகள், தினமும் இங்கே நடைபெற்று புண்ணிய ஸ்தலமாக விளங்கிடும் இவ்வாலயம் பக்த பொதுமக்களை ஈர்த்திழுக்கும் காந்தமாக விளங்குகின்றது. இதற்கான சாட்சியை ஆலயத்தில் நடைபெற்று வருகின்ற விசேட விழாக்களிலும், தேரோட்டத்தின் போது கடலலைபோல் பெருகிவரும் மக்கள் கூட்டம் மூலமாகவும் காணமுடிகிறது. "ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு" ஒற்றுமையே பலம் என்பதனை தேரோட்ட வைபவம் ஒரு தத்துவமாக விளக்குகின்றது. ஒரே நேரத்தில் மூன்று ரதங்கள்

புறப்பட்டு மூன்று மணி நேரத்திற்குள்ளாக மாவட்டத்தின் மிகப் பெரிய தேரும் இங்கு ஓடிவந்து நிலைகொள்வது காணக் கிடைக்காத காட்சியாகும்

அன்று மாலை 5.00 மணிக்கு உமா-மகேஸ்வரர் தந்தப் பல்லக்கில் எழுந்தருளி சன்னதி தெருவில் உள்ள தருமபுரம் ஆதீனமடத்தில் வைத்து சிறப்பு அபிஷேக அலங்கார ஆராதனை மடத்தின் சார்பில் செய்யப்பட்டு மீண்டும் திருக்கோயிலினுள் வந்து சேர்கிறார்.

## தேர் நிலைக்கு வர காத்திருக்கும் மன்னர்

சுசீந்திரம் திருக்கோயில் திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர்களின் அரும்பெரும் முயற்சிகளால் வளர்ச்சி பெற்றதை முன்பு அறிந்தோம். அவர்கள் ஆட்சியின்போது தேரோட்ட திருவிழாக்கள் குமரி மாவட்டத்தின் கல்குளம் வட்டமான பத்மநாபபுரத்தில் தொடங்கி, தோவாளை, மற்றும் அகஸ்தீசு வரம் வட்டம் குமரிமுனை பகவதி அம்மன் ஆலயம்வரை மிகச் சிறப்பாக இன்றுவரை நடந்துவருகிறது. இவற்றிற்கெல்லாம் மிகப்பெரிய கோவிலாகவும், மிகப்பெரிய தேரோட்டமும் நடைபெற்று வருவது சுசீந்திரம் ஸ்தாணுமாலயன் மூர்த்தி ஆலயம் மட்டுமே.

இவ்வாலயத்தின் மீதும் இங்குள்ள இறைவனின் மீதும் அளவுகடந்த பக்தி கொண்டிருந்ததைத் திருவிதாங்கூர் சமஸ்தான மன்னனிடம் காணமுடிகிறது. உதாரணமாக: சுசீந்திரம் மார்கழித் தேரோட்ட நாளின்போது மன்னர்கள் காலை உணவு உட்கொள்ளாமல் தேர் நிலைக்கு வந்த விவரம் கிடைத்த பின்னால் உணவை உண்ணுவது பாரம்பரியமிக்க நடைமுறையாக இருந்து வருகிறது. தொலைபேசி மற்றும் கம்பியில்லா தந்தி (டெலிகிராம்) வசதி இல்லாத காலகட்டத்தில் மிகுந்த ஓசையுடன் ஒலிக்கும் தொடர் வெடிகள் மூலமாக சுசீந்திரத்தில் ஆரம்பிக்கப் பட்டு திருவனந்தபுரம் அரண்மனை வாயில் வரை வெடிக்கச் செய்து விவரம் தெரிவிக்கப்படும். அதன் பிறகே மன்னர்களும் ஆகாரம் உட்கொள்ளுவார்.

காலப்போக்கில் வசதிகள் பெருகிட தொலைபேசி மூலமாக திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் கடைசி மன்னராக விளங்கிய ஸ்ரீசித்திரைத்திருநாள் பாலராமவர்மா அவர்களுக்கு விவரம் தெரிவித்து வந்ததோடு மன்னராட்சி முடிந்து மக்களாட்சியில் சாதாரண குடிமகனாக வாழ்ந்த காலகட்டத்திலும் இம்முறை பின்பற்றப்பட்டு அவர் மறைந்த பின்பும் இன்றும் கூட மகாராஜாவாக மக்களால் போற்றப்படும் ஸ்ரீசித்திரைத்திரு நாளின் சகோதரராகிய ஸ்ரீஉத்திராடம் திருநாள் மார்த்தாண்ட வர்மாவுக்கு தகவல் கிடைக்கின்ற வகையில் திருவனந்தபுரம் அரண்மனைக்கு தொலைபேசி மூலமாக தகவல் தெரிவிக்கப்பட்டு வருவதை காணமுடிகிறது. மன்னர் குடும்பம் இத்திருக்கோயிலுக்குச் செய்துள்ள தொண்டுகளை மறவாமல் அவருடைய பரம்பரையினருக்கு இக்கால கட்டத்திலும் தேர் நிலைக்கு வந்த விவரத்தைத் தெரிவித்துவரும் ஆலய நிருவாக அதிகாரிகள் பாராட்டுக்குரியவர்களாகும்.

## சுவாமித் தேரின் அமைப்பு

இது சுமார் 362 வருட கால பழக்கமுடைய தேராகக் கருதப்படுகிறது. ஐந்து அடுக்கு நிலை (தட்டு)களைக் கொண்டது. சுவாமியும் அம்பாளும் வீற்றிருக்கும் முதல் நிலையைச் சிம்மாசனம் என்றும், அதன் கீழுள்ள இரண்டாவது நிலையை உபபீடம், என்றும் மூன்றாவது நிலையை நாடகம் என்றும் நான்காவது நிலையாகிய தேவாசனத்தில் பிரம்மா அமர்ந்து, கீழே இருக்கும் தட்டில் பாய்ந்து நிற்கும் இரு வெண்குதிரைகளின் கடிவாளத்தை இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து ஒருகையில் பிடித்தும், மறு கையில் சாட்டைக்கம்பினால் குதிரைகளை விரட்டி தேரை ஓட்டுவது போன்று அமைந்துள்ள காட்சியினைக் காணமுடிகிறது. குதிரைகளின் இருபுறமும் இரண்டு துவாரபாலர்களின் சிற்பங்கள் மரத்தினால் செய்யப்பட்டுள்ளதையும் காணலாம். தேரின் மொத்த உயரம் 60அடியாகும். தேவாசனத்திலும் சிம்மாசனத்திலுமாக 84 மரத்தூண்கள் நிலை நிறுத்தப்பட்டு கும்பம் வரை நீண்டும் அதில் மரச் சட்டங்களும் பொருத்தி

வைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். தேர்புராணக்கதைகளை விளக்கிடும் மரச்சிற்பங்களின் கலையழகு நிறைந்து காணப்படுகிறது. இத்தூண்கள் யாவும் தேக்குமரத்தினால் செய்யப்பட்டு இன்றும் உறுதியாக உள்ளது. தேரோட்ட நாளில் காஷ்மீர் பட்டுத்துணி தேரில் போர்த்தப்பட்டு ரதவீதிகளில் பவனிவரும் காட்சியை அன்னப்பறவையின் நடை அழகிற்கு ஒப்பிடலாம்.

## தேரூர் மக்கள் அளித்த பரிசு

### *அம்மன் தேர் வரலாறு*

சுசீந்திரத்தின் வடக்குத் திசையில் சுமார் மூன்று கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள "தேரூர்" என்னும் ஊர் இத்திருக்கோயில் வரலாற்றில் முக்கிய இடம் வகிக்கின்றது. சுசீந்திரம் ஸ்தல புராண வரலாற்றில் இந்திரன் சாபவிமோசனம் பெற வருகை தந்த வேளையில் தனது தேரை நிறுத்தி வந்த இடத்தை தேரூர் எனவும் அழைக்கப்படுவதாக முன்னால் தெரிவித்திருந்தோம். இதற்கு தென் ரதபுரி என்ற பெயரும் உண்டு. அடுத்து அற்புத நாயகியான அறம் வளர்த்த நாச்சியார் அவதரித்த புண்ணிய பூமி. சுசீந்திரம் திருக்கோயில் திருப்பணிக்கு உளமாற உதவிபுரிந்து இவை போதாதென்று பலஇடங்களில் சென்று நிதிதிரட்டி மண்டபப்பணிகளை முடித்திட துணையாய் இருந்த தேரூர் உமையொரு பாகம் திருமடத்து மடாதிபதி அவர்களைப் பற்றியும் முன்னர் தெரிவித் திருந்தோம். நாஞ்சில் நாட்டு மக்களின் நல் உணவாய் திகழ்ந் திடும் நஞ்சை வயல் சூழ்ந்திருக்கும் தேரூர் பகுதி ஆன்மீக மக்களின் அன்டக் காணிக்கையில் உருவாக்கப்பட்டு அற்புத தேராக விளங்கிடும் அம்மன் தேரை இவ்வாலய இத்திருக்கோயில் ஆண்டவனுக்கு அர்ப்பணித்த பெருமை தேரூர் மக்களுக்கு உண்டு. இன்றும் வருடத்திற்கு இருமுறை இறைவனைச் சுமந்து வீதிகளில் வலம்வந்திடும் திருக் காட்சியைக் காணமுடிகிறது. இதனுடைய மொத்த உயரம் நாற்பது அடியாகும். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னால் ஆங்கில ஆண்டு:1788-ல் செய்து முடிக்கப்பட்டதாக வரலாற்று



தேரூர் மக்கள் இத்திருக்கோயிலுக்கு
வழங்கிய அம்மன் தேர்



இந்திரன் ரதம்



பிள்ளையார் ரதம்

குறிப்பேடுகள் தெரிவிக்கின்றது. கிட்டத்தட்ட 400 தடவை ரத வீதிகளில் வலம்வந்து கொண்டிருக்கிறது. பெரிய தேராக விளங்கிடும் சுவாமிதேர் வருடத்திற்கு ஒருமுறை மட்டுமே வீதியில் வலம் வருகிறது. ஆனால் அம்மன் தேர் சித்திரை, மார்கழித் திருவிழாக்களில் மக்களால் இழுத்து வரப்பட்டு இரண்டாம் நிலைவகிக்கிறது. தேரோட்ட நாளில் அலங்காரத் துணிகள் அணிவித்து தேரின் நான்கு வாசல்களிலும் குலை வாழை நாட்டி, பூமாலைத் தோரணம் கட்டி மார்கழியில் மேல மருவத்தூர் ஆதிபராசக்தி வழிபாட்டு மன்றத்தின் பெண்கள் செவ்வாடைத்தரித்து இந்த அழகு ரதத்தை வடம் தொட்டு இழுத்துவரும் தெய்வீகக்காட்சியை இங்கு காணலாம்.

அடுத்து 28அடி உயரங்கொண்ட பிள்ளையார் ரதம் ஆங் : 1864-ல் செய்யப்பட்டு 134 வருட பழக்கமுடைய இத்தேர் வருடத்திற்கு நான்குமுறை மார்கழி, சித்திரை, பெரிய திருவிழாக்களிலும், ஆவணி, மாசி, ஆகிய சிறிய திருவிழாக்களிலும் தேரோட்டத்தின் போது பதினைந்து வயதிற் குட்பட்ட பள்ளிக்கூட மாணவச்செல்வங்கள் வடம் பிடித்து இழுத்துவருவதைக் காணமுடிகிறது. மார்கழி, சித்திரைத் திருவிழா தேரோட்டத்தின்போது பாய்ந்தோடி வருகின்ற பந்தயக்குதிரை போன்று ஓடிவந்து நிலை நிற்கின்ற காட்சியைக் காணமுடிகிறது. 1990-ம் ஆண்டுவரை ஆவணி மூலம் திருவிழாவிலும், மாசிமக திருக்கல்யாண திருவிழாவிலும் தேரோட்டம் கண்ட இந்தத் தேர் சுமார் 8 வருடகாலமாக இரு திருவிழாக்களிலும் ஓய்வெடுத்து வருகிறது. கிட்டத்தட்ட 516 தடவையாக ஓடிக்கொண்டிருக்கிறது. இங்குள்ள நான்கு தேர்களிலும் மிக அதிகமான தேர்த்திருவிழாக்களில் பங்குபெற்று ஓடிக்கொண்டிருப்பதில் முதனிலை வகிப்பது இதுவே ஸ்ரீமூலம் திருநாள் மன்னராட்சியில் பணிசெய் விக்கப்பட்ட தேராகும். திருக்கோயிலினுள்ளும், ரதவீதிகளிலும், ஊரைச்சுற்றிலும் பிள்ளையாராகிய வினாயகப்பெருமானின் கோயில்கள் நிறைந்து உள்ளதால் ஆன்மீக மக்களின் வேண்டுகோளை ஏற்று வினாயகருக்கும் சுசிபெற்ற இந்திரனின் பெயரால் விளங்கிடும் இத்திருத்தலத்தில் அவர் பெயராலும் சுமார் பதினைந்து அடி உயரத்தில் மிகச்சிறிய தேராகிய

இந்திரன் தேர் ஆக இரண்டு தேர்களையும் மேற்படி மன்னரின் காலத்தில் செய்துள்ள விவரம் தெரிய வருகிறது.

மார்கழித்திருவிழா 5,7 ஆகிய நாட்களில் இரவிலும் சித்திரைத் திருநாள் தேரோட்டத்திலும், சுமார் 8 வருடகாலமாக ஆவணி மற்றும் மாசித்திருவிழா ஒன்பதாம் நாள் மாலை 4 மணிக்கு இந்திரன் தேரை சின்னஞ்சிறுவர்கள் வடம்பிடித்து இழுத்துவரும் தேரோட்ட நிகழ்ச்சியைக் காணமுடிகிறது. ஆம் ஆன்மீக மலர்கள் (மக்கள்) மலர்ந்து மணம் வீசும் இத்திருத்தலத்தில் அரும்பாகிய சின்னஞ்சிறுவர், சிறுமிகளின் உள்ளத்தில் ஆன்மீக உணர்வினை ஊட்டி ஆன்மீகம் வருங்காலத்தில் வாழையடி வாழையாக தழைத்தோங்க வழிவகுக்கின்றது. இந்த சிறிய தேரோட்டம், மகத்துவம் பெற்ற திருவிழாக்களில் அடங்கியுள்ள தத்துவங்களை ஓரளவு உணரமுடிகிறது. அனைத்து தேர்களிலும் போர்த்தி அலங்கரிக்கப்பட்டும் அலங்காரத் துணிகள் முழுவதும் விலையுயர்ந்த காஷ்மீர் கம்பளி பட்டுத் துணிகளாகும். நூற்றாண்டு காலங்களுக்கு முற்பட்டதும் ஆகும்.

## சப்தாவர்ணம்

**விளக்கம் :-** சப்த+ஆவர்ணம் = சப்தாவர்ணம் சப்த = ஏழு, ஆவர்ணம் = சுற்று, "ஏழாவது சுற்று" என பொருள்படுகிறது கருவறை (மூலஸ்தானம்)யினுள் அமைந்துள்ள லிங்கத்தைச் சுற்றி வருவது முதல் சுற்று. இங்கு பூசாரியைத் தவிர மற்றவர்கள் செல்லமுடியாது. மூலஸ்தானத்தைச் சுற்றியுள்ள திறந்த முற்ற வெளி இரண்டாவது சுற்று, முற்றவெளிக்கு மேல் பாவை விளக் குகள் நிறைந்து காணப்படும் சுற்று மூன்றாவதும், அதன் பின்புறம் அமைந்துள்ள பகுதி நான்காவதும் வெளியே உள்ள பெரிய பிரகார மண்டபங்கள் ஐந்தாவது சுற்றுமாக இத்திருக் கோயிலினுள் மட்டும் ஐந்து சுற்றுகள் அமைந்துள்ளன. அடுத்ததாக கோயிலின் வெளியே மாடத்தெரு வழியாக கோவில் முகப்பில் வந்து சேருவது ஆறாவது சுற்றும். நான்கு ரதவீதிகளின் வழியாக சுவாமி 9ம் நாள் இரவு சுற்றி வந்து மீண்டும் கோயில் முகப்பு சன்னதியில் வந்துசேர்வது ஏழாவது சுற்றுமாகும். இதனை **"சப்தாவர்ணம்"** என்று கூறுகிறோம்.



9-ம் நாள் சப்தாவர்ணத்திற்கு ஆபரணங்கள்
சர்ர்த்தப்பட்ட ரிஷப வாகனக் காட்சி
அருகில் தற்போதைய திருக்கோயிலுடைய
வட்டப்பள்ளி ஸ்தானிகர்
(சுமார் முப்பது வருடங்களுக்கு முற்பட்ட புகைப்படம்)

## அற்புதக்காட்சி



**இரண்டு மூலஸ்தானங்களின் கோபுரங்களும் நடுவே கொடிமரங்களும் இராஜகோபுரமும்**

(சுமார் 50 வருடங்களுக்கு முற்பட்ட புகைப்படம்)

## ஏழு அமைப்புத் தத்துவங்கள்

இந்தியத் திருநாட்டின் அமைப்பினை நமது தேசிய கீதமாய் அமைந்த பாடலில் "கவி ரவீந்திரநாத் தாகூர்" அவர்கள் மிகவும் அற்புதமாகப் போற்றிப் பாடியுள்ளதைக் காண்போம். உயிர் அனைத்திற்கும் முதலில் தேவையானது தண்ணீர். அதைத்தருவது இமயமலை மற்றும் விந்திய மலைகளாகும். அதிலிருந்து புறப்படும் நதிகளான, கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதா, சிந்து மற்றும் காவேரி போன்றவை பாரதத்திருநாட்டின் முக்கிய ஜீவநதிகளாகும். இந்த ஏழு புண்ணிய நதிகள் பஞ்சாப், சிந்து, குஜராத், மராட்டியம், உத்கல் (அஸ்ஸாம்), வங்காளம், மற்றும் திராவிடநாடு (ஆந்திரா, கர்நாடகம், கேரளா, தமிழ்நாடு ஆகிய நான்கும் சேர்ந்தது) போன்ற ஏழு பகுதிகளில் நதிகளாகவும், ஆறுகளாகவும் பிரிந்து முடிவில் கடலில் சங்கமாயிற்று. இவைகளின் எண்ணிக்கையும் ஏழு.

வானவில்லின் நிறங்கள் ஏழு, சப்த ரிஷிகளாக போற்றப்படும் மரீசி, அங்கிரஸ், அத்திரி, புலஸ்தியர், புலஹன், கிரது, வசிஷ்டர் இவர்களின் எண்ணிக்கையும் ஏழு., வானுலகில் சேர்ந்திருக்கும் இவ் ஏழுரிஷிகளும், இரவுநேரத்தில் ஏழு நட்சத்திரங்களாய் ஒளி தருவதை காண்கிறோம். இதனை "சப்த ரிஷி மண்டலம்" எனக் கூறுவதுண்டு. மனித உடலில் அமைந்த தாதுக்களான ரசம், இரத்தம், சதை, அஸ்தி, மஜ்ஜை, மேதஸ், சுக்ளம் ஆகியவற்றின் எண்ணிக்கை ஏழு. ஸ்வரங்களின் எண்ணிக்கை ஏழு, கோயிலின் பலி பீடங்களில் அமைந் திருக்கும் சப்த மாதுர்க்களாகிய பிராமி, மாகேஸ்வரி, கௌ மாரி, வாராகி, சாமுண்டி, வைஷ்ணவி, இந்திராணி ஆகியோரும் ஏழு. சப்தமரங்கள் அத்தி, இத்தி, ஆல், அரசு, புங்கு, புளி, பூலாத்தி மற்றும் கோபுரத்திரன் நிலைகளும் ஏழு. இன்னும் எத்தனையோ தத்துவங்கள் நிறைய உள்ளன. மேற்கண்டவைகளில் சில இங்கே உதாரணமாக தரப்பட்டுள்ளது.

மூன்றாம் திருவிழா இரவில் தாய்தந்தையரை ஆனந்தத் களிப்போடு மக்கள்மார் சுற்றிவந்து ஆசிபெற்று ஏழுநாட்கள் தங்கியிருந்து, பெற்றோர்களோடுத் தினமும் வீதியில் வலம்

வந்து காட்சி தந்த மைந்தர்கள் ஒன்பதாம் நாள் இரவு சப்தாவர்ணத்தில் பெற்றோரைப் பிரிந்து செல்கின்ற சோகக் காட்சியை இங்கு காணமுடிகிறது. பிள்ளைகளான வலம்புரி விநாயகரையும், சுப்பிரமணியரையும் பிரிந்து செல்ல மனமில்லாமல் ரிஷப வாகனத்தில் அமர்ந்திருக்கும் உமா-மகேஸ்வரர் கோயிலின் வாசல்வரை மெதுவாக இருமுறை சென்று பின்னோக்கி வருவதும் மூன்றாவது முறை துக்கம் தாளாமல் ஒரே ஓட்டமாக கோயிலினுள் செல்லும்போது கண்களில் நீர்மல்க பெண்கள் மத்தியிலிருந்து ஒலிக்கும் குரவையொலி மண்டபத்தை அதிர வைக்கிறது. குழந்தைகளின் பாசம் பெற்றோரிடம் நிறைந்திருப்பதை விழா முடிந்து திரும்புகின்ற பெண்கள் தங்கள் முன்தானை துணியில் பெருகி வரும் கண்ணீரை துடைத்துச் செல்லும் காட்சி மேனியைப் புல்லரிக்கச் செய்கிறது.

பெற்றோரையும், சுற்றத்தாரையும் பிரித்து வெளியூர்களில் வாழ்ந்து வரும் பிள்ளைகள் ஆண்டுக்கொருமுறை வந்து தாய் தந்தையரை சந்திக்கும் பேரானந்தத்தையும், ஒருவாரம் தங்கிவிட்டு பிள்ளைகள் பிரியா விடைபெற்று பிரிந்து செல்லும் போது தவிக்கின்ற வேதனையை, அந்த சோகத்தை மனித வாழ்வில் அன்றாடம் காண்கிறோம். உலகாளும் இறைவனுக்கும் இவை உண்டு என்பதை சப்தவர்ண நிகழ்ச்சி நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

இந்நிகழ்ச்சிக்கு முன்னால் ரதவீதிகளில் அலங்கார குதிரை வாகனங்களில் குமாரகோயில் மற்றும் மருங்கூர் சுப்பிர மணியர், கோட்டாறு வலம்புரி விநாயகர், சுசீந்திரம் அபிமானம் காத்த விநாயகர் ஆகியோர் மூஷிக வாகனங்களில் முன்னால் வர பின்னால் ரிஷப வாகனங்களில் உமா-மகேஸ்வரர் கருட வாகனத்தில் மஹாவிஷ்ணு மற்றும் அன்ன வாகனத்தில் அம்பாள் ஆகியோர்க்கு வீதியில் வீடுதோறும் மக்கள் அனைவரும் வரவேற்பு கொடுப்பது போன்று வெற்றிலைபாக்கு பழம் மற்றும் தேங்காய் போன்றவைகளை தட்டில் வைத்து கொடுத்து கற்பூர ஆராதனை தரிசனம் காண்கின்றனர். வாகனங்களின் முன்பும், பின்பும் ஆன்மீக மக்களின் கூட்டம்

இருகரம் கூப்பி தொழுது வரும் தெய்வீகக் காட்சியும், அனைத்து வாகனங்கள் (முருகன், வினாயகர்) வீதியில் சேர்ந்து வருவது மார்கழியில் மட்டுமே காணமுடிகிறது. சித்திரை திருவிழாவின்போது மருங்கூர் முருகனும் குமாரகோயில் முருகனும் கோட்டார் வலம்புரி விநாயகரும் வருவதில்லை. ரதவீதிகளில் மட்டும் சுற்றிவரும் அனைத்து வாகனங்களும் கோயில் முகப்பு முன்பு வந்து சேர்கின்றன.

கோயில் முகப்பில் உமா-மகேஸ்வரர், மகாவிஷ்ணு, அம்பாள் வாகனங்கள் மேற்குநோக்கி கோயிலைப் பார்த்தும், முருகன் விநாயகர் வாகனங்கள் கிழக்கு நோக்கி பெற்றோரை மூன்று முறை வலம்வந்து நிற்கின்றன. பிறகு ரிஷப வாகனத்திலிருக்கும் உமா-மகேஸ்வரர்க்கும், குதிரை வாகனங்களில் எழுந்த ருளியுள்ள மருங்கூர் சுப்பிரமணிய சுவாமிக்கும் குமாரகோயில் முருகனுக்கும் ஒரே நேரத்தில் தீபஆராதனை நடக்கின்ற அற்புதத் தரிசனத்தை காண பல்லாயிரக்கணக்கான மக்கள் திரண்டு நிற்பதைக் காணலாம். நடுஇரவு 12மணிக்கு நடைபெறும் இந்நிகழ்ச்சியைக் காண ஆன்மீக மக்கள் பனிக்கால குளிரையும் பொருட்படுத்தாது முன்னிரவு 7மணிக்கு கோயில் முன் முகப்பில் இடம் பிடித்து இருப்பதோடு மட்டுமின்றி சுவாமித்தேர், அம்மன் தேர்கள் மீதும் முகப்பைச் சுற்றியுள்ள மண்டபங்களின் மீதும் மக்கள் கூட்டம் நிரம்பி சப்தாவர்ண தரிசனம் காண காத்திருப்பதையும் காணலாம். பல நூற்றாண்டுகளாக நடைபெற்றுவரும் இத்திருவிழாவை லட்சக்கணக்கான மக்கள் கண்டு தரிசனம் செய்கின்ற மிகப்பெரிய விழாவாக இம்மார்கழி ஒன்பதாம் நாள் தேரோட்டம் மற்றும், அன்று இரவு நடைபெறுகின்ற சப்தாவர்ண நிகழ்ச்சி ஆலயத்திற்கு பெருமை சேர்க்கும் விழாவாக அமையப் பெறுவது போற்றத்தக்க அம்சமாகும். கோயில் முகப்பு வாசலின் எதிரே உள்ள கல்மண்டபத்தில் மக்கள் நிறைந்திருந்து சப்தாவர்ண தரிசனம் முடிந்து தெய்வங்களை அனுப்பி வைப்பதால் இம்மண்டபத்திற்கு "அனுப்புமண்டபம்" எனக் கூறுவதுண்டு.

# திருவாதிரை நாயகன்

## பத்தாம் திருவிழா திருவாதிரை சிறப்பு

மார்கழி மாதத்தில் அனைத்துப் புகழ்பெற்ற சிவாலயங்களிலும் "திருவாதிரை விழா" மிகச்சிறப்பாக கொண்டாடப்பட்டு வருகிறது. மேலும் மலையாள நாட்டில் மிக முக்கியத்துவம் வாய்ந்த விழாவாகப் போற்றப்படும் இன்னாளில் வீட்டு முற்றங்களிலும், கோயில்களிலும் திருவிளக்குகள் ஏற்றி பாடலோடு நடனமும் ஆடி பெண்கள் கும்மியடித்துக் குரவையிட்டு களிப்போடு கொண்டாடும் இவ்விழாவைக் காணக்கண் கோடி வேண்டும்.

திருவாதிரை நட்சத்திர நன்னாள் சிவபெருமானுக்கு உகந்தநாளாகக் கருதி விழாக்களும், வழிபாடுகளும் நடைபெறுகின்றன. "ஆதிரைநாள் உகந்தான்", "ஆதிரை நன்னாளன்" என திருநாவுக்கரசு பெருமான் பாடிய பாடல்களிலும் இதைக் காணமுடிகிறது. திருஞான சம்பந்த பெருமானும் திருவாதிரை நன்னாளைப் போற்றி பாடியுள்ளார். சித் என்பது அறிவு அம்பரம் என்றால் ஆகாயம் இதனைச் சிதம்பரம் என்றும், புராண காலத்தில் தாருகாவன முனிவர்களின் கர்வத்தை அடக்கி இறைவன் ஆனந்த நடனம் ஆடுகின்றார். பதஞ்சலி முனிவரின் வேண்டுகோளையேற்று ஆதிரை நன்னாளில் தில்லையில் திருநடனம் புரிகின்றார் இதனை **"ஆருத்ராதரிசனம்"** எனப் பெயரிட்டு அழைக்கின்றோம். திருவாதிரை சிறப்பைக் கூறும்போது ஆதிரை என்பதில் ஆ என்பது ஆன்மாக்களையும், திரை-மறைத்தலையும் குறிக்கும். அதாவது உயிர்களின் அறிவு இச்சை செயல்களை மறைத்து உலக வாழ்வில் ஈடுபடச்செய்வது என்பது பொருள்.

பத்தாம் திருவிழாவாகிய திருவாதிரை நாளில் இக் கோயிலிலுள்ள சித்திரசபையில் வைத்து அதிகாலை 4.00 மணிக்கு நடராஜமூர்த்திக்கு அஷ்டாபிஷேகம் நடைபெறுகிறது. திருவாதிரை நாச்சியாருக்கு காலை ஆறாட்டு முடித்து அன்று

ஒருநாள் மட்டும் மூலஸ்தானத்தில் தாணுமாலயப்பெருமானோடு அம்பாளும் வீற்றிருப்பாள். அன்று மாலை 5 மணிக்கு நடராஜ மூர்த்தி வீதியுலாவிற்கு எழுந்தருளுகின்றார். மாலையில் நடை பெறும் இவ்விழாவினைக் காண கோட்டாறு, இடலாக்குடி ஆகிய ஊர்களைச் சார்ந்த பட்டாரியர் மற்றும் சௌராஷ்டிர சமுதாய மக்கள் புத்தாடையுடுத்திப் பெருமையோடு திருநடன தரிசனத்தைக் கண்டு களிக்கின்றனர். சுசீந்திரம் இறைவனின் மீதுள்ள பற்றுதலையும், ஆலயத்தோடுள்ள தொடர்பினையும், இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகின்றது.

ஒன்பதாம் நாள் காலை தேரோட்டத் திருவிழாவைக் காணவரும் ஆன்மீக மக்கள் தேரோட்டமும், இரவு சப்தாவர்ணமும் கண்டு அன்று இரவு ஆலயத்தில் தங்கி மறுநாளாகிய பத்தாம் திருவிழா அதிகாலை நீராடி திருவாதிரை நாளில் அபிஷேகம் மற்றும் ஆருத்ரா தரிசனம் கண்டு வழிபட்டு செல்வது காலா காலமாக நடைபெற்று வருகின்ற முக்கிய நிகழ்ச்சியாகும். நம் துன்பங்கள் நீங்கவும், வாழ்க்கையில் இன்பங்கள் பெற்றிடவும் நடராஜர் ஆடுகின்ற திருநடன காட்சியைக் குமரி எல்லையாகிய சுசீந்திரம் திருத்தலத்திலும் திருவாதிரை நன்னாளில் (ஆனந்த நடனமாடும் ஆடல்வல்லான்) ஸ்தாணுமாலயப் பெருமான் ஆலயம் வந்து தரிசித்துப் பேறு பெறுவோமாக.

### *நாடு செழித்தோங்க நவதானிய பூஜை*

மார்கழி, சித்திரை, திருவிழா காலங்களில் ஒன்றாம் திருவிழா இரவில் ஆற்றிலிருந்து கொண்டுவரப்பட்ட மணலை 36செப்பு பாத்திரங்களிலிட்டு அதனோடு களிமண்ணும் அதில் நவதானியங்களும் கலந்து தினமும் காலை, இரவு நேரங்களில் தண்ணீர்விட்டு முளைபூஜை நடைபெறும் என்பதை முன்னமே தெரிவித்திருந்தோம். 10ம் நாள் இரவு முளைவந்த நவதானிய செடிகளை உதயமார்த்தாண்ட நந்தி மண்டபத்தின் முன்பு கொண்டு வைத்துள்ள உற்சவ மூர்த்திகளுக்கும் முக்கிய கருவறை மூலவருக்கும் முளை சார்த்து பூஜை செய்விக்கப்படும். இங்கு நடக்கும் மிக முக்கியத்துவம் பெற்ற பூஜைகளில் இதுவும் ஒன்றாகும்.

நாடு வளம்பெற நாட்டுமக்கள் பஞ்சமின்றி வாழ மிகவும் முக்கியமானது உணவுவகை பயிரினங்களாகும். இதனை ஆகம விதிகளுடன் பூஜித்து 10ம் நாள் இரவில் நவதானிய முளைப்பயிர்களைச் சுவாமிக்குச் சார்த்துவதின் காரணமாக நஞ்சையும், புஞ்சையும் செழித்து வளர்ந்திடும் பொருட்டு இப்பூஜையின் தத்துவம் அமைகிறது. இந்து சமய தத்துவங்களின்படி நடைபெறுகின்ற திருமணச் சடங்கு நிகழ்ச்சியின்போது கூட மணமேடையில் நவதானியங்களில் முளைப்பயிர்கள் வளர்க்கப்படுவதையும் பின்னால் மணமக்கள் ஆறு,குளம் போன்றவற்றில் கொண்டு கரைக்கும் நிகழ்ச்சியினைத் திருமணத்தின் புனித சடங்குகளில் ஒன்றாக நடத்தி வருவதையும் காண்கிறோம். நவதானியப் பயிர்களைப் போன்று மணமக்களும் இவ்வாழ்வில் செழிப்புற்று திகழ இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டாக அமைகிறது.

## நிறை (புத்தரிசி) பூஜை

நஞ்சை நெல் அதிகம் விளையும் இப்புண்ணிய பூமியில் முதன்முதலில் அறுவடைச் செய்யப்படும் வயலிலிருந்து கதிர்களோடு கூடிய நெற்பயிரைப் கொண்டுவந்து அதிகாலை 5 மணிக்கு சுசீந்திரம் சன்னதித் தெருவில் அமைந்துள்ள குலசேகரப் பெருமாள் வினாயகர் கோயிலின் முன்புவைத்து வட்டப்பள்ளி ஸ்தானிகர் ஆட்களால் பூஜை செய்யப்பட்டு, தீபஆராதனையும் நடத்தி பின்பு நான்கு ரதவீதிகளையும், மேளதாளங்கள் முன்செல்ல சுற்றிவந்து ஸ்தாணுமாலயன் திருக்கோயில் உதயமார்த்தாண்டன் மண்டபத்தில் வைத்து மேல்சாந்திகள் பூஜைகள் நடத்திப் பின்பு கருவறையினுள் இறைவன் முன்பு கொண்டு வைத்திடும் இந்நிகழ்ச்சி "நிறை" எனக்கூறப்படுகின்றது. வருடத்திற்கு இருமுறை தை (மகரம) ஆடி (கற்கடகம்) ஆகிய அறுவடை மாதங்களில் அதிகாலை வேளையில் நடைபெறும் இவ்விழா மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக பல நூற்றாண்டுகளாக இத்திருக்கோயிலில் இன்றும் நடைபெற்று வருகின்றது. தான்ய லெட்சுமியின் பெருமையை இத்திருக்கோயில் நிறைபூசை வைபவம் நமக்கு எடுத்துக்காட்டுகின்றது.

ஆதிபராசக்தி



அருள்தரும்
முன்னுதித்த நங்கை தேவி

காவல் தெய்வம்



அருள்தரும்
ஸ்ரீ கருங்காளி அம்மன்



முன்னுதித்த அம்மன் ஆலயத்தோற்றம்

முற்காலங்களில் இவ்விழா மிகவும் சிறப்போடு நடந்தமையால் கோயில் ஆகம பூஜை "ஆசாரப்பதிவேடு" கீழ் உள்ளவாறு விளக்குகின்றது. புத்தரிசியில் கதலிப்பழமும், சர்க்கரையும் கலந்து உள்ளவாறு இவ்விழாவில் கலந்துகொண்ட அனைவர்க்கும் வழங்கி அறுசுவையோடு கூடிய அன்னதானம் படைத்திட மன்னர்கள் இதன் வகைக்கு நிலங்கள் வழங்கியுள்ளமையும் தெரியவருகிறது. மேலும் யோகத்துப் போற்றி மடங்களின் தலைவர்களும், பன்னிரன்டு படாகை பிரதிநிதிகளும், ஆலய நிர்வாகத்தினரும், கோயில் பணி ஆட்களும் இதில் கலந்து பயன்பெறும் விதத்தில் நடைபெற்று வந்த விவரமும் தெரிய வருகிறது. இப்புனிதவிழா முடிந்த பிறகே தொடர்ச்சியாக வயல் அறுவடை ஆரம்பமாகும் என்ற நிலை சுசீந்திரம் சுற்றுப்புற பகுதிகளில் இருந்து வந்துள்ளதையும் அறியமுடிகிறது.

மேலும் அன்றைய தினத்தில் அதிகாலையில் ஆலயத் திற்கு வருகை தரும் ஆன்மீக மக்கள் அனைவரும் நெற் கதிர்களைப் பெற்று தத்தம் வீடுகளில் கொண்டு வைப்பதையும் இங்கே காணமுடிகிறது. அன்றைய மதிய உணவை "புத்தரிசிச் சாப்பாடு" என அறுசுவை உணவோடு மக்கள் உண்ணுவதை குமரி மாவட்டத்தின் அனேக இல்லங்களிலும் முக்கியமாக நாஞ்சில் நாட்டு வேளாண் மரபினர் இதனைச் சுபநாளாகக் கருதி இவ்வுணவிற்கு முக்கியத்துவம் கொடுத்து வருவதை வீடுகள் தோறும் காணமுடிகிறது.

ஒரு சமயம் வனப்பயிர் அதிகம் நிறைந்துள்ள கேரளத் திருநாட்டில் புகழ்பெற்ற ஆலயமாய் விளங்கி வருவதும், இன்றும் திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர் குடும்பத்தின் நேரடிப் பொறுப்பிலுள்ளதுமாகிய திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி கோயில் நிறை புத்தரிசி வைபவத்திற்குச் சுசீந்திரத்தைச் சுற்றியுள்ள பகுதியிலிருந்து நெற்கதிர் கட்டுகளைக் கொண்டு சென்று நிறைபூஜை நடத்தியதும் அறியமுடிகிறது. இதுபோன்று பல பூஜைகள் தவறாமல் நடந்துவருவது சுசீந்திரம் திருக்கோயிலின் பெருமைகளில் ஒன்றாகும்.

## ஆகமத்தோடு கூடிய ஆதிசக்தி பூஜை

மார்கழி, சித்திரை திருவிழாக்களின் போது 10ஆம் நாள் இரவு வீதியுலா, தெப்பவிழா போன்றவை முடித்து அதன்பிறகு உற்சவமூர்த்திகளுக்கு முளைசார்த்து மற்றும் விசேட பூஜைகள் முடிந்தபின் தெப்பக் குளத்தில் மஞ்சள் நீராட்டு வைபவம் நடைபெறுகின்றது. ஆறாட்டு முடிந்தபின்னால் உற்சவமூர்த்திகளை திருக்கோயிலில் அவரவர் இடங்களில் கொண்டு வைக்கின்றனர். அதன்பின்பு இரவுநேர பதிவுபூஜையானது ஆராதனையோடு ஆரம்பமாகி அத்தாழ ஸ்ரீபலியோடு முடிவு பெற்று அதன் பின்னால் தரிசனக்காரர்கள், பணியாட்கள் அனைவரும் வெளியே சென்றபிறகு கோயிலின் வெளிவாயில்கள் அனைத்தும் பூட்டப்படுவதற்கு முன்பு கோயிலினுள் அனைத்து இடங்களிலும் வேறு ஆட்கள் உள்ளனரா எனப் பரிசோதனை செய்தபின்பு தான் வாயில் கதவுகள் அனைத்தும் சாத்தப்படுகின்றன. அன்று இரவு நடுநிசி 12மணியளவில் நிசப்த வேளையில் "மவுனபலிபூஜை" கோயிலினுள் மூன்று சுற்றுகளாக சுற்றிவந்து மிகவும் சிரத்தையாக நடத்தப்படுகின்றது. ஆரம்பம் முதல் முடிவுவரை மௌனமாகவே நடைபெறுகின்றது.

## கட்டுப்பாடு விதிமுறை

மிகவும் கட்டுப்பாடுடன் நடைபெறும் இப்பூஜைத் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரும் அவருக்கு உதவியாக இரு ஆட்களும் ஆக மூன்று பேர்களோடு மட்டுமே நடத்தப்படுகின்றது. பூஜையை நடத்தும் முக்கியஸ்தர் அன்று ஒருநாள் முழுவதும் உணவு உட்கொள்ளாமல் விரதத்தோடு பூஜைகள் செய்ய வேண்டுமென்பது விதிமுறை. கொடியேற்ற பூஜை நடத்திய இவர் கொடியிறக்க பூஜையும் முடித்து அதனை இறக்கிடும் வரை விழா பத்து நாட்களிலும் வெளியூர் யாத்திரை மற்றும் அங்குள்ள குடும்ப இன்ப, துன்ப நிகழ்ச்சிகள் எவற்றிலும் ஆலயத்தை தவிர மற்றும் உள்ளூரிலுள்ள விசேட வைபவங்களில் கூட பங்கேற்கக் கூடாது. என்ற

கட்டுப்பாட்டினைக் கடைபிடித்து வரவேண்டும் என்ற விதிமுறையும் உள்ளது. மேலும் வெளியூர்களிலிருந்து உள்ளூர் அஞ்சல்துறை மூலமாக வருகின்ற கடிதங்கள் எதுவானாலும் திருவிழா பத்து நாட்களிலும் ஸ்தானிகர் குடும்பத்தினர் அறியாத அளவில் பாதுகாக்கப்பட்டு விழாக்கள் முடிந்தபிறகே அவற்றை அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வருவது மரபு. தொலைபேசி கூட மணியோசையோடு நின்று விடும். அதற்கும் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இதனை இன்றுவரை ஸ்தானிகர் குடும்பத்தினர் மற்றும் வெளியூர் உறவினர்கள் கடைபிடித்து வருகின்றனர். இது மார்கழி, சித்திரை திருவிழா நாட்களுக்கு மட்டும் பொருந்தும்.

மேலும் திருவிழாவிற்கு ஓரிரு நாட்களுக்கு முன்போ அல்லது திருவிழா காலங்களில் குடும்பத்தில் துயரமான சம்பவங்கள் ஏதாவது நிகழ்ந்துவிட்டால் உடனே மாற்று ஏற்பாடாக வெளியூர் ஆட்களுக்கு தகவல் தெரிவிக்கப்பட்டு ஆலயத்தில் விழா தடையின்றி நடைபெற்று அவர்களும் இவர்களுக்கு உதவி புரிந்து வருகின்றனர். நடைமுறையில் பல சம்பவங்களை வட்டப்பள்ளி ஸ்தானிகர் குடும்பத்தில் காணமுடிகிறது. இதற்கான பூஜை விதிமுறை பதிவேடு இதனை நன்கு தெளிவுபடுத்துகின்றது.

## முன்னுதித்த அம்மன் திருக்கோயில்

### ஆதிபராசக்தி பூஜை

சுசீந்திரம் திருக்கோயில் ஸ்தல புராண தத்துவத்தின்படி முதல்நிலை வகிக்கும் தெய்வமாக ஆதிபராசக்தியாகிய முன்னுதித்த நங்கை இடம்பெறுகிறாள். மும்மகளிரின் -(அலைமகள், கலை மகள், மலைமகள்) முன் தோன்றி அவர்களின் குறைதீர்த்து ஞான கானகத்தில் புத்தி தெளிவு தரும் புனித நீர்ச்சுனைகளைத் தன்னகத்தே கொண்ட பிரக்ஞா தீர்த்தமாகிய தெப்பக்குளத்தின் வடபுறத்தில் முன்னூற்று நங்கை

## ஆகம பூஜைகள்



ரதவீதியில் ஶ்ரீபலி பூஜை



கலச பூஜை

அம்மனாக வீற்றிருக்கும் இத்திருக்கோயில் மிகவும் பழமை வாய்ந்த கோயிலாக கருதப்படுகிறது. மேலும் சுசீந்திரம் ஸ்தாணு மாலயர் திருக்கோயிலில் முக்கியவிழாக்களாக கொண்டாடப் பட்டுவரும் மார்கழி, சித்திரை விழாக்கள் ஆரம்ப மாவதும், முடிவுபெறுவதும் இத்தேவியின் அருளாலேயே, என்பதை முதலில் சுருக்கமாக குறிப்பிட்டிருந்தோம்.

கொடியேற்ற தினத்திற்கு முந்தியநாள் இரவு இத்தேவி கோயிலில் ஓங்கார பலி பூஜை செய்த பின்னர் மறுநாள் மங்கள வாத்தியங்கள் முழங்கிட ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு களித்திடும் விதத்தில் தொடங்கி நடைபெறும் இவ்விழா 10ஆம் நாள் இரவு எவ்வித ஆடம்பரமுமினறி, அமைதியான முறையில் வெறும் கை அசைவுகளால் மவுனமாக மூன்று பேர்கள் மட்டும் கலந்து மிகவும் இரகசியமான முறையில் கொடியிறக்க பூஜை நடைபெறுவது முக்கிய அம்சமாகும். அன்றாடம் பூஜைக்கு உபயோகப்படுத்தும் கைமணி கூட இப்பூஜைக்குப் பயன்படுத்துவது இல்லை. அதன் மணியோசை கூட எழக்கூடாது என்பது கொடியிறக்க பூஜை விதிமுறை யாகும். 10ம் நாள் நடுஇரவு 12மணி முதல் மறுநாள் அதிகாலை 5 மணி வரை சுமார் 5 மணிநேரம் மௌன பூஜை நடைபெறுகிறது.

இதற்கிடையில் அதிகாலை 2 மணியளவில் இப்பூஜையை நடத்தும் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் குளத்தின் வடக்குப்புறமுள்ள முன்னூற்று நங்கை கோயிலில் சென்று தேவிக்கும், பூதகணங்களுக்கும் மவுனபூஜை நடத்து கின்றார். அவ்வேளையில் அங்கும் வேறுஆட்கள் இருக்கக் கூடாது. தேவி கோயில் பூசாரியும் நடையை திறந்து கொடுத்து விட்டு வெளியேறி விடவேண்டும். தேவி கோயிலில் நடை பெறும் மௌன பூஜையின்போது முன்னூற்று நங்கை பரம்பரை பூசாரிகளும் கூட உள்ளே செல்வதில்லை. மேற்படி பூஜை நடந்து முடிந்தபின்னரே அவர்கள் கோயிலினுள் அனுமதிக்கப் படுகின்றனர் சுமார் ஆயிரம் ஆண்டு காலமாக வாழையடி வாழையாக ஸ்தாணுமாலயன் திருக்கோயிலின் பரம்பரை

ஸ்தானிகராக விளங்கும் வட்டப்பள்ளி ஸ்தானிகர் குடும்பத்தின் மூத்தவரே ஆண்டிற்கு இருமுறை வருகின்ற மார்கழி, சித்திரைத் திருவிழா முக்கிய பூஜைகளான ஓங்காரபலி மற்றும் மௌன பலி பூஜைகளை இங்கும் நடத்திவருகிறார் என்பது குறிப்பிடத் தக்கது. இப்பூஜைகளை அதிகாலை 5 மணிக்குள் முடித்துவிட்டு பிறகு தாணுமாலயன் திருக்கோயில் கொடிமரத்தை சுற்றிவந்து கொடியிறக்கம் நிகழ்ச்சி நிகழ்கின்றது. சுமார் ஒருமணிநேர இடைவெளிக்கு பிறகு காலை 6 மணிக்கு மேல் வெளிவாயில் கதவுகள் திறக்கப்பட்டு அதன் பின்னால் முக்கிய மூலஸ்தான திருநடைக்கதவுகளைத் திறந்து பதிவு அபிஷேகம், பூஜை போன்றவை நடைபெறுகிறது. இதோடு சுற்றுக்கோயில்களைத் திறந்து பூஜைகள் செய்விக்கப்படுகின்றது. திருவிழா முடிந்து மறுநாள் காலை 5 மணிவரை நடக்கும் கொடியிறக்க பூஜை 10ஆம் திருவிழாவின் தொடர்ச்சியாகும். இதனையும் பூஜை சாஸ்திர விதிமுறைபதிவேடு தெரிவிக்கின்றது.

## ஸ்தாணுமாலயர் திருக்கோயில் பூஜைகள் முடக்கம்

சுமார் 90ஆண்டுகளுக்கு முன்னால் ஸ்ரீமூலம் திருநாள் மன்னர் ஆட்சி காலத்தில் தமிழ் ஆண்டு 1084 (ஆங்: 1908)-ல் மார்கழித்திருவிழா 10ஆம் நாள் இரவு மௌன பலி பூஜையை முன்னூற்று நங்கை கோயிலில் நடத்த வந்த ஸ்தானிகர் கோயில் நடை பூட்டிய நிலையில் திரும்பிச் சென்றுவிட்டார். அம்மன் கோயில் பூசாரிக்கும், ஸ்ரீகாரியமான கோயில் அதிகாரிக்கும் ஏற்பட்ட தகராறு காரணமாக இந்நிலை ஏற்பட்டது. ஒருநாள் முழுவதும் ஸ்தாணுமாலயர் திருக்கோயில் திறக்கப்படவில்லை. அம்மன் கோயிலில் நடுநிசி பூஜை முடிந்த பிறகுதான் சுசீந்திரம் ஸ்தாணுமாலயன் திருக்கோயிலில் கொடி இறக்கமுடியும் என்பது ஆகமவிதிமுறையாகும். காலை 6 மணிவரை அம்மன்கோயில் நடையைத் திறக்க பூசாரி முன்வராததாலும், மௌனமாக நடத்தவேண்டிய பூஜையானதால் அவ்வேளையில் யாரிடமும் விவரம் தெரியப்படுத்த முடியாதநிலை ஸ்தானிகருக்கு ஏற்பட்டது. அதன்பிறகு பூஜை நடத்திட மறுநாள் இரவுதான் முடியும். இதனால் கொடியிறக்க பூஜைகளும் பாதியில் நின்றுவிட்டது. ஒருநாள் முழுவதும் ஸ்தாணுமாலயர்

திருக்கோயில் திறக்கப்படாத காரணத்தால் மக்கள் மத்தியில் கொந்தளிப்பு ஏற்பட்டது. மேலும் இத்திருக்கோயில் வரலாற்றில் ஒருநாள் முழுவதும் நடைதிறக்காமல் இருந்தது 1908ம் ஆண்டாகும். அதன்பிறகு 1946ல் துப்பாக்கிசூடு சம்பவத்தின் போதும் மூன்றாவதாக திருக்கோயில் ஆலய ஊழியர்கள் போராட்டத்தின் விளைவாலும் நடைதிறக்காமல் இருந்த நிகழ்ச்சி நடந்துள்ளது.

உடனே நடந்த விவரங்களை அறிந்த தேவஸ்தான கூடுதல் அதிகாரி பிரச்சனைக்கு காரணமான இருவரையும் வேலையிலிருந்து நீக்கம் செய்ததோடு, ஊரைவிட்டு உடனடி யாகச் செல்வதற்கு உரிய நடவடிக்கையில் இறங்கிவிட்டார். இல்லாவிட்டால் ஊர்ப் பொதுமக்களால் இவர்களின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டிருக்கும். இந்த விவரங்களை ஆலயத்தின் மீது தனிக்கவனம் செலுத்திவந்த மன்னருக்கும் பின்னால் தகவல் தெரிவிக்கப்பட்டது என்பதைக் குறிப்பேடுகள் வாயிலாக அறிய முடிகிறது.

### *அம்மன் கோயிலின் சிறப்பு*

. இக்கோயிலைப் பற்றிய வரலாறு முழுமையாக தெரிவதற்குரிய குறிப்புகள் இதுவரை கிடைக்கப்பெறவில்லை. சுசீந்திரம் தாணுமாலயர் திருக்கோயிலோடுத் தொடர்புடைய ஆலயமாக இருந்து வருவதால் இதுவும் ஆயிரக்கணக்கான ஆண்டு பழமைமிக்கதாக கருத இடமுள்ளது. இங்கு எழுந்தருளி அருள் பாலிக்கும் தேவி ஆதி பராசக்தி, முன்னூற்று நங்கை, முன் மூவர் நோற்ற நங்கை, முன்னுதித்தம்மன் போன்ற பெயர்களோடு பக்த பொது மக்களால் அழைக்கப்படுகிறாள்.

இத்தேவியின் உருவம் கடுசர்க்கரையோக மருந்தால் அமைக்கப்பட்டுள்ளது. அபிஷேகம் நடைபெறுவதில்லை. அலங்கார கோலத்தில் அன்னை காட்சி தருகின்றாள். சுந்தரி சுமுகி ஆகிய இருபெண்கள் துவார பாலகர்களாக, காவல் தெய்வங்களாக உள்ளனர். நவராத்திரி ஒன்பது நாட்களிலும், ஆடிமாத செவ்வாய் நாட்களிலும், தேவி பிறந்த நாளாகிய

ஆடிப்பூரம் நட்சத்திர நாளின்போதும், ஒவ்வொரு பௌர்ணமி பூஜைகளின் சிறப்பு நாட்களிலும் விதவிதமான தோற்றங் களுடன் தேவியை அலங்காரம் செய்வித்து பக்தபொதுமக்கள் பல ஆண்டுகளாக பிரமாண்ட விழாக்கள் பலவற்றை நடத்தி வருகின்றனர்.

## அன்னலெட்சுமி :-

தானத்தில் சிறந்த "அன்னதானத்தை" தேவிக்குப் படைத்துப், பல்லாயிரக்கணக்கான மக்கள் உணவருந்தி செல்கின்ற தர்ம காரியத்தைக் கண்ணாரக் காணலாம். நாடி வருபவர்க்கு நலம் கொடுக்கும் நங்கையாக விளங்கிடும் தேவிக்கு விழா நடத்தும் ஆன்மீக அன்பர்கள் அனைவர்க்கும் பொருள் உதவியை ஆண்டுதோறும் வழங்கி, விழாச் சிறப் படைய சலியாத மனத்தோடு உதவி வருகின்றனர். அன்னையின் மீது பற்றுகொண்ட அறச்செல்வர்கள்.

## அருள் வழங்கி உயிர்காத்த தேவி :

ஆடி மாதங்களில் செவ்வாய்தோறும் இவ்வாலயத்தில் நடைபெறும் விழா வேறு எந்த ஊரிலும் காணமுடியாத அன்னதான விழாவாக மிகவும் முக்கியத்துவம் பெற்றதாக இங்கு நடந்து வருகிறது. அன்னலெட்சுமியின் அற்புத தரிசனத்தை, அலங்கார வடிவத்தைக் காண பல்லாயிரக் கணக்கான மக்கள் இவ்விழாக்களின் போது வந்து செல்வதைக் காணலாம். கொல்லம் தமிழ் ஆண்டு 854ல் திருவிதாங்கூர் சமஸ்தான ராணியாக விளங்கிய உமையம்மை மகாராணி இவ்வாலய ஆடிப்பூர விழாவிற்கு நிலங்கள் வழங்கியுள்ளதைக் கோயில் முன் மண்டபத்திலுள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது. மேலும் பெண்ணொருத்தி மூக்கில் ஏற்பட்ட புற்றுநோய் தீர மண்டபம் (ஓடுகள் அமைந்த கூரையோடு கூடிய) கட்டிக் கொடுத்து நோய் தீர்ந்து பலன் அடைந்ததை மண்டப தூண்களில் சிலைவடிவில் ஒரு பெண்ணின் மூக்கில் நோயோடு கூடிய தோற்றத்தையும், நோய் தீர்ந்தபின் உள்ள தோற்றத்தையும் காணலாம். தற்போது ஓட்டுக்கூரை அகற்றப்பட்டு வாகன மண்டபமாக ஆலய நிருவாகம் இதை அமைத்துள்ளது.

சுமார் 20ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு ஆடி மாத கடைசி செவ்வாயின் போது நடைபெற்ற விழாவில் முந்திய நாள் நண்பகல் வேளையில் கோயிலினுள் இருக்கும் மிகப் பெரிய அரசமரத்தில் மின்விளக்குகள் அலங்காரம் செய்விக்க மரத்தின் உச்சியின் கிளையொன்றில் நின்று வேலைசெய்து கொண்டிருந்த பதினெட்டு வயதுடைய இளைஞன் ஒருவன் மரத்தின் கிளைமுறிந்து தலைகுப்புற வந்து கீழே விழுந்தமையால் தலையில் பயங்கரமான காயம் ஏற்பட்டது. உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த இளைஞனை விழா நடத்துநர்கள் தூக்கிக் கொண்டுசென்று மருத்துவமனையில சேர்த்து சிகிச்சை அளித்தனர். இளைஞன் உயிர் பிழைக்க வேண்டி ஆலயத்தில் பிரார்த்தனைகள் செய்யப்பட்டது. மிகவும் உயரமான இடத்திலிருந்து விழுந்த காரணத்தால் இளைஞன் பிழைப்பதும் கடினம். அப்படி பிழைத்தாலும் மூளையில் ஏற்பட்டுள்ள காயத்தால் புத்திசுவாதினமில்லாமல் தான் வாழமுடியும். என்ற கருத்தினையும் மருத்துவர்கள் தெரிவித்தனர். நாட்கள் பல கழிந்தன மருத்துவர்களின் கருத்திற்கு மாறாக இளைஞன் புத்துயிர்பெற்று மூளைக்கு எவ்வித பாதிப்புமின்றி வாழ்ந்து வருவதை இன்றும் காணலாம். இவ்வாலயம் வந்து நலம்கொடுத்த நாயகியாக விளங்கிடும் முன்னுதித்த நங்கை அம்மனைப் பல்லாயிரக்கணக்கான மக்கள் தரிசனம் செய்து சென்றிடும் காட்சியைக் காணமுடிகிறது.

சுமார் 74 ஆண்டுகளுக்கு முன்னால் இவ்வாலயத்தில் நடைபெற்றுவந்த "மிருகபலி" (ஆடு, கோழி) ஆங் : 1924ல் திருவிதாங்கூர் சமஸ்தான ரீஜன்று ராணியாக விளங்கிய சேது லெட்சுமிபாய் அவர்கள் காலத்தில் உயிர்ப்பலி தடைச் சட்டத்தால் நிறுத்தப்பட்டது. நவராத்திரியின் போது பூஜைக்காக இங்குள்ள உற்சவதேவியைப் பல்லக்கில் வைத்து மேள தாளத்துடன் திருவனந்தபுரம் கொண்டு செல்லும் நிகழ்ச்சி மன்னர் காலத்திலிருந்து இன்றுவரை தொடர்ந்து நடைபெற்று வருகின்றது சுசீந்திரம் தாணுமாலயர் திருக்கோயில் மார்கழி, சித்திரை திருவிழா பத்து நாட்களிலும் காலையும், இரவும் தேவி வீதியுலா வருகின்ற காட்சியையும் காணலாம் இத்தேவிக்கு

பாரிசெய்வர் எனப்படும் "சல்லியராயர்" குடும்பத்தைச் சார்ந்த பரம்பரை பூசாரிகள் பூஜை செய்து வருகின்றனர். 1740ம் ஆண்டு ஆற்காட்டு நவாபான சந்தாசாகிபுவிடம் நடந்த யுத்தத்தை நினைவுகூரும் விதத்தில் வருடம் தோறும் புரட்டாசி நவராத்திரி விஜயதசமியன்று மாலை மணி 5க்கு மேல் 6-க்ககம் சுசீந்திரம் கிழக்குப்பகுதி வழுக்கம்பாறை என்ற இடத்திற்கு முன்னுதித்த நங்கை அம்மன் குதிரை வாகனத்தில் சென்று அம்பு சார்த்து (வேட்டை) எனும் வைபவம் நடைபெறுகிறது. அம்மன் கோயில் பரம்பரை பூசாரியிடம் சுசீந்திரம் திருக்கோயிலுடைய ஸ்தானிகர் வில்லையும் அம்பையும் ஒப்படைத்து அதன்பின்பு மேற்படி நிகழ்ச்சி நடைபெறுகிறது. இதேநாளில் கன்னியாகுமரி பகவதி அம்மன் மகாதானபுரம் கிராமத்தில் எழுந்தருளி அங்கும் அம்பு சார்த்து வைபவம் நிகழ்கிறது.

## புண்ணிய நதிகளின் புனிதத்தீர்த்தம்

புராண காலத்தில் நாரத முனிவரின் தூண்டுதலால் மனம் மாறி தேவியர்களான லெஷ்மி, சரஸ்வதி, பார்வதி ஆகிய மூவரும் ஞானாரண்ய கானகத்தில் தவநெறியோடு வாழ்ந்த அனுசூயாவின் கற்பினைச் சோதிக்கும் பொருட்டு மும்மூர்த்திகளை அனுப்பிவைத்தனர். கணவர்கள் திரும்பி வராத நிலையில் அவர்களைத் தேடி அனுசூயாவின் ஆஸ்ரமத்திற்கு வந்தனர். ஒரேவடிவில் மூன்று குழந்தைகளாகத் தத்தம் கணவர் தொட்டிலில் கிடப்பதைக் கண்டு அவர்கள் சுயவுருவம் பெற்றிட வேண்டுமென்று விரும்பினர். அனுசுயா தேவி அவர்களிடம் அதற்காக ஆதி பராசக்தியை நோக்கி தவமிருந்தால் அவர்கள் தத்தம் கணவரை சுய வடிவத்துடன் பெறுவார்கள் என எடுத்துக்கூறினார். அதனால் தேவியர் மூவரும் தவநிலை மேற்கொண்டனர். இதனைத் ஸ்தலபுராண குறிப்பிலும் சுருக்கமாக தெரிவித்திருந்தோம்.



மார்கழித் திருவிழா 10-ஆம் நாள்
முழுநிலவொளியில் தில்லை நடராஜப் பெருமானின்
ஆருத்ரா தரிசனக் காட்சி



10-ஆம் நாள் இரவு உற்சவ மூர்த்திகளுக்கு
தெப்பக்குளத்தில் திரு நீராட்டு வைபவம்

முத்தொழிலும் புரிந்திடும் மூர்த்திகள் நடத்துகின்ற திருவிளையாடலான இதில் மூவரும் தேவியர்களுக்கு உதவு கின்றனர். சிவபெருமான் கங்கைநதியையும், விஷ்ணு யமுனா நதியையும், பிரம்மா சரஸ்வதி நதியையும் இயற்கை நீர் ஊற்று களாகத் தோற்றுவித்து புனித நீரை வரவழைத்து தேவியர்கள் நீராடித் தவம் புரிய துணை நிற்கின்றனர். மூன்று தேவியர்கள் தவம் புரிந்த இடமே தற்போதைய தெப்பக்குளமாகக் காட்சி தருகிறது. சுமார் 10ஆண்டுகளுக்கு முன்பு தெப்பகுளத்தின் தண்ணீர் முழுவதையும் பலநாட்களாக இறைத்துத் தூர்வாரி சுத்தப்படுத்தும் வேளையில் வற்றதாத மூன்று சுனைகளிலிருந்து தண்ணீர் பெருக்கெடுத்து வந்ததை ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு வியந்தனர். இந்த இயற்கை சுனைநீரை "பிரக்ஞா தீர்த்தம்" (புத்தி தெளிவு) என்று ஸ்தலபுராணம் தெரிவிக்கின்றது.

ஆக, மூன்று தேவியர்க்கும், இந்திரனுக்கும் மூளைக்குத் தெளிவை தந்தது. இப்புண்ணிய தீர்த்தமல்லவா. மேற்கூறிய இந்நிகழ்ச்சிகள் இராஜகோபுரத்தில் நிலைகளின் உள்ளே சுவர்களில் அழியா ஓவியங்களாக இருப்பதைக் காணலாம்.

## மாமன்னர் திருத்தொண்டு

சுமார் 527 ஆண்டுகளுக்கு முன்பு நீர் நிறைந்த குட்டையாக (சிறியகுளம்) இருந்த இவ்விடத்தைச், சுமார் 4 ஏக்கர் பரப்பளவில், சுற்றிலும் கற்களால் ஆன மதில்களோடு 14படித்துறைகளை அமைத்து நடுவில் தெப்ப மண்டபத்தினைச் செய்வித்து தெப்பக்குளமாக மாற்றி சித்திரைமாதம், தெப்பத் திருவிழாவினையும் தொடங்கி வைத்தவர் கீழ்ப்பேரூர், ஜெயசிம்ம நாட்டு இல்லத்து ஸ்ரீ வீரராம வீரமார்த்தாண்ட குலசேகரப்பெருமாள் மன்னர் ஆவார். ஆங்கில வருடம் 1471ல் (கலிவருடம்-4572) கொல்லம் தமிழ் ஆண்டு 646 வைகாசி மாதம் 27ம் நாள் வெள்ளிக்கிழமை பஞ்சமி பூசம் நன்னாளில் இப்பணிமுடித்து இவர் இப்புண்ணிய பூமிக்கு வழங்கிய விவரம் திருக்கோயிலினுள் இந்திர விநாயகர் ஆலயத்தின் பின்புறத்தில்



உற்சவமூர்த்தி
ஸ்ரீமகாவிஷ்ணுவுடன் ஸ்ரீதேவி, பூதேவி



நீர் இறைத்தபின் காட்சி

மூன்று சுனைகள் உள்ளடக்கிய குட்டை



1988-ல் நீர் இறைத்து சுத்தம்
செய்த போது



வற்றாத மூன்று சுனைகளிலிருந்து
பெருகிவரும் நீர்.

தெப்பமண்டபம் முழுமைத் தோற்றம்



அற்புதமான காட்சி



ராஜகோபுரம், அலங்காரத்தேர்கள்,
தெப்பமண்டபம்



தெப்பக்குளத்தில் தண்ணீர் இறைத்து
சுத்தப்படுத்திய பின்பு திருக்கோவிலுடைய
ஸ்தானிகர் சுத்தி கலச பூஜை செய்யும் காட்சி



ஆடி சுவாதி விழாவில்
காளை வாகனத்தில் சுவாமி
எழுந்தருளும் காட்சி

நிலைநிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் தூண் ஒன்றில் கல்வெட்டுக் குறிப்பால் அறியமுடிகிறது.

பெருமைபெற்ற தெப்பக்குளத்தின் தெற்குப்பாகத்தில் திருக்கோயிலின் அன்றாட உபயோகத்திற்காகத் தனிக்கிணறு ஒன்றும், விழா வைபங்கள் முடிந்து உற்சவமூர்த்திகள் ஆறாட ஆறாட்டுத்துறை ஒன்றும் தனியாக அமைந்துள்ளது. இத்தெப்பக் குளத்தினைக் காவல்புரியும் ஸ்ரீபூதத்தானுக்கும் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் மாத கடைசி வெள்ளிக்கிழமை நாட்களில் காலை 11.30க்கு விசேட பூஜைகளுடன் தீப ஆராதனையும் காலங்காலமாக நடைபெற்று வருகின்றது. அறம் வளர்த்தம்மன் கோயில் சாந்தி பூசாரி, பூசை மற்றும் அலங்கார தீபஆராதனைகளைச் செய்து வருகிறார். மேலும் கோயில் பூசாரிகள் நீராடவும், பொதுமக்கள் நீராடவும் தனித்தனியாக படித்துறைகள் உள்ளன.

## தீப அலங்காரத் தெப்பத் திருவிழா

வருடம் தோறும் சித்திரைத் திருவிழா 10ம் நாள் இரவு சிவனும், விஷ்ணுவும் தெப்பத்தில் அமர்ந்து தெப்பக்குளத்தை மூன்றுமுறை வலம் வருகின்றனர். ஜனத்திரள் மத்தியில் வீதிகளில் உருண்டோடி வரும் தேர் போன்று, தண்ணீரில் மிதக்கின்ற நீளமான மரத் தடிகள் மீது சட்டங்கள் பொருத்தி தேர்போன்று அதை அமைத்து மின் விளக்குகள் மற்றும் பூமாலைகளால் அலங்காரம் செய்வித்து உமா-மகேஸ்வரர் மற்றும் திருமால் உற்சவ மூர்த்திகளை எழுந்தருளச்செய்து நாதஸ்வர மேளதாளங்கள் இசைக்க காக்கமூர் மற்றும் சுசீந்திரம் இளைஞர்களால் வடம்பிடித்து தண்ணீரில் இழுத்து வரப்படுகிறது. தெப்பக்குளத்தை சுற்றி நான்குபுறமுள்ள படிக்கட்டுகளில் எண்ணை விளக்குகள் ஏற்றப்பட்டுத் தெப்பக்குள மண்டபத்தில் மின்விளக்குகள் அமைத்து தீபஅலங்கார திவ்விய தரிசனக் காட்சியைப் பல்லாயிரக்கணக்கான மக்கள் வருடம்தோறும் காணுகின்ற வகையில், தெப்பத்திருவிழா பல

நூற்றாண்டுகளாக நடந்து வருகிறது. குமரி மாவட்டத்திலேயே நடைபெறும் மிகப்பெரிய தெப்பத்திருவிழா இதுவேயாகும். இவ்வளவு அமைப்போடு கூடிய தெப்பத் திருவிழா தமிழ்நாட்டில் மிகவும் முக்கியத்துவம் பெற்றதாகும்.

### *சித்திரை திருவி ழா சிறப்பு அம்சம்*

மார்கழித் திருவிழா நடக்கும் 5,7,9, ஆகிய நாட்களில் மட்டும் மகாவிஷ்ணு சிவபெருமானோடு வீதியுலாவிற்கு வருகின்றார். ஆனால் சித்திரைத் தெப்பத்திருவிழா நடக்கும் பத்து நாட்களிலும் சிவனோடு, விஷ்ணுவும் வீதியுலா வருகை தந்து பத்தாம் நாள் தெப்பத் திருவிழாவின் போதும் தெப்பத்தில் எழுந்தருளுகிறார். ஆக, மகாவிஷ்ணுவிற்கும் முக்கியத்துவம் கொடுக்கின்ற விழாவாக சித்திரைத் திருவிழா அமைந்துள்ளது சிறப்பு அம்சமாகும். சித்திரை, மார்கழித் திருவிழாவின்போது தேரோட்டத்தில பங்கேற்காத மகாவிஷ்ணு தெப்பத் திருவிழாவில் மட்டும் தெப்பத்தில் எழுந்தருளுகிறார்.

தரணியில் பரணிபாடும் இவ்விழா பரணிநட்சத்திரத்தில் கொடியேற்றத்துடன் ஆரம்பமாகிறது. மார்கழியைப் போல் சித்திரைத் திருவிழாவிலும் பத்துநாட்கள் கலைநிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. மார்கழித் திருவிழா முடிந்து மூன்றுமாத இடைவெளிக்குப் பிறகு சித்திரைத் திருவிழா நடக்கின்றது. இது தாணுமாலயன் திருக்கோயிலின் இரண்டாவது பெரிய திருவிழாவாகும். சுசீந்திரம் கோயில் நிருவாகத்தோடு புகழ்பெற்ற ஆதீன மடங்களும், குறிப்பாக சுசீந்திரம் திருவாவடுதுறை ஆதின மடமும் துணையாய் இருந்து இவ்விழாவினைச் சிறப்பிக்கின்றன. இம்மடத்தின் சார்பில் 4 நாட்கள் சமய வளர்ச்சி மாநாடும் தேவார பாடசாலை ஆண்டுவிழாவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

# தமிழ்மொழி காத்த திருவிதாங்கூர் மன்னர்கள்

**சிறுவிளக்கம்**

சுசீந்திரம் தாணுமாலய சுவாமி திருக்கோயிலில் பூஜை விதிமுறைகள் கேரள நாட்டு திருக்கோயில்களில் உள்ள விதி முறைகளைப் போல் கடைபிடிக்கப்பட்டு வருவதை முன்னமே தெரிவித்திருந்தோம். உதாரணமாக: ஒருமாதத்தில் ஒரு நட்சத்திரம் இரு முறை வருமானால் இரண்டாவது நட்சத்திரத்தில் விழாக்கள் நடைபெறுவதை இங்கு காணமுடிகிறது. சிலசமயம் தமிழ்நாட்டு பூஜை விதிப்படி முன்னதாக தமிழக நாள்காட்டி (காலண்டர்) களில் அறிவிக்க பட்டவை இத்திருக்கோயிலில் கேரள முறைப்படி இரண்டாவது நட்சத்திரத்தில் விசேடங்கள் நடந்து வருவதையும் காண்கிறோம். இங்கும் கடைபிடிக்கப்படும் ஆகம விதிகளை முதலில் காண்போம்

தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் கட்டுப்பாட்டில் கன்னியாகுமரி மாவட்டத்தின் அனைத்து திருக்கோயில்களும் இயங்கி வந்தாலும், பூஜை ஆகம விதிகள் இன்றும் மாறாத அளவில் மிகவும் உயர்வோடு அவைகளைச் செய்விக்க மாவட்ட ஆலய நிருவாக அமைப்பு ஆலயங்களில் செயலாற்றி வருவதைக் காணமுடிகிறது. சுமார் 490 கோயில்கள் வரை இதனுடைய கண்காணிப்பில் இருந்து வருவது மிகவும் கடினமான பொறுப்பானாலும், மன்னராட்சி காலத்தில் ஆலயத்திற்காக ஏற்படுத்திய ஆகம விதிகளை மக்களாட்சி காலத்திலும் தொடர்ந்து நடத்தி வருவது பாராட்டுதலுக்குரிய அம்சமாகும்.

***சுசிந்திரம் திருக்கோயில் ஆகமவிதிமுறைக் கணக்கு***

கொல்லம்-தமிழ் ஆண்டு-1112 மாசி 25-ம் நாள் (ஆங்:1937) தொடங்கி, கொ-த : 1119 ஆவணி 20-ம் நாள் (ஆங் .: 1944) முடிய சுமார் 71/2 ஆண்டுகளாக எழுதித் தயார் செய்யப்பட்ட 131 பக்கங்களைக் கொண்ட **"ஆசாரக்கணக்குப் பதிவேடு"** இத் திருக்கோயிலின் பூஜை விதிமுறைகளைத் தெளிவாக தெரிவிக்கின்றது.

திருவிதாங்கூர் சமஸ்தான மன்னராகிய ஸ்ரீ சித்திரைத் திருநாள் பாலராமவர்மா அவர்களின் ஆணைப்படி, திவான் சர்.சி.பி. இராமசுவாமி ஐயர் ஒப்புதலோடு அன்றைய தேவஸ்தான ஆணையர் திரு.சி.என். ஸ்ரீரெங்கனாத சாஸ்திரி, சுசீந்திரம் ஜில்லா உதவி ஆணையர் திரு.கே.பி. மகாதேவ ஐயர் (முன்பு ஆலயங்களுக்காக மட்டும் தனி மாவட்டம் "சுசீந்திரம் ஜில்லா" அமைப்பு இருந்து வந்துள்ளது. நாகர்கோவில் தொகுதி கண்காணிப்பாளர் திரு.டி.எஸ். கிருஷ்ணய்யர் மற்றும் சுசீந்திரம் தேவஸ்தான மேலாளர் திரு.ஆர்.டி. கேரளவர்மா (மன்னர் பரம்பரை) அன்றைய திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் திரு புருஷோத்தமர் வாசுதேவர் ஆகியோர் சேர்ந்து இத் திருக்கோயிலின் பூஜை விதிமுறை கணக்குப் பதிவேட்டை உருவாக்கியதோடு பதிவேட்டைக் கைப்பட எழுதியவர்களான சபைக் கணக்கு திரு வேலாயுதம் பிள்ளை மற்றும் கணக்கர்களான திரு செண்பக குற்றாலம் பிள்ளை, திரு சங்கரப்பிள்ளை ஆகிய அனைவரது பெயரும் கையொப்பமும் இப்பதிவேட்டில் காணப்படுகின்றது. இதன்படியே இங்குள்ள பூஜைகளும் நடந்து வருகிறது. இதனைத் தெரிவிக்கும் பதிவேடு திருவிதாங்கூர் சமஸ்தான அரண்மனை புத்தக சாலையிலிருந்து நூலுக்கு ஆதாரமாக கிடைக்கப்பெற்றது.

## *மார்கழித் திருவிழாவில் தமிழர்கள் பங்கு*

மேலும் கொ-த : 1107 (ஆங் ஞ 17.12.1931) மார்கழித்திரு விழாக்களில் நான்கு நாட்கள் சுசீந்திரம், சன்னதித்தெருவில் வாழ்ந்த அமரர் தசாவதானி பி. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் "திருவிழா தத்துவம்" திருவாதிரை நாள் சிறப்பு, நம்து இந்து சமயக் கடமை, வாந்தி பேதி சம்பந்தமான "சினிமா உரை" (இக்காலகட்டத்தில் சுசீந்திரத்தில் பரவியிருந்த காலரா நோய் (வாந்தி-பேதி) அனேக மக்களின் இறப்புக்கு காரணமாக விளங்கியது) போன்ற தலைப்புகளோடு உரைகள் நிகழ்த்தியுள்ளதும் மற்றும் "ஆலய தரிசனமும் அபிவிருத்தியும்" என்ற தலைப்பில் நீதிபதி திரு.பி.கே. நாராயணபிள்ளை அவர்களும், "சிலமத விஷயங்கள்" என்ற தலைப்பில் தொண்டர்குழாம் திரு.கே. ஆறுமுகம்பிள்ளை போன்ற தமிழ்ப் புலமைமிக்க பெரியவர்கள் அக்கால கட்டத்தில் விழா சிறப்படைய தேவஸ்தான நிருவாகத்தோடு துணையாக இருந்த

விவரங்கள் அடங்கிய நிகழ்ச்சிநிரலைத் தெரியப்படுத்தும் திருவிழா அழைப்பிதழ் நான்கு பக்கங்களில் மட்டும் அச்சிடப்பட்டு முன் பக்கத்தில் கீழ்காணும் பாடலும் அதில் இடம் பெற்றிருந்தது.

மன்னிய சுசீந்தை தாணு மாலயர் தமக்கு முன்னோர்
பன்னிய விழாவும் வேத பாராயண முதலாவுள்ள (த)
உன்னு நற் செயல்களெல்லாம் உண்மையின் சொரூபர்தானே
அன்னவர் கண்டும் கேட்டும் அருள்பெற, வருவீர் மாதோ.

(சுசீந்திரம் தசாவதானி பி. ஆறுமுகம்பிள்ளை)

சுமார் 67ஆண்டுகளுக்கு முன்னால் திருவிழா நிகழ்ச்சி நிரல் அழைப்பிதழ் மூலமாக மாந்தர்களைத் திருவிழாக்காண அழைத்திடும் பாங்கினை அன்று மலையாள நாடாக இருந்த காலகட்டத்திலும் தாணுமாலயர் பெருமையை அழகுத்தமிழில் பாடலாய் தந்த மகான் களையும் தமிழுக்கு முக்கியத்துவம் கொடுத்த மன்னர் ஸ்ரீசித்திரைத் திருநாள் பாலராமவர்மாவையும் மறக்கமுடியாது. மேலும் திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் தமிழ்மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளதைக் கேரள மாநிலத்தில் உள்ள ஊர்கள் பலவற்றில் காண்கிறோம். திருவிதாங்கூர், திருவல்லா, திருவூர், திருநாவாயா, திருசிவப்பேரூர் (திருச்சூர்), திருஅஞ்சைக்களம், திருப் பூர்ணித்துறை, திருவைக்கம், திருக்கண்டியூர், திருவிதாங்கோடு, திருவனந்தபுரம் போன்றவை தமிழ்ப் பெயர்களிலே இருப்பதை இன்றும் காண்கிறோம்.

## மாத விசேட விழா விவரங்கள்

### ஆவணி ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி

அஷ்டமி திதியும் ரோகினி நட்சத்திரமும் ரிஷப லக்கனத்தில் பிறை கண்ட பிறகு நடுநிசி வேளையில் ஸ்ரீகிருஷ்ணன் பிறக்கின்றார். திருவேங்கிட விண்ணவர் எம்பெருமாள் கருவறையிலிருந்து உண்ணிக் கிருஷ்ணன் பஞ்சலோக விக்கிரகத்தைக் கொன்றையடி நாதர்கோயில் முன்னால் கொண்டு வைத்து சங்க நாதம் முழங்க பாலபிஷேகம், பால் நிவேத்தியம் வழிபாடு நடத்தி ஸ்ரீகிருஷ்ணனைப் பெரிய சுற்று பிரகாரங்களில் சுற்றிக் கொண்டு வந்து மகா

விஷ்ணுவாகிய திருவேங்கிட விண்ணவரம் பெருமாள் சன்னதி முன் மண்டபத்தில் வைத்து பால், அப்பம் நிவேத்தியம் செய்து மீண்டும் விஷ்ணு கருவறையில் கொண்டு வைப்பார்கள். இரண்டாம் நாளில் ஸ்ரீகிருஷ்ணனுக்கு பால் கஞ்சியும், மூன்றாம் நாளில் வெண்படி நிவேத்தியம் செய்து, இரவு சிறிய வெள்ளி கருட வாகனத்தில் வீதியில் எழுந்தருளி உறியடித் திருவிழா நடைபெறுகின்றது. மூன்றடி நீளம் கொண்ட கம்பின் இருமுனைகளிலும் சிறிய மண்கலசங்கள் கட்டி ஒன்றில் பசும்பாலும், மற்றொன்றில் தயிரும் நடுவில் தேங்காய் ஒன்றில் வைக்கோல் சுற்றி நீளமான கயிறு ஒன்றில் இதனைக்கட்டி, உயரமான மூங்கில் கம்புகளை இருவர் தாங்கி நிற்க குறுக்குக் கம்பில் இதனைத் தொங்கவிட்டு ஒருவர் இழுத்துவிட, திருக்கோயில் வட்டப்பள்ளி ஸ்தானிகர் கோயில் பரம்பரை மணியக்காரருக்குத் தேங்காய் பரிவட்டம் கொடுத்து கௌரவித்து நீளமான கைத்தடியால் மணியக்காரர் உறித்தேங்காயை உடைக்க முற்படும்போது கயிற்றை பிடித்து உள்ளவர் மேலே இழுத்தும், கீழே விட்டும், இப்படி பத்து நிமிட நேரம் இவ்விளையாட்டு நடைபெறும். முடிவில் தேங்காய் உடைந்து சிதறிய பின்பு ஸ்ரீகிருஷ்ணனைத் தாங்கி நிற்கும் கருடவாகனம் அங்கிருந்து புறப்படும். வீதிகளில் குறிப்பிட்ட இடங்களில் நடைபெறுகின்ற இந்நிகழ்ச்சியைக் காணும் சின்னம் சிறு பாலகர்கள் மற்றும் பார்வையாளர்கள், அடி! ஓங்கி அடி!! விடாதே! கயிற்றை விடாதே!! என ஆனந்த களிப்பில் ஆரவாரக்குரல்கள் எழுப்பிப்பதை இந்நிகழ்ச்சியின்போது இன்றும் காணமுடிகிறது. ஆண்டுகள் பல கடந்தாலும் ஆகமம் நிறைந்த இவ்விழாவினைத் இத்திருக்கோயில் நிருவாகம் மறையாமல் நடத்திவருகிறது.

பெருமை வாய்ந்த ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி மூன்று நாள் விழா வுக்காக ஸ்ரீ சங்கர நாராயண வென்றுமண் கொண்ட பூதல வீர இராம வர்மா மகாராஜா கொ-த:26-3-722-(ஆங்:1547)-ல் வஸ்துக்கள் (நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளதைத் தேவஸ்தான தமிழ் ஆசாரப் பதிவேடுத் தெளிவுற விளக்குகின்றது. அடுத்து பஞ்சபாண்டவர் கோயில் மண்டப ஜெயந்தீஸ்வரத்து ஸ்ரீகிருஷ்ணனுக்குச் சுசீந்திரம் புதுமாடத்துப் போற்றி ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தியன்று வெண்படி பாயசத் திற்கு நிலம் விட்டுக் கொடுத்துள்ள விவரமும் தெரிய வருகிறது இம்மாதத்தில் விசாக நட்சத்திரத்தில் திருவேங்கிட விண்ணவரம் பெருமாள் சன்னதி

முன்புள்ள கொடிமரத்தில், தரண நல்லூர் நம்பூதிரிகள் ஆட்கள் கொடியேற்று சடங்கினை நடத்தி ஆகம விதிகளோடு கூடிய பத்துநாள் திருவிழா தொடங்குகின்றது. ஆடம்பரமில்லாத இவ் விழாவில் காலையும், இரவும், மகாவிஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவி வீதியுலாவிற்கு எழுந்தருளுகின்றனர். ஒன்பதாம் நாள் மாலை 4.30க்கு பிள்ளையார் ரதத்தில் இவர்கள் எழுந்தருளி தேரோட்டம் நடைபெறுகிறது. (தற்போது இந்திரன் தேர் இழுக்கப்பட்டு வருகிறது). சுவாதி, திருவோணம் நட்சத்திர நாளில் அதிகாலை 5.30க்கு திருப்பள்ளி எழுச்சி சிறப்பு பூஜை ஆராதனை மூலவருக்கும், மகாவிஷ்ணு மற்றும் கொன்றையடி நாதர் கோயில்களிலும் நடைபெறுகின்றன. தமிழ் மாதமான ஆவணி மலையாளத்தில் சிங்க மாதம் என்ற சிறப்புப் பெயரோடு முதல் மாதமாக கருதி அனைத்து ஆலயங்களிலும் சிறப்பு வழிபாடு பூஜைகள் நடைபெறுகிறது. இம்மாதத்தில் விநாயகர் சதுர்த்தியும் கொண்டாடப்பட்டு வருவதை இவ்வாலயத்திலும் காணமுடிகிறது.

## அபிமானம் காத்த விநாயகர்

சுசீந்திரம் வீதிகள் தோறும் நிறைந்திருக்கும் விநாயகப் பெருமானுக்கும், குறிப்பாக கீழரத வீதியிலுள்ள அபிமானம் காத்த அற்புத விநாயகப் பெருமானுக்கு அவர் பெயராலே விளங்கிடும் நற்பணி இயக்கத் திருவருள் செல்வர்கள் சுசீந்திரம் பகுதி வியக்கும் வண்ணம் "சதுர்த்தி விழாவை பல்லாண்டு காலமாக நடத்தி வருவதோடு பழமை பெற்ற இவ்வாலயத்தை மாவட்ட திருக்கோயில் நிருவாகம் மற்றும் பொதுமக்கள் உதவியோடு புதுப்பொலிவோடு லட்சகணக்கான ரூபாய் செலவில் புனரமைப்பு செய்து 1997 ஆவணி சதுர்த்தி நாளில் கும்பாபிஷேகமும் செய்வித்து பெருமை படைத்துள்ளமை பாராட்டுக்குரியது. இந்நாளில் வீதிதோறும் இரவில் விநாயகப் பெருமானை எழுந்தருளச் செய்து வருவதோடு மார்கழி, சித்திரை திருவிழா நாட்களில் பெற்றோரோடு தனயனாகிய விநாயகப் பெருமானும் அலங்கார ரூபனாக வீதியுலா எழுந்தருளி வருகின்ற காட்சியைக் காண வேண்டியதில் ஒன்றாகும். வருடந்தோறும் கார்த்திகை மாதம் முழுவதும் காலை மாலை தொடர்ச்சியாக விசேச

பூஜைகளும் மற்றும் ஆராதனைகளும், ஒவ்வொரு மாதம் கடைசி வெள்ளிக்கிழமை நாட்களில் சிறப்பு பூஜைகளும் நடத்தி வருகின்றனர். மேலும் ஸ்தாணுமாலயமூர்த்தி திருக்கோயிலின் விழாக்கள் பலவற்றிலும் பங்குகொண்டு விழாக்களைச் சிறப்பிக்கின்றனர்.

இந்த இருபதாம் நூற்றாண்டில் நிலையில்லா மனிதர்கள் பெயரால் நற்பணி இயக்கங்கள் பல இருந்து வருவதைக் காண்கிறோம். ஆனால் நிலைத்து நிற்கும் தெய்வத்தின் பெயரால் இயக்கம் அமைத்து பல ஆண்டு காலமாக சீரோடும், சிறப்போடும், விநாயகப் பெருமானுக்கு வழிபாடுகள் பல ஆண்டுகளாக நடத்தி, விழாவும் எடுத்தும் இறைவனுக்கு உண்மையான அன்போடு தொண்டாற்றி வரும் இவர்களைத் திருத்தொண்டர்களாக கருத வேண்டியுள்ளது. இவ் அற்புத விநாயகரையும் தரிசிப்போம். அருள்பெறுவோம்.

### ஆண்டுக்கொருமுறை திறக்கும் வாசல்

ஆவணி மாதத் திருவிழா 9ஆம் நாள் இரவு பள்ளிவேட்டை நடைபெறுகிறது. இவ்வேளையில் திருக்கோயிலின் மேற்கு பிரகாரத்தில் அமைந்துள்ள வெளிவாசல் திறக்கப்பட்டு வாயிலின் முன்பு பள்ளி வேட்டை எனும் நிகழ்ச்சி நடைபெறுகிறது இந்தநாளைத் தவிர மற்றைய நாட்களில் இவ்வாயில் திறக்கப்படுவதில்லை. திருக்கோயில் தெப்பக்குளத்தில் மனிதப்பிணம் தென்படும் நாளில் வடக்குவாசல் மூன்றுநாள் அடைக்கப்பட்டிருக்கும். அந்த மூன்று நாட்களில் மட்டுமே மேற்கு வாயில் அவசரக் காரியத்திற்காக திறக்கப்படும்.

### திருக்குள சுத்தி கலசபூஜை

திருக்கோயில் தெப்பக்குளத்தில் வீழ்ந்து யாராவது இறந்துவிட்டால் வடக்கு வாசல் அடைக்கப் படுகிறது. இக்குளத்தில் மூன்று நாட்கள் கழித்து சுத்திக்கலச பூசை திருக்கோயில் மேல்சாந்தி நம்பூதிரிகளால் நடத்தப்பட்ட பிறகு வடக்கு வாசல் திறக்கப்படுகிறது. இப்படி அசுத்தமான மூன்று நாட்களிலும் திருக்குளத்தில் உள்ள தண்ணீரை கோயிலில் உபயோகப்படுத்துவதில்லை. திருக்கோயில் அனைத்துப் பூசாரிகளும் குளத்தில் நீராடுவதில்லை பொதுவாக

திருக்கோயிலுக்கு தினமும் வந்து வழிபட்டுச் செல்லும் பக்தர்கள் கூட மூன்று நாட்கள் குளத்தில் நீராடாமல் வீடுகளிலும் ஆறுகளிலும் குளித்து தரிசனம் செய்து வருவதை இன்றும் காணமுடிகிறது. விசேஷ வைபவங்களின் போது திருக்குளத்தில் துயரச் சம்பவம் நிகழ்ந்துவிட்டால் உற்சவ மூர்த்திகளுக்கான "ஆறாட்டு" வைபவம் திருக்கோயில் உள்ளே இருக்கும் இந்திரன் கிணற்று நீரால் செய்யப்படுகிறது. மேலும் திருக்கோயிலின் அவசர காரியத்திற்கும் இந்நீர் பயன்படுத்தப்பட்டு காலங்கள் பல கடந்தாலும் கோயிலின் ஆகம விதி மீறாமல் இன்றும் இதை கடைபிடித்து வருவதை "திருக்குளசுத்தி"யிலும் காணமுடிகிறது. திருக்குளத்தில் ஏற்படும் துயரமான சம்பவங்களால் சுத்தி பரிகாரம் செய்வதற்கு அவ்வப்போது ஆலய நிருவாகத்திற்கும் செலவுகளும் ஏற்படுகின்றது.

பிரக்ஞா தீர்த்தம் எனப் புண்ணிய பெயர் கொண்ட புனிதம் வாய்ந்த தெப்பக்குளத்தில் தவறி விழுந்து அல்லது நீரில் மூழ்கி இறந்துபோன இயற்கை மரணங்களும், மனிதர்களை அடித்துக் கொன்று குளத்தில் கொண்டு போட்டு விட்டு முடிவில் தெப்பக் குளத்தின்மீது பழிபோட்டு அனாதை பிணம் என்று கூறி முடிவெடுக்கும் செயல்களும் நடைபெற்றுள்ளதை இவ்வூர் மக்கள் மறந்தாலும் ஆண்டவனாகிய ஸ்தாணுமாலயன் மறக்காமல் அவ்வப்போது துயர சம்பவங்களுக்குக் காரணமாக அமைந்தவர்களைத் தண்டிக்காமல் விட்டதில்லை. நரக வேதனையை இப்புண்ணிய பூமியில் அனுபவிக்கச் செய்யும் லீலைகளையும் ஆண்டவன் நடத்தி வருவதை இந்த இருபதாம் நூற்றாண்டிலும் காணமுடிகிறது.

### புனிதக்குளத்தை பேணிக்காப்போம்

தெய்வ நம்பிக்கை மிகுந்த முற்கால மன்னர்கள் இறைவனின் தேவைக்காகவும், மக்களின் தேவைக்காகவும் இந்தப் புனித மண்ணில் மிகுந்த செலவு பிடித்த தெப்பக்குளத்தை மனித சமுதாயத்தினர் இறைபக்தியோடு, தூய்மையாக வாழ்வதற்கு வகை செய்துள்ளனர். ஆண்டுகள் ஐநூறு கடந்த பின்பும் என்றும் வற்றாத அழகுமிக்க ஆலயத் திருக்குளம் அவனியில் இன்னும் ஆயிரமாயிரம் ஆண்டுகாலம் அழியாமல் காத்திடத்துணை நிற்பதோடுத், தூய்மை

வாய்ந்த திருக்குள நீர் இறைவனுக்கு பயன்பட புனிதம் காப்போம். "பூதல வீர இராம மார்த்தாண்ட வர்மா" புகழ் என்றும் நிலைத்தோங்க திருத்தொண்டு புரிவோம்.

### *புரட்டாசி*

இம்மாதத்தில் வருகின்ற அமாவாசை தினத்தன்று சிறப்புப் பூஜைகள் நடைபெறுகின்ற மகம், பூரம், உத்திரம் நட்சத்திர நாட்களின் போது சித்திரசபையில் சிறப்புப் பூஜைகள் நடத்துவதற்காக பறக்கை ஊரைச் சார்ந்த மாத்துக்குட்டி மாலையம்மா பெண்மணி நிலங்களை விட்டுக் கொடுத்துள்ளார். இம்மாதத்தில் வருகின்ற ஒவ்வொரு சனிக்கிழமை நாட்களிலும், பஞ்சபாண்டவர் கோயில் என அழைக்கப்படும் ஜகந்தீஸ்வர ஸ்ரீகிருஷ்ண கோயிலுக்கு வருகின்ற பக்தர்களும், உள்ளூர் மக்களும் புரட்டாசி சனிக்கிழமை நாட்களில் விழா எடுத்து சிறப்பிக்கின்றனர். அதுபோல் இங்குள்ள துர்க்கை அம்மனுக்கு நவராத்திரி விழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. இத்தலம் அர்ச்சுனன் ஸ்ரீகிருஷ்ணனை வழிபட்ட ஸ்தலமாகக் கருதப்படுவதை முன்னமே தெரிவித்திருந்தோம்.

### *ஐப்பசி*

இம்மாத ஒன்றாம் நாள் ராசிகள் இடப்பெயர்ச்சி நிகழ்வதால் விசேட பூஜையான திருப்பள்ளியெழுச்சி ஆராதனை அதிகாலை 5.30க்கு நடைபெறுகிறது. மேலும் இம்மாதத்தில் வருகின்ற சித்திரை நட்சத்திரமானது சித்திரைத் திருநாள் பாலராமவர்மா மன்னர் பிறந்த நட்சத்திரமாகும். அன்றைய தினத்தில் சிறப்புப் பூஜைகள் நடத்துவதற்காக மன்னர் நிலங்களை விட்டுக் கொடுத்துள்ளதும் தெரியவருகிறது. கந்த சஷ்டி விழாவின்போது இத்திருக்கோயிலில் வள்ளி, தெய்வானை மணவாளப் பெருமானாக காட்சி தரும் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிக்கு காலங்காலமாக நடைபெற்று வரும் அபிஷேகம் மற்றும் ஆராதனை போன்றவை அற்புதமான விழாவாகும். இதற்கு ஆன்மீக அன்பர்களும் உதவி வருவது பாராட்டுதலுக்குரியது.

### கார்த்திகை

இத்திருக்கோயிலைப் பொறுத்தவரை சோமவாரம் எனப் போற்றப்படும் திங்கள்கிழமை முக்கிய நாளாகும். அதிலும் கார்த்திகை மாத திங்கள்கிழமையைப் பெருமை வாய்ந்ததாக கருதி ஆன்மீக அன்பர்கள் அலைகடலென திரண்டுவந்து அற்புத பெருமானைத் தரிசித்து செல்வது வழக்கம். கார்த்திகை 30நாட்களிலும் ஸ்தாணுமாலயருக்கும் மற்றும் அழகிய மணவாளாப் பெருமாளாக நின்று அருள்புரியும் திருவேங்கிட விண்ணவரம் பெருமாளுக்கும், மற்றும் நடராஜமூர்த்திக்கும் சிறப்புப் பூஜைகள், நிவேத்திய பூஜைகள் நடைபெற்று வருகின்றன. இதன் வகைக்கு குமரி மாவட்டம் குழிக்கோடு என்ற இடத்தைச் சார்ந்த குமாரபிள்ளை ஆசான் என்பவர் நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளதும் கணக்குப் பதிவேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### கார்த்திகை களப பூஜை

இம்மாதத்தில் நடைபெற்று வந்த களபம் மற்றும் உதயாஸ்தமன பூஜை மிகவும் பிரசித்தி பெற்ற பூஜையாக சில ஆண்டில் தேவஸ்தான நிர்வாகம் மற்றும் தந்திரிகள் வசதிக்கேற்ப ஆனி, ஆடி மாதங்களிலும் நடைபெற்றுள்ளது. இப்பூஜையின் போது சுத்தமான சந்தனக்கட்டை கொண்டு கீழ்சாந்தி போற்றிகளால் அரைக்கப்பட்டு அதில் கோரோசனை குங்குமப்பூ, பச்சை கற்பூரம் மற்றும் பன்னீர் கலந்து காலை மணி 10.30க்கு களபச் சந்தனக் காப்பு சிவலிங்கமான மூலவருக்குச் சார்த்தப்பட்டு விசேஷ பூஜையுடன் தீப ஆராதனை நடைபெறுகிறது. தொடர்ந்து பன்னிரண்டு நாட்கள் களப பூஜை நடைபெற்று பதிமூன்றாம் நாள் உதயாஸ்தமன பூஜையுடன் "மகா கணபதி ஹோமம்" ஆசார விதிகளோடு மிகச்சிறப்பாக நடத்தப்படுகிறது. பதினான்காம் நாள் "சௌமிய பூஜை"யும் நடைபெறுகிறது.

### மகா கணபதி ஹோமம்

இந்தப் பிரசித்தி பெற்ற களப பூஜையைத் தரிசனம் செய்ய நூற்றுக்கணக்கான ஆன்மீக மக்கள் திரண்டு வருவதையும், 13ஆம் நாள் நடைபெறும் கணபதி ஹோமத்தைக் காண ஆயிரக்கணக்கில்



சித்திரை 10ஆம் நாள் தெப்பத்திருவிழா இரவில் தீபங்கள் சுற்றிலும் ஒளிவீச, தெப்பக்குளநீரில் மிதந்து மண்டபத்தைச் சுற்றி வலம் வரும் தெப்பத்தேர்.

மக்கள் தரிசிப்பது முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும். சுமார் 6 அடி ஆழத்திலும், 4அடி நீளத்திலும், 4அடி அகலத்திலும் இரு குழிகள் தோண்டி வெயில் படாதவாறு நிழற்கொட்டகை அமைத்து விதவிதமான அஷ்ட திரவியங்கள் கலந்த நிவேத்திய பொருட்களைச் சாஸ்திர விதிகளோடு ஹோம குண்டத்தில் கணபதிக்கு அர்ப்பணித்து முடிவில் ஹோமகுண்டத்திலுள்ள நிவேத்திய பொருட்களை அக்னி பகவானுக்கும் கொடுப்பது போன்றும் அதை யாரும் எடுத்திடா வண்ணம் தீக்கிரையாக்குகின்றனர். ஹோம குண்டத்திலுள்ள பூஜைகள் அனைத்தும் முடித்து தந்திரிகள் சென்ற பின்பு ஆன்மீக மக்கள் இரண்டு ஹோம குண்டங்களையும், மூன்று முறை வலம் வந்து, ஒவ்வொருவரும் வரிசையாக நின்று தரிசித்து செல்வது காணக் கிடைக்காத அற்புத காட்சியாகும்.

மிகுந்த செலவு செய்யப்படும் களப பூஜைக்குக் த.ஆ : 976கார்த்திகை 17ம் நாள் (ஆங்:1801) திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர் ''அவிட்டம் திருநாள் மகாராஜா'' நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளமை ஆசாரக் கணக்கு பதிவேட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. சுமார் 182 ஆண்டுகள் வரை தொடர்ச்சியாக வருடா வருடம் நடைபெற்று வந்த பிரசித்தி பெற்ற களப பூஜை 1983ம் ஆண்டுவரை நடந்து வந்துள்ளதாக அறிய முடிகிறது. பெருமை வாய்ந்த பதிமூன்று நாள் களப பூஜைகளைத் தரணநல்லூர் நம்பூதிரி (பரம்பரை தந்திரி) மற்றும் அவருடைய ஆட்கள் பதினான்கு நாட்கள் தங்கியிருந்து செய்து வந்துள்ளனர். அபிஷேக பூஜை மற்றும் ஆராதனைகளை நடத்தி இறைவனைக் குளிரவைத்தால் **"நாட்டில் நல்மழை பெய்து வளம் செழிக்கும்"** என்ற தத்துவத்தைக் கொண்டது இப்புனித விழாவாகும். நாட்டின் மீதும், நாட்டு மக்கள் மீதும், மன்னர் கொண்ட பற்றுதலை இறை வழிபாட்டின் மூலமாக நமக்கு கிடைத்திட வகை செய்த மன்னரைப் போற்றுவோம். களப பூஜை இனி தொடர்ந்து நடந்திட இறைவனைப் பிரார்த்திப்போம்.

### *கார்த்திகை தீபம்*

பரமனின் திருவருளால் ஆறு கமலங்களில் அற்புத குழந்தைகளாய் அவதரித்த ஆறுமுகப்பெருமானைத் தாலாட்டி சீராட்டி அகிலத்தில் கலியுகக் கடவுளாக போற்றப்படும் கார்த்தி

கேயனை வளர்த்து பெருமைபெற்ற கார்த்திகைப் பெண்களின் சிறப்பினை விழாவெடுத்துப் போற்றும் திருக் கார்த்திகை நட்சத்திர நன்னாள். இந்நாளில் இல்லங்கள் தோறும் தீபங்கள் ஏற்றி ஜோதி சொ:ரூபனைத் தரிசிக்கின்றனர் ஆன்மீக மக்கள்.

## திருக்கார்த்திகை சொக்கப்பனை விழா

இத்திருக்கோயிலில் சிறப்புற்ற இம்மாதத்தில் சுமார் 378 ஆண்டு காலமாக நடைபெற்று வரும் திருக்கார்த்திகை திருவிழாவின் போது கார்த்திகை நட்சத்திர நாளில் இரவு 7மணிக்கு ரிஷப வாகனத்தில் உமா-மகேஸ்வரரும் கருட வாகனத்தில் மகா விஷ்ணுவும், அன்னத்தில் அம்பாளும், மயில் வாகனத்தில் முருகப் பெருமானும் வீதியுலா எழுந்தருளுகின்றனர். இதற்கு முன்பாக 36மண் சட்டிகளில் நெய்யும், தேங்காய் எண்ணையும் விட்டு பச்சரிசியில் கிழி கட்டி விளக்கேற்றி உதய மார்த்தாண்ட மண்டபத்தில் வைத்து சிறப்புப் பூஜையான "ஞாயிறு காணிப் பூஜை" திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரால் நடத்தப்பட்டு முக்கிய மூலஸ்தான கருவறையிலும் சுற்றுக்கோயில்களிலும் கொண்டு வைக்கப்படுகிறது.

பின்பு ரத வீதிகளில் மட்டும் வீதியுலா வரும் தெய்வங்கள் திருக்கோயிலின் வடக்கு வாசல் முன்பு வந்து நின்ற பிறகு சுமார் 25 அடி உயரத்தில் சுற்றிலும் பனை ஓலைக் கீற்றுகளால் வேய்ந்து வடக்கு ரதவீதி பொதுமடத்தின் குளக்கரை அருகே நிலை நிறுத்தப்பட்ட சொக்கப்பனை வாயில் வழியாக தீப்பந்தத்தோடு கூடிய ஒருவர் வந்து அதன் உள்ளே உள்ள முளை தட்டுகளின் மீது ஏறி உச்சியில் சென்று தீபம் ஏற்றி தீப்பந்தத்தை ஆகாயத்தை நோக்கி மூன்று முறை சுற்றிக் குளத்தில் வீசி எறிந்துவிட்டு கீழே இறங்கி சொக்கப்பனை கூடாரத்தை விட்டு வெளியே அவர் வந்தபின் தீயிட்டு கொழுத்தப்படும் சொக்கப்பனை ஓலையானது முழுவதும் எரிந்த பின்னால் மிஞ்சி நிற்கும் பனைமரத்தைத் திருக்கோயில் ஊழியர்கள் வெட்டி கீழே சாய்த்த பின் வடக்குவாசல் அருகே நின்று கொண்டிருக்கும் சுவாமி வாகனங்கள் அங்கிருந்து புறப்பட்டுத் திருக்கோயில் வந்து சேரும். பின்னால் வீதியுலா முடித்து வந்த உற்சவ மூர்த்திகளுக்குக் குளத்தில் திரு நீராட்டு பூஜை முடித்து கோயிலினுள் சென்ற பிறகு பதிவு பூஜைகள் நடைபெறும்.

இத்திருக்கோயிலில் கார்த்திகை விழா நடத்துவதற்காக கொல்லம் தமிழ் ஆண்டு : 8-4-795 (ஆங் : 1620)-ல் சேரமன்னன் பூதல வீர இராமவர்ம ராஜா நிலங்கள் வழங்கியுள்ளதும், அதன் பின்னால் ஆட்சி புரிந்த உமையம்மை ராணியும் நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளதும் வரலாற்றுக் குறிப்புகளிலிருந்து அறியமுடிகிறது. காலங்காலமாக நடைபெற்றுவரும் இவ்விழா காண வேண்டியதில் ஒன்றாகும். மேலும் கார்த்திகை மாதம் முப்பது நாட்களிலும் பதிவாக இரவில் நடைபெற்று வருகின்ற அத்தாழ ஸ்ரீபலியானது பிரதோஷ நாட்களில் நடைபெறும் விழாவைப் போன்று வெள்ளி ரிஷபவாகனம், கருடவாகனம் ஆகியவற்றைப் பூமாலைகளால் அலங்கரித்து இம்மாதம் (கார்த்திகை) முழுவதும் இரவில் **"மாணிக்க ஸ்ரீபலி"** விசேஷ சிறப்பாக நடைபெற்று வருகிறது. சோமவாரம் எனப்படும் திங்கள்கிழமை நாட்களில் பல்லாயிரக்கணக்கான மக்கள் இத்திருக்கோயிலுக்கு வந்து இறைவனைத் தரிசித்து செல்லும் காட்சி மெய்சிலிர்க்க வைக்கிறது. அய்யப்ப பக்தர்களின் சரண ஒலி கோயிலை அதிரவைக்கிறது.

***மார்கழி*** :- இம்மாதத்தின் மகத்துவத்தை முன்பு கண்டோம். தொடர்ச் சியாக முப்பது நாட்களிலும் அதிகாலை 5.30 மணிக்கு நடைபெறும் **"திருப்பள்ளியெழுச்சி தீப ஆராதனை"** காண வேண்டிய புண்ணிய தரிசனமாகும். இம்மாதத்தின் கடும் பனியோடு கூடிய குளிரையும் பொருட்படுத்தாது நீராடி, அதிகாலை மணி 4.15க்கு கொன்றையடி நாதர் மற்றும் தாணுமாலய சிவலிங்க அபிஷேகமும் கண்டு அதன் பின்னால் நடைபெறும் திருப்பள்ளியெழுச்சி சிறப்பு ஆராதனைகளைத் தொடர்ச்சியாக வந்து தரிசனம் செய்கின்ற ஆன்மீக மக்கள் குறிப்பாக பெண்கள் அதிகாலை வேளையிலும இவ்வாலயத்தைச் சுற்றி வலம் வந்து இப்புண்ணிய தரிசனத்தில் பங்கேற்பது பக்திக்கோர் எடுத்துக்காட்டு.

இம்மாத முப்பது நாட்களில் அதிகாலை பூஜைக்கு நிவேத் தியம் செய்யப்படும் "மஞ்சள் பொங்கல்" சிறப்பு பெற்ற நிவேத்திய மாக சுவாமிக்குப் படைக்கப்படுகிறது. இம்மாதத்தில் வரும் திருவாதிரை நாள் சிறப்புக்குச் சித்திரசபை நடராஜமூர்த்தி ஆலய பூஜை வகைக்கு பறக்கை என்ற ஊரைச்சார்ந்த மாத்துக்குட்டி மாலையம்மா என்ற

பெண்மணி நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளதும் பூஜை பதிவேட்டு கணக்கு மூலம் தெரியவருகிறது.

**தை :-** இம்மாத முதல் நாளில் மாலை "மகர ஸ்ரீபலி" முக்கியத்துவம் பெற்ற விழாவாக நடைபெற்று வந்தது. ஆடிமாத "கற்கடக ஸ்ரீபலி" போன்று இதனையும் சேர்த்து ஆண்டிற்கு இருமுறை விசேட விழாவாக நடத்திட ஆன்மீக அன்பர்கள் உதவிபுரிந்து மீண்டும் இவ்விழாக்களை துவக்கியுள்ளனர். ஆலயத்தில் ஆகம பூஜைகள் தவறாது நடக்க முனைப்போடு தொண்டாற்றி வரும் இவர்களுக்கு ஆலய நிருவாகமும் உதவி வருவதைத் திருக்கோயிலினுள் நடைபெற்று வரும் விழாக்களிலும் காணமுடிகிறது. சுசீந்திரம் தாணுமாலயர் பக்தர்கள் சங்க அறக்கட்டளையினர் இவ்விழாக்களை பொறுப்பேற்று நடத்தி வருவது பாராட்டுக்குரியது.

***தை அமாவாசை* :-** இம்மாதத்தில் வருகின்ற "அமாவாசை" சிறப்பு விழாவாக நடைபெற்று வருகிறது. அன்று இரவு 7 மணிக்கு ரிஷப வாகனம் மற்றும் கருடன் அன்னம் போன்ற வாகனங்களில் உற்சவ மூர்த்திகள் வீதியுலாவிற்கு எழுந்தருளுகின்றனர். குளத்தில் திரு நீராட்டும் முக்கிய பூஜைகளும் இந்நாளில் நடைபெற்று வருகின்றது.

**தைப்பூசவிழா :-** இந்நாளில் காலை 8 மணிக்கு சந்திரசேகரர் அம்பாள் வீதியுலா எழுந்தருளுகின்றனர். இரவு 7 மணிக்கு உமா-மகேஸ்வரர், மகாவிஷ்ணு, அம்பாள் வீதியுலா வருகின்றனர். அன்று சிறப்புப் பூஜைகளும் திரு நீராட்டும் நடத்தப்படுகிறது. இந்நாளில் நடைபெறும் உச்சக்கால பூஜைகளுக்கு **"அங்கப்பன்"** என்பவர் நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளதும் தெரியவருகிறது.

***மாசி மாதம்* :-** இம்மாதத்தில் வருகின்ற மகா சிவராத்திரி மிகவும் பெருமை வாய்ந்த விழாவாக நடைபெற்று வருகிறது. பொதுவாக இம்மாதம் கடும் வெயில் காலமாகையால் இறைவனைக் குளிரச்செய்ய மண்பானையில் வைக்கப்பட்ட நீரால் அபிஷேகம் செய்விக்கப்படு கிறது. மேலும் நான்கு இடங்கழி (அளவு) எள்ளும், நாற்பது தேங்காய்களைத் திருகி வறுத்து **"கழகக்காரர்"** என்ற பணியாட்களைக் கொண்டு இவை இரண்டையும் அரைத்து இவற்றில் இரண்டு பறை (அளவு) நல்லெண்ணெய் கலந்து சிவன், விஷ்ணு

கருவறைகளின் வெளியே உள்ள சுவரில் **"பிராமண சேவகம்"** என்ற பணியாட்களை விட்டு பூச வேண்டும். இவை கருவறை குளிர்ச்சியாக இருப்பதற்கு செய்யப்படுவதாகும்.

சிவராத்திரி அன்று இரவு ஐந்து கால அபிஷேகத்திற்கு ஐம்பத்தைந்து கரும்புகளைக் கொண்டுவந்து கல்செக்கில் வைத்து அரைத்து சாறு எடுத்துக் கொடுக்க வேண்டும். இதனை திருக்கோயில் "கொத்தன்மார்கள்" என்ற பணியாட்கள் செய்யவேண்டும். ஒவ்வொரு அபிஷேகத்திற்கும் இதனை (கரும்புசாறு) இறைவனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டும். கரும்புச்சாறு எடுக்க உபயோகப்படுத்தப்பட்ட கல்செக்கு ஒன்றினை ஊஞ்சல் மண்டபமாகிய மயில் மண்டபத்தின் இடதுபுறம் இன்றும் காணலாம்.

மேலும் நான்கு சாம பூஜைகளின் போது 200 அந்தணர்கள் சிவபாராயணம் செய்து வந்துள்ளனர். சாமபூஜைகள் முடிந்து தீப ஆராதனை நடைபெறும் இவ்வித அபிஷேகங்கள் மற்றும் பூஜை ஆராதனைகள் கொன்றையடி, கைலாசநாதர் கோயில்களிலும் நடை பெறும். இந்த மூன்று சன்னதிகளிலும் தரிசனம் காண்பதற்குப் பக்த பெருமக்கள் மற்றும் பன்னிரண்டு சிவாலயங்கள் தரிசனம் முடித்து வந்து கடைசியாக தரிசனம் காணவந்த சிவபக்தர்கள் களைப்போடு காணப்பட்டாலும், அவர்களும் கோவிந்தா! நாராயண!! ஓம், நம சிவாயா. எனக் கோஷமிட்டு ஓடிச்சென்று இங்குள்ள சன்னதிகளில் சேர்ந்து தரிசிப்பது தெய்வீகக் காட்சியாகும். தீப ஆராதனை முடிந்து மாணிக்க ஸ்ரீபலி வெகு விமரிசையாக நடத்தப்பட்டு பின்பு திருநடை சாத்தப்படுகிறது. சுமார் ஒரு மணிநேரம் கழிந்த பிறகு மீண்டும் நடை திறக்கப்பட்டு மறுநாளுக்கான பதிவு அபிஷேக பூஜைகள் நடைபெறு கின்றன

தினமும் இரவில் இத்திருக்கோயில் முக்கிய கருவறையில் "இந்திர பூஜை" நடைபெறுகின்ற ஐதீகம் நடைமுறையில் பின்பற்றப் பட்டு வருவதால் சிவராத்திரி நாளின் போதும் இந்திர பூஜைக்காக நேரம் ஒதுக்கப்படுகின்றது. மற்ற சிவாலயங்களில் கருவறை திருநடை அடைக்கப்படுவதில்லை. சுசீந்திரம் திருக்கோயிலைப் பொறுத்தவரை காலா காலமாக பேணிக்காக்கப்பட்டுவரும் **"ஆகம விதி"** இன்றும் நடைமுறையில் இருந்து வருவது இத்திருக்கோயிலுக்கான தனிச் சிறப்பாகும்

முற்காலங்களில் சிவராத்திரி நாளில் இரவு முழுவதும் கோயில் முகப்பு ஊஞ்சல் மண்டபத்தில் வைத்து சிவபுராணம் ஒருவர் படிக்க அதற்கு மற்றொருவர் விளக்கம் கூறுவது வழக்கம். தற்போது தேவஸ்தான மேலாளர் அலுவலகம் இருக்கின்ற நாடகசால்ல மண்டபத்தில் தேவதாசி நாட்டியப்பெண்களின் நடனங்களும், கதகளி மற்றும் புராண நாடகங்களை நடத்தி அதில் நாட்டியப் பெண்களும் நடிப்பாற்றல் மிக்க உள்ளூர் நாடகக் கலைஞர்களும் பங்கேற்று மிக அற்புதமாக நடித்து ஒவ்வொரு வருடமும் சிவராத்திரியின்போது போட்டி போட்டு நிகழ்த்தி பாராட்டுகள் பெற்றுள்ளனர். இளம் வயதில் நாட்டியப் பெண்களாய் இங்கு நடனமாடிய அப்பெண்மணிகள் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் தள்ளாத வயதிலும் பெருமையோடு எங்களைப் போன்றவர்களிடம் இதுபற்றி கூறியது இன்னும் நினைவில் உள்ளது. இந்த நிகழ்ச்சி இம்மண்டபத்தில் சிறப்புற நடந்து வந்ததால் இம்முகப்பு மண்டபம் நாடகசாலை என்ற சிறப்பினைப் பெற்றது. இதனை டாக்டர்.கே.கே. பிள்ளை அவர்களும் தனது ஆராய்ச்சி நூலில் ஓர் இடத்தில் குறிப்பிட்டுள்ளதையும் காணமுடிகிறது. தற்போது சிவராத்திரியின் போது இரவு முழுவதும் பன்னிரு திருமுறைகளை ஓதுவாமூர்த்திகள் ஓதுவதும், அந்தணர்கள் வேத மந்திரங்களை ஒலிப்பதும் நடைபெற்று வருகின்றது. நானிலம் போற்றும் நாஞ்சில் மண்ணில் நாதவடிவாக வீற்றிருக்கும் இறைவன் இங்குக் கல்லையும், பாடவைத்து, கலையம்சம் மிக்க சிலைகளையும் காணவைத்து, கொட்டுக்கிசைந்த கூத்தன் கதலிக் காயினைக் கனியாக்கி கூத்தாடும் பிராட்டியோடு நடனக்கலை வளர்த்த நினைவாலயமாக இத்திருக்கோயில் நிமிர்ந்து நிற்கிறது.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கொருமுறை வரும் மாசி மக நட்சத்திரத்தின் போது கும்பகோணத்தில் கும்பேஸ்வரர் எழுந்தருளியுள்ள திருத்தலத்தில் நடந்திடும் மகாமகம் போன்று சுசீந்திரம் திருக்கோயிலிலும் சந்திர சேகரரும், அம்பாளும் வெள்ளி ரிஷப வாகனத்தில் வீதியுலா எழுந்தருளி காட்சி தருகின்றனர். அன்றைய தினத்தில் நடைபெறும் திரு நீராட்டிற்கும் சிறப்புப் பூஜைகள் நடந்துவதற்கும் சுசீந்திரம் கிராமம் ஆவுடையம்மாள் என்ற பெண்மணி நிலங்களை இத்திருக்கோயிலுக்கு விட்டுக் கொடுத்துள்ளார், மாசி புனர்பூச நட்சத்திரத்தன்று சித்திரசபையில்

அபிஷேகம் பூஜை வழிபாடு நடத்த பறக்கை மாத்துக் குட்டி மாலையம்மை நிலங்களை விட்டுக்கொடுத்துள்ளார்.

## திருக்கல்யாண விழா

இத்திருக்கோயிலில் ஆஞ்சநேயர் நிலை நிறுத்தப்பட்டுள்ள இடத்தின் அருகில் அறம் வளர்த்தம்மன் கோயில் உள்ளதையும் அதைப்பற்றிய சில விவரங்களையும் முன்பு அறிந்துள்ளோம். இங்கு எழுந்தருளி அருள் பாலிக்கும் இந்தத் தேவிக்கும், ஸ்தாணுமாலயர்க்கும் மாசி பரணியில் துவங்கி மகம் நட்சத்திரத்தில் திருக்கல்யாண வைபவம் பல்லாண்டு காலமாக நடைபெற்று வருகின்றது.

இந்நாளில் காலை 8 மணிக்குக் காக்கமூர் வழியாக தேவியை பல்லக்கில் எழுந்தருளச்செய்து சுசீந்திரம் ஊரின் தென்மேற்கு பாகம் அமைந்துள்ள சுமார் மூன்று கிலோமீட்டர் தூரத்தில் இருக்கின்ற ஸ்தலபுராண வரலாறு தெரிவிக்கும் "**வேட்கைக் குளக்கரை**"யில், தற்போது சுசீந்தை நகரைச் சுற்றியுள்ள விவசாய நிலங்களுக்குத் தேவையான நீரினைத் தேக்கி வைத்திருக்கும் சுசீந்தைக்குளம் [வடக்கே கரியமாணிக்கபுரம் கரையிலிருந்து தெற்கே பறக்கை வரை நான்கு கிலோமீட்டர் நீளம் பரவியுள்ள ஏரியாகும்] இதன் தென்முனைக் கரையில் அமைந்திருக்கும் "**காசி விசுவநாதர்**" ஆலயப் படித்துறையில் தேவிக்குத் திருநீராட்டு வைபவம் நடத்தப்படுகிறது. இதனை "**கதிர்குளி**" எனக் கூறுவதுண்டு. பின்பு தேவியை மண்டபத்தில் எழுந்தருளச் செய்து சிறப்புப் பூஜைகள் செய்வித்து பல்லக்கில் எடுத்துக் குளக்கரை வழியாக சுசீந்திரம் வடதிசையில் அமைந்துள்ள "**ஆஸ்ராமம்**" என அழைக்கப்படும் கிராமத்திற்குக் கொண்டுவந்து சேர்க்கின்றனர்.

### *சமபந்தி போஜனம்*

ஆஸ்ராமம் சோழன் திட்டு அணைக்கரையில் அமைந்துள்ள வினாயகர் ஆலயத்தில் வைத்து சிறப்பு பூஜைகள் நடத்தி நண்பகலில் திருக்கல்யாண சாப்பாடு நடைபெறுகிறது. முற்காலத்தில் உயர்ஜாதி மக்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டு வந்த இம்மதிய உணவுத்திட்டம் பிற்காலத்தில் ஸ்ரீசித்திரைத் திருநாள் மன்னராட்சியில் நடைபெற்ற

**"ஆலய பிரவேசனம்"** சம்பவத்திற்குப் பிறகு பிரமாண்டமான முறையில் நடந்த திருமண விழா மதிய உணவு வைபவம், ஆலய நிதி நிலைக்கேற்ப சுருக்கமான முறையில் குறைந்த ஆட்கள் பங்கேற்று அனைத்துத் தரப்பினரும் மதிய உணவு உட்கொள்ளும் **"சமபந்தி போஜனம்"** சுமார் அறுபது ஆண்டு காலமாக இன்றளவும் நடைபெற்று வருவதைக் காண முடிகிறது. தற்போது ஆலயங்களில் நடைபெற்றுவரும் இந்நிகழ்ச்சியை 60வருட காலமாக இங்கும் நடத்தி வருவதோடு மற்றையத் திருக்கோயில்களிலும் இதுபோன்ற விழாக்களில் அனைத்து மக்களையும் பங்கேற்கச் செய்து முதலிடம் வகிக்கிறது. கன்னியாகுமரி மாவட்டத் திருக்கோயில் நிர்வாகம் மன்னர்கள் தனவந்தர்கள் நன்கொடையாக ஆலயங்களுக்கு வழங்கிய நிலங்களின் வருவாய் மக்களுக்கும் பயன்படும் விதத்தில் அமைந்திட்ட **"இலவச உணவுத்திட்டம்"** பெருமளவில தற்போது இல்லாவிட்டாலும், இன்றைய காலகட்டத்தில் சிறு அளவிலாவது திருக்கோயில்களில் நடந்துவரும் தானத்தில் சிறந்த அன்னதான தர்ம காரியத்தை நாம் மறக்க இயலாது. **"நல்லார் ஒருவருளேல் எல்லோர்க்கும் பெய்யும் மழை."** என்ற ஔவைப் பிராட்டியின் நீதி மொழிக்கேற்ப குமரி மாவட்டத்தில் காலமழை அவ்வப்போது பெய்து வறட்சியிலிருந்து காப்பாற்றி வருகிறது.

***திருமணத் திருக்காட்சி*** **:-** திருமண மதிய உணவு முடிந்து மணமகளான தேவியை அலங்கரித்து தந்தப் பல்லக்கில் பூமாலை தோரணம் கட்டி அதில் எழுந்தருளச்செய்து மேள, தாள இசை முழங்க ஆஸ்ராமம் கிராமத்தின் வீதி வழியாக தேவியைத் தந்தப் பல்லக்கில் சுமந்து வரும் வேளையில் கிராமத்து மக்கள் தேவியை எதிர்கொண்டு அழைத்து வரவேற்பு கொடுப்பது போன்று வெற்றிலை, பழத்தோடு பூமாலையும் வைத்து "திருக்கண் சார்த்து பூஜை" நடத்தி சிறப்பித்து மணமகன் இல்லமான ஸ்தாணுநாதர் ஆலயத்திற்கு அனுப்பிவைத்து திருமணவிழாவிலும் கலந்து ஆஸ்ராமம் மக்கள் சிறப்பிப்பது தெய்வீகக்காட்சியாகும். இத்திருமண விழாவின் போது ஆஸ்ராமம் அருகில் புகழ்பெற்ற "அஞ்சனமெழுதிய கண்டன் சாஸ்தா" திருக்கோயிலில் ஊர்வகை மக்களும் மற்றும் பாமர அனைத்து தரப்பினரும் உணவருந்தும் பொருட்டு மதிய உணவு கஞ்சி வழிபாடு இன்றும் இத்திருக்கோயிலில் நடைபெற்று வருவதை

காணமுடிகிறது தவநெறி தர்மம் காத்த அத்திரி-அனுசூயா தம்பதியர் ஆஸ்ரமம் அமைத்து வாழ்ந்த இவ்வூர் மக்கள் இறைவன் ஸ்தாணுமாலயர் திருக்கோயிலில் வைத்துள்ள பற்றுதலைத் தெரிவிக்கும் இக்காட்சி திருமணவிழா காணும் நம்மையும் நெகிழவைக்கிறது.

ஆஸ்ராமம் கிராமத்திலிருந்து பிரியாவிடை பெற்றுவரும் தேவி சுசீந்திரம் ரதவீதிகளைச் சுற்றிவந்து மணமகன் இல்லமான ஆலயத்தில் வந்திறங்கி சிறப்புப் பூஜை மற்றும் கலச நீராடி திருமணத்திற்குத் தயாராகின்றாள். பின்பு சீர்வரிசை சீதனமான திருமாங்கல்யம், பட்டு முதலியவற்றைக் கோயில் திருநடைக்காரர் தட்டு ஒன்றில் வைத்து மேள தாளத்துடன் வீதியை வலம்வந்து திருக்கோயில் அலங்கார மண்டபத்தை வந்தடைகின்றனர்.

இசை முழங்கும் அலங்கார மண்டபத்தில் ரிஷப வாகனத்தில் மாப்பிள்ளை கோலத்தில் ஸ்தாணுமாலயராகிய சுசீந்திரப் பெருமாள் வீற்றிருக்க, அவரது கரத்தில் திருமாங்கல்யம் முதலில் வைக்கப்படு கிறது. வடக்குத் திசை நோக்கி கருட வாகனத்தில் திருமால் வீற்றிருக்க அவரது முன்னிலையில் நடைபெறும் இவ்விழா இரவு வேளையில் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் சுசீந்திரப் பெருமானின் கையிலிருக்கும் திருமாங்கல்யத்தை எடுத்து பொன்னூஞ்சலாகிய மர ஊஞ்சலில் மணமகளாய் அமர்ந்திருக்கும் அறம் வளர்த்த நாயகியின் திருக்கழுத்தில் திருமாங்கல்யம் அணிவிக்கப்பட்டு பொன்னூஞ்ச லாட்டும் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. மனத்தைவிட்டு அகலாத மதுரை மீனாட்சி-சுந்தரேசப்பெருமானின் திருமணத்தைப் போன்று சுசீந்திரம் திருக்கோயிலிலும் தெய்வத் திருமண விழாவினைக் கண்டு தரிசித்து, மனம் மகிழும் மக்களின் கூட்டத்தையும் மண்டபத்தைச் சுற்றிக் காண முடிகிறது. மனித வாழ்வில் நிகழ்ந்திடும் மணவிழாவில் முகூர்த்த வேளையில் பெண்களின் குரவை வாழ்த்தொலி இறைவனின் திருமணத்தின் போதும் ஒலித்து மண்டபத்தை அதிர வைக்கிறது.

திருமணம் முடிந்து சந்தனம், குங்குமம் வெற்றிலைச்சுருள் பக்த பெருமக்களுக்கு வழங்கப்படுகிறது. சீர்கொணர்ந்த பெண்வீட்டு உறவினர் கௌரவிக்கப்படுகின்றனர். பின்பு திருமணத் தம்பதிகளான உமா-மகேஸ்வரர் மற்றும் திருமால் - அம்பாள் வீதியுலா

எழுந்தருளுகின்றனர். வைபவத்திற்கு வந்தோர்க்கு நன்றி கூறி ஆசி வழங்குவது போல் ஊர் மக்களுக்கும் வர இயலாதவர்க்கும் நன்றி தெரிவிக்கும் முகமாக வீதியில் வலம் வரும் காட்சி காணவேண்டிய அற்புதக் காட்சியாகும்.

மறுநாள் மாலையில் பிள்ளையார் தேரில் ரத உற்சவம் நடை பெற்று இரவு திருஆறாட்டு வைபவம் முடிந்து திருக்கல்யாண உற்சவமும் நிறைவு பெறுகின்றது. இத்திருவிழா நாட்களில் இரவில் அலங்கார மண்டபத்தில் தேவியை எழுந்தருளச்செய்து திருக்கோயில் வித்து வான்களின் சங்கீதக் கச்சேரி நிகழ்ச்சியும் அதன்பின்பு தேவிக்குச் சிறப்புப் பூஜை செய்யப்பட்டு முக்கியம் வாய்ந்த நிவேத்தியமான வெண்படிச் சோற்றில் உப்பும் நல்லமிளகும் நல்லெணயும் கலந்து "திரளச்சோறு" வழிபாடு செய்வித்து நிவேத்திய பிரசாதமும் தரிசனக்காரர்களுக்கு வழங்கப்படுகிறது. இத்திருவிழா நாட்களில் காலையும் இரவும் அம்மன் வீதியுலா எழுந்தருளலும் நடைபெறுகிறது. திருக் கொடியேற்று வைபவம் இல்லாத திருவிழாவாகும் இது.

*பங்குனி*

இம்மாதத்தில் நடைபெற்று வரும் அசுவதி ஆட்டத் திரு நாள் முக்கியம் வாய்ந்த விழாவாக முற்காலங்களில் நடத்தப்பட்டு வந்துள்ளது. இந்நாளில் கோயிலுக்கு வருகின்ற பக்தர்களுக்கும் கோயில் பணியாளர்களுக்கும் மதிய உணவு வழங்கிடும் பொருட்டு ஆற்றிங்கல் மூத்தத் தம்பிரான் அசுவதித்திருநாள் மன்னர் இருபத்தெட்டு பறை அரிசி இறைவனுக்கு நிவேத்தியம் செய்வித்து அன்னதான அறச்சாலைக்கு உதவிபுரிந்து வந்ததாக பதிவேடு தெரிவிக்கின்றது. அன்று இரவு சுவாமி வீதியுலா நடைபெறுகிறது. மேலும் பூரட்டாதி நட்சத்திர திருப்பள்ளியெழுச்சி பூஜை வகைக்கு பைங்குளம் காளி என்பவர் நிலங்கள் கொடுத்துள்ளதும் அறியமுடிகிறது.

பங்குனி உத்திரம் நட்சத்திர நாள் முதல் சித்திரை மாதம் பரணி நட்சத்திர நாள் வரை உள்ள நாட்களில் உற்சவ மூர்த்தியான சுசீந்திரப் பெருமாளையும், பார்வதிதேவியையும் வசந்த மண்டபத்தில் எழுந்தருளச்செய்து தினமும் காலை அபிஷேகச் சிறப்பு பூஜைகள்

இரவில் பூஜையும் ஆராதனைகளும் நடத்தப்பட்டு வருகின்றது. வேனில் காலமான இந்நாட்களில் சுவாமி வீற்றிருக்கும் பீடத்தைச் சுற்றியுள்ள கல்லிலான தொட்டியில் தண்ணீர் நிரப்பி இறைவன் குளுமைப்பெற இம்மண்டபத்தில் வசதி செய்யப்பட்டுள்ளது. முக்கியத்துவம் வாய்ந்ததாகும். சுவாமி அமர்ந்திருக்கும் பீடத்தின் மேல்பாகத்தில் புடைப்பு சிற்பங் களாக நவக்கிரகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

***சித்திரை***

தமிழ்ப் புத்தாண்டு பிறக்கின்ற இந்நாளில் **"சங்கர்ம சிறப்புப் பூஜை"** நடைபெறுகிறது. மூலஸ்தானத்தில் அதிகாலை நடை திறக்கப்பட்டு கனி காணும் வைபவம் காலை 6.30 வரை நடை பெறுகிறது. தினமும் அதிகாலையில் நடைபெறும் முதல் அபிஷேகமும் இதன் பிறகே நடத்தப்பட்டு பூஜைகளும் ஆரம்பமாகிறது. **"சித்திரை விசு"** எனப் போற்றப்படும் இந்நாளில் காலையும் இரவும் வெள்ளி வாகனங்களில் இறைவன் வீதியுலா வருகின்ற நிகழ்ச்சியும் நடைபெறுகின்றது. சித்திரை சிறப்புப் பூஜைகளுக்காக **"இறச்சக்குளம் கணக்கு குமாரசாமி முத்தம் பெருமாள்"** நிலங்கள் விட்டுக்கொடுத்துள்ளதும் பதிவேடு வாயிலாக அறிய முடிகிறது. இருபது பறை(அளவு) அரிசி நிவேத்தியம் செய்வித்து திருக்கோயில் பணியாட்களும், மக்களும் மற்றும் ஸ்தானிக மடங்களில் உள்ளவர்களுக்கும் மதிய உணவு வழங்கி வந்ததை அறியமுடிகிறது.

மேலும் சித்திரை ரேவதி நட்சத்திர நாளில் உச்சக்கால பூஜையின் போது பன்னிரண்டு அந்தணர்களுக்கு உணவு வழங்கிட சுசீந் திரம் தெற்குத்தெரு ஐயமடத்தின் முன்னோர்களில் ஒருவரான சௌ மிய நாராயணப்பையா வஸ்துக்கள் விட்டுக்கொடுத்துள்ளார். பரணி மற்றும் திருவோணம் நட்சத்திர நாட்களில் சித்திரசபை மண்டப நடராஜ மூர்த்திக்குப் பூஜை வகையிலான செலவுகளுக்காகப் பறக்கை மாத்துக்குட்டி மாலையம்மா நிலங்கள் விட்டுக்கொடுத்துள்ளதும் பதிவு கணக்கு மற்றும் கல்வெட்டு குறிப்புகள் தெரிவிக்கின்றன. மூர்த்திகளில் ஒருவரான பிரம்ம தேவன் தனது படைப்புத் தொழிலை தொடங்கியதும் "சித்திரை விசு" நன்னாளில் என்பதைப் புராண நூல்கள் வாயிலாக அறியமுடிகிறது.

### *வைகாசி*

இம்மாத மகம் நட்சத்திரத்தில் தாணுமாலயருக்கு சங்கால் அபிஷேகமும் வைகாசி விசாக நட்சத்திரத்தின் போது மூலஸ்தான இறைவனுக்கும், மகாவிஷ்ணு மற்றும் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிக்கும் மாம்பால் நிவேத்தியமும் இரவு பூஜையின் போது செய்விக்கப்பட்டு பக்தர்களுக்கும் வழங்கப்படுகிறது. ஐந்தரை இடங்கழி வெண்படி நிவேத்தியமும், மற்றும் மாம்பழம், கதலி, கரும்பு, தேங்காய் பால், சர்க்கரை, சுக்கு நாலரை இடங்கழி (அளவு) பச்சரிசி மாவு போன்றவற்றைக் கலவையாக்கிச் சூடாக்கிக் கொதித்த பின்னால் தயாராகும் மாம்பால் இந்நாளில் மேற்காணும் மூர்த்திகளுக்கு நிவேத்திய பொருளாகிறது.

மேலும் விசாக நட்சத்திரத்தில் முருகப்பெருமானுக்குப் பிறந்த நாள் விழாயெடுத்து பக்தர்கள் சிறப்பிக்கின்றனர். இத்திருக்கோயிலில் எழுந்தருளி அருள் வழங்கும் ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமி சன்னதி யிலும் விசேட பூஜை மற்றும் ஆராதனைகள் ஆண்டுதோறும் நடை பெற்று வருகிறது. பார்வதி தேவியின் திருக்கரத்தால் முருகன் வேலினைப் பெற்று வேலாயுதனாகக் காட்சி தந்ததும் இந்நாளில் என்பதை கந்தபுராண வரலாறு தெரிவிக்கின்றது. அருணகிரிநாதர் நாவிலே முருகன் வேல்கொண்டு எழுதி, அவர் வாயால் திருப்புகழ் பாடல் கேட்டு மகிழ்கிறான் வேலாயுதப்பெருமான். அருணகிரி போற்றிப் பாடிய திருப்புகழ் பாடலை நாமும் படித்து பயன்பெறுவோம்.

### *ஆனி*

இம்மாத உத்திர நட்சத்திர நாளில் சித்திரசபையில் சிறப்பு வழிபாடு நடத்துவதற்காகப் பறக்கை ஊரைச்சார்ந்த மாத்துக்குட்டி மாலையம்மா என்ற பெண்மணி நிலங்கள் விட்டுக்கொடுத்துள்ளார். பஞ்சபாண்டவர் கோயிலில் ஜெயந்தீஸ்வரத்து மகாதேவருக்கு ஆனிமகம் நட்சத்திரத்தில் சிறப்புப் பூஜைகளும் நடைபெறுகின்றன.

### *ஆடி*

இம்மாத முதல் நாளில் சங்கரம விஷேட பூஜைகளும் "கற்கடக ஸ்ரீபலி" மாலை 5 மணிக்கு நடைபெறுகிறது. நின்றுபோன இவ்விழாவினைப் பக்த பெருமக்களின் உதவியால் பக்தர்கள் சங்க

அறக்கட்டளையினர் மீண்டும் ஆண்டு தோறும் நடத்திட முன்வந்து செயலாற்றித் தற்போது தொடங்கி வைத்துள்ளனர். அடுத்து இத்திருக்கோயிலில் "பூரம்" நட்சத்திர நாளில் தாணுமாலய சுவாமிக்குப் புதிய வஸ்திரம் (ஆடை) அணிவிக்கப்பட்டு சிறப்புப் பூஜையும் நடைபெறுகிறது. மேலும் "அமாவாசை" நாளில் சிறப்புப் பூஜைகளும், இரவு வெள்ளி வாகனங்களில் மகாவிஷ்ணு கருட வாகனத்திலும், உமா-மகேஸ்வரர் ரிஷப வாகனத்திலும் அம்பாள் அன்ன வாகனத்திலும் வீதியுலாவிற்கு எழுந்தருளுகின்றனர்.

வீதியுலா முடிந்து திருக்குளத்தில் உற்சவ மூர்த்திகளுக்கு ஆறாட்டு வைபவம் நடைபெறுகிறது. அமாவாசை சிறப்புப் பூஜை களுக்காக தமிழாண்டு:933 மார்கழி 25ஆம் நாள் (ஆங்:1758-ல்) திருவிதாங்கூர் சமஸ்தான மன்னராக விளங்கிய **அனுஷம் திருநாள் மார்த்தாண்ட வர்மா** நிலங்கள் விட்டுக் கொடுத்துள்ளதும் அறிய முடிகிறது. இந்நாளில் மாலையில் நடைபெறும் ஸ்ரீபலியானது மாணிக்க ஸ்ரீபலியாக நடத்தப்படுகிறது.

### "ஆடிசுவாதி நட்சத்திரம்

இந்நாளில் நடைபெறுகிற விழா மிகவும் முக்கியத்துவம் பெற்ற விழாவாகும். இரவில் சுசீந்திரம் பேரம்பலம் நடராஜர் கோயிலி லிருந்து சேரமான் பெருமாள் நயனார், சுந்தர மூர்த்தி நாயனார், நந்தீஸ்வரர் ஆகிய விக்ரகங்களை யானை மற்றும் குதிரை வாகனங்களில் ரத வீதிகளில் எடுத்து வந்து கோபுர முகப்பில் நிறுத்தி வைக்கின்றனர். சேரமான் பெருமாளைக் கோயிலுக்குள் வருவதற்கு அனுமதி மறுக்கிறார் நந்தீஸ்வரர். சுந்தரர் கயிலாய நாதரை தரிசித்து அனுமதி பெற்று சேரமான் பெருமாள் நாயனாரைக் கோயிலுக்குள் அழைத்து வருகிறார். பின்பு இருவருக்கும் கயிலாய வாகனத்தில் உமா - மகேஸ்வரராகிய சுசீந்திரப் பெருமாள் எழுந்தருளி காட்சி தருகின்றனர்.

இந்நிகழ்ச்சியானது சுந்தரமூர்த்தி நாயனாரை உடலோடு "சுவர்க்கம்" செல்ல இறைவன் அருள்புரியும்வேளையில் நான் மட்டும் சென்றால் போதாது எனது ஆருயிர் நண்பனும், இறைவன் மீது மிகுந்த பக்திகொண்டு நற்காரியங்கள் பல செய்த சேரமான் பெருமாளையும் அழைத்து செல்ல அருள்புரிய வேண்டும் என சுந்தரர் சிவபெருமான்

- பார்வதி தேவியிடம் வேண்டவே இறைவன் திருவருளால் இருவரும் உடலோடு **"சுவர்க்கம்"** சென்றதை **"ஆடி சுவாதி விழா"** எடுத்துக்காட்டுகின்றது.

முற்காலத்தில் சேரநாட்டில் (கேரளா) **"திரு அஞ்சைக்களம்"** ஊரை தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தவர் சேரமான் பெருமாள். சிறந்த பக்திமானாகவும், தர்ம காரியங்கள் பல செய்து புகழோடு விளங்கினார் இவர். அக்கால கட்டத்தில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான் பெருமாளின் பக்திச் சிறப்பினைக் கண்டு அவருடைய உயிர்த்தோழனாக விளங்கினார் சுந்தரர். சைவ சமயத்திற்கு நற்தொண்டுகள் பலசெய்து சிவனருளால் உடலோடு இருவரும் சுவர்க்கம் சென்றதை வரலாறு தெரிவிக்கின்றது.

இந்த அற்புத தரிசனம் கிடைத்து இச்சம்பவம் நிகழ்ந்த இடம் கேரள நாட்டிலுள்ள "திருவஞ்சிகளம்" என்ற புண்ணிய திருத்தலமாகும். சிவபெருமான் எழுந்தருளி அருள் பாலிக்கும் இங்குள்ள திருக் கோயிலில் நடராஜமூர்த்தியின் விக்ரகம் அற்புதப் படைப்பாக விளங்குகிறது. கேரள நாட்டில் இம்மூர்த்தி அமைந்துள்ள திருக்கோயிலும் இது ஒன்றேயாகும்.

ஆடி மாதம் வருகின்ற சுவாதி நட்சத்திர நாளில் மிகச் சிறப்பாக **"சுவாதி விழா"** நடத்தப்படுகின்றது. மலையாள மொழி பேசும் நாட்டில் **தமிழ்ப் பண்பாடு** கூடிய இவ்விழாவில், தமிழ்நாட்டு மக்கள் பெருமளவில் கூடி, மொழிவேற்றுமையின்றி இருநாட்டு மக்களும் கலந்து, சுவாதி விழாவைச் சிறக்க வைப்பதுடன், கலாச்சார ஒற்றுமை யையும் இவ்விழா எடுத்துக்காட்டுகின்றது.

இந்நினைவை எடுத்துக்காட்டும் விதமாக சுசீந்திரம் திருக் கோயிலிலும் நடத்தப்படுகிறது. முன்பு சேரநாட்டு மன்னர்களின் ஆட்சி நடைபெற்று வந்ததால் திருவஞ்சிக்களம் சுவாதி திருவிழா காட்சிய்யை நாஞ்சில் நாட்டு மக்களும் காண வேண்டும் என்று மன்னரும் எண்ணியிருக்கலாம் என்பதை இவ்விழா நமக்கு உணர்த்துகின்றது. இந்நாளில் இத்திருக்கோயிலின் நேர் கிழக்கில் பழையாற்றின் மறுகரையில் உள்ள அக்கரை என்ற இடத்திலுள்ள சத்திரத்தில் வைத்து நண்பகலில் அனைத்து மக்களும் கலந்து உணவருந்தும் அன்னதானம் மிகச்சிறந்த முறையில் இன்றும் நடந்து வருவதைக் காணமுடிகிறது.

# மாவட்டத்தில் ஒரு கோயில்நகர்

கன்னியாகுமரி மாவட்டத்தில் அரசுடமையாக்கப்பட்ட கோயில்கள் மொத்தம் 1250 ஆகும். இதில் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் சுமார் 760 கோயில்களும், இணைக்கப்பட்ட மற்றும் இணைக்கப்படாததுமான அமைப்பின் கீழ் சுமார் 490 கோயில்களும் இருந்து வருகின்றன. (மாவட்டத்தில் பிரசித்திப் பெற்ற கோயில்களும் இதில் அடக்கம்) இவை போக அரசுடமை ஆக்கப்படாத சமுதாயக் கோயில்களும் ஏராளம் உள்ளன. குறிப்பிட்டுச் சொல்லுவோமானால் இது ஒரு கோயில் மாவட்டமெனவும் கூறலாம்.

அடுத்து, சுசீந்திரம் திருத்தலத்தை எடுத்துக் கொண்டால் ஊரின் நடுநாயகமாக முதன்மை நிலை ஆலயமாக அருள்மிகு ஸ்தாணுமாலயர் திருக்கோயிலும், கோயிலைச்சுற்றியும், ரதவீதிகளிலும், அதற்கு வெளியிலுள்ள பகுதிகளிலும் ஆக சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட கோயில்கள் இப்பேரூராட்சி பகுதியில் நிறைந்திருப்பதைக் காண முடிகிறது. இவை அனைத்திலும் அன்றாட பூஜைகளும் நடந்து வருவது பெருமை வாய்ந்தது மட்டுமின்றி ஆண்டவன் மீது பற்றுதல் கொண்டு ஆண்டுதோறும் ஆன்மீக அன்பர்கள் விழாக்கள் எடுத்தும், ஏழை எளியவர்களுக்கு அன்னதானங்கள் செய்வதும் போற்றுதலுக் குரியதாகும். இத்திருத்தலத்தை விழாக்கள் பல நிறைந்த 'திருக்கோயில் நகர்' எனப் பெருமையோடு கூறலாம்.

### சர்வம் சக்தி மயம்

கோயில் நகராகப் போற்றப்படும் சுசீந்திரம் திருத்தலத்தைப் பற்றி வெளிநாட்டவர் வியந்து பாராட்டி எழுதியுள்ள ஆங்கில நூல்கள், ஆலயத்தைப்பற்றி கூறிய கருத்துக்கள் நம்மை மெய்சிலிர்க்கச் செய்கிறது. ஜர்மன் நாட்டு திரு 'யான் பைப்பர்' என்ற பேரறிஞர் ஒருவர் தாம் எழுதிய ஜெர்மன் ஆராய்ச்சி நூல் ஒன்றிற்கு **இமாலயன் கொடுமுடியிலிருந்து தென்இந்தியத் திருக்கோயில்கள் வரை**' என்று தலைப்பிட்டு வெளியிட்டுள்ளார். அதில் சுசீந்திரம் திருக்கோயிலை 'இந்தியாவின் மிகச்சிறப்புடைய

கோயில்' எனக் குறிப்பிட்டுள்ளார். அடுத்து இலண்டன் நகரைச் சார்ந்த பேராசிரியர் '**டாக்டர் ஹாரிமில்லர்**' என்பவர் இத்திருக்கோயிலைச் சுற்றிப்பார்த்து விட்டு குறிப்பு ஒன்றை ஆங்கில ஏடு ஒன்றில் கட்டுரை எழுதியுள்ளார். அதில் "**தாஜ்மகாலை விட மிகப் அற்புதமானக் கோயில்**". என விவரித்துள்ளார்.

இவற்றிற்கெல்லாம் மேலாக மேற்கு ஜெர்மனி நாட்டில் ஹீடல்பர்க் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரியும் திருமதி **ஈவிலின் மேயர்**' என்பவர் ஜெர்மன் மொழியில் எழுதி வெளியிட்ட **அங்காளம்மன் ஓர் ஆய்வு**' நூலில் சுசீந்திரம் திருக்கோயில் அமைப்பினைச் சக்தி வடிவமாகப் படம் வரைந்து விளக்கிக் காட்டியுள்ளார். அதில் அவர் கூறிய விளக்கங்கள் நம்மை சிந்திக்க வைப்பதோடு உண்மைத் தத்துவத்தை உணரச் செய்யும் விதத்திலும் அமைந்துள்ளது.

சக்தி வடிவான பெண்ணொருவள் மல்லாந்து படுத்து இரண்டு கைகளையும் நீட்டியபடி ஒன்றைத் தெற்கிலும், மற்றொன்றை வடக்கிலுமாகவும், தலையை மேற்கிலும், கால்களைக் கிழக்குத் திசை நோக்கியும் நீட்டிக் கிடக்கின்றாள். கால் நீட்டி இருக்கும் கிழக்கு திசையில் 'சுசீந்திரம் அக்கரை முத்தாரம்மன்' திருக்கோயிலும், தலை இருக்கின்ற மேற்குத் திசையில் சுசீந்திரம் மேலரதவீதியிலுள்ள 'வண்டி மலச்சி அம்மன்' திருக்கோயிலும், இடதுகை தெற்குத் திசையில் சுசீந்திரம் தெற்குமண் 'முத்தாரம்மன்' திருக்கோயிலும், மற்றும் வலதுகை வடக்குத் திசையில் 'முன்னுதித்த நங்கை' திருக்கோயிலும் ஆக ஸ்தாணுமாலயர் திருக்கோயிலைச் சுற்றி நான்கு திசைகளிலும் சக்தி கோயில்கள் அமைந்துள்ளதைக் காணலாம்.

அடுத்து சக்திவடிவான பெண்ணின் வயிற்றுப்பாக கர்ப்ப அறையில் சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயில் அமைந்துள்ளதை வரைபடத்தில் காட்டியுள்ளார். 'சக்தி இல்லையேல் சிவமில்லை' ஆதி சக்தியின் அருளாலே உலகம் உண்டானது. என்பதை இது உணர்த்துவதோடு மட்டுமின்றி சுசீந்திரம் திருநகர் பகுதியைச் சுற்றிலும் சக்தி வடிவங்கள் நிறைந்துள்ளதையும் குறிப்பிட்டுள்ளார். நமது இந்தியத் திருநாட்டின் அமைப்பினைக் காணுமிடத்தில் கடல் சூழ்ந்த பகுதி கரையோரக் காவல் தெய்வங்களாய் சக்தி தேவியின்

திருக்கோயிகள் பலவற்றைக் காண்கிறோம். கயிலாய மலை (இமயமலை)யில் உமாதேவியோடு மகேஸ்வரனையும் தரிசிக்கின்றோம். இங்கே (சுசீந்திரம்) சக்தி சூழ்ந்திருக்க சிவன் நடுவிருக்கும் அற்புதக் காட்சியை காணுகின்றோம்.

## செந்தமிழ் நாட்டின் தென்னகக்கோயில்

ஆய்-வேள் மன்னர் போன்ற குறுநில அரசர்களாலும், பாண்டியர், சோழர் மற்றும் விஜயநகரப் பேரரசு, நாயக்க மன்னர்களாலும், சேரநாட்டு மன்னர்களாலும் வேணாட்டு அரசர்களாலும் அறப்பணிகள் பல புரிந்து கண்ணும்கருத்துமாக காத்து வந்த சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயில் குமரிமாவட்டத்தில் மிகப்பெரிய கோயிலாக வானளாவி உயர்ந்து நிற்கிறது. தமிழகத்தின் புகழ்பெற்ற கோயிலாகவும் விளங்குகின்றது. திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் (ராஜியம்) மிகப்பெரிய கோயிலாகப் பாவித்து வேணாட்டு மன்னர்கள் வழிபட்டு வந்துள்ளனர். வழிபாட்டு ஸ்தலமாக மட்டுமல்ல நீதி மன்றமாகப் பாவித்து இறைவனை நீதிபதியாக வைத்து ஆட்சி புரிந்துள்ளதையும் வரலாறுகள் மூலமாக அறிந்தோம். அரச தண்டனையைவிட **ஆண்டவன் தண்டனை** சிறந்தது என்ற தத்துவத்தை வரலாற்றில் பலஇடங்களில் பலசம்பவங்கள் மூலம் புரிய வைத்ததையும் அறிய முடிந்தது.

சுமார் 600 ஆண்டுகளுக்கும் மேலாக வேணாட்டு (சேரநாட்டு) மன்னர்களின் ஆட்சியில் சுசீந்திரம் திருக்கோயில் இருந்தபோதும், தமிழ் மரபு பூசைகள் தழைத்தோங்கி இருந்ததைக் காணமுடிகிறது. தமிழ் முறைத் திருவிழாக்கள், தமிழ்த் திருமுறைப் பாசுரங்கள், திருப்பள்ளி எழுச்சி, மாணிக்க வாசகர், ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் போன்றவர்களைப் போற்றும் நினைவு விழாக்கள், இராஜ ராஜ சோழன் வழங்கியத்தில்லை நடராஜமூர்த்திக்கு நடைபெறும் விழாக்கள். மன்னர் நினைவினைப் போற்றும் மார்கழி சதய விழா. மற்றும் தேரோட்டம் தெப்பம் போன்றவை மலையாள நாட்டில் காணப்படாத விழாக்களாகும். தமிழர் பண்பாட்டினைக் காப்பதற்கு வேணாட்டு (திருவிதாங்கூர் ராஜியம்) மன்னர்கள் தந்த மதிப்பினைப் பேணிக்காத்த தோடு கலையம்சம் பொருந்திய அற்புத ராஜ கோபுரத்தை எழுப்பிய

பெருமை இம்மன்னர்களைச் சாரும். சிற்பக்கலை வளர்த்ததில் எங்கள் தென்குமரியும் சிறந்தது என சிற்பக்கலைகளின் அற்புதத்தை இத் திருக்கோயிலில் வடித்தெடுத்து பெருமை படைத்துள்ளனர் வேணாட்டு மன்னர்கள். ஆம்! கல்லையும் கவிபாடவைத்து, பச்சிலையால் வரைந்த ஓவியத்தில் காவியங்களைக் காணவைத்து, காட்டுமரத்தில் கலையழகு சிற்பங்களைக் கடைந்தெடுத்து, சுண்ணாம்புச் சாந்திலே சுதை சிற்பங்கள் போன்றவற்றைச் செய்வித்து அற்புத ஆலயமாய் அகிலம் காண வைத்த பெருமையும் இம்மன்னர்களைச் சாரும்.

## பிரதோஷ விழா மகத்துவம்

### *பிரதோஷம் பற்றிய புராண வரலாறு*

ப்ரதோஷம் என்பதில் ப்ர என்றால் "முந்தைய", தோஷம் என்பது "இரவு" இரவுக்கு முற்பட்ட அதாவது அஸ்தமனத்திற்கு முந்தைய மூன்று நாழிகைப்பொழுதே பிரதோஷம். இவ்விழா சுசீந்திரம் திருக்கோயிலில் காலம்காலமாக நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஒரு புனிதவிழாவாகும். இந்நந்நாளில் இறைவனுக்கு விசேட அபிஷேக ஆராதனைகளும் ஸ்ரீபலியும் நடைபெறுவது வழக்கம். அன்று விரதமிருந்து இங்குள்ள இறைவனைக் குறிப்பிட்ட பிரதோஷ காலத்தில் வந்து வழிபட்டால் நினைத்த காரியம் கைகூடுவதாக கருதப்படுகிறது. மேலும் பிரதோஷ தினத்தன்று பிரதோஷ காலத்தில் இறைவனை வழிபட்டால் மாதக்கணக்கில் தினந்தோறும் ஈசனை வழிப்படுவதற்கு சமம் என்று பெரியோர்கள் கூறுவர். இனி பிரதோஷம் என்றால் என்ன என்பது பற்றி புராணத்தில் கூறப்பட்டுள்ளதையும், ஸ்தாணுமாலயன் பக்தர்கள் சங்கத்தினர்களும் சிவநேச தொண்டர்களும், ஆன்மீக அன்பர்களும் அந்தவிழாவை சிறப்பாகக் கொண்டாடிவருவது பற்றியும் பின்னால் தெரிவித்துள்ளோம்..

முன்னொரு காலத்தில் சாகா வரம்பெறுவதற்காக, அசுரர்களும். தேவர்களும் அமிர்தத்தைப் பெறுவதற்கு

திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். மந்தரை பர்வதத்தை மத்தாகவும், வாசுகிப் பாம்பைக் கயிறாகவும் மாற்றி பாம்பின் தலைப்பக்கம் அசுரர்களும், வால் பக்கம் தேவர்களுமாக நின்று கடைந்தார்கள். கடையும்போது அதிலிருந்து லெஷ்மி தேவி, ஐராவதம், காமதேனு, கல்பக விருட்ஷம், உச்சை சிரவஸ் (குதிரை) போன்றவை திருப்பாற்கடலில் இருந்து பொங்கி வந்தது. ஒவ்வொன்றையும் தேவர்கள் எடுத்தனர்.

கடைந்து கொண்டிருக்கும் போதே வாசுகியாகியப் பாம்பு வலி தாங்காமல் நஞ்சை உமிழ்ந்தது. இந்த விஷம் உலகையே அழிக்கும் கொடிய விஷமானதால் உலகைக் காக்கும் பொருட்டு சிவபெருமான் நஞ்சையெடுத்து விழுங்கிவிட்டார். இச்செயலை கண்ட பார்வதிதேவி கைகளால் சிவபெருமானின் கண்டத்தைப் (கழுத்தை) பற்றி நஞ்சு கீழே இறங்காதவாறு பிடித்துக்கொண்டாள் நஞ்சானது கண்டத்தோடு நின்று நீல நிறமாக காட்சியளித்தது. இதனால் சிவபெருமானுக்குத் **திருநீலகண்டன்** என்ற சிறப்பு பெயரும் உண்டாயிற்று.

ஏகாதசி முழுவதும் பாற்கடலைக் கடைந்து மறுநாள் துவாதசியன்று அமிர்தம் வெளிவந்தது. இதனைக் கண்ட தேவர் களும், அசுரர்களும், ஆனந்தமடைந்தனர். ஒருவருக்கொருவர் முண்டியடித்துக் கொண்டு சண்டையிட ஆரம்பித்து விட்டனர். நிலமை விபரீதமாகி அமிர்தமும் வீணாகி விடக்கூடாதே என நினைத்த மகாவிஷ்ணு மோகினியாக அவதாரமெடுத்து தந்திரமாகச் செயல்பட்டுத் தேவர்களுக்கு அமிர்தம் கிடைக்கச் செய்தார். அமிர்தத்தை உண்ட தேவர்கள். உலகையே காத்து ரட்சித்து ஆலகால விஷத்தைத் தன் கண்டத்திலே தேக்கிவைத்த திருநீலகண்டனை மறந்து விட்டனர். பின்னால் இதை உணர்ந்த தேவர்கள் மனம்வருந்தி அனைவரும் "கயிலை" வந்து சிவ பெருமானைப் போற்றி வணங்கினார்கள்.

எல்லாம் வல்ல இறைவனாகிய சிவபெருமான் உலக சக்தி அனைத்தையும் தன்னுள் அடக்கி ஆனந்தக் களிப்போடு பதஞ்சலி பதம்பாட வியாக்ரபாதர் தாளமிட, கோகுல கிருஷ்ணன் கானக்

குழலூத, நந்தி மத்தளம் கொட்ட, நாரதர் வீணை மீட்ட, அன்னை உமையாள் உடனாட, ஆனந்த திருநடனம் ஆடு கின்றார் நடராஜராக இத்திருநடனத்தைக் கண்டு உலகின் அனைத்து ஜீவராசிகளும் இதில் மயங்கி ஓங்கார நாதத்தில் லயித்து விடுகின்றன. பூத பிரேத பிசாசுகள் கூட திருநடன தரிசனம் கண்டு யாருக்கும் தீங்குசெய்ய மனமில்லாமல் சக்தியற்றுவிடுகிறது. அந்தக் குறிப்பிட்ட தினமே பிரதோஷ நாளாக மாதமிருமுறை கொண்டாடப்பெற்று வருகிறது.

சூரிய அஸ்தமனத்திற்கு முன் அதாவது 4.30 முதல் 6 வரை கொண்ட சாயுங்கால நேரமே பிரதோஷ காலமாகும். இந்த நேரத்தில் பிரதோஷ தரிசனத்தைக் காண்பது மிகவும் சிறப்பு. இந்நாளில் இவ்வேளையில் சிவாலயம் சென்று, வில்வ மாலை, வெள்ளெருக்கம்பூ, தும்பைப்பூ மற்றும் பால், நெய் போன்ற அபிஷேகப் பொருட்கள், நல்லெண்ணை, நிவேத்திய சாமான்கள் இவற்றில் ஏதாவது கொண்டுசென்று வழிபடுவது உத்தமம்.

***சனிப் பிரதோஷத்தின் மகிமை :-*** சிவபெருமான் உலக உயிர்கள் அனைத்தும் வாழவும், துன்பம் இல்லாமல் இருக்கவும், ஆலகால விஷத்தை உண்டநாள் சனிக்கிழமை ஆகையால் சனிப்பிரதோஷம் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

## மன்னர்கள் மனம் கவர்ந்த நாஞ்சில் நாடு

நாஞ்சில் நாடு தென் திருவிதாங்கூரின் ஒரு சிறுபகுதி. பண்டைநாளில் சேர, சோழ, பாண்டியரும் மற்றும் விஜயநகர அரசர்களும் நாயக்க மன்னர்களும் நிரந்தரமாகப் போராடுவதற்கு இவ்வளநாடு இடமாயிருந்தது. தெற்கும் மேற்கும் குமரிக் கடலையும் வடக்கும் கிழக்கும் பொதிகை மாமலையின் கிளைகளையும் எல்லையாகப் பெற்றிருந்த நாடு. நீர்வளம் செறிந்த செழிப்பான இப்பகுதி பண்டைய மன்னர்களை ஈர்த்திழுக்கும் காந்தம் போல் விளங்கியது.

நாஞ்சில் நாடு அகஸ்தீசுவரம், தோவாளை வட்டங்களை உள்ளடக்கிய பகுதியாகும்.

நஞ்சை நெற்கதிரின் விளைநிலம் மிகுந்து காணப்படும் இந்த நாஞ்சில்நாட்டை, **"தஞ்சையின் இரண்டாவது நெற்களஞ்சியம்"** எனப் புகழ்ந்து கூறுவதுண்டு. பஃறுளியாறு என்று புற நானூறு சிறப்பிக்கும் பேராறு நாஞ்சில் நாட்டில் வடமேரு மலையில் உற்பத்தியாகி தென் எல்லையான குமரிக்கடலில் சங்கமிக்கும் பேரழகைக் காணமுடிகிறது. பேரழகு பேராபத்தில் முடியும் என்பதைப்போல பசுமை நிறைந்த இப்பகுதி பாராண்ட மன்னர்களையும் போராட வைத்தது. இதன் பொருட்டு இன்பமும், துன்பமும் மாறி, மாறி நிகழ்ந்து பலமுறை பாதிப்புக்குள்ளாக்கியதை மன்னர்களின் வரலாறுகளின் வாயிலாக அறியமுடிகிறது. சுசீந்திரம் திருக்கோயிலில் சிதைக்கப்பட்ட சிற்பங்கள், எரிக்கப்பட்ட மிகப் பிரமாண்டமான திருத்தேர் மன்னர்களின் படையெடுப்பால் பாதிக்கப்பட்டதைத் திருக்கோயில் வரலாறு விளக்குகிறது. பெருமைபெற்ற நாஞ்சில்நாட்டில் பிறந்த கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை அவர்கள் நாஞ்சில் நாட்டின் மேன்மையைச் செந்தமிழ் பாட்டில் மலர்ந்த மாலையாக வர்ணிக்கும் அழகை காண்போம் :

*1)* பூமகளின் முக மாகும் நாடு - சேரர்
பொன்முடி சூடிப் புரக்கும் நாடு.
பாண்டியர் வந்தணை செய்த நாடு - சோழர்
பண்டு முடி தரித்தாண்ட நாடு ·

*2)* வேண்டு பொருள்கள் விளையும் நாடு - சோலை
வேலியாய்ச் சூழ்ந்தணி செய்யும் நாடு
ஆயிரங்காலால் நடந்து நடந்தமுது
அன்னை பழையா றளிக்கும் நாடு:

3) தீய்வு கரிவறியாத நாடு - நித்தம்
செல்வம் பொழியும் திருநாடு
மாமதில் போல் மலை சூழும் நாடு - வானம்
மாதமும் மாரி பொழியும் நாடு ;

4) க்ஷேமமாகப் பயிர் செய்திடவே - ஈசன்
சேவடி போற்றிப் பணிந்துழவர்
பூமி பரிதமாம் நாளிலே ஆயிரம்
பொன்னேர்கள் பூட்டி உழும் நாடு.

5) பண்ணை பெருத்த பழநாடு - சுற்றிப்
பார்த்திடக் கண்கள் குளிரும் நாடு ;
மண்ணையும் பொன்னாக மாற்றும் நாடு - கவி
வாணர் புகழும் தமிழ்நாடு.

6) செந்நெற் பயிர் அலை மோதும் நாடு - வாழை
தென்னை கமுகு செழிக்கும நாடு
மன்னிய முல்லை மருக்கொழுந்தின் - நல்ல
வாசம் எழுந்து கமழும் நாடு.

7) தேவர் திருக்கோயில் ஓங்கும் நாடு - மேழிச்
செல்வர் பதிகள் சிறக்கும் நாடு;
மூவர் தமிழும் முழங்கும் நாடு - திரை
முத்தினை வீசிக் கொழிக்கும் நாடு.

8) தென்றல் உலவித் திரியும் நாடு - உடற்
சீக்கெல்லாம் ஒட்டித் துரத்திடும் நாடு
என்றும் தழைத்தறம் ஏறும் நாடு - வையத்து
ஏதும் இணையிலா நாஞ்சில் நாடே.

## நட்சத்திர நாட்கள் பூஜை விவரம்

தமிழ் மாதந்தோறும் அசுவதி, கார்த்திகை, புனர்பூசம், திருவோணம், அவிட்டம் ஆகிய நட்சத்திர நாட்களிலும் மார்கழி முப்பது நாட்களின் போதும் அதிகாலை சுமார் 5.30 மணிக்கு **"திருப்பள்ளி எழுச்சி"** என அழைக்கப்படும் சிறப்புப் பூஜைகளோடு கூடிய ஆராதனை முக்கியத்துவம் வாய்ந்ததாக நடைபெற்று வருகிறது. இவ்வேளையில் பக்த பெருமக்கள் திரளாக வந்து தரிசித்து செல்வது புண்ணியம் வாய்ந்ததாகும்.

***திருமஞ்சன சிறப்புப் பூஜை :-*** தாணுமாலய மூர்த்தி கருவறையில் வீற்றிருக்கும் அம்மன் விக்கிரகத்திற்கு, உச்சிக்கால பூஜை தீபஆராதனை முடிந்து நந்தி மண்டபத்தின் இடதுபுறம் வைத்து மேல்சாந்தி நம்பூதிரிகளால் பூஜை செய்விக்கப்படுகிறது. பூஜை முடிந்து உச்சிக்கால ஸ்ரீபலி நடை பெறுகிறது.

***திருமஞ்சன பூஜை நட்சத்திர நாட்கள் :*** அசுவதி, பரணி, சுவாதி, பூராடம், கார்த்திகை மிருகசீர்ஷம், திருவாதிரை, பூசம், மகம், பூரம் விசாகம், அனுஷம், உத்திராடம், அவிட்டம், பூரட்டாதி போன்ற பதினைந்து நட்சத்திர நாட்களில் இப்பூஜை நடைபெற்று வருகிறது. திருக்கோயில் மேல்சாந்திகளால் இப்பூஜை செய்விக்கப்படுகிறது.

***மகாவிஷ்ணு சன்னதி சிறப்புப் பூஜை :-*** திருவேங்கிட விண்ணவரம் பெருமாள் சன்னதியில் மகாவிஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவி மூவரையும் இக்கருவறையின் முன்புள்ள மண்டபத்தில் எழுந்தருளச் செய்து அபிஷேகம் மற்றும் சிறப்புப் பூஜைகள் ரோகினி, மிருக சீர்ஷம், திருவோணம், அவிட்டம், பூரட்டாதி போன்ற நட்சத்திர நாட்களில் நடைபெறுகிறது. மேல்சாந்தி நம்பூதிரிகள் இப்பூஜையைச் செய்கின்றார்.

***விசேட ஸ்ரீபலி :-*** பிரதோஷ விழா போன்று மாதந்தோறும் திருவாதிரைத் திருவோணம் போன்ற நட்சத்திர நாட்களில் மாலை 5 மணிக்கு வெள்ளி ரிஷப வாகனத்திலும் கருட வாகனத்திலும் சிவன், விஷ்ணு ஸ்ரீபலி விக்கிரகங்களை எழுந்தருளச் செயது பெரிய பிரகாரங்களில் மூன்றுமுறை வலம் வரும் விசேட ஸ்ரீபலியாகும். நூற்றாண்டுகள் காலமாக நடைபெற்று வந்த இவ்விசேட ஸ்ரீபலி, சுமார் 10ஆண்டு காலமாக நடைபெறாமல் உள்ளது. இந்நாளில் உச்சிக்கால ஸ்ரீபலி நடைபெறுவதில்லை.

**மாணிக்க ஸ்ரீபலி :** ஆடி அமாவாசை மாசி சிவராத்திரி கார்த்திகை மாதம் முப்பது நாட்களிலும் நடந்து வருகின்ற ஸ்ரீபலி தற்போது மிக நல்லமுறையில் ஆன்மீக மக்களின் பேராதரவோடு நடைபெற்று வருகிறது. கார்த்திகை மாத முப்பது நாட்களிலும் வெள்ளி ரிஷபம் மற்றும் கருட வாகனங்களைப் பூமாலை தோரணத்தால் அலங்கரித்து அதில் ஸ்ரீபலி விக்கிரகங்களை எழுந்தருளச் செய்து, சுற்றுப்பிரகார மண்டபங்களில் உள்ள பாவை விளக்குகளில் தீபவொளியேற்றிப் பிரதோஷ ஸ்ரீபலி போன்று (இது தனியாக இடம் பெற்றுள்ளது) முப்பது நாட்களிலும் அனைத்துச் செலவினையும் ஆன்மீக அன்பர்கள் ஏற்று திறம்பட தற்போது நடத்தி வருகின்றனர். தெய்வாம்சம் பொருந்திய தரிசனம் காண ஆன்மீக மக்கள் திரண்டு வருகின்ற காட்சியை வேறு திருக்கோயில்களில் காணமுடியாது. இந்த முப்பது நாள் விழா சுசீந்திரம் திருக்கோயிலின் பெருமையை மேலும் நிலை நாட்டுவது போன்று பக்த பொதுமக்களைக் கவர்ந்திழுக்கிறது.

**ஆண்டிற்கு இரு அற்புத ஸ்ரீபலி :** மலையாளத்தில் மகர மாதமாகப் போற்றப்படும் தை மாத முதல்நாள் மாலை 5 மணியளவில் "**மகரஸ்ரீபலி**"யும், கற்கடக மாதமான ஆடிமாத முதல் நாள் மேற்கண்ட நேரத்தில் "**கற்கடக ஸ்ரீபலி**"யும் மிக விமரிசையாக நூற்றாண்டு காலமாக நடைபெற்று வந்தது. 1975க்கு பிறகு நெய்வேத்திய சோறு குறைவு செய்யப்பட்டதின் விளைவாக கீழ்சாந்தி எனப்படும் கன்னட "துளு போற்றிமார்கள்" படிப்படியாக குறைவு செய்யப்பட்டதின் காரணமாக ஸ்ரீபலி வாகனங்களைச் சுமந்து செல்ல போதிய ஆட்கள் இல்லாத நிலையில் மேற்காணும் ஸ்ரீபலிகளும் மற்றும் திருவாதிரை, திருவோண ஸ்ரீபலிகளும் நின்றுவிட்டதாக அறியமுடிகிறது. மேலும் தற்போது தொய்வின்றி நடந்துவரும் பிரதோஷ ஸ்ரீபலி, கார்த்திகை மாத முப்பது நாள் மாணிக்க ஸ்ரீபலி போன்றவைகளுக்கு வாகனம் சுமந்து செல்ல அதிகமான கூலி கொடுத்து வெளியாட்களை வைத்து ஸ்ரீபலிகள் நடத்தப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. மேற்கொண்டு தற்போது இவ்விழாக்களை மிகச் சிறப்பாக நடத்தி வரும் ஆன்மீக மக்களான கட்டளைதாரர்கள் ஆலய நிருவாகத்திற்கு துணையாக இருந்து வாகனச் சுமைக்கூலி கூடுதலாக கொடுத்து உதவி வருவதையும் காணமுடிகிறது.

இத்திருக்கோயிலில் பலவிதமான காரணங்களால் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள விழாக்களை முழுமையாக செயல்படுத்த இயலா விட்டாலும், நடந்து வரும் பதிவு விழாக்களைச் சிறப்பாக நடத்தவும், தினமும் திருக்கோயிலில் முற்காலத்தைப் போன்று **"தீப விளக்குகள்"** இறைவனைச் சுற்றியுள்ள பிரகார மண்டபங்களில் ஏற்றி, நின்று போன கற்கடக ஸ்ரீபலி, மகர ஸ்ரீபலி போன்றவைகளை நடத்திட முன்வந்துள்ள சுசீந்திரம் "தாணு அடியார்" வழிபாட்டு சேவா சங்க அறக்கட்டளையினரை மீண்டும் மீண்டும் பாராட்டாமல் இருக்கமுடியாது. திருக்கோயில் பெருமையை நிலைநாட்ட ஆன்மீக அன்பர்கள் கொடுத்திடும் பொருளுதவி தன்னலம் கருதா இறைப்பணிக்கு, இறையருளும் உள்ளதை உணர வைக்கிறது. திருத்தொண்டர்களோடு திருக்கோயில் நிர்வாகமும் துணைநின்று ஆலயத்திற்குப் பெருமை சேர்ப்பது போற்றுதலுக்குரியதாகும்.

***முற்கால பிரதோஷ விழா காட்சி***





தற்போதைய பிரதோஷ காட்சி



பிரதோஷத்தின்போது பக்த பெருமக்கள் கலந்து சிறப்பிக்கும் காட்சி

## பன்னிரண்டு ஊர் (படாகை) மக்கள் பங்கு

சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன் தமிழ் கூறும் நல்லுலகத்தின் பகுதியாக நாஞ்சில் நாடு விளங்கிற்று. நாஞ்சில் மலையைத் தன்னகத்தே கொண்ட நாடு நாஞ்சில் நாடு எனவும் இங்கு வீரத்தில் சிறந்த நாஞ்சில் வள்ளுவன், நாஞ்சில் பொருநன் என்பவர்கள் சங்க காலத்தில் ஆட்சி செய்த விவரங்களையும் புறநானூற்று நூலில் 137, 138, 139, 380 ஆகிய செய்யுட்களில் அறியமுடிகிறது. சேரர்கள் இந்நாட்டை வென்று அடிமைப்படுத்தியதாகத் தொல்காப்பிய நூல், பதிற்றுப்பத்து, புறநானூறு போன்ற நூல்கள் மேலும் பல விவரங்களை தெரிவிக்கின்றது.

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் விஜய நகரப் பேரரசு பிரதிநிதிகள் **விட்டலராயர், நாயக்க சேனாதிபதி ராமப்பையன்** போன்றவர்கள் (கி.பி.1635) நாஞ்சில் நாட்டின் மீது அடிக்கடி போர்தொடுத்து பாதிப்புக்குள்ளாக்கினர். இவ்வாறு தமிழ் ஆண்டு 849 முதல் 869 வரை போர்கள் பல நடந்துள்ளன. கி.பி. 1740இல் சந்தா சாகிப் படையெடுத்து நாஞ்சில் நாட்டில் பல இன்னல்களை ஏற்படுத்திய போதிலும் முடிவில் திருவிதாங்கூர் மன்னரோடு நட்புறவு பூண்டு நாஞ்சில் நாட்டை காப்பதற்காக அவர் துணை நின்றதையும் மறக்கமுடியாது. அதன்பிறகு போர் அபாயங்களும் முடிவுற்று அமைதிபெற்றதை **Travancore State - Manual** மற்றும் காலஞ்சென்ற திரு. வையாபுரிபிள்ளை அவர்களின் அணிந்துரையோடு கூடிய நூல்கள் ஆகியவை விளக்குகின்றன.

படாகை என்பது ஒரு நாட்டின் சிறு உட்பிரிவு. முற்காலத்தில் நாஞ்சில்நாடு பன்னிரண்டு படாகை அல்லது பிரிவுகளாக வகுக்கப் பட்டிருந்தது. இப்பிரிவின் வேளாண் மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து சுசீந்திரம் ஸ்தாணுமால சுவாமி திருக்கோயிலின் சகலவித சடங்குகளிலும் மற்றும் திருவிழா காலங்களிலும் தவறாது கலந்து சிறப்பித்திட ஓர் அமைப்பு ஏற்படுத்தி இதற்கு ஊர்சபை என்றும் திருக்கோயில் நிருவாகத்தைக் கவனிக்க யோகஸ்தானிகர்கள் அடங்கிய மூலபருட சபை என்றும் பெயரிட்டு விளங்கியதாக சோழ மன்னர்கள் ஆட்சிகால 10ஆம் நூற்றாண்டு மற்றும் 13ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. மேலும் **முதற் பராந்தகன்,**

கேரளாந்தகன் என்ற விருதுபெற்ற முதலாம் ராஜராஜன், வீரசோழியம் இயற்றுவித்த வீர ராஜேந்திரச் சோழன் கி.பி. (1062) முதற் குலோத்துங்கன் (கி.பி. 1070-1118) இரண்டாம் குலோத்துங்கன் மூன்றாம் ராஜராஜன் போன்ற மன்னர்களின் ஆட்சிப் பொறுப்பில் இருந்த தருணத்தில் பன்னிரண்டு படாகை வேளாண் சமுதாய மக்கள் பிரமுகர்களைக் கொண்ட மக்கள் சபை ஏற்படுத்தியதையும் கல்வெட்டு குறிப்புகள் தெரிவிக்கின்றன.

<u>பன்னிரண்டு படாகை விவரம்</u> :-

1) மேல் படாகை
2) நடுவுப் படாகை
3) அழகியபாண்டிபுரம் படாகை
4) அனந்தபுரம் (கடுக்கரை) படாகை
5) தாழக்குடி படாகை
6) படப்பற்று படாகை
7) கோட்டாறு படாகை
8) பறக்கைப் படாகை
9) தேரூர்ப் படாகை
10) அகஸ்தீஸ்வரம் படாகை
11) காக்கமூர் படாகை
12) சுசீந்திரம் படாகை

நாஞ்சில் நாட்டார், தமிழ்நாடு ஏனைப் பகுதியாரைப் போலவே சமுதாயமாக, கிராமம் கிராமமாகக் கட்டுப்பாட்டோடு வாழ்ந்து வந்தார்கள். அன்று நாஞ்சில் நாடு தென்மீதி, வடமீதி என பன்னிரண்டு பிரிவு ஊர்மக்கள் அரசரின் ஆணைக்குட்பட்டு வாழ்ந்து வந்ததோடு தங்களைக் தாங்களே கட்டுப்பாட்டுடனும் ஆண்டுவந்தார்கள். இவர்களின் கூட்டம் நாட்டுக் கூட்டம் எனப்படும் நாட்டுஸ்தானம் என்ற சிறப்புரிமை அரசரால் ஒப்புக்கொள்ளப்பட்டவையாகும். இந்த ஒற்றுமையினாலும் கட்டுப்பாட்டினாலும் அரசாண்ட மன்னர்களையும் எதிர்த்து 'வரிகொடா இயக்கம்' சுசீந்திரம் ஆஸ்ராமம், தெரிசனங்கோப்பு, பூதப்பாண்டி போன்ற ஊர்களில் நடைபெற்றதையும், கொல்லம் தமிழ் வருடம் 448 முதல் 870 வரை சுமார் 450 ஆண்டுகள் நாஞ்சில் நாட்டு படாகை (ஊர்) மக்கள் செல்வாக்கோடுத் திகழ்ந்ததையும் 1949இல்

வெளியான சேரநாடும் செந்தமிழும்' என்ற நூலை எழுதிய வித்வான் திரு. செ. சதாசிவன்பிள்ளை அவர்கள் முற்கால நூல்கள் பலவற்றை ஆராய்ந்து தெளிவுபட விளக்கியுள்ளார். தற்போதும் இத்திருக்கோயிலில் நடைபெறுகின்ற முக்கிய விழாக்களில் வேளாண் சமுதாய 'படாகை மக்களின்' பிரமுகர்களைத் திருக்கோயில் நிர்வாகம் இன்றுவரை கௌரவித்து சிறப்பித்து வருவது பாராட்டுதலுக்கு உரியதாகும்.

## சரித்திர முக்கியத்துவம் பெற்ற ஆலயப் பிரவேசனம்

மன்னராட்சியின் போது ஆலயங்களின் சுற்று வட்டாரத்தில் வாழ்ந்த தாழ்த்தப்பட்ட மக்கள் ரதவீதிகளிலும், கோயிலுக்குள்ளும் வரமுடியாத அளவில் கோயில் எல்லைகளில் **'தெரு மறைச்சான்'** என்ற தடுப்பு வேலி அமைக்கப்பட்டு **கோயில் சங்கேதம்** (ஏரியா) என அழைக்கப்பட்டுக் வந்தது. தீண்டத்தகாதவர்கள் எனக் கருதப்பட்டு வந்த தாழ்த்தப்பட்ட மக்கள் ஊர் இரத வீதிகளிலும் மற்றும் ஆலயத்திலும் வந்து தரிசனம் செய்ய அனுமதிக்க வேண்டி, பல போராட்டங்கள் **ஸ்ரீ மூலம் திருநாள் மன்னர்** காலத்திலிருந்தே அவ்வப்போது நடைபெற்றுக் கொண்டிருந்தது.

1924 ஆடி 23ஆம் நாள் ஸ்ரீமூலம் திருநாள் மன்னர் காலமானதும் 12வயது நிரம்பப் பெற்ற **ஸ்ரீசித்திரைத் திருநாள் பாலராமவர்மா** சிறுவனாக இருந்த காரணத்தினால் தாயார் **சேதுலட்சுமிபாய்** ரீஜன்று ஆட்சியை மேற்கொண்டார். தென்திருவிதாங்கூர் கோயில்களில் இவர் தேவதாசி சம்பிரதாய முறையை நிறுத்தினார் தேவி கோயில்களில் மிருகபலியை தடைசெய்து ஆட்சியில் மருமக்கள் சம்பிரதாயத்தை மாற்றி மக்கள் வழிமுறையைக் கொண்டு வந்தார்.

1925இல் **அண்ணல் காந்தியடிகள்** திருவிதாங்கூர் சமஸ்தானத்திற்கு வருகை தந்தபோது **'ஆலயப் பிரவேசனம்'** சம்பந்தப்பட்ட கிளர்ச்சிகளைக் கேள்வியுற்று மிகவும் வேதனையடைந்தார் தாழ்த்தப்பட்ட மக்களைக் தீண்டத்

தகாதவர்களென ஒதுக்கி வைத்துள்ளது மட்டுமல்லாமல் எல்லா பேர்களுக்கும் பொதுவான இறைவனை ஆலயத்தில் சென்று வழிபடுவதற்குத் தாழ்த்தப்பட்டோருக்கு அனுமதி இல்லை என்ற தடை என்று நீங்குமோ அன்று தான் நானும் ஆலயத்தினுள் நுழைவேன், எனச் சபதம் மேற்கொண்டு திரும்பிச் சென்றுவிட்டார் அண்ணல் காந்தியடிகள்.

தமிழ் ஆண்டு 1107ஐப்பசி 20-ம் நாள் (ஆங் : 1931)இல் ரீஜன்று ஆட்சியினைத் திருமதி சேதுலட்சுமிபாய் முடித்து தனது மைந்தரான ஸ்ரீசித்திரைத் திருநாள் பாலராமவர்மாவை 19ஆவது வயதில் திருவிதாங்கூர் மன்னராகப் பதவி ஏற்க வைத்தார். கேரள நாட்டில் 'வைக்கம்' திருநகரில் தந்தை திரு. ஈ.வே.ரா. பெரியார் அவர்கள் தலைமையிலும், குருவாயூரில் திரு.கேளப்பன் அவர்கள் தலைமையிலும், சுசீந்திரத்தில் இடலாக்குடி டாக்டர் M.E. நாயுடு, இரவிபுதூர் திரு. காந்திராமன் பிள்ளை மற்றும் விடுதலை வீரர் பூதப்பாண்டி திரு.ப. ஜீவானந்தம் போன்றவர்கள் தலைமையிலும் போராட்டம் உச்சக் கட்டநிலையை அடைந்தது.

திருவிதாங்கூர் சமஸ்தான மன்னராகப் பொறுப்பேற்ற ஸ்ரீசித்திரை திருநாள் பாலராமவர்மா அவர்கள் இப்போராட்ட நிலைமைகளை உணர்ந்து பிரதான ஆலயங்களின் தந்திரிகள், போராட்டத்தலைவர்கள், சம்பந்தபட்ட ஊர்ப்பிரமுகர்கள் போன்றவர் களுக்கு அழைப்புவிடுத்து கருத்தாய்வு நடத்தியதில் உயர்சாதியினரின் எதிர்ப்பும், ஆதரவும் எழுந்தன. கருத்தாய்வுக் கூட்டத்திற்குச் சென்ற குமரிமாவட்ட பிரமுகர்களில் ஒருவரான அன்றைய திருக்கோயி லுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகரும், திருவிதாங்கூர் சமஸ்தான மன்னரிடம் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவரும் திவான் திரு. சர்.சி.பி. இராமசுவாமி அய்யரின் நண்பருமான பிரம்ம ஸ்ரீ பி.பரமேஸ்வர சர்மா அவர்கள் 'ஆலய பிரவேசனம் கொடுப்பது நல்லது இல்லையேல் அவர்கள் அதை எடுத்துக் கொள்வார்கள்' என்ற தமது ஆதரவு கருத்தினையும் கூட்டத்தின் வாயிலாக மன்னரிடம் தெரிவித்தார். மறுமுனையில் எதிர்ப்புகள் அதிகமாக தென்பட்டபோதிலும் திடமான மனத்துடன்

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு 1936 நவம்பர் 12ஆம் தியதி **'ஆலய பிரவேசன பிரகடனத்தை'** அரசு விளம்பரமாக பத்திரிகைகளின் வாயிலாக வெளியிட்டதோடு அனைத்துத் துறைகளுக்கும் உடனடி உத்தரவினையும் பிறப்பித்தார் ஸ்ரீசித்திரை மன்னர்.

ஸ்ரீசித்திரை மன்னரின் பிரகடனத்தை நாடும் ஏடும் போற்றியதோடு உலகமே பாராட்டி புகழ்ந்தது. உலகநாடுகள் பலவும் அழைப்பு விடுத்து அந்தந்த நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டு கௌரவிக்கப்பட்டுப் பாராட்டும் பரிசும் பெற்று தாயகம் திரும்பினார். அவர் கொண்டு வந்த பரிசுப் பொருட்கள் அனைத்தையும் திருவனந்தபுரம் அருங்காட்சியகத்திற்கு வழங்கியதோடு **'ஜாவா'** நாட்டு மக்கள் வழங்கிய பரிசுப்பொருளான அலங்கார வேலைப்பாடுகள் மிக்க **'சிம்மாசனம்'** ஒன்றைத் திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் முதல் கோயிலாக விளங்கிய சுசீந்திரம் ஸ்தாணுமாலய சுவாமி கோயில் இறைவன் அமர்ந்து காட்சி தரும் பொருட்டு 1937இல் அந்த சிம்மாசனத்தை இத்திருக்கோயிலுக்கு வழங்கினார் ஸ்ரீசித்திரைத் திருநாள் பாலராமவர்மா அவர்கள்.

ஆம்! அறிந்த ஆலயத்தில் அறியாத பொக்கிஷமாம் அற்புத அரியாசனத்தை' புடைப்புச் சிற்பங்கள் நிறைந்து காணப்படும் கலையம்சம் நிரம்பப்பெற்ற செண்பகராமன் மண்டபத்தின் நடுவே ஆலயத்தில் அன்றாடம் நடைபெறும் அத்தாழ ஸ்ரீபலி முடித்து இரவில் ஸ்தாணுநாதர் ஸ்ரீபலி விக்ரகத்தை அரியாசனத்தில் வைத்து இசைக்கலைஞர்கள் மூன்று முறை வலம் வந்து சிறப்பிக்கும் அற்புத தரிசனத்தை இன்றும் இங்கு காணமுடிகிறது.

மேலும் இம்மண்டபத்தில் சித்திரை. மார்கழி 7ஆம் திருவிழாவின்போது மாலை 4.30க்கு நடைபெறும் நடராஜர் அபிஷேகமும் திருச்சாந்து சாத்து வைபவமும் இம்மண்டபத்தில் நிகழ்வது குறிப்பிடத்தக்க அம்சமாகும். இந்த அபிஷேகத்தைத் திருக்கோயிலுடைய ஸ்தானிகரே செய்து வருகின்றார்.

# சுசீந்திரம் தேரோட்டமும் சுதந்திரப் போராட்டமும்

இந்திய நாடு சுதந்திரம் அடைவதற்காக 1947க்கு முன்பு பலவித போராட்டங்களும், மறியல் கிளர்ச்சிகளும் ஆங்காங்கே எழத்தொடங்கியது. சுதந்திர வேட்கை மக்கள் மத்தியில் தணியாத தாகத்தை ஏற்படுத்தியது. இதனால் தலைவர்கள் ஆயிரக்கணக்கில் கைது செய்யப்பட்டு சிறைச்சாலைகளில் அடைபட்டு வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்த்து போராட ஆரம்பித்தனர். சுதந்திர வேட்கைத் தீயினை அணைக்க முடியாத நிலையில் வெள்ளையர் அரசாங்கம் திணற ஆரம்பித்தது.

இத்தகையப் போராட்டங்களுக்குக் குமரி மாவட்டமும் சளைத்ததல்ல என்பதனை நிரூபிக்கும் பொருட்டு இங்கும் விடுதலைப் போராட்ட இயக்கம் வீறு கொண்டெழுந்தது. 1946 சுசீந்திரம் மார்கழி பெருந்திருவிழாவான தேரோட்ட நாளில் இலட்சக்கணக்கான மக்கள் கூடிடும் அன்னாளில் இங்கு வருகை தந்த மக்கள் மத்தியிலும் விடுதலைப் போராட்ட வீரர்கள் பற்றவைத்த சுதந்திர வேட்கை எனும் நெருப்பு புகையத் தொடங்கியது.

மிகப்பெரிய தேரான சுவாமித்தேர் நிலையிலிருந்து புறப்பட்டு கீழரதவீதி திருப்புமுனையில் வந்து சேர்ந்தபோது கூட்டத்தோடு வந்திருந்த சுதந்திரப் போராட்ட வீரர்கள் ராட்டை சின்னம் பொறித்த மூவர்ண நிறம் கொண்ட காங்கிரஸ் கொடிகளைக் கைகளில் ஏந்தி சுதந்திர வேட்கையை வெள்ளையர் அரசாங்கத்திற்கு உணர்த்திடும் பொருட்டு மறியல் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். சுதந்திரத் தாகம் கொண்ட இளைஞர் சமுதாயமும் போராட்டத்தில் குதித்தது. ஆன்மீகமும், நாட்டு விடுதலை இயக்கமும் மோதுகின்ற நிலை உருவாகியது. இதனால் தேரோட்டம் தடைபட்டது.

நிலைமையை உணர்ந்த காவல்துறையும் அதிரடி நடவடிக்கைகளை மேற்கொண்டு செயல்பட ஆரம்பித்தது விடுதலை வீரர்கள் பலர் கைது செய்யப்பட்டனர். இதனிடையே போராட்ட

வீரர்களில் இருவர் தேரின் மீது ஏறி கும்பத்தில் வைத்திருந்த கொடியை அகற்றிக் காங்கிரஸ் கொடியை அதில் கட்டி பறக்கவிட்டனர். நிலைமை இன்னும் மோசமடைய ஆரம்பித்தது. முடிவில் காவல் துறையோடு இராணுவமும் சேர்ந்து 'துப்பாக்கிச் சூடு' நடைபெறும் அளவிற்கு உச்ச நிலை கொண்டது. துப்பாக்கிப் பிரயோகத்தால் போராட்ட வீரர்களோடு திருவிழா காண வந்த அப்பாவி மக்களும் அதிகம் பேர் பலியாயினர். ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டு மக்கள் நடமாட முடியாத நிலையில் சுசீந்திரம் முழுவதும் இராணுவத்தின் கட்டுப்பாட்டில் வந்தது. இதனிடையே தேரின் கும்பத்தில் கட்டப் பட்டிருந்த காங்கிரஸ் கொடியும் உடன் தானே அகற்றப்பட்டது. (1947ஆகஸ்ட் 15ஆம் நாள் சுதந்திரத்தன்று அசோகர் சின்னம் பொறித்த மூவர்ண தேசீயக்கொடி பட்டொளி வீசிப் பறந்தது நினைவுக்கொள்ளதக்கது). இலட்சக்கணக்கான மக்கள் நடமாடிய தெருக்களில் ஆங்காங்கே மனிதப்பிணங்களை லாரிகளில் ஏற்றி அப்புறப்படுத்தும் பணிகள் நடந்து கொண்டிருந்தன. இதில் உள்ளூர் மக்களை விட வெளியூர் மக்களே மிகவும் பாதிக்கப்பட்டனர். அன்று தேரோட்டமும் நடைபெறவில்லை. அதிகாலை பூசை முடித்து அடைக்கப்பட்ட திருக்கோயில்வாயில் மறுநாள் தேரோட்டம் முடிந்த பின்பே மீண்டும் திறக்கப்பட்டது. திருக்கோயில்நடை ஒருநாள் முழுவதும் அடைக்கப்பட்டிருந்தது இங்கு நிகழ்ந்த இரண்டாவது சம்பவமாகும்.

குமரி மாவட்டத்தில் மிகப்பெரிய கோவிலும் இங்கு நடை பெறும் மார்கழித் திருவிழா தேரோட்டமும் மிகப்பெரிய விழாவாகும். குறிப்பாக தென் இந்தியக் கோவில் தேரோட்டங்களின் நிலையில் இருந்து புறப்பட்டு நான்கு ரதவீதிகளைக் கடந்து சுமார் 3மணி நேரத்தில் நிலை வந்து சேர்வது முக்கியத்துவம் வாய்ந்ததாகும். சில நேரங்களில் சுமார் 70அடிவரை உயரங் கொண்டதும். மிகவும் கனம் பொருந்தியதுமான தேரின் சக்கரம் பழுதடையவோ, வீதிகளில் உள்ள குண்டு குழிகளில் சக்கரங்கள் இறங்கினால் மட்டுமே தாமதம் ஏற்பட்டு விடும் தருணத்தில் தயார் நிலையில் வைத்திருக்கும் மாற்று தேர்ச் சக்கரம் பொருத்தப்பட்டு மாலை, மூன்று அல்லது நான்கு மணிக்குள் நிலைவந்து சேர்வது மிகவும் குறைவாகவே இங்கு நிகழ்ந்துள்ளது.

இறைவன் மீது கொண்ட உளமார்ந்த அன்பினை, பக்தியை எடுத்துக்காட்டும் நிலையில் திருக்கோயில் ஊழியர்களும், திருக் கோயில் நிர்வாகமும், பொதுமக்களும் சேர்ந்து தேரோட்டத்தின் போது ஏற்படுகின்ற தடைகளை அகற்ற துடிப்புடன் செயலாற்றித் தேர்களை நிலைக்கு கொண்டுவந்து சேர்ப்பது எங்குமே காணமுடியாத வியக்கத் தக்க அம்சமாகும். தேரோட்டம் காணவரும் வெளியூர் பக்த பொது மக்களும், நாஞ்சில் நாட்டின் பன்னிரண்டு படாகை(ஊர்) மக்களும், திருக்கோயில் நிர்வாகத்தினரும் சேர்ந்து **'ஒற்றுமையின் பலத்தினை'** நிருபித்துக் காட்டுவது சுசீந்திரம் அருள் தரும் ஸ்தாணுமாலயசுவாமி திருக்கோயில் மார்கழிப் பெருந்திருவிழா தேரோட்டக் காட்சியாகும்.

இத்திருக்கோயில் வரலாற்றில் பெருமைவாய்ந்த ஆன்மீகத் தேரோட்டத்தில் நடைபெற்ற எதிர்பார்த்திராத **'துப்பாக்கி பிரயோகம்'** மறக்கமுடியாத இரத்தக்கறை படிந்த முக்கிய சம்பவமாக வரலாறுகளிலும் இடம்பெற்றுவிட்டது. ஆம் முன்பு பொன் பொருள் ஆசையால் படையெடுத்து வந்தோரால் கலையம்சம் பொருந்திய மிகப்பெரிய தேர் தீயிட்டு சாம்பலாக்கப்பட்டது. சுசீந்திரம் பகுதியில் அறுவடைக்குக் காத்திருந்த நெற்பயிர்கள் தீயிட்டு கொளுத்தப்பட்டன. பின்னால் அற்புத ஆலயத்தின் அழகுத் தேரோட்டத்தைக் காணவந்த ஆயிரக்கணக்கான மக்கள் துப்பாக்கிகளின் குண்டுகளுக்கு பலியான துரதிஷ்ட சம்பவங்களும் நிகழ மனித வர்க்கமே காரணமாய் அமைந்தது. ஆன்மாக்கள் லயிக்கும் ஆலயத்தையும், கலையம்சமிக்க அற்புத தேர்களையும் செய்வித்து பல்லாண்டுகாலம் நெஞ்சில் வாழ்ந்திடும் நிலைபெற்ற மன்னர்களின் சின்னங்களைப் பேணிக் காப்போம். சுசீந்திரம் மண்ணிற்கும் பெருமை சேர்ப்போம்.

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு-நம்மில்
ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வு.'

என்ற அமரர் தேசீய கவி பாரதியாரின் அருள் மொழிக்கேற்ப

பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்.
எங்கள் பாரத தேசமென்று தோள் தட்டுவோம்.

# சபைகளின் சேவை

சுசீந்திரம் ஒரு **பிரம்ம தேயம்**. இது பிராமணர்களுக்கு ஆட்சி புரியும் மன்னரால் அளிக்கப்படும் நிலப்பகுதி தானமாகும். தானம் பெறுபவர்கள் அவ்வூரிலுள்ள கோயிலைப் பராமரித்து கவனித்து வருவதோடு சமயமுறைகளை நடத்தி வரவேண்டும் எனும் தனித்தன்மையும் இதில் அடங்கியிருந்தது. பாண்டிய மன்னரான **மாறன் சடையன்** தற்போது 'கற்காடு' என அழைக்கப்படும் நிலப்பகுதியான 'நிருபசேகரநல்லூரைத் திருச்விந்திரத்து எம்பெருமானுக்குத் தேவதானமாக' கொடுத்து அதை பராமரிக்க தெற்குமண்மடத்தில் ஒப்படைத்தார்.

கோயிலுக்கு வெளியே படாகைத் தலைவர்களைக் கொண்ட **'மகாசபை'** என்ற அமைப்பு இருந்தது. வெளிக்காரியங்களைக் (நிலங்கள், ஆடு, மாடுகள், திருவிழா வாகனச்சுமை, தேரோட்டம்) கவனித்து அதில் கிடைக்கப்பெறும் வருவாயினைக் கோயில் நிர்வாகத்திடம் கொண்டு ஒப்படைத்தல் மகாசபை பணிகளாகும். கோயிலின் உட்புற காரியங்களான அன்றாட பூஜைகள், வேலையாட்களின் பணிகள் பொறுப்பு, கோயிலுக்குச் சொந்தமான விளைநிலங்க்ளிலிருந்து மகாச்சபை மக்கள் கொண்டு வரும் பொருட்களைப் (அனுபவங்கள்) பெற்று கோயில் காரியங்களைத் தங்கு தடையின்றி நடத்த மலையாள பிராமணர்களைக் கொண்ட உள் அமைப்பான **'மூலபருட சபை'** இருந்து வந்தது.

'மூல என்னும் சொல் மூலஸ்தானத்தை குறிக்கும். ஊரின் பொருளாதாரத்தை முன்னிட்டுக் கோயிலின் வெளிப்பணிகளைக் கவனிக்க பிராமணர்கள் அல்லாதவர்கள் வெளிப்புறங்களில் குடியேற்றப்பட்டார்கள். இவ்விவரம் கி.பி. 880இல் ஆட்சிபுரிந்த **'வீர நாராயணச் சடையன்'** காலத்துக் கல்வெட்டு தெரிவிக்கின்றது. இராஜராஜ சோழன் வருகைக்கு முன்னால் இவ்விரு சபையினரும் மிகத் திறம்பட கோயில் நிர்வாகத்தைக் கவனித்து வந்ததோடு திருக்கோயிலுக்கு நன்கொடையளித்தல், பிராமணர்களுக்கு உணவளித்தல், நிலபுலன்களை அனுபவிப்பவர்களிடமிருந்து

பாட்டமான பொருட்களைச் சரியாக பெற்றுக் கோயிலுக்குக் கொண்டு சேர்த்து மிகவும் நல்லமுறையில் செயல்பட்டு வந்ததோடு அவ்வப்போது கோயில் திருப்பணி (தூண்கள், மண்டபங்கள்) போன்றவற்றையும் செய்து வந்துள்ளனர். மேலும் இவர்களோடு கி.பி. 985ம் ஆண்டு அரசேற்ற இராஜராஜ சோழனும், அவருக்குப் பின்னால் இராஜேந்திரச் சோழனும் அருந் தொண்டுகள் பலவும் செய்துள்ளனர்.

திருக்கோயிலில் இருசபைகளின் ஆட்சி நல்லமுறையில் நடந்து வந்த போதிலும் நாளடைவில் இவர்களுக்கிடையே பல நேரங்களில் சிறுசிறு மனக்கசப்பும் தகராறுகளும் ஏற்படலாயிற்று. இதனால் கி.பி. 1000 ஆம் ஆண்டில் மூலபருடசபை தானாக விலகிக் கொண்டது. பாண்டிய மன்னர்கள், சோழ மன்னர்களுடைய ஆட்சி முடிவுற்று சேரநாட்டு மன்னர்கள் (வேணாடு) எனப்படும் திருவிதாங்கூர் மன்னர்களின் ஆட்சித் தொடங்கியது.

**வேணாட்டு மன்னர்களும் நம்பூதிரிகள் வருகையும் :** கி.பி. 1116 ஆண்டிற்கு பிறகு நாஞ்சில் நாடு முழுவதும் வேணாடு மன்னர்களின் ஆட்சியின் கீழ்வந்தபோது இத்திருக்கோயிலில் பணிசெய்ய மலையாளப் பகுதிகளிலிருந்து **நம்பூதிரி** என்று அழைக்கப்படும் மலையாளப் பிராமணர்களைக் **கோதை வீர கேரளவர்ம மன்னர்** சுசீந்திரத்தில் குடியேற்றினார். கலைந்துவிட்ட மூலபருட சபை புரிந்துவந்த அலுவல்களை மன்னர் ஆதரவோடு மேற்கொண்டனர். திருவிதாங்கூர் வரலாற்றில் மிக நீண்டகாலம் ஆட்சிபுரிந்த மன்னர் (கி.பி. 1383-1344) **சேர உதய மார்த்தாண்ட வர்மா** ஆவார்.

வேணாட்டு மன்னர்களின் ஆட்சியில் இத்திருக்கோயில் வகைக்கு ஏராளமான நிலபுலன்கள் ஒவ்வொருவர் ஆட்சியிலும் வழங்கப்பட்டுள்ள விவரம் பல கல்வெட்டுகள் மற்றும் ஓலைச் சுவடிகள் வாயிலாக அறியமுடிகிறது. இவற்றையெல்லாம் கண் காணித்துச் செயல்படுத்தி மன்னரின் நம்பிக்கைக்குரிய மலையாள பிராமண சமுதாய ஆட்களும் இங்குவந்து பொறுப்புகள் பல வகித்து வந்துள்ளனர். இவர்கள் **'போற்றிகள்'** எனவும் அழைக்கப்பட்டு பல

குடும்பங்களாக (மடங்கள்) வாழ்ந்து வந்துள்ளனர். மூலபருட சபைக்கும் மகாசபைக்கும் அடிக்கடி உண்டான மனக்கசப்புகளை மாற்ற வாரியம், கர்ணம் போன்ற அமைப்புக்களை உருவாக்கி இவர்களைக் கண்காணிக்க ஒரு துறையும் ஏற்படுத்தப்பட்டது.

**யோக சபை :-** இக்காலத்தில் போற்றி பிராமணர்கள் சுசீந்திரத்தில் தங்கள் ஒன்பது வீட்டுத் தொகுதிகளின் முதுநிலை பெரியோர்கள் ஒன்பது பேர்களைக் கொண்ட **யோகக்காரர்கள்** அமைப்பை ஆ.வ.1129இல் ஏற்படுத்திக் கொண்டார்கள். 'ஊரை ஆள்பவ. ர்கள்' என்னும் பொருள்தரும் **'ஊராளர்கள்' 'ஊராண்மைக்காரர்கள்'** ஸ்ரீகாரியம் செய்வோர்கள் என்னும் பெயர்களைத் தாங்கியும் இவர்கள் அதிகாரம் செலுத்தி வந்தார்கள். ஊராண்மைக்காரர்களாகிய போற்றிகள் ஒருங்கிணைந்த ஒரு **'யோகம்'** (கூட்டம்) உருவாக்கப் பட்டது. இவர்கள் ஒன்பது பேரில் வயதில் மூத்தவர் ஒருவரைத் தலைவராக வைத்து அவ்வப்போது கூடி கிராம காரியமும், தேவ காரியமும் செய்து வந்தனர். கோயிலின் நித்திய காரியங்களை அதாவது அதிகாலையிலிருந்து இரவு வரை ஆலயத்தில் நடைபெறும் பணிகளைக் கவனிக்கின்ற முக்கிய பொறுப்புகளும் இவர்களைச் சார்ந்தது. இவர்களை **நித்திய காரிய யோகக்காரர்கள்** என்றும் இவர்கள் கூடும் சபைக்கு **'யோகசபை'** எனவும் அழைத்தனர். 9 முதல் 15-ஆம் நூற்றாண்டு வரை மிகச்சிறந்த முறையில் இவ் அமைப்பு செயல்பட்டு வந்துள்ளது.

**சுசிந்திரம் ஒரு சங்கேதம் :-** இவர்கள் காலத்தில் சுசீந்திரம் ஒரு சங்கேதமாக மாறியது. சங்கேதம் என்பது தன்னுரிமை பெற்றதும், புனிதமானதும், மக்களுக்கு பாதுகாப்பு அளிப்பதுமான ஓர் அமைப்பாக விளங்கியதோடு அந்நியர் படையெடுப்புக் காலத்தில் ஆலயத்திற்கும் மக்களுக்கும் பாதுகாப்பு சேவைகள் செய்து வந்ததால் இதன் காரணமாக இச்சங்கேதத்தின் பொறுப்பை வகித்து வந்த யோகக்காரர்களின் மதிப்பு உயர்ந்தது. இத்திருக்கோயிலில் 'கைமுக்கு சோதனை' நடைபெற்று வந்த போது யோகக்காரர்கள் இதில் பங்கேற்று இவர்களின் முன்னிலையில் இது நிகழ்ந்ததால் சுசீந்திரம்

திருக்கோயிலில் அதிகாரம் பெற்றிருந்த யோகக்காரர்கள் மேலும் சிறப்புப் பெற்றனர்.

மேலும் இக்காலத்தில் திருவனந்தபுரத்திலுள்ள எட்டரை யோகம் (1) கூபக்கரை, (2) வஞ்சியூர் அத்தியறை, (3) கொல்லூர் - அத்தியறை, (4) முட்டளவிளை, (5) கருவாச்சேரி, (6) நெய்சேரி, (7) பத்பநாபசாமி கோயில் ஒரு சாமியார், (8) கரணத்தான் குருப்பு வேணாட்டு மன்னரும், மற்றும் அரையோக வீதமுள்ள ஸ்ரீகாரியத்து போற்றியும் சேர்ந்த யோகக்காரர்கள் சபை அங்கும் இருந்து வந்துள்ளது.

அதே போன்று சுசீந்திரத்தில் (1) சோமாசி மங்கலம், (2) முல்ல மங்கலம், (3) அரசில் மடம், (4) புத்தில்லம், (5) கூத்தம் பள்ளி, (6) சிவல்ல மங்கலம், (7) புதுமாடம், (8) வேலியறைமடம், (9) தெற்குமண் மடம் ஆகிய ஒன்பது குடும்பமாகிய மடங்கள் இருந்து வந்துள்ளன. இம்மடங்களில் முதியவராக ஸ்தானம் (பதவி) வகிப்பவர் 'ஸ்தானிகர்' என்றும் பெயர் பெற்றதால் இங்குள்ள ஒன்பது மடங்களின் தலைவர்களை நித்திய காரிய யோக ஸ்தானிகர் என வழங்கினர்.

யோக சபையில் அங்கம் வகித்த மடங்களின் ஸ்தானிகர்களில் பலர் திருக்கோயிலின் வளர்ச்சிக்குப் பாடுபட்டுள்ளனர். தர்ம காரியங்கள், திருக்கோயில் மண்டபத் திருப்பணிகள், தெய்வச் சிலைகள் பிரதிஷ்டை, சுசீந்திரம் பகுதியில் உள்ள சுற்று வட்டாரக் கோயில்களான பேரம்பலம் நடராஜர், சன்னதித் தெருவிலுள்ள குலசேகர விநாயகர், தெற்குமண் தெருவிலுள்ள இரட்டைத்தெரு குலசேகரப் பெருமாள் கிருஷ்ணன் கோயில் போன்ற வெளிக்கோயில்களில் குறிப்பிடும்படியாக மண்டபப் பணிகள் பலவும் செய்துள்ளனர். நிலங்களும் பல விட்டுக்கொடுத்துள்ளனர்.

யோக சபையினரின் திறன்பாடுகளை த.ஆ : 659 (ஆ.வ : 1483) சுசீந்திரம் திருக்கோயிலில் செண்பகராமன் மண்டபத்தில் உள்ள கல்வெட்டு குறிப்புகள் தெரியப்படுத்துகின்றன. த.ஆ : 809இல் (1633) திருமலை நாயக்க மன்னர் ஆட்சியின் போதும், த.ஆ : 909 (1722) இராணிமங்கம்மாள் ஆட்சி காலத்திலும் யோகஸ்தானிகர்களின்

அதிகாரத்தை ஒரு குறைவுமில்லாமல் பார்த்துவந்துள்ள விவரங்கள் தற்போது ஒன்பது மடங்களில் ஒரே ஒரு மடமாக இருந்துவரும். சுசீந்திரம் தெற்குமண் மடத்தின் குறிப்பேடுகள் வாயிலாக அறியமுடிகிறது. சுசீந்திரம் திருக்கோயிலின் நித்திய காரியங்களைக் கவனித்து வரும் 'தெற்கு மண்மடம்' போற்றியாகிய ஸ்ரீ நீலகண்டரு எம்.ஏ. அவர்கள் இம்மடத்தின் 'ஸ்தானிகராக விளங்கி' வருகிறார்.

### யோகக்காரர்களின் அதிகாரமும் மன்னரின் கோபமும்

'திருக்கோயிலில் எது நடக்க வேண்டுமானாலும் யோகக்காரர்களிடம் கேட்டுதான் நடைபெறவேண்டும்' என்ற சூழ்நிலையில் இவர்களின் நிருவாகம் வெளிசபையாகிய மகாசபை மற்றும் முடிமன்னரை எதிர்க்கின்ற விதத்தில் செயல்பட ஆரம்பித்தது. பிரச்சனை நாளுக்கு நாள் பெருகத் தொடங்கியது. குத்தகைதாரர்களிடமும், பணியாட்களிடமும் தங்கள் அதிகாரத்தை இவர்கள் காட்டத் துவங்கினர்.

உதாரணத்திற்கு ஆ.வ : 1560இல் தமிழாண்டு : 736 புரட்டாசி 17ஆம் நாள் குத்தகைதாரர் சரியான முறையில் விளை நிலத்தின் பாட்டத்தைக் கொடுக்காத காரணத்தால், **"கண்ணன், ஆனந்தன்"** என்பவர்களை குத்தகைப்பாட்டத்திலிருந்து நீக்கினார்கள். அடுத்து அதே ஆண்டு ஐப்பசி 1இல் பாலில் தண்ணீர் கலந்ததற்காக பால்காரராகிய மணியக்காரனை அடித்து துன்புறுத்தி வேண்டியவர்களுக்குச் சலுகையும் வேண்டாதவர்க்குக் கடுமையான தண்டனைகளும் வழங்கியதால் இதனைப் பொறுக்கமுடியாத மகாசபையினர் யோகசபையை எதிர்க்க ஆரம்பித்தனர். நாளுக்கு நாள் பிரச்சனை வளர்ந்து மன்னரின் கவனத்திற்கு இவை கொண்டு செல்லப்பட்டன.

அத்தருணத்தில் நாட்டை 'வென்று மண்கொண்ட பூதள கேரள மன்னர்' ஆட்சி புரிந்து வந்தார். யோகக்காரர்களின் அதிகாரத்தை ஒடுக்கும் நோக்கில் சுசீந்திரம் திருக்கோயில் கருவூலக் கணக்கராக த.ஆ : 720 கார்த்திகை 27ஆம் தியதி கருங்குடி நாட்டைச் சார்ந்த. 'திக்கெல்லாம் புகழும் பெருமாள்' என்பவரை நியமித்தார்

தொடர்ந்து த. ஆ : 720 மார்கழி 14இல் 'உடையான் குட்டி' என்பவரைக் கருவூல அதிகாரியாக நியமித்தார். இன்னன்ன பணிக்கு, இன்னன்ன ஆட்கள் என்ற வழிமுறையை வகுத்து ஸ்ரீகாரியம் செய்பவரது பணிகள் கூட்டப் பட்டது. மன்னரது நடவடிக்கையினால் அதிருப்தியடைந்தனர் யோகக்காரர்கள்.

கி.பி. 1705ஆம் ஆண்டிலிருந்து யோகக்காரர்கள் ஒவ்வொருவரும் தம் கீழ் குடியானவர்கள், பணியாளர்கள் ஆகியோர்களைக் கொண்ட தனி நிலக்கிழாராக மாறினர். கி.பி. 1729இல் மன்னராக பதவியேற்ற பாலமார்த்தாண்ட வர்மா நாஞ்சில் நாட்டிலும் திருவிதாங்கூரிலும் வரலாற்றில் பெருஞ்சிறப்பு பெற்றார். பல சீர்திருத்தங்களைக் கொண்டுவந்து ஆலய நிருவாகத்தைச் சீரமைக்க முனைந்தார். யோகக்காரர்களின் உள்ளாட்சி நிர்வாகத்தை அறிந்து சுசீந்திரம் கோயில் செலவுகளை வரையறுக்க இவர்களை மேற்பார்வையிட 'வலிய ஸ்ரீகாரியக்காரர்' என்ற பதவியை ஏற்படுத்தி அதில் ஒருவரை நியமித்தார். மன்னர் நியமித்த ஆட்களின் அனுமதி இல்லாமல் நிலங்களை விற்கவோ, பாட்டங்களை மாற்றவோ கூடாது. என உத்தரவு பிறப்பித்து நிலபுலன்களிலிருந்து கிடைக்கும் பொருட்களைக் கோவிலில் ஒப்படைக்க ஒரு 'துறையை' ஏற்படுத்தி அதனைக் கண்காணிக்க திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகருக்கு உத்தரவு பிறப்பித்தார். பின்னாளில் ஆலய நிலங்கள் அரசுடமையாக்கப்பட்ட பின் துறையை மாற்றியமைத்துப் பூசை காரியங்களுக்கு உதவி செய்ய 'துரக்காரர்கள்' என்ற புதிய அமைப்பு மன்னரால் உருவாக்கப்பட்டு இன்றுவரை அது செயல்பட்டு வருகிறது.

மன்னர் பால மார்த்தாண்ட வர்மாவின் பல அதிரடி நடவடிக்கையால் யோகக்காரர்கள் நிலை குலைந்து விட்டனர். ஏற்கனவே பலமுறை அதிருப்தியுற்று இருந்த இவர்கள் தங்கள் எதிர்ப்புகளை மன்னருக்கு தெரிவிக்கும் விதத்தில் செயல்பட ஆரம்பித்தனர். த.ஆ : 906 (1731) ஆண்டில் மன்னர் சுசீந்திரம் கோயிலுக்கு தரிசனம் செய்ய வருவதற்காக நிச்சயித்து ஒருநாள் முன்னதாக நாகர்கோவிலை அடுத்துள்ள கிருஷ்ணன் கோயில் கொட்டாரத்தில் (தற்போதைய மாவட்ட வேளாண்மைத்துறை

அலுவலகம்) தங்கி மறுநாள் காலை 8.00 மணிக்கு சுசீந்திரம் கோயிலுக்குச் செல்லும் பொருட்டு நேரமும் நிச்சயித்துக் கோயில் நிருவாகத்திற்குத் தகவலும் தெரிவிக்கப்பட்டிருந்தது.

கோயிலின் உள்ளாட்சி நிருவாகத்தைக் கவனித்து வந்த யோகக்காரர்களுக்கு ஏற்கனவே மன்னர் மீது அதிருப்தி ஏற்பட்டிருந்ததால் தமது எதிர்ப்பினைக் காட்ட இதுவே தக்க தருணம் என்ற மனப்பாங்கில் மறுநாள் அதிகாலை பதிவு போல் நடைதிறந்து மதியம் வரையிலும் நடைபெறும் பூசை காரியங்களை அவசர அவசரமாக முடிக்கச் செய்து காலை 8 மணிக்குள்ளாகவே கோயில் வெளிவாசலையும் பூட்டிவிட்டனர். மறுநாள் சுசீந்திரம் கோயிலுக்குப் புறப்பட ஆயத்தமான மன்னரிடம் கோயில் கதவு சாத்தப்பட்ட விவரம் தெரிவிக்கப்பட்டது. செய்தியறிந்த மன்னர் எல்லையற்ற கோபம் கொண்டார். முடிமன்னர்கள் பலரது அரும்பெரும் முயற்சியினாலும், இறைவன் மீது பற்று கொண்ட பக்த பொதுமக்களாலும் உருவாக்கப்பட்டு அனைவருக்கும் பொதுவுடைமையான் ஆலயத்தை அதன் இறைவனை யோகக்காரர்கள் தனதுடமை ஆக்குவதா? எனச் சினங்கொண்டு உடனே இச்செயலுக்குக் காரணமாக விளங்கிய யோகக்காரர்கள் வீடுகளை (மடங்கள்) இடித்துத் தரைமட்டமாக்க தனது தளபதியாகிய **"இராமையன் தளவாய்"**க்கு உத்தரவுப் பிறப்பித்தார். மன்னரின் ஆணையை ஏற்று தளவாய் தலைமையில் படைவீரர்கள் சுசீந்திரம் நகருக்கு விரைந்து வந்து அவர்களின் மடங்களை இடித்து தரைமட்டமாக்கினர். இதற்கிடையில் படைவீரர்களைக் கண்டதுமே மடத்தில் இருந்த யோகக்காரர்கள் உயிருக்கு பயந்து குடும்பத்தோடு தப்பியோடி தலைமறைவாயினர்.

***அபாய வேளையில் அமுதுபடைத்த மூதாட்டி:***-மன்னர் பால மார்த்தாண்ட வர்மாவின் கட்டளையை ஏற்று செயல்பட்ட தளபதி இராமையன் தனது கடமையை முடிக்க ஒரே ஒரு மடம் மட்டுமே எஞ்சியிருந்தது. இரவுப்பொழுது நெருங்கி விட்டதால், தளவாயும் படைவீரர்களும் பசியினால் சிறிது தளர்ச்சியுற்றனர். இரவு வேளையில் சற்று ஓய்வெடுத்துவிட்டு மறுநாள் மீதமுள்ள மடத்தைத்

தகர்த்துவிடலாம் என எண்ணி தானும் படை வீரர்களும் தங்குவதற்கான இடத்தைத் தேர்வுசெய்து முடிவில் யோகக்கார மடங்களில் ஒன்றுமட்டும் மீதமிருக்க 'தெற்குமண்' மடத்தில் பரிவாரங்களுடன் தங்குவதற்கான இடவசதியும் இருந்ததால் அன்றைய இரவை அங்கு கழிக்க தீர்மானித்தார்

ஏற்கனவே மன்னர் படையின் வருகையால் பீதியில் நிறைந்திருந்த சுசீந்திரம் மக்கள் பெரும்பாலும் வீடுகளிலிருந்து வெளிவர அஞ்சியிருந்தனர். யோகக்காரர்கள் தங்கள் மடங்களை விட்டு ஓடிவிட்டனர். ஆனால் எவ்வித உயிர்சேதங்களையும் படை வீரர்கள் ஏற்படுத்தவில்லை என்பதையும் அறியமுடிகிறது. மற்ற யோகக்காரர்கள் ஓடியதைப்போன்று இம்மடத்தில் உள்ளவர்களும் உயிருக்கு பயந்து ஓடியிருக்கக்கூடும் என படைத்தளபதி எண்ணினான். ஆனால் அவருடைய எண்ணத்திற்கு மாறாக வயது முதிர்ந்த ஒரு மூதாட்டி தன்னந் தனிமையில் இம்மடத்தில் இருப்பதைக் கண்டார் தளபதி. அதே வேளையில் அம்மூதாட்டிக்கு துணையாக யாரும் இல்லாததையும் உணர்ந்தார். விடிந்தால் இந்த மடமும் தமது படையினரால் தரைமட்டமாக்கப்படவிருக்கிறது. இந்த மூதாட்டிக்கும் தெரிந்திருக்குமோ என்னவோ, இப்படிப்பட்ட சூழ்நிலையில் இவளிடம் நாம் என்ன கேட்பது எனச் சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் மூதாட்டியை நோக்கினார் தளபதி. ஒரு பக்கம் படைவீரர்கள் பசியினால் தளர்ச்சியுற்று படுத்திருந்தனர். தளபதிக்கும் இதே நிலை.

தளபதியைக் கண்டமாத்திரத்தில் மூதாட்டி மெல்ல நடந்து எண்ணை விளக்கின் ஒளியில் தளபதியின் முன்வந்து கரங்கூப்பி வணங்கி முகத்தினை உற்று நோக்கினார் 'வரவேண்டும். ஏன் முகத்தில் வாட்டம்? ஆகாரம் வேண்டுமா? நான் ஒருத்தியே இங்கு உள்ளேன். சிறிது நேரம் பொறுத்திருந்தால் உங்கள் அனைவருக்கும் பசிபோக்க உணவளிக்கிறேன்.' என மூதாட்டி கூறவே தளபதி வியப்பால் மறுமொழி கூறமுடியாமல் திகைத்து நின்றான். ஊர்மக்களும், மற்ற மடத்துக் குடும்பமும் பயத்தால் ஓடி ஒளிந்த நிலையில் இம்மூதாட்டியானவள் இந்த இக்கட்டான சூழ்நிலையிலும் தைரியம்

வாய்ந்த மனத்தோடு கூறிய வார்த்தைகள் தாய்மையின் அன்பைப் பிரதிபலிக்கும் கூரம்பாய் இதயத்தில் பாய்ந்து நெகிழ வைத்தது. ஆம்! இந்தியத்திருநாட்டின் தாய்மைப் பாசத்தினை மூதாட்டியிடம் கண்டார் தளபதி.

தாயே! பசியோடு வந்த எனக்குத் தங்களின் வார்த்தை மனத்தை நிறைவடையச் செய்துவிட்டது. தாங்கள் கூற்றுப்படி காத்திருக்கிறோம் எனக்கூறி தளபதியும் ஓய்வெடுக்கச் சென்றுவிட்டார். அவரால் எதுவும் பேசமுடியவில்லை. உடல் படுத்திருந்தது தளபதியின் உள்ளமோ மூதாட்டியின் பாச வார்த்தை நினைவுகளால் நிலை தடுமாறியது. இத்தருணத்தில் இவர்கள் குடும்பத்தை நிர்மூலமாக்க வந்திருக்கும் நாமோ பகைவன். பகைவனுக்கும் அருளும் பண்பை மூதாட்டியிடம் கண்டார் தளபதி. சிறிது நேரத்தில் உணவும் தயாராகியது. மூதாட்டியால் முடிந்த அளவில் அரிசிக் கஞ்சி தயாராக்கி அனைவருக்கும் அமுது படைத்தாள் களைப்பினால் கண்ணயர்ந்தனர் அனைவரும்.

**உண்ட வீட்டிற்குத் தொண்டு :-** மறுநாள் அதிகாலை படைவீரர்கள் அனைவரும் தத்தம் கடமைகளை முடித்துவிட்டு அடுத்தக்கட்ட பணிக்காகத் தயாராகித் தளபதியின் உத்தரவிற்குக் காத்திருந்தனர். சிறிது நேரத்தில் தளபதியும் தயாராகி படைவீரர்களைப் பார்த்து "நமது பணி முடிவடைந்து விட்டது. உடன் தானே மன்னரைக் காணவேண்டும். நம்மால் இம்மடத்திற்கு எந்தவித தீங்கும் ஏற்படக்கூடாது. புறப்படுங்கள்." என தளபதி உத்தரவிடவே மூதாட்டியிடம் விடை பெற்றுக்கொண்டு தளபதியும், படைவீரர்களும் மன்னர் தங்கியிருக்கும் இடத்திற்கு புறப்பட்டு சென்றனர்.

மன்னரைச் சந்தித்து நடந்த சம்பவங்கள் அனைத்தையும் மன்னரிடம் எடுத்துரைத்தார் தளபதி. தளபதியின் பேச்சில் மனம் நெகிழ்ந்த மன்னர். தனது அதிரடி நடவடிக்கையின் விளைவால் சிறிது நொந்தாலும் "செய்தார்க்கு செய்த வினை" என்பது போன்று யோகக் காரர்கள் அனைவரும் ஒன்றுபட்டு ஆலயத்தில் கதவடைப்பு நடத்தியிருக்க முடியாது அதிலுள்ள சிலபேர்களின் தூண்டுதலே

இவற்றிற்கு காரணமாய் அமைந்திருக்கக்கூடும். உண்மையான தெய்வத்தொண்டு அவர்களைக் (மூதாட்டி குடும்பம்) காப்பாற்றியுள்ளது. காலம் உள்ளளவும் ஆலயம் போன்று அவர்களும் நிலைத்திருக்கும் படியாக இன்றும் 'நித்திய காரிய யோக ஸ்தானிகர்' என்ற பெயரோடு 'தெற்கு மண்மடம்' சிறப்புற்று விளங்குகிறது. மேற்கண்ட சம்பவத்தை நினைவுகூறும் வகையில் 'தளபதி இராமையன்' ஓய்வு எடுத்த அறையும், அவர் படுத்துறங்கிய கல்லினால் செய்யப்பட்ட கட்டில் சுமார் 5அடி நீளத்திலும் 3அடி அகலத்திலும் இருந்து வருவதைத் தெற்குமண் மடத்தில் இன்றும் காணமுடிகிறது. இதன் விவரங்களை பேரறிஞர் அமரர் **டாக்டர்.கே.கே. பிள்ளை** அவர்கள் 'சுசீந்திரம் கோயில்' என்ற ஆங்கில வரலாற்று ஆராய்ச்சி நூலில் விளக்கியுள்ளதைக் காணலாம்.

மன்னர் பால மார்த்தாண்ட வர்மா ஆட்சி முடிந்து பிறகு இங்குவந்து யோகக்காரர் சுசீந்திரத்தில் வாழ்ந்தாலும், மீண்டும் திருக்கோயில் காரியங்களில் பொறுப்புகள் ஏற்றிருந்தாலும் காலத்தால் நிலைத்து நிற்கும் புகழை அவர்கள் அடையவில்லை என்பதைத் தெள்ளத் தெளிவாக இங்கு காணமுடிகிறது. அவர்களுக்குச் சொந்தமான மடங்கள் (வீடுகள்) நிலபுலன்கள் அனைத்தையும் விற்பனை செய்து மாய்ந்து போன நிலைகளைத் தற்போது காணமுடிகிறது.

நல்லோரை வாழவைக்கும் தெய்வமாக எழுந்தருளி அருள்பாலிக்கும் அருள்மிகு ஸ்தாணுமாலயரின் அற்புத விளையாடல்களை யோகக்காரர்களின் மடங்களின் வாயிலாக உணர முடிகிறது. இந்த 20ஆம் நூற்றாண்டிலும் திருக்கோயிலுக்குத் தினமும் வந்து அதிகாலை முதல் இரவு வரை நித்திய காரியங்களைக் கவனித்துச் செல்லும் ஒரே யோகஸ்தானிகராக, முன்னோரின் பணியைத் தொடர்ந்து செயலாற்றிவரும் **"தெற்கு மண்மடம்"** மூத்தவரைக் காணமுடிகிறது. உண்ட வீட்டிற்கு தொண்டு செய்த மன்னரையும் மறக்க முடியாது. இன்றும் புகழோடு சுசீந்திரம், தெற்குமண் நித்திய காரிய யோக ஸ்தானிகர் மடம் இருந்து வருகிறது.

# அமரர் பிரம்ம ஸ்ரீ பாச்சுமூத்தது என்ற பரமேஸ்வரர்

தமிழாண்டு 989 வைகாசி 25ஆம் நாள் (1813) கேரள மாநிலத்திலுள்ள **வைக்கம்** திருநகரில் பிறந்தார். இவர் 1009ஆம் ஆண்டில் கோயில்களில் பாடகம் சொல்ல கற்றுக் கொண்டார். கொடுங்கல்லூர் பெரிய மகாராஜாவிடம் சமஸ்கிருத இலக்கணம் பயின்று அனைத்து சாஸ்திரங்களிலும், கலைகளிலும் தேர்ச்சிபெற்று விளங்கினார். ஒருமுறை தீராத தோல் வியாதியால் மிகவும் அவதிப் பட்டு மருந்தால் இந்த நோய் குணமாகாது என்பதை அறிந்து வைக்கம் மகாதேவர் கோயிலில் இடைவிடாத 'பஜனம் ஒன்றைத் தொடங்கினார். இதுவே பஜனம் எனப்படும் (புராணக்கதைகளை விளக்கி பாட்டாக பாடி பஜனை செய்வது) வேத காலத்தில் **'ரோமஹர்ஷனன்'** என்ற முனிவர் மட்டுமே இந்த பஜனத்தை நிகழ்த்தியுள்ளார்.

ஓராண்டு காலம் படுக்கையில் உறங்காது இருவேளை நீராடி ஒருவேளை மட்டுமே உணவும் உண்டு கோயில் திறந்திருக்கும் வேளையில் சுவாமியைச் சுற்றியுள்ள பிரகாரத்தில் சுற்றி வரவேண்டும். கடுமையான இவ்விரதத்தால் அதாவது 12ஆம் மாதத்தில் விரதம் முடியும் தருவாயில் உடல் தளர்சியுற்றுக் கீழே விழுந்துவிட்டார். அந்த வாரத்தில் இறைவன் திருக்கோயில் அபிஷேக நீரை மட்டுமே பருகி வந்தார். உடலும் மெலிந்து மிக மோசமான நிலையிலும் 365ஆம் நாளை கடத்தி விரதத்தை முடித்துக்கொண்டார். இப்படியாக ஆண்டு ஒன்றைத் தாண்டியும் பாச்சு மூத்தது அவர்களுக்கு நோய் குணமாகவில்லை. படுக்கையில் கிடக்கலானார். இப்படிக் கஷ்டப்படுகின்ற போது ஒருநாள் இரவில் நான்காவது சாமத்தல் உத்திராட்ச மாலைகள் தரித்த கழுத்தோடு ஒருவர் பாச்சு மூத்தது அவர்களின் மேனியில் தனது கையிலிருந்த விபூதியால் உச்சி முதல் உள்ளங்கால் வரைத் தடவி 'நோய் தீரும். பூரண குணமடைவாய்' எனக்கூறிச் சென்றதையும் வந்தவரின் உடலில் தெய்வீக ஒளி வீசுவதையும் கண்டார். 365 நாட்கள் கொண்ட கடுமையான விரதத்தின் பயனைச் சிவபெருமான் நேரிலே தோன்றி காட்சி கொடுத்ததைக் கண்ணாரக் கண்டார். பேரருள் பெற்றார் பாச்சுமூத்தது. அதோடு அவருக்கு பிடித்திருந்த தீராத 'ரண நோயும்' உடனே தீர்ந்தது.

இந்நிகழ்ச்சி நிகழ்ந்த நாளிலிருந்து வாழ்வில் பல முன்னேற்றங்களைக் கண்டார். ஆயுர்வேத வைத்தியத்தில் வித்தகராக, சாஸ்திர நூல்கள் எழுதும் நூலாசிரியராகவும், சோதிடத்தில் வல்லுனராகவும், சித்திரக்கலையில் சிறந்த ஓவியராகவும் , முடிசார்ந்த மன்னருக்கு அறநெறி பயிற்றுவிக்கும் ஆசானாகவும் திகழ்ந்து மன்னர்களின் மனத்திலே இடம் பிடித்ததோடு மாமன்னர் மாளிகையில் சகலகலை கற்ற ஆஸ்தான ஆலோசகராகவும், வைத்தியராகவும் பெயர் பெற்றார்.

மன்னர் தனக்களித்த மாளிகையை (திருவனந்தபுரம் பத்பநாப சுவாமி தெப்பக்குளம் அருகில்) 'ஆயுர் வேத பாடசாலை' யாக மாற்றி அதில் பன்னிரண்டு மாணவர்களைத் தங்க வைத்து தனது சொந்தச் செலவில் ஆயுர்வேதக் கல்வியறிவை ஊட்டினார். "யான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெற வேண்டும்". என்ற பரந்த நோக்கோடு செயல்பட ஆரம்பித்தார். பல இடங்களில் வைத்தியசாலைகள் தோன்றின. தமிழாண்டு 1027இல் கொச்சி சமஸ்தான மன்னர் குதிரையிலிருந்து தவறி விழுந்தமையால் அவர் கால் ஒடிந்தது. தனது ஆயுர்வேத சிகிச்சை முறையால் ஒடிந்த காலை ஒட்டவைத்து குணமடையச் செய்தார். மன்னரின் கையால் பரிசாக பொன்னாலான வீரச்சங்கிலியும் பெற்றார். திரு. பாச்சுமூத்தது பெரியார் பெற்ற முதல் வீரச்சங்கிலி இதுவாகும்.

அடுத்து கொச்சி சமஸ்தான திவானுக்கு ஏற்பட்ட வாதநோயைக் குணமடைய வைத்தார். இதனால் மன்னரின் உற்ற நண்பனாக திகழ்ந்து அரசருடன் காசியாத்திரை சென்று வட இந்திய சுற்றுப்பயணம் முடித்துத் திரும்பி வரும் வழியில் சென்னை, காஞ்சி, மதுரை, இராமேஸ்வரம் போன்ற தெய்வீகத் திருத்தலங்களுக்கு அரசு விருந்தினராகச் சென்று வரும் வாய்ப்பினையும் பெற்றார் த.ஆ 1028இல் 'காசி யாத்திரை' பிரபந்தம் என்னும் ஓட்டம் துள்ளல்' கதையொன்றும் எழுதினார். மேலும் மலையாள மொழிக்கு முதல் இலக்கணமும் வகுத்து, முதல் குழந்தைகள் நூல், முதல் திருவிதாங்கூர் சரித்திரம் முதல் பயணக்கதை, முதல் சுயசரிதை ஆகியவற்றை மலையாளத்தில் எழுதி வெளியிட்டதோடு, பல சமஸ்கிருத நூல்களையும் எழுதி வெளியிட்டார்.

அடுத்து த.ஆ 1043இல் முதன் முதலாக பூகோள உருவத்தை உருவாக்கிக் கிரகங்களின் நிலையை விஞ்ஞானப் பூர்வமாக மன்னர் முன்னிலையில் மக்களுக்கு விளக்கிக் காட்டினார் மலையாளத்தில் முதல் சோதிட நூல், ஆயுர்வேத வைத்திய நூல் எழுதி வெளியிட்டார். இந்தியாவின் முதல் முதலில் ஆயுர்வேத பாடசாலையைக் கல்லூரியாக மாற்றி முதல் ஆசிரியராகவும் திகழ்ந்தார். இவர் எழுதிய அனேக நூல்கள் இன்றும் ஆயுர்வேத கல்லூரிகளில் பாடமாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. இவரது ஆயுர்வேத அறிவாற்றலைக் கண்டு திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர் ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மன்னர் இவரது கைங்கரியத்திற்காக வசதிகள் செய்து கொடுத்துத் தனது அரண்மனையில் இவரை ஆஸ்தான மருத்துவராக்கினார்.

***சுசிந்திரம் வட்டப்பள்ளிமடம் 'ஸ்தானிகர்' பதவி ஏற்பும் மற்றும் மடத்தின் சிறப்பு:-*** ஆலயங்களில் பூசை செய்பவர்கள் பொதுவாக பட்டர் என அழைக்கப்படுகின்றனர். பள்ளி என்ற சொல் வழிபாட்டுத் தலத்தை குறிப்பதாகும். இரண்டும் சேர்ந்து பட்டர் பள்ளி என்றும் இவர்கள் தங்கியுள்ள இடத்தினைப் பட்டர் பள்ளி மடம் எனவும் விளங்கிற்று. ரபீந்திரநாத் என்பது ரவீந்திரநாத் என்றும், பாலி வாலியாகி, பாணம் வாணமாகி, பங்காள் வங்காளம் என்று மருவி வந்ததைப் போன்று பட்டர் பள்ளிமடம் மருவி வட்டப்பள்ளி மடமாயிற்று.

அடுத்து வட்டம் கூட்டுதல் என்றால் ஏற்பாடு செய்தல் அல்லது தயார் செய்தல் என்று பொருளாகும். திருக்கோயில் பூசை முதலியவைகளுக்குறிய ஏற்பாடுகளைச் செய்து தருபவர் என்பதை எடுத்துக் கூறுவதற்காகவும வட்டப்பள்ளி என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம் எனக் கருத இடமுள்ளது. அன்றாடம் அர்த்த சாம பூசையைத் தேவேந்திரன் வந்து நடத்துவதாக ஐதீகமுள்ள இத்திருக்கோயிலில் பணிபுரியும் மேல்சாந்தி நம்பூதிரிகள் **'அகம் கண்டதைப் புறம் கூறமாட்டேன்'** என்று வட்டப்பள்ளி ஸ்தானிகரிடம் சத்தியப் பிரமாணம் செய்து, 'நான் உள்ளே வருகிறேன்' என்பதற்கு அடையாளமாக சன்னதி நடையின் முன்புள்ள மணியினை அடித்து ஒலி எழுப்பிய பிறகு தான் கருவறையின் உள்ளே செல்ல அனுமதிக்கப்படுவர். இந்த அனுமதிச் சடங்கினை

ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக இங்கு தலைமுறை, தலைமுறையாக வாழ்ந்துவரும் வட்டப்பள்ளி குடும்பமே செய்து வருவதால் இவர்கள் **'திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர்'** என்று அழைக்கப்படுகின்றனர். இது எந்த மடத்திற்கும் இல்லாத முக்கியச் சிறப்பாகும். இதற்கான அரசாணை உத்தரவுகளும், கல்வெட்டு குறிப்புகளும் ஆதாரமாக இன்றும் உள்ளன.

சுசீந்திரம் திருக்கோயிலின் தொடக்க வரலாற்றைத் திட்ட வட்டமாகக் கூற இயலாததைப் போன்று வட்டப்பள்ளி மடத்தின் தொடக்க வரலாற்றையும் கூறுவதற்கு இயலாமலுள்ளது. இவர்களுக்குச் சுசீந்திரம் திருக்கோயில் பொறுப்புகளோடு மட்டுமின்றி, குமரி மாவட்டத்திலுள்ள கன்னியாகுமரி பகவதியம்மன், திருநந்திக்கரை, பறக்கை மதுசூதனப்பெருமாள், திருவிதாங்கோடு, திருவிடைக்கோடு போன்ற சிவன், விஷ்ணு, தேவி ஆலயங்களில் பொறுப்புகள் உள்ளதைக் கல்வெட்டு குறிப்புகளும், அந்தக் கோயில்களிலிருந்து கிடைக்கப்பெற்ற அனுபவங்களும் ஆதாரமாக உள்ளன. இவர்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக வாழையடி வாழையாக வாழ்ந்து வருவதற்கு முதல் ஆதாரமாக தஞ்சை இராஜ ராஜ சோழன் வழங்கிய நடராஜர் பஞ்சலோகச் சிலையினைக் கூறலாம். அன்று வட்டப்பள்ளி ஸ்தானிகர் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்ட நடராஜர் சிலைக்கு (விக்கிரகம்) நாள்தோறும் வேளை தவறாது இன்றுவரை பூசை நடத்திவருவதைக் காணமுடிகிறது. இதற்கான கல்வெட்டு குறிப்பும் நடராஜர் திருக்கோயிலின் உள்ளே இருப்பதைக் காணலாம்.

கி.பி. 1740இல் ஆற்காட்டு நவாப் சந்தா சாகிபு படையெடுப்பின் போது ஊர்மக்கள் தலைவராக பொறுப்பேற்று போரில் முதன் முதலில் வீரமரணம் அடைந்துவரும் அன்றைய வட்டபள்ளி ஸ்தானிகராக விளங்கிய திரு **"கண்டன் ஈஸ்வரன்"** என்பவராகும். இதனை முன்னமே தெரிவித்துள்ளோம். திருக்கோயிலைக் காப்பதற்கு உயிர்த்தியாகம் செய்த வட்டப்பள்ளி குடும்பத்திற்கு அன்றைய மன்னர் நிலங்கள் வழங்கி கௌரவித்ததையும் வரலாற்று மூலமாக அறியமுடிகிறது.

மேலும் திருக்கோயில் பரப்பளவில் தெப்பக்குளமும், தெப்பக்குள பரப்பளவில் வட்டப்பள்ளி மடமும் அமைந்துள்ளது.

திருக்கோயிலுக்கும் வட்டப்பள்ளி மடத்திற்கும் உள்ள தொடர்பினை இடங்களும் எடுத்துக்காட்டுகின்றன. பூவிலிருந்து மணத்தை எவ்வாறு பிரிக்க முடியாதோ அதே போன்று சுசீந்திரம் திருக்கோயிலும், வட்டப்பள்ளி மடமும் அமைந்துள்ளது. ஆலயத்தின் வரலாற்றை எழுதும்போது வட்டப்பள்ளி மடமும், வரலாற்றில் வட்டப்பள்ளி மடத்தை எழுதும்போது ஆலயமும், பிரிக்க முடியாது என பேரறிஞர் டாக்டர் அமரர் கே.கே. பிள்ளை அவர்கள் எழுதிய "SUCHINDRUM TEMPLE" ஆராய்ச்சி நூல் தெளிவுபட விளக்கியுள்ளதைக் காணமுடிகிறது.

பெருமை வாய்ந்த வட்டப்பள்ளி மடத்தில் ஸ்தானிகராக விளங்கிய **"நாராயணன் நாராயணன்"** என்பவர் திடீரென்று காலமானதாலும், ஆண் வாரிசு இல்லாதிருந்த நிலையில் பாச்சுமூத்தது என்ற பரமேஸ்வரர் இம்மடத்தின் "திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகராக" தமிழ் ஆண்டு 1045 (ஆங் : 1864)ல் பொறுப்பேற்றார். திருவிதாங்கூர் மன்னர்களிடம் நெருங்கிய நட்பு இருந்த காரணத்தால் இவருடைய காலத்தில் இராஜகோபுரத் திருப்பணி மற்றும் பழுதுபட்டிருந்த இரண்டு கொடி மரங்களை மாற்றி புதிய கொடி மரங்கள் (தற்போது உள்ளவை) ஸ்தாபிக்கப்பட்டது. இராஜ கோபுரத்தின் ஏழு நிலைகளிலும் சுவரோவியங்களைத் தனது கைப்பட வரைந்து இன்றும் அவைகள் அழியாத நிலையில் இருந்து வருவதை இராஜ கோபுரத்தினுள்ளே காணமுடிகிறது. ஒருமுறை சுசீந்திரம் பகுதியில் பரவி இருந்த கொள்ளை நோயினால் மனைவி, மக்களை இழந்து தனிமையில் வாழ வேண்டிய சூழ்நிலைக்கும் ஆளானார்.

பிரம்ம ஸ்ரீ பாச்சுமூத்தது என்ற பரமேஸ்வரர் ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மன்னர், அடுத்து விசாகம் திருநாள் அதன்பிறகு ஸ்ரீமூலம் திருநாள் மன்னர் போன்ற மூன்று மன்னராட்சியில் நம்பிக்கைக் குரியவராக இப்புகழோடு வாழ்ந்து அரசுப் பதவியோடு, சுசீந்திரம் ஆலயத் திற்கும் அதன் வளர்ச்சிகளுக்கும் பெருந்தொண்டுகள் புரிந்துள்ளதை மறக்கமுடியாது. அவர் மரணம் அடைந்தபோது அரசு மரியாதையோடு அவரது பூதஉடல் தகனம் செய்யப்பட்டதும் போற்றுதலுக்குரியது. அவரின் பெரும் முயற்சியில் உருவாகிய இராஜகோபுரமும், கொடிமரங்களும் வானுயர்ந்து புகழோடு நிற்கின்றது.

இவ்வாறு சுமார் 1000 ஆண்டுகளுக்கும் மேலாக வாழையடி வாழையாக சுசீந்திரம் அருள்மிகு ஸ்தாணுமாலயர் திருக்கோயிலில் பொறுப்புகள் பல வகித்து, இறைவனுக்குப் பூசைகளும் செய்வித்து உயிர்த்தியாகம் புரிந்து தொண்டுகள் பல செய்த முன்னோர்கள் வழியில் ஆலயக் கடமைகளை நிறைவேற்றி இன்றும் செயல்பட்டு வரும் சுசீந்திரம் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி மடத்தினரின் பங்கு சிறப்பானது.

முன்னோர் வழியில் நூற்றாண்டு காலமாக மருத்துவச் சேவையும், கற்போர்க்கு கல்விச்சேவையும், பசியோடு வருபவர்க்கு இல்லையெனக் கூறாது அமரவைத்து உணவு வழங்கும் தர்ம காரியமும் சாதிமத பேதமின்றி சமபந்தி போஜனத்தையும் வட்டப் பள்ளி மடத்தில் நடைபெறும் ஒவ்வொரு விசேட வைபவங்களிலும் காணமுடிகிறது. தாழ்ந்த ஜாதி இனத்தவர்க்கு வேலையும் கொடுத்து அவரது குடும்பத்தார் வாழ்வதற்கு வீடுகட்ட உதவியும் புரிந்த பேதமற்ற செயல்திறனை இன்றும் காண முடிகிறது.

இவை மட்டுமல்லாது தங்களது சொந்த செலவில் ஆலயத்தில் முன்னோர்கள் செய்வித்த பல விசேட வழிபாடுகளைத் தங்கு தடையின்றி இவ்விலைவாசி உயர்விலும் தவறாது செய்துவரும் வட்டப்பள்ளி மடத்தினருக்கு ஆலய நிர்வாகம் பணிகள் மற்றும் பொறுப்புக்காக வழங்கி வரும் அனுபவ ஊதியம் அரிசி கிலோ ஒன்றிற்கு 7பைசா வீதம் கணக்கிட்டு மாதந்தோறும் ரூபாய் 216 என்ற நிரக்கில் சுமார் 25 வருட காலமாக வழங்கி வருகிறது. நிருவாகம் வழங்கிவரும் அனுபவ ஊதியம் மிகக்குறைவாக இருந்தாலும், இறைத்தொண்டு ஊழியம் உயர்ந்தது என்பதனை இம்மடத்தில் உள்ளவர்களிடம் காணமுடிகிறது.

***அபாய நேரத்தில் ஆபரணம் காத்த ஸ்தானிகர்:*** முன்பு சுதந்திரப் போராட்ட காலத்தில் மார்கழித் திருவிழா தேரோட்ட நாளில் ஏற்பட்ட துப்பாக்கிச் சூடு நிகழ்ந்த தருணத்தில் சுவாமித்தேரை பாதியிலே நிறுத்திவிட்டு பக்த பொதுமக்கள் ஓடி ஒளிந்த வேளையில் தேரில் எழுந்தருளியிருந்த சுவாமியின் ஆபரணங்களைப் பாதுகாக்கும் பொருட்டு சுசீந்திரம் வட்டப்பள்ளி முன்னாள் ஸ்தானிகரான பெரியவர் காலம் சென்ற டாக்டர்.பி. நீலகண்ட சர்மா அவர்கள் தொடர்ந்து இரண்டு நாட்களாக தேரில் சுவாமியின் அருகே

பாதுகாப்பாய் இருந்து அவைகளைக் கவனித்தார். பொறுப்புமிக்க இக்கடமையை நிறைவேற்றிய பெருமை இம்மடத்தின் ஸ்தானிகர்களைச் சாரும். தனது 35வது வயதில் நடந்த சம்பவத்தை 1998இல் அவரது 91ஆவது வயதிலும் நினைவு கூர்ந்து இந்நூலுக்கு விவரங்கள் அளித்தார் முன்னாள் ஸ்தானிகர் காலம் சென்ற பெரியவர் டாக்டர் பி. நீலகண்ட சர்மா அவர்கள். சுசீந்திரம் திருக்கோயில் வரலாற்றில் இணைந்த வட்டப்பள்ளி மடமும் வாழையடி வாழையாக ஸ்தாணுமாலயர்க்குத் தொண்டுபுரிய "இளைய தலைமுறை ஸ்தானிகர்கள்" உருவாகி வருவதை இத்திருக்கோயில் "விசேட பூஜை" நாட்களில் காணமுடிகிறது.

---

## பிரதோஷ விழா

*பிரம்மன் படைத்திட்ட*
*பிரம்ம லோக மக்களிங்கு*
*பிரக்ஞா தீர்த்த மதில் நீராடி,*
*பிணி நீங்கி நலம் பெறுவர்.*

*பித்தனை நினைத்த பேதைக்கு,*
*பிரியா விடை நாயகிக்கு,*
*பிறவிப் பயன் தீர்த்து*
*பிரிவில்லா வாழ்வு தந்தாய்*

*பிட்டுக்கு மண் சுமந்து*
*பிரம்படியும் பட்டு நின்ற*
*பிறை சூடிய பெருமானின்*
*பிரதோஷ விழா கண்டிடுவோம்.*

**- சு.தா. தங்கம் -**

---

## திருக்கோயில் நிருவாகச் சீர்திருத்தமுறை

சுசீந்திரம் திருக்கோயிலில் உள்ளாட்சி நிருவாகம் நடத்தி வந்த யோகக்காரர்களின் அதிகாரத்தில் முதலில் தலையிட்டவர் வென்று மண் கொண்ட பூதல வீர கேரள மன்னராவார். அடுத்தாற் போன்று மார்த்தாண்ட வர்மா ஆட்சி காலத்தில் யோகக்காரர்களின் தன்னாட்சி நிருவாகம் செயலிழந்தது. கி.பி. 1741இல் வரையறுக்க 'ஆசாரக்கணக்கு' எழுதிவைக்குமாறு உத்தரவு பிறப்பித்தார் இவர். ஆரம்பத்தில் இதை எதிர்த்த யோக்காரர்கள் பின்னாளில் இதற்குக் கட்டுப்பட வேண்டியதாயிற்று

த.ஆ : 901 (ஆ.வ : 1745) ஐப்பசி 21இல் பழையாற்றின் கரையோரப் பகுதி நிலங்களை யோகக்காரர்களிடமிருந்து 30ஆண்டுகளுக்கு ஒற்றியாக எடுத்து அதன் மூலம் கிடைத்த வருவாயினால் நாஞ்சில் நாடு புத்தனாறு கால்வாய் மற்றும் தரிசு நிலங்களைச் சீர்படுத்தி விவசாய நிலங்களாக மன்னர் மாற்றினார். சுசீந்திரம் மக்களுக்கு உணவளிக்க சமையலறை (ஊட்டுப்புரை) அமைத்து அதற்காக நஞ்சைப்பயிர் நிலங்களை வழங்கினார். கோயில் மண்டபப் பணிகள் போன்றவற்றை நிலங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் திறம்படச் செய்து வரலாற்றில் முக்கிய இடம் பெற்றார் அவருடைய காலத்தில் அமைத்த சமையல் கூடத்தையும் மிகப்பெரிய சாப்பாட்டு அறையினையும் சுசீந்திரம் திருக்கோயிலில் வசந்த மண்டபத்தின் எதிரே காணலாம்.

பாலமார்த்தாண்டவர்மா காலத்திற்குப் பிறகு அவரது சகோதரர் **'கார்த்திகைத் திருநாள்'** பதவியேற்று வலிய ஸ்ரீகாரியம், கரணத்தான் போன்ற பதவிகளுக்கு ஆட்களை நியமித்து ஆலய நிருவாகத்தில் சீர்திருத்தங்கள் கொண்டுவந்தார். சில வருவாய்த்துறை வட்டப்பிரிவுகளிலிருந்து சுசீந்திரம் கோயிலுக்குச் சேரவேண்டிய மேல்வரிகள் கிடைக்குமாறு உதவினார். கோயில் அறக்கட்டளைக்குக் கிடைக்க வேண்டிய வரிவிலக்குகள் தடைபட்டிருந்தன. அவை இக்கோயிலுக்கு கிடைத்திட ஆங் : 1770இல் நடவடிக்கை எடுத்தார்.

ஆ.வ : 1811 முதல் 1847 வரை ஆட்சியிலிருந்த இராணி கௌரி இலட்சுமிபாய் திருவிதாங்கூர் திவானாகக் **'கர்னல் மன்றோ'**

என்ற ஆங்கில அதிகாரியை நியமித்தார். தமிழ் ஆண்டு 987 ஐப்பசி 18ஆம் நாள் (1812)இல் இராணியின் உத்தரவுபடி திருவிதாங்கூர் சமஸ்தானம் உள்ளிட்ட 348 பெரிய கோயில்களையும், 1171 சிறு கோயில்களையும் அவற்றின் அசையும் சொத்துக்கள், அசையாச் சொத்துக்கள் போன்றவற்றை **'அரசுடமை'** யாக்கினார். இதனை நிருவகிக்க உயர்நிலை அலுவலர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். இதன் விளைவாக யோகக்காரர்களின் ஆட்சி முடிவுற்றது.

அடுத்து ஸ்ரீமூலம் திருநாள் மன்னர் ஆட்சியின்போது ஆ.வ : 1920ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட திரு **இராமச்சந்திர ராவ்** குழுவின் பரிந்துரையின் பேரில் கோயில் நிர்வாகத்திற்கென **'தேவஸ்தானத்துறை'** நிறுவப்பட்டது. திவானுக்கு அடுத்த முதுநிலையில் பதவியில் இருந்தவர் தேவசம் ஆணையாளராக நியமிக்கப்பட்டார். 1922-ம் ஆண்டில் (த.ஆ : 1098-ஆவணி 1ஆம் நாள்) திருவிதாங்கூர் தேவஸ்வம் வாரியம் (போர்டு) உருவாக்கப்பட்டது. 1949-ம் ஆண்டில் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மன்னர் ஆட்சியில் திருவிதாங்கூர் சமஸ்தானமும் கொச்சி சமஸ்தானமும் இணைந்து கேரள மாநிலம் உருவாகியது. சுசீந்திரம் உட்படத் திருக்கோயில்களின் நிருவாகத்தில் சில மாறுதல்களும் ஏற்பட்டன. 1950ஆம் ஆண்டில் உறுப்பினர்கள் மூவர் அடங்கிய **தேவசம் வாரியம்** அமைக்கப்பட்டது.

மேலும் கோயில்களின் நிருவாகம் தேவசம் ஆணையாளரிடம் இருந்து வந்தாலும் கோயில்களின் உச்சநிலைக் கட்டுப்பாட்டு அதிகாரம் தேவசம் வாரியத்திடமே இருந்தது. மொழி அடிப்படையில் மாநிலங்கள் பிரிக்கப்பட்டபோது, திருவிதாங்கூர்ப் பகுதியில் இருந்த தமிழ்ப்பகுதிகள் தமிழ் நாட்டோடு சேர்க்கப்பட வேண்டும் என்னும் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. நாஞ்சில் நாட்டில் சுசீந்திரம் உள்ளடங்கிய நிலப்பகுதி நாகர்கோயிலைத் தலைமையிடமாகக் கொண்டு 1956ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 1ஆம் நாள் கன்னியாகுமரி மாவட்டம் உதயமாகித் தமிழ் நாட்டில் இணைந்தது.

## ஆன்மீக அடியார்கள் திருத்தொண்டு

மாதத்தில் இருமுறை வரும் பிரதோஷ விசேடம் இத்திருக்கோயிலில் காலாகாலமாக சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஸ்தாணுமாலயர்கோயில் பிரதோஷ வழிபாட்டிற்கு ஆன்மீக அன்பர்களின் பேராதரவோடு வழிபாடுகள் நடத்தியும், வெண்ணீரணிச் சிவனுக்குத் திருநீறு அபிஷேகம் தவறாது செய்வித்தும் இப்புனித நீறாம் திருநீற்றை ஆன்மீக அன்பர்களின் இல்லம்தோறும் சென்று கொடுத்து அருள் பிரசாதமாக வழங்கி வந்து, இத்திருக்கோயிலுக்கு தாணுமாலயர் பக்தசங்கத்தினர் மேலும் பெருமை சேர்க்கின்றனர்.

தற்போது இப்பிரதோஷ விழா தீபவிழாவாக சிறப்புப் பெற்று வருவதைக் காண முடிகிறது. இதற்கும் ஆன்மீக அன்பர்கள் செய்து வரும் உதவிகளை இங்கு பெருகிவரும் பக்த கூட்டங்களை வைத்து கணக்கிடலாம். அன்று இத்திருக்கோயிலில் உள்ள அத்தனை விளக்குகளும் தீபங்கள் ஏற்றப்பட்டு சுடர் விடுவதையும் அவர்கள் ஏற்றிவைக்கும் தீபச் சுடரொளிகளில் கோயில் ஜகச் சோதியாய் பிரகாசிப்பதும் ஒரு கண் கொள்ளாக் காட்சியாகும். அலைஅலையாய் வரும் மக்கள் கூட்டம் இந்த ஆன்மீகப்பணி மேலும் சிறக்க உதவுகிறது. தன்னலம் கருதா ஸ்தாணுமாலயர் வழிப்பாட்டு தொண்டர் அறக்கட்டளையினர் இதனைப் பொறுப்பேற்று தொடர்ந்து நடத்தி வருவது போற்றதலுக்குரியது.

இப்பிரதோஷ நன்னாளில் எங்குமே (சிவாலயங்களில்) காணமுடியாத முக்கிய தரிசனம். இங்கு வரும் ஆன்மீக அன்பர்களுக்கும், பக்தர்களுக்கும் கிடைக்கிறது. சிவனுக்குரிய இப்பிரதோஷ விழாவிலே, மஹாதேவனுடன் மாலவனும் (மஹா விஷ்ணு) இவ்விழாவில் கலந்து, ரிஷப வாகனத்திலும், கருட வாகனத்திலும் கோயிலை மும்முறை வலம் வருவது, கயிலையில் சிவ தாண்டவத்திற்குக் கானம் இசைத்த கண்ணனை நினை வூட்டுகின்றது. இந்நாளில் இறை தரிசனம் செய்து அனைவரும் பேரருள் பெறுவோம். இந்த பிரதோஷ நாட்களில் சுமார் ஐயாயிரத்திற்கும் மேற்பட்ட ஆன்மீக மக்கள் தரிசித்து செல்வதை காணமுடிகிறது.

# தந்திரி, ஸ்தானிகர், அர்ச்சகர்

## விளக்கம்

("நூற்றாண்டுக்கு முன் உள்ள சிவாகம நூல் தெரிவிக்கும் பாடல்")

### தந்திரி

எந்திரமானதொரு பூட்டைப் பூட்டி-அதை
மந்திரமானதொரு திறவுகோல் கொண்டு
மதியதனால் தந்திரமாகவே திறந்து
சுந்தரமானதொரு ஜோதியை மந்திரத்தாலமைத்து
தந்திரமாகவே இருத்தி பூஜிப்பவரை
தந்திரியென்று இவ்வுலகம் பாராட்டிப் போற்றுமே.

### ஸ்தானிகர்

ஆலயம் இன்னதென்றும் - அதில்
லிங்கமானது இன்னதென்றும் - அதற்கு
ஆகமங்கள் இன்னதென்றும் - அதற்கு
பூஜைகள் இன்னதென்றும் - அதற்கு
காலங்கள் இத்தனை யென்றும்

மூலக்காரணங்களோடு முன்னில் வந்துரைப்பவர் சீலமாம் சிவசொருபம் சிறந்தவர் அவர்தான் என்றும் ஞாலம்போல் ஆலயத்தின் ஸ்தானிகர் அவரேயாவார்.

**அர்ச்சகர் :**

ஆகமம் தன்னை யுணர்ந்து
அதிலுள்ள சாரமும் கண்டு
மோகமாம் பூஜைக்குத் தான்
மூர்த்திகள் யாவும் கண்டு
தேகமாம் பூதசுத்தி யாவையும்
இறையாய் செய்து இங்கு
ஊகமாய் அர்ச்சிப்பவ ரவரை
அர்ச்சகரென்றே போற்றுமே உலகம்.

**குறிப்பு :** இத்திருக்கோயிலில் தந்திரி, ஸ்தானிகர், அர்ச்சகர் போன்றோர்கள் இருந்து வருகின்றனர். இந்நூலிலும் பற்பல இடங்களில் குறிப்பிடப்படுகின்றனர். மேற்கண்டவைகளுக்கு சிறு விளக்கமாக இது அமையும் என்ற கருத்தில் சிவாகம நூல் பாடல் தரப்பட்டுள்ளது.

# ஸ்தாணுமாலயர் பெருமை போற்றும் பாடல்கள்

## சுசீந்தைச் சிறப்பு

### வெண்பா

1) நாடுஞ் சுசீந்தைதனில ஞானதடத் தேமுழ்கித்
தேடும் பிரானைத் தெரிசித்து கூடுமொரு
மட்டாருந் தார்த்தாணு மாலயனின் தேர்வடத்தைத்
தொட்டாலும்போமே துயர்.

[அமரர் தசாவதானி பெ. ஆறுமுகம்பிள்ளை, சுசீந்திரம்.]

## சதகம் பாடி ஸ்தாணுவை வேண்டுவோம்.

### [காப்பு]

1) நாட்டுசீர் சுசீந்தைத் தாணு
நாதன்மேல் அன்பால் அன்னான்
தாட்டுணை வணங்கித் தாணுச்
சதகமென் றொன் று கூற
வேட்டுவக் கொடி சேர்ந் தோங்கும்
விமலர்க்கு முன்னோன் மூர்த்தி
காட்டும் இந்திரவி நாயகர்
தம்பதம் காப்ப தாமே.

### விருத்தம்

2) பூமேவு கொன்றை நிழலூடிருந்த
புதியாய் மிகுந்த பழையாய்
நாமேவு சந்த மறை யோதுகின்ற
நலமார் சுசீந்தை நகராய்
மாமேவு செம்பொன் உலகோர் வணங்க
வருவார் உளன்பு தருவார்
தாமேவு கின்ற சிவதாணு நாதர்
சரணே நமக்கோர் அரணே.

4) கருப்படிவெம் பவக்கடலை யெப்படிநாம்
கரை காண்போம், காணுந் தோறும்
உருப்படியும் கொடும்பிணியை எவ்வாறு
தவிர்ப்போம் என்றுழலும் நெஞ்சே
மருப்படிபூம் பொழில்படியுஞ் தென்சுசீந்தைப்
பதிதாணு வரதன் கோவில்
திருப்படி வெண்ணீரணிந்து சிந்திப்போம்
எனில்வினைகள் சிந்திப்போமே.

## கலி விருத்தம்

5) பிறந்து வீண்பலபேசிப் பிதற்றி நின்(று)
இறந்து போகுமுன் என்னுணர் கேட்டியால்
சிறந்து வாழ்வெய்த லாஞ்சிவ தாணுவை
மறந்தி டாது வணங்குவை நெஞ்சமே.

6) தாணு வின்கழல் தாழுமின் சன்னிதி
காணு மின்கண் கலந்துக லந்தன்பு
பூணு மின்களைப் போதும் உமைத்தொடர்
ஆணு வங்களப் போதே யகலுமே.

7) தானமே புரிந்தும் தவங்களே செய்தும்
சரியையே முதலனுட் டித்தும்
ஞானமே விளைந்துங் கல்வியே தெரிந்தும்
நண்ணுவ துனையலா துளதோ
வானமே புரந்த புரந்தரன் வணங்க
வரந்தரு சுசீந்திர ஞான
கானமே குடியாய் இருந்துடல் உயிரா
கலந்தவா தாணு நாயகனே.

8) தாணு யுனைவந் தடைந்தேன் உனது
சன்னதி தன்னிலே யிருக்க
வேணுமே யென்று விரும்பினேன் உனது
வேடமே யுடையர்மேல் வேட்கை
பூணுவேன் உனையே புகழுவேன் உனது
பொன்னடிக் கமலம் நான் என்றும்
காணுவேன்என்றுள் ளுருகுவேன் அன்றி
கடையனேன் அறிவதொன் றிலையே

9) நாயினுங் கடையேன் வஞ்சக முடையேன்
நடத்துதல் தீதலால் நடத்தேன்
பேயினுங் கொடியேன் மூடருக் கடியேன்
பேசுதல் பொய்யலால் பேசேன்
ஆயினும் நின்பால் அடைந்துளேன் எளியேன்
ஆதலால் அடியனை யீன்ற
தாயினும் இரங்கி யாண்டதென் சொல்வேன்
சம்புவே தாணுமா லயனே

10) மாலினால் உனையே மனத்தினால் நினைக்க
வாக்கினால் உன்புகழ் துதிக்கக்
காலினால் உன்கோ யிலைவலம் வருக
கையினால் உனையருச் சிக்க
நூலினால்நிரம்ப வெளியனான் முடியும்
நோக்கமின் றளித்தனை யாகில்
சேலினால் நிறைந்த வாவிசூழ் சுசீந்தைச்
செல்வனே தேவநா யகனே.

11) தேவரே பரவுந் தாணுநா யகனே
சுசீந்தைமா நகருறை சிவனே
மூவரோர் வடிவாய் இருந்தகா ரணனே
என்பவர் உம்பரின் முதலோர்
ஆவரே நின்சே வடியினை யடியேற்
களித்திடில் அடியனை யகிலத்
தியவரே புகழ்ந்து மியாரே யிகழ்ந்தும்
எனக்குவந் துறுவதொன் றிலையே.

12) நானுனை யறியேன் நீயெனை யறிவாய்
நானுனை யறிவுறுந் தன்மை
தானுனை வழிபா டியற்றியல் லாது
தங்குமோ பொங்குமார் அழலின்
வேசைனி யதனிற் றவம்புரிந் திடினும்
மேவுமோ மேவுமோ னந்தத்
தேனுனை வழிபட் டறியுமா றருளாய்
சிவந்தைவாழ் திரிபுராந் தகனே.

## கலித்துறை

### வேறு சந்தம்

13)திரிபுர மானது நீறெழவென்ற சுசீந்தேச
பரிபுர பாதச ரோருகம் இன்று பணிந்தேனால்
விரிபுர பூருவ வினைவெகு தூரம் வெருண்டோட
அரிபுர போகமும் எளிதெய்த வாமன தன்பாலே

14) அன்பு தழைந்த சுசீந்தை
வளம்பதி யாள்வானை
பொன்பிதிர் கொன்றை நிழற்கண்
அரும்பொருள் போல்வானை
என்புரு கும்படி கண்டு
வணங்கி யிருந்தேனால்
வன்பகை சஞ்சல மிஞ்சிய
நெஞ்சக வாடேனே.

-திருக்கொன்றைப்பதிகம்

## திருத்தொண்டு

திருச்சிவிந்தை பதிவாழும் ஈசனுக்கு
திருவீடாய் அமைந் திருக்கும்
திருக்கோயில் வலம் வந்து
திருத்தொண்டாய் தீபங்கள் ஏற்றிடுவோம்.
திருப்பணிகள் தினம் செய்யும்
திருஅடியார் பெருங் கூட்டம்
தினந்தோறும் திரண்டிங்கு வந்திடவே
திருவருள் துணையினை வேண்டிடுவோம்.

- சு.தா. தங்கம் -

# தேவாரப் பாடல்கள்

1) காணுமா றரியபெரு மானாகிக்
காலமாய்க் குணங்கள் மூன்றாய்ப்
பேணுமுன் றுருவாகிப் பேருலகம்
படைத்தளிக்கும் பெருமான் கோயில்
தாணுவாய் நின்றபர தத்துவனை
யுத்தமனை யிறைஞ்சீரென் று
வேணுவார் கொடி விண்ணோர்
தமைவிளிப்ப போலங்கு மிழலையாமே.

- திருஞானசம்பந்தர்

2) சேணுலாமதில் வேணுமண் ணுளோர்
காணு மன்றலார் வேணு நற்புரத்
தாணுவின் கழல் பேணுகின்றவர்
ஆணி யொத் தவரே.

- திருஞானசம்பந்தர்

3) மாணி பால் கறந்தாட்டி வழிபட
நீணுல கெலாம் ஆளக் கொடுத்தவன்
ஆணியைச் செம்பொன் அம்பலத் துள்நின்ற
தாணுவைத் தமியேன் மறந் துய்வனோ.

- திருநாவுக்கரசர்

## கவிமணி போற்றிப்பாடிய சுசீந்திரம்.

ஆற்றங் கரையுண்டு
        அழகான சோலையுண்டு;
நந்தவனமுண்டு
        நன்செய்கள் சூழவுண்டு;
சத்திரங்கள் உண்டு
        தமிழ்க் கல்விச் சாலையுண்டு;
தெப்பக் குளமுண்டு
        தேரோடும் வீதியுண்டு;
மாளிகைகள் உண்டு
        மடங்கள் பல உண்டு;
நான்கு மதில்கள் உண்டு
        நடுவிலொரு கோவிலுண்டு;
கோபுர வாசலுண்டு
        கொடிமரம் இரண்டுண்டு;
சித்திரையும் மார்கழியும்
        திருவிழாக் காட்சி உண்டு;
பார்த்திடக் கண்கள்
        பதினாயிரம் வேண்டும்.;
தொன்னகரம் ஆன
        சுசீந்தைச் சிறப்பெல்லாம்;
என்னொரு நாவால்
        எடுத்துரைக்க ஏலாதே.

அமரகவி. கவிமணி தேவிக விநாயகம்பிள்ளை.

## முன்னுதித்த நங்கை பதிகம்

1) முன்னோற்ற நங்கைஎம் நாயகியே
முவுலகம் ஆளுகின்ற எம்தாயே
நின்தவம் ஏற்குமிவ் மூவருமே
ஒருவராய் நின்றவிச் சுசீந்தையில்
விண்ணோர் துன்பமெல்லாம் விலக்கிடவே
விருப்புடனே வந்தமர்ந்தா யிங்கு,
மண்ணோர் போற்றுகின்ற மாமணியே!
மக்கள்துயர் நீங்கிடவே அருள்வாயே.

2) பண்ணால் உன்னையான் பாடுகிறேன்
பாவிதனைக் கண்ணெடுத்துப் பாரம்மா
நண்ணுமுன் அடியார்தனி நலமெல்லாம்
நாளெல்லாம் விழிப்புடனே காப்பாயே!
எண்ணும் பொழுதெல்லாம் என்தாயே!
என்நெஞ்சில் வந்துறைவாய் மாகாளி!
கண்ணில் கருவிழியாய்க் கலந்தவளே!
கற்பூரவல்லி முன்னோற்ற நங்கையே

வித்துவான்: ஆ. அம்மமுத்து பிள்ளை,
சுசீந்திரம்.

## நல்வாழ்வு தரும் நாயகன்

பண் : **காம்போதி** இயற்றியவர் : **சு.தா. தங்கம்.**

பாடியவர் : இசைப்பேரரசு அமரர் மதுரை S. சோமசுந்தரம் அவர்கள்

1) சுந்தரச் சதுர்வேதி
மங்கலப் பெருமானே
சுற்றியுனை வந்தாலே
எண்ணம் நிறைவேறும்.
தீராவினை தீரும்
உந்தன்திரு நீறணிந்தால்
மாறாத நோயகலும்
மாதவனைத் தொழுதாலே

2) சுசியான இந்திரனின்
பேருடையத் திருத்தலத்தில்
தாணு மால் அயனாக
வீற்றிருக்கும் பெருமானே.
வானுயர்க் கோபுரமும்
வாழ்ந்திட வழிகாட்டும்
வள்ளலை நினைத்தாலே
வாழ்வும் உயர்வாகும்.

3) கல்மனம் கரைந்திடவே
கல்லிலிசைக் கேட்கவைத்தாய்,
கல்லான உன்னுருவில்
கருணை நிறைந்திருக்கும்
மலையினைச் சிலையாக்கி
மாருதியை வடித்தெடுத்த
படைத்தவன் பெருமையினை
பணிந்திங்குப் போற்றிடுவோம்.

4) வஞ்சமிலா நெஞ்சோடு
 வேண்டியே வருபவர்க்கு
பஞ்சத்தைப் போக்கும்
 பஞ்சமூர்த்தித் தரிசனமே
நாஞ்சிலின் நாயகனே
 நல்வாழ்வைத் தந்திடுவாய்
நம்பியுனைச் சரணடைந்தேன்
 நல்வரம் எனக்களிப்பாய்.

---

இத்திருக்கோயில் கல்வெட்டுகளில் சுசீந்திரம் திருநகர் "சுந்தரச் சதுர்வேதி மங்கலம்" எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. 1984-ம் ஆண்டு மார்கழித் திருவிழாவின் போது சுசீந்திரம் தாணுமாலயன் கலையரங்கில் இசைப்பேரரசு அமரர் S. சோமசுந்தரம் அவர்களால் இப்பாடல் பாடப்பட்டது.

---

## பரமனைப் பாடித் துதிப்போம்

பாடல் புனைந்தவர் : சு.தா. தங்கம்

தேன் மலர்ச் சோலையில்
 சுற்றிவரும் வண்டினம் போல்
தேவாதி தேவன் தென்கயிலை
 ஈசன் ஸ்தாணுவை நாடித்
தேடிவரும் அடியா ரெல்லாம்
 திருக்கோயில் வலம் வந்து
தேவாரத் திருவாசகத் திருமுறைகளைத்
 தினம்பாடித் துதித்து வழிபடுவீர்.





நாஞ்சில் அமரகவி தேசிக விநாயகம் பிள்ளை மலரும்
மாலையில் தொகுத்து வழங்கிய சுசீந்திரம் தெப்பக்குளத்தின்
எழில் மிகுந்தக் காட்சி.

## சுசிந்திரம் சுவாமி-அம்பாள் திருக்கல்யாணம் திருப் பொன்னூஞ்சல் பாட்டு

வங்கார மேருகிரி கால்களாக,
வங்கமலை அதற்கேற்ற விட்டமதாக
ஓங்கார வாசுகியும் கயிறதாக
பூவுல செம்பொன் மணிமுத்துப் பலகையாக
மங்காத விண்ணுலகம் பந்தலாக
வரிசையுடன் விசுவகர்மா அருளிச்செய்த
சிங்காரப் பொன்னூஞ்சல் மீதிலேறி
தாணுவுடன் அறம்வளர்த்த நாயகிக்கு ஆடிடுஞ்சல்

தண்ணொளிரும் மாணிக்கக் கால்கள் நாட்டி
தனிவயிரத்தால் விட்டமது இசைத்துக் கூட்டி
வண்ண மணிப்பலகை முத்து வடத்தில் பூட்டி
விண்ணொளிரும் ஜோதிமய பந்தல் தீட்டி
பண்ணமரும் நாரதரும் யாழும் பரிந்து பாட
விண்ணவர்தம் மகிழ்ந்து வகை கூத்துமாட
அண்ணலார் தாணுநாதர் பாகம் வகை கூத்துமாட
அறம் வளர்த்த நாயகிக்கு ஆடிடுஞ்சல்.

---

இப்பாடல்களை ஒவ்வொரு வரியாக கோயில் பாகவதர் பாடிய உடன் திருக்கோயில் நாதஸ்வர வித்வான் நாதஸ்வரத்தில் வாசிப்பார் அச்சமயம் திருப்பொன்னூஞ்சலை அசைத்து ஆட்டுவார்கள்.

---

## சுசீந்திரம் ஸ்தாணுமாலயமூர்த்தி
## சித்திர மணிவாசல் திருக்காப்பு பாடல்

[முற்கால ஏட்டுச்சுவடி பாடல்] ராகம் : நீலாம்பரி

முப்புரமாம் பூங்கொன்றை மூலமதில் வந்துதித்த,
கற்பகராம் நந்திமகிழ் கயிலைமணியே கண்வளராய்.
ஆதிகாலந் தன்னில் அத்திரிமுனி ஆசிரமத்தில்,
அனுசூயை கற்பை சோதிக்க வந்த சுடரே.
அரிமாலயன் உருவாய் அவதரித்த அருளே,
ஆரமுதே அற்புதமே கண்வளராய்.
வெண்ணீரணி சிவனே விடையேறும் பெருமானே,
எண்ணரியத் தவப்பயனே என்னரனே கண்வளராய்.
செந்தாமரைக் கண்ணா ஸ்ரீதேவி உடனுறையும்,
செல்வா நந்த கோபாலா நாரணனே கண்வளராய்.
வெண்டாமரை வாணி யுடனுறையும் வேதா,
நந்தா விளக்கே நாரணன்தன் மைந்தா கண்வளராய்.
சம்போ கங்காதரா ஜடாமகுடா சங்கரனே,
அம்மையுடன் அமர் ஆரமுதே கண்வளராய்.
தேவேந்திரன் பூசை சிவஸ்தாணு மாலயர்க்கு
சித்திர மணிவாசல் திருக்காப்பு கொண்டருளீர்.

---

குறிப்பு: 1974க்கு முன்புவரை இத்திருக்கோயில் பாகவதரால் தினமும் இரவு 8.30க்கு இப்பாடல் பாடப்பட்டு அதன் பின்பு திருநடை மணிவாசல் சாத்தப்படுவது நூற்றாண்டுகளுக்கு மேலாக நடைபெற்று வந்தது.

---



ஸ்ரீ துவாரக்கை கிருஷ்ணன்



ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் கோவில் முன்வாயில்

பலஆயிரக்கணக்கான ரூபாய் செலவில் அமைக்கப்பட்ட மைதானம்

## சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயில் கல்வெட்டு தெரிவிக்கும் "திரு வடவேங்கிடத் தாழ்வார் ஸ்ரீ துவாரகை எம்பெருமான்"

(ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் கோயில்)

இத்திருக்கோயில் மிகவும் பழமை வாய்ந்ததாகும். சுசீந்திரம் அருள்மிகு ஸ்தாணுமாலயர் திருக்கோயிலின் வடபுறத்தில் பழையாற்றின் கரையோரம் ஆசிராமம் செல்லும் வழியில் குமரிமாவட்டத் திருக்கோயில்கள் தலைமை அலுவலகத்தை (சத்திரம்) அடுத்து உள்ளது. ஸ்தாணுமாலய மூர்த்தி திருக்கோயில் கல்வெட்டில் இக்கோயிலை "திரு வடவேங்கிடத் தாழ்வார் துவாரகை எம்பெருமான்" எனக்கல்வெட்டில் தெரிவிக்கப்பட்டுள்ளது. துவாரகை ஸ்ரீ கிருஷ்ணன் திருக்கோயில் எனவும் அழைக்கப்படுகிறது.

முற்றிலும் கற்களால் உருவாக்கப்பட்ட இக்கோயில் பணிமுடிக்கப்பட்ட ஆண்டு விவரங்கள் இதுவரை கிடைக்கப்பெறவில்லை. இத்திருக்கோயிலைப் பற்றிய மொத்தம் பதிமூன்று கல்வெட்டுகளில் ஒன்று அருள்மிகு ஸ்தாணுமாலய மூர்த்தி திருக்கோயிலிலுள்ள பஞ்ச பாண்டவர் சன்னதி சுவரிலும் மற்றவை இக்கோயிலைச் சுற்றியுள்ள கர்ப்பக்கிரக சுவரிலும், அர்த்த மண்டபத்திலும் மற்றும் பிள்ளையார் சன்னதி முன்பு உள்ள பாறையிலுமாக உள்ளது.

சுசீந்திரம் வட்டப்பள்ளிமடம் புஸ்தகசாலையில் உள்ள கல்வெட்டு குறிப்பு பதிவேட்டிலும், டாக்டர் கே. கே. பிள்ளை. அவர்களின் "சுசீந்திரம் கோயில்" ஆராய்ச்சி கட்டுரையிலும் கி.பி. 1040 க்கு முன்னமே உள்ள பழைமையான கோயிலாக இது கருதப்படுகிறது.

### கல்வெட்டுகளில் காணும் விவரங்கள்

தமிழ் ஆண்டு: 400 (ஆங்கில ஆண்டு: 1225)இல் "பள்ளிக்கல் நாயர்" என்பவர் இக்கோயிலில் விளக்குகள் ஏற்றும் வகைக்குத் தங்கக்கட்டிகள் வைப்பு நிதியாக வழங்கியுள்ளார்.

த.ஆ : 402 (ஆங் : 1227) மாசி 13-ல் "**சங்கரன் உருத்திரன்**" என்ற புது மாடத்துப் போற்றி 1. அரை மா நிலத்தை பூஜைகளுக்கு விட்டுக் கொடுத்துள்ளார்.

த.ஆ. : 404 (ஆ.1229) புதுமாடத்துப் போற்றியாகிய "**கேசவன் அரங்கன்**'' என்பவர் 4வேலி நிலம் பூஜை வழிபாட்டிற்கு வழங்கியுள்ளார். இவை இத்திருக்கோயில் கர்ப்பக் கிரகத்தை சுற்றியுள்ள கல்சுவரிலும், அர்த்தமண்டபத்திலும் தென்மேற்கு பாறையில் உள்ள கல்வெட்டிலும் உள்ளது. தமிழ் மலையாளம் கலந்த எழுத்துக்களாகும்.

த.ஆ.: 405 (ஆங் : 1230)ல் இத்திருக்கோயில் நிர்வாகத்தை **யோகத்துப்போற்றிகள்** நிருவகித்து வந்ததாகவும் பிற்காலத்தில் இப்பொறுப்பினைத் திருவனந்தபுரம் "**பிரக்ஞபீதரர்**" என்ற கோவிந்த திருவடி நம்பூதிரிக்கு விட்டுக்கொடுத்தாகவும் அன்று முதல் சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயிலிலும், ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் கோயிலிலும் கேரள நம்பூதிரிகள் பூஜைகள் செய்ய வந்ததாகக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.

மேலும் 12ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகளில் **இரணசிங்க நல்லூர்** (தற்போதைய இரணியல்) என்ற இடத்தைச் சார்ந்த "**சங்கர நாராயணன்**" என்பவர் இத்திருக்கோயிலுக்கு விளக்கேற்றுவதற்கும் துப்புரவு பணிக்காகவும் ஒருவரைத் தனது செலவில் நியமித்து அதன் வகைக்கு நிலங்கள் வழங்கியுள்ளார்.

த.ஆ.: 362 ஐப்பசி 1 (ஆங்.ஆ: 1187) த.ஆ: 399 (1224) போன்ற கல்வெட்டுகளில் ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பூஜைக்குப் பூக்கள் கிடைக்கும் விதத்தில் நந்தவனங்கள் அமைக்கப்பட்டிருந்ததையும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

பிற்காலத்தில் இத்திருகோயில் மாவட்டத் திருக்கோயில் நிருவாகத்தில் சேர்க்கப்பட்டுச் சுசீந்திரம் பேரம்பலம் ஸ்ரீகாரியம் நிருவாகத்தின் கீழ் ஒரு நேர பூஜையுடன் இயங்கி வந்துள்ளது. புரட்டாசி மாத சனிக்கிழமை நாட்களில் ஊர்மக்கள் ஆதரவோடு சிறப்பு வழிபாடுகள் அவ்வப்போது நடைபெற்று வந்தன. தற்போது கர்நாடக துளு போற்றிமார்கள் பூசாரியாக இருந்து வருகின்றனர்.

## காட்டாற்று வெள்ளமும், கண்ணனின் கருணையும்

13.10.1992இல் குமரிமாவட்டத்தில் ஏற்பட்ட பெருமழையின் விளைவால் கோயிலின் வடக்குப்புறம் உள்ள பழையாற்றில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கினால் பல உயிர்ச் சேதங்களும் பொருள் நஷ்டங்களும் ஏற்பட்டன. சுசீந்திரத்தைச் சுற்றியுள்ள ஊர்களையும் வெள்ளம் சூழ்ந்து அருள்மிகுஸ்தாணுமாலயன் திருக்கோயில் உள்ளேயும் வெள்ளம் புகுந்து நிறைந்தது. வரலாறு காணாத இந்த வெள்ள அபாயத்தால் ரதவீதிகளிலும், வீடுகளிலும் ஆக காணும் இடந்தோறும் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. திருவிதாங்கூர் சமஸ்தான திவான் சி.பி. இராமசுவாமி ஐயர் காலத்தில் உருவாக்கப்பட்ட மிகவும் பலம் வாய்ந்த சிமின்று காங்கிரீட் தேசிய நெடுஞ்சாலை ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் கோயிலின் பின்புறம் ஆற்று வெள்ளத்தின் சீற்றத்தால் இரண்டாக பிளவுபட்டு இரண்டாவது ஆறாகக் கரைபுரண்டு ஓடியது. இச்சாலை பிளவுபடாமல் இருந்திருந்தால் சுசீந்திரம் வெள்ளத்தில் மூழ்கி மிகப்பெரிய சேதங்களும், உயிர்கள் மடிதலும் நிகழ்ந்திருக்கும். பழையாற்றின் வெள்ளப்பெருக்கு வரலாற்றில் இடம் பெற்றுவிட்டது

புராணகாலத்தில் கண்ணபிரான் உயிரினங்களைக் காத்திட மேரு மலையினைக் குடையாகப் பிடித்து அன்று மக்களை காத்த இறைவனின் திருவிளையாடலைப் புராண நூல்கள் தெரிவிக்கின்றன. கலியுகத்தில் சுசீந்திரம் புண்ணிய பூமியில் ஏற்பட்ட வெள்ள அபாயத்திலிருந்து மக்களையும் மற்றும் உயிரினங்களையும் காத்த பெருமை ஸ்ரீ துவாரகை கிருஷ்ணனைச் சாரும். ஆம்! கருணை தெய்வமாக ஆன்மீக மக்களின் இதயத்தில் இடம் பெற்று விட்டார் ஸ்ரீ துவாரகைக் கிருஷ்ணன்.

## ஆன்மீக அன்பர்கள் அருந்தொண்டு

பழமை மிக்க கோயிலாக இருந்து வரும் இக்கோயில் முற்காலத்தில் அன்றாடம் மூன்று காலபூஜையுடன் முடிமன்னர்கள் காலத்தில் முக்கியத்துவம் பெற்றிருந்த நிலைமாறி, காலப்போக்கில் பூசைகள் குறைக்கப்பட்டுக் குறித்த நேரத்தில் மட்டும் பூசை நடத்தி பூட்டிச்செல்லும் நிலையானது நாளடைவில் கோயிலைச் சுற்றியுள்ள இடங்களில் முள்செடிகள் வளர்ந்து கோயிலினுள் செல்ல முடியாத நிலை ஏற்பட்டது. "பல கோயிலுக்கு ஒரு பூசாரி" என்பது போன்று இக்கோயிலும் விளங்கலாயிற்று.

1992-ம் ஆண்டு ஏற்பட்ட வெள்ள அபாயத்திற்குப் பிறகு ஆன்மீக அன்பர்களின் அருந்தொண்டுகளின் விளைவாக கோயில் முக்கியத்துவம் பெறலாயிற்று. 1-9-1993 முதல் துவாரகை கிருஷ்ணன் பக்தர்கள் சங்கம் என்ற அமைப்பு உருவாகி திருப்பணிகளும் பூஜைகளும் நாளும் சிறந்தோங்கலாயிற்று. பக்தர்கள் வருகையும் பெருகலாயிற்று. 11.2.1996ஆம் ஆண்டுமுதல் பக்தசங்க அமைப்பு முறைப்படுத்தப்பட்டு "அறக்கட்டளை" உருவாக்கப்பட்டது. நூற்றுக்கும் மேற்பட்ட ஆயுட்கால உறுப்பினர்களைக் கொண்ட அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, குமரிமாவட்ட இணைக்கப்பட்ட மற்றும் இணைக்கப்படாத திருக்கோயில் நிருவாகத்தின் ஒத்துழைப்புடன் சுமார் ஏழு ஆண்டுகாலத்தில் ஏற்றமிகு வளர்ச்சியைப் பெற்று பெருமையோடு இன்றும் திகழ்கிறது.

மிகவும் குறுகிய காலத்தில் பல இலட்சக்கணக்கான ரூபாய் மதிப்பீட்டில் திட்டங்கள் தீட்டப்பட்டு அளப்பரிய திருப்பணி வளர்ச்சி கண்டு சுசீந்திரம் திருநகரின் சுற்றுப்புற கோயில்களில் முதன்மை பெற்று விளங்குகிறது ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் கோயில். ஆன்மீக அன்பர்களின் தன்னலம் கருதா இறைத்தொண்டு இக்கோயிலை வளர்ச்சி காண வைத்தது போற்றத்தக்கது. இங்கு நடைபெற்றுள்ள திருப்பணிகளான, புதிய பிரகார மண்டபங்கள், ஆலயம் மற்றும் பக்தர்கள் தேவைக்கு குடிநீர்வசதி அழுத்தம் கூடிய புதிய மின்இணைப்பு, மின்விளக்குகள், ஒலிபெருக்கி வசதி, மற்றும் பூந்தோட்டம், சுமார் ஆயிரம் பேர்கள் அமர்ந்திருக்கும் வகையில் புதிய மைதானம் இவையெல்லாம் அதிக செலவு பிடித்த திட்டங்களாகும். பூஜைகள், பணியாளர்கள் நியமனம், அவர்களுக்கு மாத ஊதியம், ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் சிறப்பு விழாக்கள் ஆன்மீக மக்களை கவர்ந்திழுப்பது மட்டுமின்றி எதிர்காலத்தில் ஆலயம் சிறப்போடு விளங்கிடும் வகையில் வங்கியில் ரூபாய் இலட்சக்கணக்கில் வைப்பு நிதி ஏற்படுத்தியுள்ளனர்.

மேலும் இக்கோயில் அறக்கட்டளை நிருவாகத்தினர் இறைப்பணியோடு சமுதாயப் பணிக்காக குறைந்த கட்டணத்தில் குழந்தைகள் பயில கல்விக்கூடம் ஒன்றினை ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் பெயரில் 2000ம் ஆண்டு மார்ச்சு முதல் ஸ்தாணுமாலய திருக்கோயிலுக்கு சொந்தமான முற்கால மன்னர் திருமலை நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட மிகப்பழமையான நெற்களஞ்சியம் கட்டிடத்தையும் அதன் காலி இடத்தையும் பல ஆயிரக்கணக்கான

பணச் செலவில் புதுப்பித்து அதில் நிரந்தர குடிநீர் வசதியும் செய்து கல்வி ஸ்தானத்தை அதில் நடத்தி வருகின்றனர். திருக்கோயில் தேவஸ்தான நிருவாகத்தினருக்கு இதன்மூலம் கூடுதல் குத்தகை தொகையினை வழங்கி மன்னர்கால நினைவு சின்னத்தை நல்ல முறையில் பேணிக்காத்து வருகின்றனர். இதனால் பாமரமக்களின் குழந்தைகளுக்கு கல்வியறிவூட்டி கல்வித் தொண்டாற்றி வருகின்றது ஸ்ரீ துவாரகை அறக்கட்டளை நிர்வாகம்.

ஆன்மீக மக்களின் பேருதவியைப் பெற்று பெருமையோடு திகழும் ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் திருக்கோயில் பெரும் வளர்ச்சி துவக்கிய நாள் முதல் சுமார் ஏழு ஆண்டுகளாகத் தினமும் தொடர்ச்சியாக இரவு 7 மணி முதல் 8 மணிவரை பக்தர்கள் கூறிவரும் ஸ்ரீ நாராயண நாம ஜெபத்தில் நாமும் கலந்து. நாமம் சொல்லி இன்னும் ஏழாயிரம் ஆண்டுக்கும் மேலாக நாமம் ஒலித்திட ஸ்ரீ நாராயணனாகிய கிருஷ்ணனைத் தொழுது நலம் பெறுவோம். ஓம் நமோ நாராயணாயா

## துயர் தீர்க்கும் ஸ்ரீ துவாரகைக் கிருஷ்ணன்

கருணைக் கடலே கற்பகமேக் கண்ணா
கலியுகத் தெய்வமே கார்மேக வண்ணா
நம்பியவன் கோயிலை நாடியே வந்தாலும்
நன்மைகள் அருளியிங்கு நலமே தந்திடுவான்.
(கருணைக்)

தேவகி பெற்றெடுத்த தேனமுதேக் கண்ணா
தேவாதி தேவர்கள் போற்றிடும் மன்னா
யமுனைக் கரையிலே யதுகுலம் தன்னிலே
யசோதை மைந்தனாய் வளர்ந்த ஜனார்த்தனா.
(கருணைக்)

நாரணன் கோயிலிலே நாமஜெப கீர்த்தனங்கள்
நாளும் முழங்கிடவே நாவாலே சொல்லிடுவாய்
துயரங்கள் போக்கிடும் துவாரகைக் கண்ணனை
தூயமனதோடு தினம் வந்து தொழுதிடுவாய்.
(கருணைக்)

(சு.தா தங்கம் இயற்றிய இப்பாடல் 1997ஆம் ஆண்டு சுசீந்திரம் ஸ்ரீ துவாரகைக் கோயில் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தியின் போது இசை அரங்கத்தில் திரையுலக முன்னணிப் பாடகர் திருஉன்னி கிருஷ்ணன் அவர்களால் பாடப்பெற்றது.)

## கருணைவடிவான ஸ்ரீ கிருஷ்ணன்

சூலமங்கலம் சகோதரிகள் பாடிய
“மருதாசலத்திற்கு வாருங்கள்” பாடலின் மெட்டு.

ஸ்ரீ . . . .துவாரகை கோயிலுக்கு வாருங்கள்
துயரங்கள் பறந்தோடும் பாருங்கள்
ஸ்ரீ. . . . நாராயணன் நாமம் சொல்லுங்கள்
நாள்தோறும் வந்திங்கு பாடுங்கள்
(துவாரகை)

பழையாற்றின் கரையோரம் பழைமையானத் திருக்கோயில்
பக்தியோடு வருபவர்க்கு பாவங்கள் தீர்ந்திடுமே
காட்டாற்று வெள்ளமும் கரைதாண்டி வந்தாலும்
கருணை மனதோடு காத்திடும் கண்ணன்
(துவாரகை)

பாலோடு தேனும் பன்னீரால் அபிஷேகம்
பாசமுடன் செய்தோலே பலனுண்டு கைமேலே
சந்தனம் சார்த்திய சாந்த சொருபன்
சங்கோடு சக்கரமும் தாங்கிய தெய்வம்
(துவாரகை)

நம்பியவன் கோயிலுக்கு நாடியே வந்தாலும்
நாராயண மூர்த்தி நலம்யாவும் தந்திடுவான்
நாரணன் கோயிலிலே நாம ஜெப மந்திரங்கள்
நாள்தோறும் முழங்கிடவே எல்லோரும் வாருங்கள்
(துவாரகை)

சு.தா. தங்கம்

## " அலங்காரப் பிரியர் "

அலங்காரம் . . . . .அலங்காரம்
துளசி மாலையில் அலங்காரம்
அலங்காரம் . . . . .அலங்காரம்
துவாரகை கிருஷ்ணனுக்கு
(அலங்காரம்)

தாமரை மலரால் அலங்காரம்
தாமரைக் கண்ணனுக்கு அலங்காரம்
பிச்சிமுல்லை மலரால் அலங்காரம்
பிரியமுடன் யேற்ற அலங்காரம்
(அலங்காரம்)

மல்லிகை மரிக்கொழுந்து அலங்காரம்
மாதவனின் மேனியிலே அலங்காரம்
பவளமல்லிப் பூவால் அலங்காரம்
பத்மநாப சுவாமிக்கு அலங்காரம்
(அலங்காரம்)

நீலப்பட்டுச் சார்த்திய அலங்காரம்
நீலவண்ணக் கண்ணனுக்கு அலங்காரம்
மணிமுத்து மாலை அலங்காரம்
மணிவண்ணப் பிரபுவுக்கு அலங்காரம்
(அலங்காரம்)

கிரீடம் சார்த்திய அலங்காரம்
கீர்த்தி பெற்ற மூர்த்திக்கு அலங்காரம்
வெள்ளியினால் அங்கி அலங்காரம்
வெண்ணையுண்ட கண்ணனுக்கு அலங்காரம்
(அலங்காரம்)

திருக்கோயில் முழுவதும் அலங்காரம்
தீபங்கள் ஏற்றிய அலங்காரம்
திருவிளக்கு ஒளியில் அலங்காரம்
திருவாழி மார்பனுக்கு அலங்காரம்
(அலங்காரம்)

சு.தா. தங்கம்



சுசிந்திரம் கீழரதவீதி
அபிமானம் காத்த
விநாயகர் திருக்கோயில்



திருவிழாக்காலத்தில் அலங்கரிக்கப்பட்ட
வாகனத்தில் விநாயகப்பெருமான்
எழுந்தருளும் காட்சி

## சுசிந்திரம் ஸ்தாதணுமாலயர் திருக்கோயிலை சுற்றியுள்ள வெளிப்பகுதி ஆலயங்கள்



தெற்குத்தெரு பேரம்பலம் நடராஜர் கோயில்



சுசிந்திரம் சன்னதித்தெரு குலசேகர விநாயகர் கோயில்



சுசிந்திரம், ஆசிராமம் அஞ்சனமெழுதிய
கண்டன் சாஸ்தா திருக்கோயில்



சுசிந்திரம் ஆசிராமம் கிராமம்
ஸ்ரீகிருஷ்ணன் கோயில்



சுசீந்திரம் இரட்டைத்தெரு ஸ்ரீகுலசேகரப் பெருமாள் கிருஷ்ணன் கோயில்



சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் கோயிலில் முதன் முதலாக வளர்க்கப்பட்ட கணேசன் என்ற குட்டி யானை



நாயக்கர் மன்னர்கள் காலத்தில் அமைக்கப்பட்ட
தேரோடும் வீதிகளில் ஒன்று



சுசிந்திரம் தெற்குத்தெரு செச்செ கொட்டாரம்
என அழைக்கப்படும் சேச்சி கொட்டாரம்
(நாயக்கர் மன்னர் காலத்தில் செய்விக்கப்பட்டது)



சுசிந்திரம் தெற்குத்தெரு மன்னர்கால
பெண்களின் அந்தப்புரக் கொட்டாரம்

(தற்போதைய ஆரம்பப் பாடசாலை)



நாயக்க மன்னர் செய்வித்த நெற்களஞ்சியக் கட்டிடம்
திருக்கோவிலுக்கு தேவையான நெல் சேமித்து
வைக்கப்பட்டிருந்த இடம். (மாடத்தெரு, சுசிந்திரம்)



முன்பு திருக்கோவில் ஆபரணங்கள் பாதுகாப்பு அறையாக இருந்த இடம். தற்போது சுசிந்திரம் மேலத்தெரு ஊர்வகை சமுதாய மக்களுக்கு சித்திரைத் திருநாள் மன்னரால் வழங்கப்பட்ட இடம்.



மன்னர்கள் பதவிப்பிரமாணம் நடைபெறும் கொட்டாரம் மற்றும் ஹோமபூஜைகள் நடைபெறும் கட்டிடங்கள் (சுசிந்திரம் வடக்குத்தெரு)



முற்காலத்தில் சுசிந்திரம் கோயில் முகப்பில் பூந்தோட்டம், திருக்கோயில் பொருட்கள் பாதுகாக்கும் கலவறையாக இருந்த மண்டபங்கள் அகற்றப்பட்டு தற்போது கலையரங்க மைதானமாக காட்சி தருகிறது.



நாயக்க மன்னர் காலத்தில் உருவாகிய நாயக்க மடம்

தற்போது திருவாவடுதுறை ஆதீன மடம் கோயிலாக உள்ளது. (சுசிந்திரம் தெப்பக்குளத்தெரு)

சுசிந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயில் இறைவனைத் தரிசிக்க வருகைதரும் ஆன்மீக மக்கள் கூட்டம்









சுசிந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயிலைக் காணவரும் மேல்நாட்டு அரசு விருந்தினர்கள் கலையம்சம் பொருந்திய சிற்பங்களையும் தேரினையும் கண்டுகளிக்கும் காட்சி

காணக்கிடைக்காத காட்சி
தம்பி, தங்கையோடு ஸ்ரீசித்திரைத்
திருநாள் இளமைக்கோலம்

1. அமரர் ஸ்ரீசித்திரைத் திருநாள் பாலராமவர்மா
2. ஸ்ரீகார்த்திகை திருநாள் தம்புராட்டி (தங்கை)
3. ஸ்ரீஉத்திராடம் திருநாள் மார்த்தாண்ட வர்மா (தற்போதைய மன்னர்)

## திருவிதாங்கூர் சமஸ்தானம்
## இளைய ராணியின் "துளசிமாலை"
## நூல் வெளியீடு 1998



காலம் சென்ற ஸ்ரீசித்திரைத்திருநாள் மன்னரின் மருமகள் இளையராணி அசுவதித் திருநாள் ஸ்ரீகௌரி லெட்சுமிபாய் சுசிந்திரம் கோயில் பற்றியும் எழுதிய துளசிமாலை என்ற ஆங்கில நூலை திருவனந்தபுரம் அரண்மனையில் வைத்து நடைபெற்ற நூல் வெளியீட்டு விழாவில் சுசிந்திரம் திருக்கோயிலுடைய வட்டப்பள்ளி ஸ்தானிகர் டாக்டர் N.P. சர்மா அவர்களிடம் வழங்கிடும் காட்சி. நடுவில் சுசிந்திரம் சு.தா. தங்கம்

# சுசீந்திரம் வரைபடத்தில் சக்தி மயமான அமைப்பு

பேராசிரியர் திரு யாண்பைப்பர்-ஜெர்மன்




1-ஸ்தாணுமாலயர் திருக்கோயில்

2-முன்னுதித்த அம்மன் திருக்கோயில்

3-வண்டிமலச்சி அம்மன் கோயில்-மேலத்தெரு

4-முத்தாரம்மன் கோயில், காக்கமூர்

5-முத்தாரம்மன் கோயில், அக்கரை

## கோயில் தரிசன முக்கியத்துவம்

''கோயில்'' என்பதில் இருபொருள் உண்டு. (கோ+இல்=கோயில்) கோ=நம்மை ஆளும் அரசன். இல்= அவன் வாழும் இடம் அல்லது குடிகொண்டபதி என்றும் அடுத்து "ஆலயம்" என்பதில் ஆ=ஆன்மா, லயம்= லயிப்பது அல்லது சேர்வது என்றும் பொருள்படுகிறது.

**மனித உடலும், ஆலயமும் :-** இதனைப் புலவர் பெருமானாகிய திருமூலர், "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" எனத் தமது பாடலில் கோயிலின் சிறப்பை மிக அற்புதமாக விளக்குகின்றார். உடலைத் தூய்மையான முறையில் பேணிக்காத்தால் நோய்கள் வருவதில்லை. அது போன்று ஆலயத்திலும் தூய்மை காக்க வேண்டும். ஆன்மாக்கள் பரமாத்மாவிடம் கலக்கும் (லயிக்கும்) இடம் ஆலயமாகும். புனித இடமான அங்கு ஒழுக்க நெறிகளைக் கடைபிடிக்க வேண்டும்.

முதலில் மாதா, பிதா, குரு ஆகியோர்களிடம் காட்டும் பணிவு, பயம், பக்தி, ஒழுக்கம் போன்ற மரியாதைகளை இவர்களுக்கெல்லாம் மேலான இறைவனிடம் காட்டவேண்டும். இந்த நெறிமுறைகளை நாம் கடைபிடித்து நடப்போமானால் வாழ்வில், உலகில் உயர் பதவி அடைவது திண்ணம். நமது இந்து சமய நெறிகளில் ஏராளமான அடியவர்கள் இவ்விதங்களில் பெருமை பெற்று விளங்கியதையும் மற்றுமுள்ள மதங்களில் தோன்றிய பெருமகானார்கள் அவர்களின் வரலாறுகளும் தெளிவாக விளக்குகின்றன. ஒழுக்க நெறிமுறைகளில் தவறி நடந்தவர்கள் அடைந்த துன்பங்கள், அவர்கள் பட்ட துயர்களில் இருந்து மீள இறைவனை வேண்டி அவர்பால் நற்கதி அடைந்தவர்கள் போன்ற எத்தனையோ மகான்கள் போன்ற தெய்வப்புலவர்கள், சித்தர்கள் நமக்கு வழிகாட்டிகளாகத் தோன்றி, நெறிமுறைகளை இந்து சமயத்திற்கும் உலகுக்கும் எடுத்துக்காட்டாக வாழ்ந்து பெருமை பெற்றுள்ளனர்.

## கோயில் அமைப்பும், மனித உறுப்புகளும்

| | | |
|---|---|---|
| கர்ப்பக்கிரகம் (மூலஸ்தானம்) | = | சிரசு(தலை) |
| அர்த்த மண்டபம் | = | கழுத்து |
| மகாமண்டபம் | = | மார்பு |
| யாக சாலை | = | நாபி (தொப்புள்) |
| கோபுரம் | = | பாதம் |

இதனை வேறு விதமாகவும் கூறலாம்.

கோபுரம் = வாய், நந்தி = நாக்கு, கொடிமரம் = உள்நாக்கு, தீபங்கள் = பஞ்சஇந்திரியங்கள், கர்ப்பக்கிரகம் = இதயம், மூலவர் = உயிர்.

## கொடிமரங்களின் தத்துவம்

முதலில் கோயில் செல்லும் முன்பு கை, கால், முகம் கழுவி கோபுரவாசல் முன்பு இரண்டுகைகளையும் தலைக்குமேல் உயர்த்திக் கூப்பி வணங்க வேண்டும். (பெண்கள் இவ்விதம் வணங்கக்கூடாது) பின்பு கோயிலின் உள்ளே கொடிமரங்களைக் காண்கின்றோம். இக்கொடிமரத்தை ஒரு யோகியின் உடலமைப்பினுள் விளங்கும் முதுகெலும்பு தண்டுக்கு அல்லது மேருதண்டத்திற்கு ஒப்பிடலாம். இதனுள் ஆறு ஆதாரங்கள் அடங்கியுள்ளது. இதன் முக்கிய நோக்கம்: அசுரர்களையும் அகற்றுவதன் பொருட்டும், சிவகணங்களையும், தேவர்களையும் அழைத்த வரும் பக்தர்களை காப்பதற்காக சிவன் கோயிலில் கொடிமரத்தின் உச்சியில் நந்திவிக்ரமும், விஷ்ணுவுக்கு கருடாழ்வாரும், முருகனுக்கு மயிலும், கணபதிக்கு மூஷிகவிக்ரகமும், சக்திக்கு சிங்கமும் அமைப்பார்கள்.

பெரும்பாலும் கொடிமரங்கள் சந்தனம், தேவதாரு, செண்பகம், வில்வம், மகிழமரம் போன்றவைகளால் அமைப்பது உகந்தது எனச் சாஸ்திரநூல்கள் தெரிவிக்கின்றது. கிழக்கு நோக்கி இருக்கின்ற சன்னதிகளின் முன்பிருக்கும் கொடிமரங்களின் முன்பு வடக்குதிசை நோக்கி தரையில் உடல் முழுவதும் படும்படி நமஸ்கரிக்க வேண்டும். கொடிமரத்தை வணங்கிய பின்பு அதன் அருகில் உள்ள பலிபீட கல்லை வணங்கி நம் மனத்திலுள்ள ஆறு பகமை குணங்களைப் பலி யிட்டு அவைகளை அங்கே விட்டுவிட்டு மனதில் தூய்மையுடன் கர்ப்பக் கிரகமாகிய மூலவரை வணங்கச் செல்ல வேண்டும்.

பிரகாரங்களில் அந்தந்த திருக்கோயில்களின் தெய்வங்களின் மூலமந்திரங்களை 108 முறை அமைதியாகக் கூறி வலம் வர வேண்டும். அதிலும் இடது புறமாகச் சென்று வலது புறமாகச் சுற்றிவரவேண்டும். கொடிமரங்கள் பழுதடைந்து விட்டால் உடன் தானே அதனை அகற்றி தீயிட்டு எரித்து சாம்பலாக்கி விடவேண்டும். ஏனென்றால் யோகியின் உடலமைப்பைக் கொண்ட உயிருள்ள ஜீவனாகக் கருதி பூஜை கர்மங்கள் அதற்கு செய்யப்படுகின்றது. இதனை சாஸ்திர விதிமுறை நூல் தெரிவிக்கின்றது.

## கற்பூரத் தீபத்தின் மகிமை -

கற்பூரம் சித்த வைத்தியத் துறையில் மிக அற்புதமான சக்திகொண்ட நல்ல மருந்தாகும். கிருமிகளை கொல்ல வல்ல தன்மையுடையது. காற்றினில் விஷக் கிருமிகள் கலந்துள்ளதை விஞ்ஞானப் பூர்வமாக அறிந்துள்ளோம். கோயில்களில் விசேட விழாக்காலங்களில் கூட்டம் நெரிசல் அதிகமாகக் காணப்படும் இதனால் பக்தபெருமக்களுக்கு மூச்சுத்திணறல் ஏற்படலாம். நோய் பீடித்துள்ளவர்கள் வரலாம். இவர்கள் விடுகின்ற சுவாசக்காற்றால் நோய்க்கிருமிகள் பரவ வழியுண்டு. தெய்வ சன்னதிகளில் கற்பூரம் ஏற்றி ஆராதனை செய்யும்போது அதிலிருந்து வரும் புகை வாசனையில் நோய்க் கிருமிகள் அழிந்து விடுகின்றன. கற்பூரம் பற்றவைத்தவுடன் பிரகாசமாக ஒளிவிட்டு எரிகிறது முடிவில் தீயானது கரையக்கரைய இறுதியில் ஏதுமில்லை.

அதுபோல நம்முடைய ஆன்மாவை இறைவனிடம் பற்றவைத்துவிட்டால் ஆன்மாவிற்குள் ஒளிந்து கொண்டிருக்கும் அத்தனைக் கேடுகளும், பாவங்களும் படிப்படியாகக் கரைந்து முடிவில் ஒன்றுமில்லாமல் போய்விடுகிறது. ஆண்டவனின் பூரண ஒளியில் எதுவும் மிஞ்சாமல் போய் சேர்ந்து விடவேண்டும் என்று நினைக்கும் தத்துவத்தைக் கற்பூர தீபம் இருவகைகளில் நமக்கு உணர்த்துகிறது.

# கோயில் ஒரு நீதிமன்றம்

முந்தைய காலங்களில் ஊரில் ஏற்படும் நல்ல காரியங்கள், நியாயங்கள், தீர்ப்பு சொல்லும் வழக்குகள், ஊர் பஞ்சாயத்து என எல்லாவற்றையும் தெய்வத்தின் முன்னிலையில் வைத்து நடத்தினார்கள். மனிதர்கள் மாறினாலும் தெய்வத்தின் முன்பு பயம் நீதிநெறியில் காக்கும் என்ற எண்ணம் நமக்கு நிலைத்து நிற்க கோயிலைத் தேர்ந்தெடுத்தார்கள். அதுபோன்று ஆலயமும் ஒழுக்கமுடைய இடமாக கருதப்பட்டுத் தெய்வத்திடம் பயம், பக்தி வேண்டும் என்ற தத்துவத்தில் அதனை நீதிமன்றமாக கருதினார்கள் முற்கால மன்னர்கள்.

ஆலயத்தை நாம் வெறும் வழிபாட்டுக் கூடமாக மட்டும் எண்ணலாகாது. வேதநெறி முறை வளர்க்கும் கல்விகள், பரதக்கலை, சிற்பக்கலை, பசிக்கு உணவளிக்கும் தர்மச்சாலைகள் போன்றவற்றில் கோயில்கள் சிறந்து விளங்கியதை வரலாறுகள் தெளிவு படுத்துகின்றன. ஜாதி வேறுபாடின்றி அனைத்து மக்களும் இன்று ஆலயங்களில் சென்று இறைவனைத் தரிசிக்க "ஆலயப்பிரவேசனம்" எவ்வளவு முக்கியத்துவம் பெற்றுள்ளது என்பதைக் காணுகின்றோம். " ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற தத்துவத்தில் பக்தி பண்பாட்டை வளர்க்கும் கோயில் விழாக்களில் அனைத்து மக்களும் இடம் பெற்று சிறப்பிப்பதை "தேர்த்திருவிழா" போன்றவை நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

## புனிதம் காப்போம்<br>புகழ் சேர்ப்போம்

முற்காலத்தில் முடிசார்ந்த மன்னர்களும், நாட்டு மக்களும் கோயில்களில் பூஜைகளுக்காக நிலபுன்களை வழங்கி உதவி புரிந்துள்ளதை வரலாற்று கல்வெட்டு குறிப்புகள் வாயிலாக அறிந்தோம். பிற்காலத்தில் கோயில்கள் அரசுடமை ஆகிய பின்பு நிலங்களும் அரசால் எடுக்கப்பட்டு மானியங்கள் வழங்கப்பட்டு வருகிறது. விலைவாசி ஏற்றங்களாலும், ஊழியர்களின் ஊதிய

பிரச்சனையிலும் குறிப்பாக கோயில்கள் நிறைந்து காணப்படும் குமரிமாவட்டத்தில் நிதிநெருக்கடி ஏற்பட்டுள்ளதைக் காண முடிகிறது. இவைபோக கோயில்களின் நிலம் மற்றும் சொத்துக்களைத் தனியார் பலர் கைவசம் வைத்து அனுபவித்து வருவதோடு சரியான முறையில் அதன் வருவாயினைத் திருக்கோயில்களுக்கு வழங்காமல் நீதிமன்றங்களில் இதற்கான வழக்குகள் தேங்கிக்கிடப்பதையும் காணமுடிகிறது. இதனால் அனேக திருக்கோயில்களில் பூஜைகளும் நிவேத்தியங்களும் குறைந்து வருவதற்கு இவைகளும் காரணமாய் அமைகின்றது.

முன்னோர்கள் கட்டி முடித்த ஆலயங்கள், வானளாவிய கோபுரங்கள் கண்களை வியக்கச் செய்கின்றது. மனிதவர்க்கத்தின் ஒழுக்க நெறிமுறைகளால், ஆண்டவன் மீது பயம், தூய்மையான பக்தி இல்லாமையால் தமிழகத்தில் அனேக ஆலயங்கள் கவனிப்பாரற்ற நிலையில் சிதைந்து வருவதையும் காணமுடிகிறது.

ஈசன் திருக்கோயில் பூஜை முடக்கப்பட்டு புனிதம் அழிந்து வரும் வேளை.அது ''ஊருக்கும் உலகுக்கும் கேடு'', என தெய்வப்புலவர்கள் பாடிய பாடல்கள் இன்னும் மறையாமல் உள்ளது.

"பள்ளித்தலமனைத்தும் கோயில்கள் செய்வோம்" என்றார் அமரகவி பாரதியார். பள்ளிக்கூடங்கள் அனைத்திலும் கோயில்களை கட்டச் சொல்லவில்லை. கோயில்களில் உள்ள நெறிமுறைகளை (பக்தி, பண்பாடு, கலாச்சார ஒற்றுமை) கல்விக் கூடங்களில் ஏற்படுத்தி மாணவச்செல்வங்களுக்கு அதனைப் பயிற்றுவித்து பயனைடையும் விதத்தில் பாடினார் பாரதி. அன்னை, தந்தை, சகோதர சகோதரி, உற்றார், உறவினர், அன்பர்கள், நண்பர்களாலும், மூத்தோர், இளையோர்களோடு தோன்றினாலும், மறைவதும் அவ்விதமே. ஆனால் ஆண்டவனிடம் பற்று பாசம் அழியாத நிலையளிக்கும். அடுத்து பதினாறு செல்வங்கள், அதற்கு மேலான ஆயிரம் செல்வங்கள் போன்றவற்றை நாம் இங்கு தேடிக் கொண்டாலும் ஆண்டவனின் அருட்செல்வத்தைத் தவிர அட்டமா சித்தியால் அடையும் அனைத்தும் மேலானது இல்லை.

மெய்யன்பர்கள் வீடு தொழலாம். தேசபக்தர்கள் நாடு தொழலாம். வீடும். நாடும் சிறந்து வாழ இறைவன் கோயில் புகழோடு விளங்கிட ஆலயம் சென்று புனிதம் காப்போம். நம்மால் முடிந்தவரை திருத்தொண்டு புரிவோம் அகிலத்தின் அற்புதக் கோயிலைப் பேணிக் காப்போம். கோயில்களில் துப்புரவு, மெழுகுதல், பூமாலை தொடுத்து கொடுத்தல், திருவிளக்குகள் ஏற்றுதல், மற்றும் இவற்றிற்கும் மேலாக நாத வடிவான இறைவனை வேண்டி தினமும் தேவாரத்திருமுறை, திருவாசகம், திருப்புகழ் போன்ற பாடல்களைப் பாடி இறைவனை மகிழ்விப்பவர்களுக்கு அளவில்லாத அருளைத் தந்திடுவான் என்பதை கீழ்வரும் பாடல் விளக்குகின்றது.

*“விளக்கினாற் பெற்ற பேறு,*
*மெழுக்கினால் பதித்தி யாகும்*
*துளக்கில் நன் மலர் தொடுத்தால்*
*தூயவின் ஏது லாகும்*
*விளக்கிட்டார் பேறு சொல்லின்*
*மெய்ந்நெறி ஞானம் ஆகும்*
*அளப்பில் கீதம் சொன்னாக்கு*
*அடிகள் தாம் அருளுமாறே”*

-திருத்தொண்டர் நாவுக்கரசு பெருமான்.

இவ்வாறு கோயில் தரிசன முக்கியத்துவத்தைப் பற்றி இந்து சமுதாய மக்கள் அறிந்திடும் வகையில் சில தத்துவக்கருத்துக்களை திரு “குரு சுப்பிரமணியம்” அவர்கள் “ஆலயம் தொழுவது சாலவும் நன்று” என்ற நூலில் அழகாக கூறியுள்ளார்.

# தென்வள நல்லூர் எனும் திருமேனி காக்கமூர்

அந்நியராட்சியினரின் பிடியிலிருந்த இந்தியத் திருநாட்டைக் காக்கப் போராடி மடிந்த மன்னர்கள், தேசம் சுதந்திரம் பெறவேண்டி தன்னுயிரையும் அர்ப்பணித்த சுதந்திரப் போராட்ட வீரர்களின் தியாகங்களை வரலாறுகள் வாயிலாக அறிந்துள்ளோம். ஆனால் இறைவன் திருக்கோயிலைக் காப்பதற்கு போராடி மடிந்த தியாகிகள் வாழ்ந்த இவ்வூரானது, இன்று காக்கமூர் என அழைக்கப்படும் தென்வள நல்லூர் ஆகும். இதில் தற்போதைய குறிச்சிப்பகுதியும் அடங்கும்.

இது சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயிலிருந்து தெற்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள கிராமமாகும். நஞ்சை வளம் மிகுந்த நிலப்பகுதிகளாக அமைந்துள்ளது. மருங்கூர் செல்லும் வழியில் உள்ள நல்லூர் பகுதியை வடவள நல்லூர் என்றும், காக்கமூர் பகுதியை தென்வள நல்லூர் எனவும் அழைக்கப்பட்டது. கோதை கேரள வர்மன் மன்னருடைய ஆட்சியில் (ஆங்: 1145ஆம் ஆண்டு T.A.S. பக்கம் 320) தெரிவிக்கப்பட்டுள்ள கல்வெட்டில் கற்காடாகிய நிருப சேகரவள நல்லூர், காக்கமூராகிய தென்வள நல்லூர் போன்ற பகுதிகளை மன்னர் தேவதானமாக வழங்கிய விவரங்களை அறியமுடிகிறது.

கற்காடு, காக்கமூர், பறக்கை, கோட்டார், கரியமாணிக்கபுரம் போன்ற கிராமங்களில் திறமைவாய்ந்த சிற்பிகள் வாழ்ந்து வந்ததாகவும், 1545இல் கோட்டாரான மும்முடிச் சோழநல்லூர் கொம்மண்டை ஆசாரி என்பவரின் திறமையை மன்னர் பாராட்டி சிற்பபுரந்தரர் என பட்டம் வழங்கியுள்ளதையும், த.ஆ:720, தை-26 கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. 1740இல் நடந்த சந்தா சாகிபு படையெடுப்பின் போது சுசீந்திரம் ஸ்தாணுமாலயர் திருக்கோயிலைக் காத்திட ஊர்மக்கள் எதிர்த்து போர்புரிந்த விவரங்களை முன்னமே அறிந்தோம் இப்போரில் சுசீந்திரம் வட்டப்பள்ளி ஸ்தானிகருக்கு உறுதுணையாகச் சென்றுப் போரிட்டு மடிந்த வீரர்களில் 16 பேர்கள்

தென்வள நல்லூர் எனும் காக்கமூர் பகுதியைச் சார்ந்த வேளாண் சமுதாயத்தினராகும். திருக்கோயிலைக் காப்பதற்காக உயிர்த் தியாகம் புரிந்த வீரர்களின் நினைவாக இவ்வூரைத் **திருமேனி காக்கமூர்** எனவும் பெயர்பெற்றது. (திருமேனி என்பது இறைவனைக் குறிப்பதாகும்). கற்காடாகிய நிருபசேகர நல்லூர், காக்கமூர் என்ற தென்வள நல்லூர் ஆகிய பகுதிகளைச் சுற்றி 220 ஏக்கருக்கும் மேற்பட்ட நஞ்சைப் பயிர் சாகுபடியும், நல்லூராகிய வடவளநல்லூர் பகுதியில் மேற்கண்ட நிலப்பரப்பில் நஞ்சைப் பயிர் சாகுபடி நடந்து வந்துள்ளதையும் கல்வெட்டு வாயிலாக அறியமுடிகிறது.

தென்வள நல்லூராகிய காக்கமூரில் வேளாண் சமுதாய மக்கள் நிறைந்து வாழ்வதையும், ஸ்தாணுமாலயர் திருக்கோயிலுக்கு அவர்களுக்கு உள்ள தொடர்பினையும் இன்றும் காணமுடிகிறது. சுசீந்திரம் திருக்கோயில் வரலாற்றில் இவ்வூர் மக்கள் செய்துள்ள தியாகம் இடம்பெற்றமை போற்றுதலுக்குரியது.

## ஆன்மீக மக்களின் கவனத்திற்கு

**இந்நூல் ஆங்கிலம், மலையாளம், ஹிந்தி ஆகிய மொழிகளில் மொழிமாற்றம் செய்யப்பட்டு அடுத்தடுத்து வெளிவரவிருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

*செயலர்*
*சிவநேசர் நற்பணி இயக்கம், சுசீந்திரம்*

## சுசீந்திரம் திருக்கோயில் அமைப்பு வரைபடம்



# வீட்டுக்கொரு நூல்

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே இதில்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே."

– அமரகவி பாரதியார்

பாரதத்தாயின் பாதக்கமலங்களாய், முக்கடலும் சங்கமிக்கும் குமரித்தாயின் எழில்மேனியை, மங்கலத்திலகமாய் அலங்கரிக்கும் சுசீந்திரம் அருள்மிகு ஸ்தாணுமாலயன் திருக்கோயிலின் பெருமையினை அறியாதவர் இலர். இத்திருக்கோயிலில் மறைந்துள்ள வரலாற்று உண்மைகளை ஆதாரத்துடன் கல்வெட்டு வாயிலாக வெளிக்கொணர்ந்த பெருமை சுசீந்திரம் வட்டப்பள்ளி காலஞ்சென்ற பிரம்மஸ்ரீ பரமேஸ்வர சர்மா அவர்களைச் சாரும். அடுத்து நாளிதழ்கள் வாயிலாக அவ்வப்போது பிரசுரம் செய்த பெருமைக்குரியவர் அமரர் நாஞ்சில் கவிமணி அவர்கள். பின்னாளில் இதனை நூல்வடிவில் ஆராய்ச்சி கட்டுரையாக்கி 1952ல் "Suchindrum Temple" என்ற பெயரில் ஆங்கில மொழியில் வெளியிட்டவர் டாக்டர் கே. கனக சபாபதி என்ற கே.கே. பிள்ளை அவர்கள் ஆவார். ஆனால் இந்நூல் வசதி படைத்தவர்களுக்கும், ஆங்கில அறிவு பெற்றவர்களுக்கு மட்டுமே உரியதாக திகழ்ந்தது.

தமிழகத்தின் தலைசிறந்த திருத்தலங்களுள் ஒன்றான இத்திருக்கோயிலில் பாண்டிய, சோழ மன்னர்கள் புரிந்த திருத்தொண்டுகளின் வரலாற்று சிறப்புகளும், சேரமன்னர்களான திருவிதாங்கூர் அரசர்கள் காலத்தில் நடைபெற்ற மண்டபப் பணிகளின் வரலாறுகளும் கல்வெட்டுகளில் இன்றும் காட்சியளிக்கிறது. மேலும் தேவார திருமுறைப்பாடல்கள், பரதக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை சிறந்தோங்கி வளர்ச்சி பெற மன்னர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியினையும், இத்திருக்கோயில் வரலாற்று குறிப்புகள் வாயிலாக அறியமுடிகிறது. இத்தகையப் பெருமைக்குரிய ஆலயத்தின் சிறப்பினை விளக்குகின்ற வகையில், சாதாரண நடுத்தர வர்க்கத்தினரும் படித்து புரிந்து கொள்கின்ற வகையில் எளிய தமிழில் வரலாற்று நூல் இல்லையே என்ற ஏக்கம் மனத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி இருந்தது.

"இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்"

என்ற வள்ளுவனின் வாய்மொழிக்கேற்ப "சு.தா. தங்கம்" அவர்களிடம் இப்பொறுப்பினை ஒப்படைத்தோம். அவர் கடந்த 20 மாதங்களாக இரவென்றும், பகலென்றும் பாராமல் தீவிர முயற்சி செய்து ஆன்மீக பெருமக்களும், வருங்கால சந்ததியினரும் அறிந்திடும் வகையில் பல்வேறு ஆதாரங்களை ஒன்று திரட்டி கொஞ்சும் அழகு தமிழில் இந்த வரலாற்று நூலை வடிவமைத்திருப்பது பெருமைக்குரியதாகும்.

இந்நூல் சிறப்பான முறையில் வெளிவர அஸ்திவாரமாய், ஆணிவேராய் இருந்து அரிய ஆலோசனைகளும், ஆதரவும் நல்கிய சுசீந்திரம் திருக்கோயில் வட்டப்பள்ளி ஸ்தானிகர் டாக்டர் திரு N.P. சர்மா B.Sc., B.A.M., M.D. அவர்களுக்கு நன்றியுடன் பாராட்டும் கூற கடமைப்பட்டுள்ளோம்.

சு.தா. தங்கம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை புரட்டிப்பார்க்கையில் சுசீந்திரத்தில் உறைந்திருக்கும் இறைவனின் திருவிளையாடல்களையும், அற்புதங்களையும் நம்மால் உணரமுடிகிறது. அவர் இத்திருக்கோயிலில் 10 ஆண்டு காலம் மிகக்குறைந்த ஊதியத்தில் பணியாற்றியவர். இறைவன் திருவருளினால் பலமடங்கு ஊதியம் பெற்று, தமிழ்நாடு அரசின் குமரிமாவட்ட வருவாய்த் துறையில் சுமார் 25ஆண்டுகாலம் பணிபுரிந்து இந்நூலுக்காக விருப்பார்ந்த ஓய்வு பெற்றுள்ளார். ஆலயப் பணியாளராக இருந்த காலகட்டத்தில் வறுமையில் தீராத நோயோடு போராடிய போதும் ஆன்மீகப் பணிகளை மறக்கவில்லை. சுவாமி ஐயப்பன் மீது பலமுறை "பக்திப் பாமாலை" நூல்கள் எழுதி வெளியிட்டுப் பாராட்டுதல் பெற்றவர். சங்கீதம் கற்காமல் இசைஞானமும் போதிய கல்வியறிவு பெறாமல் எழுத்தறிவும் பெற்றமை, அவருக்கு ஏற்பட்ட தீராத நோயினை தீர்த்த நல்மருத்துவராக திகழும் சுசீந்திரம் அருள்தரும் ஸ்தாணுமாலையனின் அற்புத லீலை என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. கல்விப்பணி மற்றும் ஆன்மீகப் பணியில் தன்னை அர்ப்பணித்து நலிவடைந்த நிலையில் இருந்த சுசீந்திரம் தெற்குதெரு ஸ்ரீபுகழும் பெருமாள் சாஸ்தா திருக்கோயில் திருப்பணி செய்யப்பட்டு, கும்பாபிஷேகம் நடத்தப்பட்டு, நிழல் கொட்டகை அமைத்தும்

சிறந்தமுறையில் தினசரி பூஜைகள் நடைபெற்று வருவதற்கு சு.தா. தங்கம் அவர்களின் தீவிர முயற்சியும், கடின உழைப்பும் தான் காரணம் என்று சொன்னால் மிகையாகாது. 1984இல் ஸ்தாணுமாலயர் திருக்கோயில் கும்பாபிஷேகத்திற்கு ரூபாய் 5000 நிதி உதவி அளித்து தேவஸ்தான நிருவாகத்திற்கு முடிந்த அளவு உதவிபுரிந்து வருவதையும் காணமுடிகிறது. குளப்புரை பூதநாதர் ஆலயத்திற்குத் தனது சொந்த செலவில் மின்விளக்கு மற்றும் வெள்ளையடித்துத் தூய்மைப் படுத்தியுள்ளதையும், சமுதாயப்பணியில் நாட்டம் கொண்டு சிறந்த மதிப்பெண் பெற்ற மாணவ, மாணவியர்களுக்கு உதவித்தொகை வழங்கிவருவதும், திருக்கோயில் முன்னாள் ஊழியர்கள் 25 பேருக்கு உடையும், நிதி உதவி வழங்குவதற்கு தனது கடைசி மாதஊதியத்தை அர்ப்பணித்துள்ளதையும் மறக்கமுடியாது.

"ஒற்றுமையே உயர்வுதரும்" என்பதைக் கருத்தில்கொண்டு "சிவநேசர் நற்பணி இயக்கம்" என்ற சமுதாய இறைப்பணி சேவை அமைப்பின் வாயிலாக கற்றறிந்தோர் கருத்திற்கேற்ப ஆன்மீக அன்பர்களுக்கு அரும்பணியாற்ற எங்கள் இயக்க உணர்ச்சிக்கு இந்த எளிய நூலை தொகுத்து வழங்கிய மேற்படி இயக்கத்தின் ஸ்தாபகரும், பொதுச் செயலாளர் ஆகிய சு.தா. தங்கம் அவர்களை மனதார பாராட்டுகிறோம். அவர் தொகுத்து வழங்கிய இந்நூல் இனிய தமிழில், எளிய நடையில் அமைந்துள்ளது. இந்நூல் ஆன்மீக அன்பர்கள் அனைவரது மனத்தினையும் கொள்ளை கொள்ளும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. சு.தா. தங்கம் அவர்களின் இந்த அரிய படைப்பு நம் ஒவ்வொருவர் இல்லங்களையும் அலங்கரிப்பது நமக்கும், நமது இல்லத்திற்கும் பெருமை தருவதாகும். இந்த வரலாற்று நூல் நமக்கும் நமது வருங்கால சந்ததியினருக்கும் நம்மை நாடிவரும் நண்பர்களுக்கும், உற்றார் உறவினர்களுக்கும், ஆன்மீக அன்பர்களுக்கும் உதவியாக, உறுதுணையாக இருக்கும் என்பது திண்ணம்.

ஆன்மீக பெருமக்களின் நல் ஆதரவோடு இந்நூல் மூலம் கிடைக்கப்பெறும் வருவாயினைக் கல்விப்பணி, சமுதாயப்பணி, ஆன்மீக பணிகளுக்கு மட்டுமே செலவிடும் பொருட்டும், பொதுநல நோக்கோடு இந்நூல் மூலம் கிடைக்கப்பெறும் தொகையினை வங்கியில் நிரந்தர வைப்பு நிதி ஏற்படுத்தி அதன் மூலம் சுசீந்திரம் திருக்கோயில் வளர்ச்சிப்பணியும், நலிவடைந்த, தேவார பாடசாலை,

சங்கீதம் மற்றும் நாதஸ்வர இசைக்கலை போன்றவற்றை மேம்படுத்தி திருக்கோயிலில் காலை, மாலை வேளைகளில் தேவார திருமுறை பாடுகின்ற அளவில் இசைவாணர்களை ஏற்படுத்தவும் எங்கள் இயக்கம் முனைந்துள்ளது. இவ்வாறு எங்கள் இயக்கத்தின் மூலமாக திருக்கோயில் நிர்வாகத்திற்கு ஒத்துழைப்பு தந்து, திருக்கோயில் பணிகள் சிறந்த முறையில் நடைபெறவும், சமுதாயத்தில் ஏழை, எளிய மாணவர்கள் நற்கல்வி பெறவும், நலிவடைந்தோர்க்கு நலம்பயக்கும் உதவிகள் நல்கிடவும், சமுதாயப்பணியில் நாட்டம் கொண்டோர் இந்த அரிய நூலின் பிரதிகளை "வீட்டுக்கொரு நூல்" என்ற குறிக்கோளுடன் பெற்று, சமுதாயத்தில் நற்பணிகள் பல நடைபெற்றிட நல்ஆதரவு நல்கிட அன்புடன் வேண்டி பணிகிறேன். மேலும் எங்களை ஊக்குவித்து ஒத்துழைப்பு நல்கிவரும் சுசீந்திரம் "அரிமா சங்க நிர்வாகிகளுக்கும் ஸ்ரீ துவாரகை கிருஷ்ணன் அறக்கட்டளை நிருவாகக் குழுவினருக்கும், சுசீந்திரம் ஸ்தாணுமாலயன் பக்த சங்க அமைப்பாளர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு, மாவட்ட திருக்கோயில் நிருவாக துணை ஆணையராக செயலாற்றி வரும் உயர்திரு.அ. பாண்டியன் B.A. அவர்களுக்கும் சுசீந்திரம் அருள்மிகு ஸ்தாணுமாலய மூர்த்தி திருக்கோயில் மேலாளர், குருப் கண்காணிப்பாளர் அவர்களுக்கும் மற்றும் அறங்காவலர்குழு தலைவர், உறுப்பினர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

முதன் முதலாக தமிழ் வரலாற்று நூல் என்ற பெருமையோடு இந்நூல் வெளிவருகிறது. இதில் குற்றம் குறைகள் இருப்பின் அதனைப் பொறுத்து ஆன்மீக அன்பர்கள் மற்றும் கற்றறிந்த சான்றோர்களின் கருத்திற்கேற்ப அதனை இரண்டாவது வெளியீட்டில் நிவர்த்தி செய்து வெளியிட எங்கள் இயக்கம் தயாராக உள்ளது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இவண்,
என்றென்றும் அன்புடன்
தாய்நாட்டு பணியில்
எஸ். முத்துசுவாமி M.Sc., B.Ed., P.G.D.C.A.
(செயலர், சிவநேசர் நற்பணி இயக்கம், சுசீந்திரம்)



தேரோட்ட நாளில் தேரின் பின்னால் உதவிக்கு வரும் யானை



மார்கழி தேரோட்ட நாளில் சுவாமி தேரில் சிறப்பு பூஜையோடு தீப ஆராதனை





7-ஆம் நாள் திருவிழா நடராஜப் பெருமானுக்கும், சிவகாமி அம்மனுக்கும் நெற்றியில் திருச்சாந்துச் சார்த்தியிருக்கும் தெய்வீகக் காட்சி



10-ஆம் நாள் திருவிழா இரவு உற்சவமூர்த்திகளுக்கு திருநீராட்டு பூஜை



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| xvi | 9 | முதலி | முதலில் |
| xvi | 10 | ல் காட்டி | காட்டி |
| 13 | 12 | மாங்கல்ய | திர்வாணய் |
| 26 | 5 | நானுறை | நானூற்றைக் |
| 50 | 27 | மேற்கு | தெற்கு |
| 50 | 30 | மேற்கு | தெற்கு |
| 59 | 31 | சன்னிதி | சன்னதி |
| 70 | 10 | நம் முள் | நம்முள் |
| 96 | 29 | மரம் பெற்ற | வரம் பெற்ற |
| 132 | 5 | வினாயக ரையும் | வினாயகரையும் |
| 140 | 7 | பாரிசைவன் | பாரிசைவர் |
| 149 | 33 | மண்டபப்படி | மண்டகப்படி |
| 177 | 25 | அம்மன் தேர்பதவி | அம்மன்தேர் பதவி |
| 179 | 6 | எண்ணிவிடலா காது | எண்ணிவிடலாகாது |
| 187 | 8 | மேல | மேல் |
| 193 | 31 | இம்மண்டபத்திற்கு | இம் மண்டபத்தினை |
| 300 | 1 | ஸ்தாதணுமாலயர் | ஸ்தாணுமாலயர் |

